# மலேசியத் தமிழ் இலக்கியம் 2007




**மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்**

# மலேசியத் தமிழ் இலக்கியம் 2007

## கருத்தரங்கக் கட்டுரைகள்

## மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்




அனுசரணையுடன்




32/9 ஆற்காடு சாலை சென்னை 24
தமிழ்நாடு இந்தியா

# Malaysian Tamil Literature 2007

(Proceedings of Conference )

Malaysian Tamil Writers Association

First Edition
October 2007

Mithra : 148

ISBN 89 - 89748 - 35 - 1

Publication Editor
**Espo**

Mithra Books are Published by
**Dr. Pon Anura**

Pages : 312

Price : 150.00

Printed & Published by

**Mithra Arts & Creations Pvt Ltd.,**
32/9 Arcot Road, Kodambakkam
Chennai - 600 024.
Ph : 2372 3182, 2473 5314
Email : mithrabooks@gmail.com

In Collaboration with

**Malaysian Tamil Writers Association**
19, Jalan Murai Dua,
Batu Complex, Off Jalan Ipoh
51200 Kuala Lumpur
Ph : 006+013360 9989

# உள்ளடக்கம்

# கட்டுரையாளர்கள் பற்றிய குறிப்புகள்

## டாக்டர் ரெ. கார்த்திகேசு

**கல்வி** : B.A., (Hons, 1968, Malaya), M.Sc. in Journalism (1977, Columbia), Ph.D. in Communication (1991, Leicester)

**பணி** : ஓய்வு பெற்ற தொடர்புத் துறைப் பேராசிரியர்; துணை டீன், துறைத் தலைவர்; மலேசிய வானொலியின் முன்னாள் ஒலி பரப்பாளர்.

**நூல்கள்** : ஐந்து நாவல்கள்; நான்கு சிறுகதைத் தொகுப்புகள்; ஒரு விமர்சனக் கட்டுரை நூல். மலாயில் ஆராய்ச்சி நூல்: "Sejarah Perkembangan TV di Malaysia" (1994)

நாடறிந்த சிறுகதை, நாவலாசிரியர். மலேசிய இதழ்களிலும், தமிழ்நாட்டின் "தீபம்", "கணையாழி", "கல்கி", "இந்தியா டுடே", "தீராநதி", "காலச்சுவடு" இதழ்களிலும் எழுதியுள்ளார். இணைய இதழ்களான "திசைகள்" "திண்ணை" "பதிவுகள்" ஆகியவற்றிலும் எழுதியுள்ளார்.

**பரிசுகளும்**

**விருதுகளும்:** மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தனிநாயக அடிகள் விருது பெற்றவர்; "அந்திம காலம்" நாவல் டான் ஸ்ரீ மாணிக்க வாசகம் பரிசு பெற்றது (1998). கணையாழி இதழின் சம்பா நரேந்திரர் குறுநாவல் போட்டியில் பரிசு பெற்றுள்ளார் (1999). "கல்கி" வைரவிழாவை ஒட்டிய சிறுகதைப் போட்டியில் (2002) முதல் பரிசு பெற்றார். "மனசுக்குள்" நூலுக்கு லில்லி தெய்வ சிகாமணி பரிசு கொடுக்கப்பட்டுள்ளது (1996). தமிழ்நாடு இலக்கியச் சிந்தனை மாதாந்திரக் கதைத் தேர்வில் இவர் கதை தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது (2003). "ஊசி இலை மரம்" சிறுகதைத் தொகுப்பு டான் ஸ்ரீ மாணிக்கவாசகம் பரிசு பெற்றது (2005).

## டாக்டர் வே. சபாபதி

கல்வி : B.A., M A., Ph.D (Malaya); Diploma in Education.

பணி : மலாயாப் பல்கலைக் கழகத்தில் இணைப் பேராசிரியர், இந்திய ஆய்வியல் துறைத் தலைவர்.

நூல்கள் : "விடுதலைக்குப் பிந்திய மலேசியத் தமிழ் நாவல்கள்" (1995); "விடுதலைக்கு முந்திய மலேசியத் தமிழ் நாவல்கள்" (1996); "மலேசியத் தமிழ் நாவல் வளம்" (1996); "மலேசியத் தமிழ்க் கவிதை வளம்" (1999); "கருத்தரங்கக் கட்டுரைகள்" (2001); "Malaysian Tamil Novels After Independence" (1996); "Malaysian Tamil Novels Before Independence" (1999)

1980களில் மலேசியத் தமிழ் இலக்கியத்தில் ஆய்வுப் பணியைத் தொடங்கிய சபாபதி, தொடர்ந்து திறனாய்வுக் கட்டுரைகளைப் படைத்து வருகிறார். மலேசியத் தமிழ்ப் புத்திலக்கியத்தை நன்கு ஆராய்ந்து அத்துறை வல்லுநராக இருக்கிறார். வார, மாத இதழ்களிலும், மாநாடு, கருத்தரங்கச் சிறப்பு மலர்களிலும், அனைத்துலக ஆய்விதழ்களிலும் இவருடைய கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

## டாக்டர் முரசு நெடுமாறன்

கல்வி : B Litt (1988); M.A , (1991, Madurai Kamaraj University); Ph.D. (2002, Pondicherry University)

பணி : ஓய்வு பெற்ற ஆசிரியர்; பல்கலைக் கழக பகுதிநேர விரிவுரையாளர்.

நூல்கள் : "மலேசியக் கவிதைக் களஞ்சியம்" (மலேசியக் கவிதைகளின் தொகுப்பு நூல், 1998); மற்றும் குழந்தைப் பாடல்கள், கவிதைகள், நாடகங்கள் அடங்கிய 20க்கும் மேலான நூல்கள்; "பாடிப் பழகுவோம்" (குழந்தைப் பாடல்கள் அடங்கிய குறுந்தகடு - 2003).

1950கள் முதல் எழுத்துலகிலும் கல்வியுலகிலும் அறியப்பட்டவர் கவிஞர் முரசு நெடுமாறன். கவிதைகள், குழந்தைக் கவிதைகள், இவை இரண்டும் பற்றிய ஆராய்ச்சி என்னும் கருப்பொருள் களிலேயே இவரது பெரும்பாலான எழுத்துப் படைப்புகள் அமைந்திருக்கின்றன. தமிழ் நெறி மன்றத்தின் நிறுவுநர். பெருமுயற்சியுடன் மலேசியத் தமிழ்க் கவிதைகளைத் திரட்டி ஓர் ஆய்வுக் கட்டுரையுடனும் விளக்கக் குறிப்புகளுடனும் ஆயிரத் துக்கு மேற்பட்ட பக்கங்கள் கொண்ட நூலாகப் பதிப்பித்துள்ளார்.

விருதுகள் : மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தங்கப் பதக்கம் (1986); "மலேசியக் கவிதைக் களஞ்சியம்" நூலுக்காக டான் ஸ்ரீ மாணிக்கவாசகம் விருது (1998); தமிழக அரசு வழங்கிய "பாவேந்தர்" விருது (1998); கவிதை எண்டர்பிரைஸ் வழங்கிய கவிதை விருது (2000); சிங்கப்பூர் தமிழ் எழுத்தாளர் கழகம் வழங்கிய "தமிழவேள்" விருது (2001); உலகத் தமிழாசிரியர் பேரவை வழங்கிய "முத்தமிழ் அரசு" விருது (2002); அரசாங்கம் PPN விருது வழங்கியுள்ளது (1978)

## திரு. வ. முனியன்

**கல்வி** : B.A , (Hons.); LL B (Hons)

பணி : வழக்கறிஞர்; முன்னாள் கல்வியதிகாரி, ஆசிரியர்.

நீண்ட நாட்களாக எழுதி வரும் நல்ல சிறுகதை ஆசிரியரான முனியனின் முதல் சிறுகதைத் தொகுப்பான : "விழிக்க மறுக்கும் இமைகள்" 2004இல் வெளிவந்தது.

பரிசுகளும்

விருதுகளும்: கெடா மாநில எழுத்தாளர் வாசகர் இயக்கச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு (1979); தேசிய நிலநிதிக் கூட்டுறவுச் சங்கச் சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு (2002); செம்பருத்தி திங்களிதழ் குறுநாவல் போட்டியில் பரிசு; மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் மாதாந்தரச் சிறுகதைத் தேர்வில் தங்கப் பதக்கம் (2003).

தற்போது மலேசியாவின் இரு பழம்பெரும் சங்கங்களான முத்தமிழ்ப் படிப்பகம், மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஆகியவற்றுக்குச் செயலாளராகப் பொறுப்பேற்றுள்ளார்.

## திருமதி இராஜம் இராஜேந்திரன்

**கல்வி** : B.A., (UKM), M.A. (Malaya, 2007)

இடைநிலைப் பள்ளி ஆசிரியையான இராஜம் இராஜேந்திரன் மலேசியப் புதுக்கவிதைகள் பற்றிய ஆய்வினை நிகழ்த்தி மலாயாப் பல்கலைக் கழகத்தில் அண்மையில் முதுகலைப் பட்டம் பெற்றுள்ளார். இந்த ஆய்வை அடிப்படையாகக் கொண்ட நூல் இப்போது அச்சில் உள்ளது. இவ்வாண்டில் வெளியீடு காணவுள்ளது.

## டாக்டர் முல்லை இராமையா

கல்வி : B.A. - University of Alberta, Canada Masters - M.Ed - University of Ohio Ph.D. - UM - Language Teaching Methodology

மலாயாப் பல்கலைக் கழகத்தில் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். மொழி, மொழியியல் புலத்தில் 20 ஆண்டுகளாகப் பணியாற்றிவரும் இவர் ஆங்கிலம், தமிழ்மொழி சம்பந்தப்பட்ட பல ஆய்வுகளைச் செய்து பதிப்பித்துள்ளார். அண்மைய காலமாகத் தமிழ் இலக்கியத்துறைக்கும் பணியாற்றி வருகிறார்.

## திரு ந. பாலகிருஷ்ணன் (பச்சைபாலன்)

பிறப்பு : 1960

புனைபெயர் : ந. பச்சைபாலன்

கல்வி : B.A. (Hons); M.A.; Cert. in Education. (Ph.D.) மாணவர்

பணி : இடைநிலைப் பள்ளி ஆசிரியர்

நூல்கள் : "மௌனம் கலைகிறேன்" (சிறுகதைகள், 1986); "கூவத் துடிக்கும் குயில்கள்" (தேசியப் பல்கலைக்கழக மாணவர் களின் புதுக் கவிதைத் தொகுப்பு, 1990); "நெம்புகோல்" (புதுக்கவிதைகள், 1997)

1976 முதல் எழுதி வருகிறார். சிறுகதைகள், கவிதைகளுடன் புதுக்கவிதைகள் பற்றி நிறைய விமர்சனக் கட்டுரைகள் எழுதி யுள்ளார். இடைநிலைப் பள்ளி மாணவர்களுக்குத் தமிழ் மொழி இலக்கிய வழிகாட்டிக் கட்டுரைகள் அதிகம் எழுதி யுள்ளார். காஜாங் இலக்கியக் களத்தின் நிறுவுநரும் தலைவரும் ஆவார்.

பரிசுகள் : தமிழ் நேசன் இலக்கியக் கருத்தரங்கம் (1983, 1985), ஸ்ரீ கோத்தா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி (1983, 1984), மலாயாப் பல்கலைக் கழகப் பேரவைச் சிறுகதைப் போட்டி, மயில் சிறுகதைப் போட்டி ஆகியவற்றில் பரிசுகள் பெற்றுள்ளார்.

# உங்கள் முன் ஒரு பொறி

மலேசியத் தமிழ்ச் சமூகத்தின் வரலாறு இனிப்பும் கசப்பும் கலந்த நிகழ்ச்சிகளால் ஆனது. ஒப்பந்தக் கூலிகளாய் அவர்கள் தாயகம் துறந்து காலனித்துவ மலாயாவுக்குப் போனது ஒரு கரிய துவக்கம். பின்னர் அங்கு அடிமைகள் போல காடுகளை வெட்டி ரப்பர் விளையும் வளநிலமாக அவற்றை மாற்றுவதற்குக் குனிந்தவர்கள் நிமிராத கதை மேலும் ஒரு சோகத் தொடர்.

காலனித்துவ முதலாளிகளாலும், பின்னர் ஜப்பானியராலும், பின்னர் கம்யூனிச பயங்கரவாதிகளாலும், தொடர்ந்து அவசரகால அடக்குமுறை ஆதிக்க அரசாலும் அவர்கள் அலைக்கழிக்கப்பட்டது மேலும் சோக அத்தியாயங்கள்.

சுதந்திர ஒளி மலாயாவுக்கு வந்தபோது இவர்கள் குடிசைகளிலும் கொஞ்சம் வெளிச்சம் வந்தது. ஆனாலும் நூற்றாண்டுகளாக முன்னேற்றக் காற்றை சுவாசித்திராத காரணத்தால், சுதந்திரத்தால் வந்த நன்மைகளை இவர்கள் முற்றாக அனுபவிக்க முடியவில்லை; அல்லது முயலவில்லை.

மலேசியா உதித்த பின் மலர்ந்த புதிய பொருளாதாரக் கொள்கை தமிழ் மக்களையும் (பொதுவாக இந்தியர்கள் என்ற வகையில்) ஒரு பொருட்டாக மதித்து அவர்களைத் தன் பொருளாதாரத் திட்டங்களில் கொஞ்சம் கொஞ்சம் இடம் பெறச் செய்தது.

இதன்பின் விளைவுகள் இரண்டாக இருந்தன. விழித்துக்கொண்ட வர்கள் பிழைத்துக் கொண்டார்கள். பெரும்பாலும் அரசாங்கத்தை எதிர்பார்க்காமல் புதிய பொருளாதாரத்தின் வர்த்தக வாய்ப்புக் களைப் பற்றிக் கொண்டவர்கள், தீவிரமாக முன்னேறினார்கள்.

இன்று மலேசியாவில் உள்ள வளமான தமிழ் வர்த்தக சமூகம் அப்படி முன்னேறியதுதான்.

இன்னொரு புறத்தில் அடிமட்ட மக்களுக்குக் கல்வி, சுகாதார வசதிகள் மேம்படுத்தப்பட்டதால், பொதுவாக அடிமை வாழ்க்கை ஒரு முடிவுக்கு வந்தாலும் புதிய மலேசியாவில் மற்ற இனங்கள் முன்னுக்கு வந்த அளவுக்கு தமிழர்கள் முன்னேறவில்லை.

இந்தப் பின்னணியில்தான் மலேசியாவில் தமிழும், இலக்கியமும், பண்பாடும் வளர்ந்த வரலாற்றை அவதானிக்க வேண்டும்.

முதலாளிகளின் பாராமுகத்தைப் பற்றிக் கவலைப்படாமல் குடிசைப் பள்ளிகளையும் கோயில் பள்ளிகளையும் தங்கள் சொந்த முயற்சியில் அமைத்த எங்கள் முன்னோர்களே இன்றைக்கு மொழி உயிரோடு இருப்பதற்குக் காரணம்.

ஆனால் இன்று அந்த மொழி வளர்ச்சி அடைந்திருப்பதற்கும், தமிழ்நாட்டுக்கு வெளியே தமிழ் உயிர்ப்போடிருக்கும் ஒரு சில நாடுகளில் மலேசியாவும் ஒன்றாக நிலைப்பதற்கும் சுதந்திர மலேசிய அரசின் இணக்கப் போக்கும் ஒரு காரணமாகும்.

பல இனச் சூழ்நிலையில், பல மொழிகள், கலாச்சாரங்களுக்கு மத்தியில் எங்களுக்கு அங்கு தமிழ் மரபு திரியாத வாழ்க்கை கிடைத்திருப்பது நாங்கள் பெற்ற பேறே ஆகும்.

இந்த வாழ்க்கையின் ஓர் அங்கமாகத்தான் தமிழ் இலக்கியம் அங்கு தழைத்து வளர்கிறது. வளர்தல் என்பது இயற்கை விதியாக இருக்கலாம். ஆனால் காட்டுப் பயிர்கள் போலில்லாமல் உணவுப் பயிர்கள் போலவும் மலர்ச் செடிகள் போலவும் பயன் தருவனவாக அவற்றை வளர்த்தெடுக்க அணுக்கமான கவனிப்பும் பராமரிப்பும் உரமும் தேவை. இதற்காகத்தான் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தோன்றியது.

அடிநாளில் சி. வேலுசுவாமி, சி.வீ. குப்புசாமி, கனகசுந்தரம், பின்னர் முருகு சுப்பிரமணியம், எம் துரைராஜ் என்னும் எங்கள் முன்னைய தலைமுறை எழுத்தாளர்களும் இளைய தலை முறையில் ஆதி குமணன் என்னும் அரிய தலைவரும் வளர்த் தெடுத்த இந்த இயக்கத்திற்கு இன்று நான் தலைவராக இருந்து தொண்டாற்றும் அரிய வாய்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், தமிழ் இலக்கியத்தைப் பராமரிக்கவும் வளர்க்கவும் மேற்கொண்டு வரும் முயற்சிகள் பற்றி இந்தக் கருத்தரங்கக் கட்டுரைகளில் பல இடங்களில் காணலாம்.

இந்த முயற்சிகளின் ஒரு புதிய பரிமாணமாக தமிழ் வழங்கும் பிற பிரதேசங்களுடன் எங்கள் நட்பினைப் பலப்படுத்திக் கொள்ளும் நடவடிக்கைகளில் கடந்த சில ஆண்டுகளாக சங்கம் இறங்கி யுள்ளது. முக்கியமாக மலேசியாவுக்கு வெளியே அதிகம் அறியப் படாமல் இருக்கிற எங்கள் மொழி, இலக்கியப் படைப்புக்களை உலகஅளவில் அறிமுகப்படுத்துவது அதன் முக்கிய நோக்கமாகும்.

அதன் முதற்கட்டமாக 2004ஆம் ஆண்டில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் குழு ஒன்று தமிழ்நாட்டுக்கும் புதுவைக்கும் பெங்களூருக்கும் சுற்றுலா மேற்கொண்டு கருத்தரங்கங்களும் சொற்பொழிவுகளும் நடத்தியது. அப்போதே எங்களுக்கு மூன்று மாநிலங்களிலும் உற்சாகமான வரவேற்புக்கள் வழங்கப்பட்டன. பல முக்கிய எழுத்தாளர்கள், கல்வி நிறுவனங்கள் ஆகியவற்றின் கவனிப்பை நாங்கள் பெற்றோம்.

அந்த முயற்சிகளை மேலும் உறுதிப்படுத்தும் நோக்கத்துடன் 2007இல் மேற்கொள்ளப்படும் இந்தப் பயணம் அமைகிறது. இந்த முறை எங்கள் இலக்கியத்தை முக்கியமான தமிழக / புதுவைப் பல்கலைக்கழகங்களின் பார்வைக்கு எடுத்துச் செல்கிறோம்.

தமிழுலகம் என்று ஒன்று இன்று உருவாகியுள்ளது. சென்ற தலைமுறைகளில் பிழைப்புத் தேடிச் சென்ற தமிழர்கள் அல்லாமல் புதிய தலைமுறைகளில் பிழைப்பையும் உயர் வருமானத்தையும் தேடியும் ஈழத்திலிருந்தும் நிர்ப்பந்தத்தினாலும் புலம்பெயர்ந்த தமிழர்கள் இந்தப் புதிய தமிழுலகத்தை உருவாக்கியிருக்கிறார்கள். புதிய தொழில் நுட்பத்தினாலும் குறிப்பாக இணையத்தினாலும் நமது கலாச்சார, இலக்கியக் கொடுக்கல் - வாங்கல் ஒரு புதிய தளத்தை எட்டியிருக்கிறது.

இருந்தும் நாங்கள் மலேசியாவிலிருந்து உங்கள் அகமும் முகமும் தேடி வந்திருக்கிறோம். இங்கிருந்து எங்கள் முன்னோர் கொண்டு சென்ற தமிழ்ச் செல்வங்களை நாங்கள் காப்பாற்றிப் புதுமைப் படுத்திக் கொண்டு வந்திருக்கிறோம்.

அவை பற்றிய தொகுப்புக் கட்டுரைகளை இந்த நூலில் நீங்கள் காணலாம். இந்தத் தொகுப்பினை நாங்கள் தமிழ்நாடு / புதுவைக்

கல்வியாளர்களுக்கும் ஆய்வாளர்களுக்கும் கொண்டு வருவதன் காரணம், அவர்கள் பல்கலைக்கழகங்களில் மலேசியத் தமிழ் இலக்கியம் எதாகிலும் ஒரு வகையில் பாடமாகவும் ஆராய்ச்சிக் குரிய பொருளாகவும் ஏற்கப்படவேண்டும் என்பதுதான்.

மலேசியாவில் ஆய்வாளர்கள் இவற்றை ஆராய்ந்து எழுதி யிருக்கிறார்கள். ஆனால் அவை தனிப்பட்ட எங்கள் பிரதேசத் திற்குள் நிற்கின்றன. தமிழ்நாட்டு / புதுவை ஆய்வாளர்கள் தமிழ் இலக்கிய வரலாறு எழுதும்போதெல்லாம் எங்கள் இலக்கியத்தை அதில் ஒரு பகுதியாகப் பார்ப்பதில்லை. பார்க்க முயற்சி செய்த வர்கள் போதிய ஆவணங்கள் கிடைக்கவில்லை என்றே வருந்தி யிருக்கிறார்கள்.

இந்தக் குறைகளை நிவர்த்தி செய்யும் ஆரம்ப முயற்சியாக இந்தக் கட்டுரைத் தொகுப்பினை உங்கள் முன்னே வைக்கிறோம். இது சிறு பொறி. இதன் மூலம் மலேசியத் தமிழ் இலக்கியத்தைப் பற்றிய உங்கள் ஆர்வம் கொழுந்துவிட்டு எரியத் தொடங்கவேண்டும் என்பது எங்கள் விருப்பம். அப்படி இந்த முயற்சிகள் வெற்றி பெறுமானால் அந்தத் தேவைக்கேற்ற செயலாக்கங்களில் எங்கள் எழுத்தாளர் சங்கம் ஈடுபடும்.

அன்புடன்

**பெ. இராஜேந்திரன்**

தலைவர்

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்.

# மலேசியத் தமிழ் எழுத்துலகம் : நூற்று முப்பது ஆண்டுகளின் வரலாறு

## (முனைவர் ரெ. கார்த்திகேசு)

## தொடக்கம்

*மலேசியத் தமிழ் இலக்கியத்திற்கு ஏறக்குறைய 130 ஆண்டுகள் வரலாறு இருப்பது நமக்கெல்லாம் பெருமை தரும் செய்தி. மலேசியாவில், பினாங்கில் 1876இல் "தங்கை நேசன்" என்னும் பத்திரிகை அச்சிடப்பட்டு வெளிவந்துள்ள செய்தி மலேசிய இலக்கிய வரலாற்றாசிரியர்களால் குறிக்கப்பட்டுள்ளது. (மா. இராமையா: "மலேசியத் தமிழ் வரலாற்றுக் களஞ்சியம்). சிங்கப்பூரில் 1887இல் சி. ந. சதாசிவப் பண்டிதரின் "வண்ணையந்தாதி" முதலிய நூல்கள் தொடக்கமாக அமைந்தன (ஏ.ஆர். எ. சிவகுமாரன் : "சிங்கப்பூர் மரபுக் கவிதைகள்).*

*இந்தத் தொடக்கங்களிலிருந்து இந்த இலக்கிய வரலாறு எழுச்சியும் தளர்ச்சியும் கண்டு தொடர்ந்து வளர்ந்திருக்கிறது. அச்சுவசதியும் ஊடக வளர்ச்சியும், அவற்றைப் பெறவும் பெருக்கவும் நிதி வசதியும் உள்ள இந்த நவீன காலகட்டத்தில் வாழும் நாம், இவையெல்லாம் மிக அரிதாக இருந்த ஒரு மங்கிய தொடக்க காலத்தில் உண்மையான தமிழ்மொழி பண்பாட்டு அர்ப்பணிப்பு உணர்வுடன், இந்த இலக்கிய வளர்ச்சிக்கு வித்திட்ட வித்தகர்களான நம் முன்னோடிகளை மானசீகமாகப் போற்றி வணங்குதல் வேண்டும்.*

*மலேசியாவில் நவீன தமிழ் இலக்கியத்தின் மறுவுயிர்ப்புக் காலமாக 1946ஐ ஓர் எல்லைக் கோடாகக் காட்டுகிறார் மா. இராமையா. இரண்டாம் உலகப் போரில் ஜப்பானியர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் மத்தியில் சிக்கிச் சீரழிந்த மலேசியாவில்*

அன்றாட வாழ்க்கையின் அவலங்களுக்கிடையில் குறிப்பிட்டுச் சொல்லத்தக்க இலக்கியங்கள் ஏதும் தோன்றவில்லை. 1946க்குப் பிந்திய இலக்கிய வரலாறு சி. வீ. குப்புசாமி எழுதிய "ஜப்பானியர் லாக்கப்பில் ஏழு நாட்கள்", "யுத்தத்தால் வந்த யுத்தம்", (இரண்டும் 1946) என்ற நூல்களுடன் தொடங்குவதும் பொருத்தம். சி. வீ. குப்புசாமி இவற்றைத் தொடர்ந்து மலேசியத் தமிழ் இலக்கியத்தின் கிரியா ஊக்கியாகவும், எழுத்தாளர் இயக்கங்களின் நடத்து நராகவும் (மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைமைப் பதவி உட்பட) நெடுநாட்கள் இருந்து மறைந்தார்.

## கதை வகுப்பு

1946க்குப் பிறகு இந்த நாட்டு தமிழ்ப் புத்திலக்கியத் துறையில் இடம்பெற்ற மிக முக்கியமான நிகழ்வு அக்காலத்து முன்னோடி எழுத்தாளர்களாகவும் விமர்சகர்களாகவும் இருந்த சுப. நாராயணனும் பைரோஜி நாராயணனும் "தமிழ் நேசன்" நாளேட்டில் 1950இல் நடத்திய "கதை வகுப்பு" ஆகும். "இரண்டு நாராயணன்களும் கூடி நடத்திய கதைவகுப்பு கதை எழுதுவோருக்கு மட்டுமின்றி கவிதை, உரைநடை, நாடகம் ஆகியன எழுதுவோருக்கும் தக்க வழிகாட்டி யாக அமைந்தது. இந்நாட்டில் எழுத்தாளர்களை உருவாக்க முடியாது என்று சொல்பவர்களுக்கு இஃதோர் சவாலாகவும் அமைந்துவிட்டது என்றுதான் சொல்லவேண்டும்." (மா. இராமையா : மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு).

இந்த முயற்சியின் உச்சகட்டமாக 1951இல் கதை வகுப்பு உறுப்பினர்களுக்கு ஒரு பரீட்சையும் வைத்தார்கள். மொழி, எழுத்து, ரசனை போன்றவற்றைப் பற்றியும், கதை வகுப்பு, மனத்தத்துவம், அரசியல் போன்ற குறிப்பிட்ட தலைப்புகளைப் பற்றியுமான கேள்வி பதிலாக இது அமைந்திருந்தது. இவற்றில் வெற்றி பெற்ற வர்களை மேதை எழுத்தாளர், சிறந்த எழுத்தாளர், தேர்ந்த எழுத்தாளர், நல்ல எழுத்தாளர், ஆர்வ எழுத்தாளர் என்று தரம் பிரித்து அறிவித்தார்கள்.

மேதை எழுத்தாளர்கள் மூவர்: பி.ஏ. கிருஷ்ணதாசன் (தைப்பிங்); அ. இராமநாதன் (சுங்கை சிப்புட்); சி. மாரியப்பன் (காஜாங்).

23 பேர் சிறந்த எழுத்தாளர்கள் என அறிவிக்கப்பட்டனர். அவர்களுள் பின்னாளில் இலக்கிய உலகில் முக்கியமானவர்களாக வளர்ந்த பெ. மு. இளம்வழுதி (குவால சிலாங்கூர்); கா. பெருமாள் (ரிங்லட்); சி. வடிவேல் (லாபு); சி. வேலுசாமி (ரந்தாவ்); எஸ். எஸ். சர்மா (சிங்கப்பூர்) ஆகியோர் அடங்குவர்.

தேர்ந்த எழுத்தாளர்கள் 17 பேர்கள் பட்டியலில் மா. இராமையா (மூவார்); கு. நா. மீனாட்சி (குவால சிலாங்கூர்) ஆகியோர் இடம் பெற்றிருந்தனர். நல்ல எழுத்தாளர்கள் 14 பேர்; ஆர்வ எழுத்தாளர்கள் 18 பேர்.

## எழுத்தாளர் பேரவை

1952இல் எழுத்தாளர்களை ஊக்குவிக்கும் இன்னொரு முயற்சியாக சிங்கப்பூர் "தமிழ் முரசு" எழுத்தாளர் பேரவை என்ற அமைப்பை ஏற்படுத்தியது. இதில் எழுத்தாளர்கள் உறுப்பியம் பெற்றனர். முதலாவதாகப் பேர் பதிந்து கொண்டவர் மா. செ. மாயதேவன். எழுத்தாளர் பேரவையின் விதிமுறைகளில் ஒன்று, உறுப்பினராகும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதமும் ஏதாவது ஒரு படையலை உருவாக்கவேண்டும் என்பது. மற்றொன்று, படைப்பிலக்கியம் எழுதும் எவரும் பேரவையின் வேறு இரண்டு உறுப்பினர்களுக்கு அதனை அனுப்பித் திருத்திய பின்னரே அதனை அச்சில் ஏற்ற வேண்டும் என்பது.

## இலக்கிய இதழ்கள்

46-க்குப் பிந்திய இலக்கிய இதழ்களில் முந்தியது முதலில் கா. இராமநாதனையும் பின்னர் தி. சு. சண்முகத்தையும் ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த "சோலை" திங்களிதழ் ஆகும். 1952 ஜனவரி தொடங்கி எட்டு மாதங்கள் மட்டுமே வெளி வந்திருந் தாலும் முன்னோடி எழுத்தாளர்களான சி. அன்பரசன், கா. அண்ணாமலை, கா. பிச்சைமுத்து, க. ப. சாமி, இராவணேசப் புலவர் (ஈப்போ), கிருஷ்ணதாசன், மா. செ. மாயதேவன், மா. இராமையா, அ. இராமநாதன் ஆகியோர் இதில் எழுதினர்.

## மாணவர் மணிமன்ற மலர்

1953இல் "தமிழ் முரசு" நாளிதழ் "மாணவர் மணி மன்ற மலர்" என்ற வார இணைப்பு ஒன்றினைத் தொடங்கி தமிழ்ப் பள்ளி மாணவர்களும் சிறுவர்களும் இலக்கிய அறிமுகம் பெற வழியேற்படுத்திக் கொடுத்தது. பல பின்னாள் எழுத்தாளர்களுக்கு இதுவே பயிற்சிக்களமாகவும் அமைந்தது.

மாணவர் மணிமன்ற மலரில் எழுதி பிற்காலத்தில் எழுத்துலகில் முக்கிய எழுத்தாளர்களாக வளர்ந்தவர்களில் ம. முருகையன் (முல்லை), மு. அப்துல் லத்தீப், சு. அப்து'ல் முத்தலிப்,

கு. கிருஷ்ணன், மு. சீனிவாசன், மைதி அசன்கனி, பழ. அடைக்கலம் (தங்காக் தமிழ்ப்பாணன்), நீ. பெ. கலைச்செல்வன், ரெ. கார்த்திகேசு, செ. சின்னையா, அ. சந்திரசேகரன், சா.ஆ. அன்பானந்தன், ப. மு. அன்வர், கே. எம். யூசுப், வே. சு. இளந்திரையன், மு. பக்ருதீன், மைதி. சுல்தான், அ. ரெசுவப்பா, வீ. தீனரட்சகி, ப. கு. சண்முகம் ஆகியோர் அடங்குவார்கள்.

அந்தக் காலகட்டத்தில் கவிஞர்களாக இருந்த சோமசன்மா, முரசு. நெடுமாறன், கவி மதிதாசன், சி. வேலுசுவாமி, வளர்மதி முதலானோர் மணிமன்ற மலரில் நிறையக் கவிதைகள் எழுதி யுள்ளனர்.

## சிறுகதைப் போட்டிகள்

50களின் பிற்பகுதியில் "தமிழ் முரசு" நாளிதழ் மலேசிய எழுத்தாளர்களுக்கான சிறுகதைப் போட்டியை நடத்தியது. அப்போது அதன் துணையாசிரியராக இருந்த வை. திருநாவுக்கரசு அவர்களே இந்தப் புதிய முயற்சியை ஊக்குவித்து நடத்தினார். இந்தப் போட்டியில் பிற்காலத்திய பல நல்ல சிறுகதை எழுத் தாளர்கள் தங்களை அடையாளம் காட்டினார்கள். ரெ. கார்த்திகேசு, அ. ந. பெ. சாமி, பெ. மு. இளம்வழுதி, சி. அன்பரசன், மா. இராமையா, அ. கி. அறிவானந்தன், மு. கந்தன், கு. நா. மீனாட்சி, சி. வடிவேலு முதலானோர் இதில் பங்குபற்றிப் பரிசுகள் பெற்றுள்ளனர்.

## ரசனை வகுப்பு

1953இல் தமிழ் முரசு "ரசனை வகுப்பு" தொடங்கிற்று. "கதை வகுப்பு" நடத்தியவர்களில் ஒருவரான கந்தசாமி வாத்தியாரே ரசனை வகுப்பையும் நடத்தினார். ரசனை வகுப்பு இதழ்களை மட்டுமின்றி வானொலித் தமிழ் நிகழ்ச்சிகளையும் தீவிரமாக விமர்சனம் செய்தது. எதிலும் புரட்சி செய்யவேண்டும் என்ற தீவிர எண்ணம் கொண்டவரான கந்தசாமி வாத்தியார் "அண்ணா அறிஞரா?" என்ற ஒரு கட்டுரையை எழுதி நீண்ட விவாதத்தையும் தொடக்கி வைத்தார்.

## தமிழ் எழுத்தாளர் மாநாடு

கந்தசாமி வாத்தியார் ஆரம்ப காலத்திலிருந்தே "தமிழ் எழுத்தாளர் மாநாடு" ஒன்றினைக் கூட்டும் ஆசை கொண்டிருந்தார்.

29.10.55இல் இது குவாலாலும்பூரில் தமிழ்க் கலை மன்றத்தினரால் கூட்டப்பட்டது. மாநாட்டுத் திறப்பாளராக மா. இராமையா இருந்தார். காலையில் நடைபெற்ற கலந்துரையாடலுக்கு கோ. சாரங்கபாணி தலைமை தாங்கினார். பிற்பகலில் சி.வீ. குப்புசாமி தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. ஆழி. அருள்தாசன் முதலியோர் அதில் பேசினார்கள். 29 பேரே அந்தக் கூட்டத்தில் பங்கு பற்றினார்கள். அவர்களில் இர.ந. வீரப்பன், எஸ்.வி. சுப்பிரமணியன், அ. மருதப்பன், சி. அன்பரசன், பெ.மு. இளம்வழுதி, சி. வடிவேல், மு. கந்தன், அ.ந.பெ. சாமி, மு. அப்துல் லத்தீப், கு.நா. மீனாட்சி, பழ. மனோகரன், செ. குணசேகர், அ. கதிர்ச்செல்வன் ஆகியோரும் இருந்தனர். கூட்டம் பற்றித் தலையங்கம் எழுதிய "திருமுகம்" இதழின் ஆசிரியர் மா.செ. மாயதேவன், அந்தக் காலகட்டத்திலேயே மலாயாவில் இருநூற்றுக்கும் மேற்பட்ட எழுத்தாளர்கள் இருப்பதாகக் குறிப்பிட்டுள்ளது கவனிக்கத்தக்கதாகும்.

## மலாயா தமிழ் எழுத்தாளர் சங்க அமைப்பு

1955இல் நடந்த இந்தக் கூட்டத்துக்குப் பிறகு தமிழ் எழுத்தாளர் களுக்கான சங்கம் ஒன்று அமைக்கும் எண்ணம் இவர்களிடையே ஓங்கி வந்தது. 5.7.1958இல் சி. வேலுசாமி அவர்களின் முயற்சியில் மலாயா தமிழ் எழுத்தாளர் சங்க அமைப்புக் கூட்டம் குவாலா லும்பூர் பங்சார் தமிழ்ப்பள்ளியில் நடந்தது. இக்கூட்டத்தில் தேர்ந் தெடுக்கப்பட்டோர்: தலைவர் சி.வீ. குப்புசாமி, துணைத்தலைவர் தி.சு. சண்முகம், செயலாளர் சி. வேலுசுவாமி, துணைச் செயலாளர் செ. குணசேகர், பொருளாளர் மு. அப்துல் லத்தீப். 2.2.1959இல் இதற்குப் பதிவு கிடைத்தது.

இதன் ஆண்டுக் கூட்டத்தில் தமிழ் நேசன் துணையாசிரியர் கனகசுந்தரம் புதிய தலைவராகவும் செ. குணசேகர் பொதுச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இதன் பிறகு சங்கம் செயலிழந்து அதன் பதிவும் ரத்தாகிற்று.

அதன்பின் மீண்டும் சி. வேலுசுவாமியின் முயற்சியில் ஒரு அமைப்புக் கூட்டம் 1962இல் கூட்டப்பட்டு பதிவுக்கான மறு முயற்சிகள் செய்யப்பட்டன. 26.3.1963இல் சங்கம் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் என்ற புதிய பெயரில் பதிவு பெற்றது. புதிய சங்கத்தின் நிர்வாகிகள் பின்வருமாறு: தலைவர் முருகு சுப்பிர மணியம்; துணைத்தலைவர் சி. வேலுசுவாமி; செயலாளர் சு. கணபதி; பொருளாளர் கு. ஏழுமலை; செயற்குழுவினர் சி.வீ. குப்புசாமி, இர.ந. வீரப்பன், க. கிருஷ்ணசாமி முதலியோர். இந்தச்

சங்கத்தின் தொடர்ச்சியே இன்று பெ. ராஜேந்திரனின் தலைமையில் இயங்கி வருவதாகும்.

## தமிழர் திருநாள்

50களின் மத்திக்கும் 60-களின் மத்திக்கும் இடைப்பட்ட காலகட்டத்தில்தான் கோ. சாரங்கபாணி தமிழர்களை ஒருமுகப் படுத்தும் முகமாகவும் தமிழ் மொழி பண்பாட்டு எழுச்சியை ஊட்டும் முகமாகவும் தமிழர் திருநாளைத் தொடங்கினார். பல ஆண்டுகள் நாடு முழுவதும் கொண்டாடப்பட்ட தமிழர் திருநாள் இலக்கியப் போட்டிகளையும் விரிவாக நடத்தி இலக்கியத்தை வளர்த்தது.

## கு. அழகிரிசாமி

50களின் மத்தியில் தமிழ்நாட்டு எழுத்தாளர் கு. அழகிரி சாமி "தமிழ் நேசன்" நாளிதழுக்கு ஆசிரியராக வந்தமர்ந்தார். படைப்பிலக்கியத்தை ஊக்குவிப்பதையும் அவர் ஒரு நோக்கமாகக் கொண்டார். அவரை மையமாகக் கொண்டு குவாலாலும்பூரில் இலக்கிய வட்டம் ஒன்று அமைந்தது. 55இல் இதனை முன்னின்று அமைத்தவர் கி. மூர்த்தி. மாதம் ஒருமுறை கூடிய இந்த இலக்கிய வட்டத்தில் தலைநகர் தவிர கிள்ளான், செரம்பான், குவால செலாங்கூர் போன்ற இடங்களிலிருந்தும் அன்பர்கள் வந்து கலந்து கொண்டார்கள். முதன்முறையாக சிறுகதையின் உத்தி, நடை, கருத்து, அமைப்பு ஆகியவை பற்றி அறிவுபூர்வமான தகவல்கள் பரிமாறிக் கொள்ளப்பட்டன. கு.அ. இலக்கிய வட்டத்தில் வாசிக்கப்பட்ட கதைகளைத் தமிழ்நேசனில் வெளியிட்டும் வந்தார்.

கு.அ.வின் கணிப்பில் சிறந்த எழுத்தாளராகச் சிலர் குறிக்கப் பட்டனர். அவர்களுள் மு. அப்துல் லத்தீப், வி.ச. முத்தையா, மு. இராச இளவழகு, மா.செ. மாயதேவன், மா. இராமையா, சி. வடிவேலு, செ. குணசேகர், சி. வேலுசாமி, பொ.ச. பரிதி தாசன், சி. அன்பரசன், சி. கமலநாதன், நாகு மணாளன், அ. பேச்சி முத்து, அ.கி. அறிவானந்தன், ந. அநந்தராஜ் ஆகியோர் இருந்தனர். கு.அ. 1957இல் தமிழ்நாடு திரும்புமுன் இலக்கிய வட்டம் நிறுத்தப் பட்டது.

## நூல் வெளியீடு

1952இல்தான் புத்திலக்கியப் படைப்பு நூலாக மா. இராமையா, மா.செ. மாயதேவன் இருவரும் இணைந்து எழுதிய சிறுகதைத்

தொகுப்பான "இரத்த தானம்" வந்தது. இந்த நூல் குறித்து எழுத்தாளர் பேரவை "பேரவைக்குப் பூரிப்பு; மலாயாத் தமிழ்ப் பெருமக்களுக்கு பெருமை" என எழுதியது.

மலாயா சுதந்திரம் பெற்ற 1957இலிருந்து இங்கு எழுதப் பட்டும் படைப்பிலக்கியங்கள் பெருகின. பல நூல்களும் வெளி யாயின. வார, மாத இதழ்கள் பலவும் தோன்றி படைப்பாளர் களுக்கு உள்ள வாய்ப்புக்களை விரிவாக்கின. மலாயா (பின்னர் மலேசியா) தமிழ் எழுத்தாளர் இயக்கமும் படைப்பிலக்கியத்துக்கு தொடர்ந்து உயிரும் உணர்ச்சியும் ஊட்டி வந்தது.

## மணிக்கதைகள்

மலேசியத் தமிழ் இளைஞர் மணிமன்றம் தனது சமூகப் பணிகளுக்கிடையே ஆற்றி வந்த இலக்கியப் பணியின் ஒரு உச்சமாக மலேசியத் தமிழ் எழுத்தாளர்களின் சிறுகதைத் தொகுப்பு ஒன்றினைக் கொண்டு வந்தது. 1968-இல் வெளிவந்த "மணிக்கதைகள்" என்னும் தொகுப்பு அக்கால கட்டத்தில் மலேசிய இலக்கியம் அடைந்துள்ள வளர்ச்சியை நன்கு பிரதிபலிப்பதாக அமைந்தது. "தீபம்" நா. பார்த்தசாரதியின் முன்னுரையுடனும், டாக்டர் இராம சுப்பை யாவின் அணிந்துரையுடனும், இலங்கை இரசிகமணி கனக. செந்தி நாதனின் ஆய்வுரையுடனும், மன்றத் தலைவர் க. கிருஷ்ண சாமியின் முகமனுடனும் வெளியான இந்நூலில் சா. ஆ. அன்பா னந்தன், க. கிருஷ்ணசாமி, சாமி. மூர்த்தி, ரெ. கார்த்திகேசு, எம். குமாரன், சை. பீர் முகம்மது, பரிதாமணாளன், மு.க.மா. முத்தமிழ்ச் செல்வன், சோ. பரஞ்சோதி ஆகியோரின் கதைகள் இடம்பெற்றிருந்தன.

## பவுன் பரிசுகள்

சிறுகதைத் துறைக்கு முருகு சுப்பிரமணியனை ஆசிரியராகக் கொண்ட "தமிழ் நேசன்" 1972இல் தொடங்கிய பவுன் பரிசுத் திட்டம் ஒரு பெரும் புத்துணர்ச்சியைத் தந்தது. இதில் நடுவர் களாக இருந்து கதைகளைத் தேர்ந்தெடுக்க நல்ல இலக்கியவாதி களையும் முருகு தன்னுடன் துணைக்கு அழைத்துக் கொண்டார். அவர்களுள் டாக்டர் ஆர். தண்டாயுதம், புலவர் சேதுராமன், எஸ்.ஆர்.எம். பழனியப்பன், ரெ. கார்த்திகேசு, டாக்டர் பிரமீளா கணேசன் ஆகியோரும் அடங்குவர்.

சி. அன்பானந்தம், அரு.சு. ஜீவானந்தன், இராம. வீரசிங்கம், மு. அன்புச்செல்வன், எம்.ஏ. இளஞ்செல்வன், இராம. கண்ண

பிரான், ஆர். சண்முகம், இ. தெய்வானை, சாமி மூர்த்தி, சீ. முத்து சாமி, பாவை, சி. வடிவேல், ந. மகேசுவரி, மா. இராமையா ஆகியோர் பவுன் பரிசு பெற்றோர் பட்டியலில் அடங்குவார்கள். முதல் ஆண்டில் பரிசு பெற்றவர்களைக் கூட்டித் தமிழ் நேசன் ஒரு உபசரிப்பு விருந்து நடத்தி அனைவருக்கும் பரிசு வழங்கிய துடன் முதல் பனிரெண்டு கதைகளை "பவுன் பரிசுக் கதைகள்" என்னும் தலைப்பில் ஒரு தொகுப்பாகவும் கொண்டு வந்தது.

இதன் பின்னர் தொடங்கப்பட்ட கவிதைக்கான பவுன் பரிசுப் போட்டியில் வே. மகேந்திரன், கரு வேலுசாமி, ஆதம் குமார், எல்லோன், கன்னல் கவி கரீம், வீரமான், காரைக்கிழார், சோம சன்மா, கரு. திருவரசு, எஸ்.கே. வடிவேலு, சங்கு சண்முகம் முதலியோர் பரிசு பெற்றனர்.

## மாதாந்திரச் சிறுகதைக் கருத்தரங்கம்

தமிழ் நேசன் வழியாக எழுத்தாளர்களுக்குப் புத்துணர்ச்சி ஊட்டிவந்த முருகு, அதே நேரத்தில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவராகவும் பொறுப்பேற்று சில ஊக்குவிப்புத் திட்டங் களைச் செயல்படுத்தி வந்தார். அவற்றுள் முக்கியமானது சிறுகதைக் கான மாதாந்திரக் கருத்தரங்கங்களைக் கூட்டி ஒவ்வொரு மாதத்திற்கும் சிறந்த ஒரு கதைக்கு 50 ரிங்கிட் பரிசு வழங்கி வந்ததாகும்.

இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட கதைகளின் முதல் தொகுதி 1974இல் "பரிசு" என்னும் தலைப்பில் வெளியானது. 14 கதைகள் இதில் இடம்பெற்றன. இவற்றை எழுதிய எழுத்தாளர்கள்: மீனா நடராஜா, ரெ. கார்த்திகேசு, ஆ. சாரதா, சாமி மூர்த்தி, சுமதி தங்கராஜ், த.ப. இலட்சுமணன், சக்கரவர்த்தி சுப்பிரமணியன், ஐ. இளவழகு, சி. வடிவேல், மா. சுப்பிரமணியம், மா. இராமையா, இரா.ச. இளமுருகு, துளசி, நாடோடி.

ஒரு சில ஆண்டுகள் விடுபட்டிருந்த மாதாந்திரத் தங்கப் பதக்க விருதளிப்பு ஆதி குமணன் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்திற்குத் தலைவராக வந்தபிறகு உயிர்ப்பிக்கப்பட்டுத் தொடர்ந்து இன்றும் நடைபெற்று வருகிறது. இதனை அடியொற்றி கவிதைக்கும் இப்போது காலவாரியாகக் கருத்தரங்குகள் நடைபெற்று வருகின்றன.

## பேரவைக் கதைகள்

1970களில் இரா. தண்டாயுதம் மலாயாப் பல்கலைக் கழக இந்திய இயல் துறையில் புத்திலக்கிய விரிவுரையாளராக வந்து

சேர்ந்தார். மலேசியப் படைப்பிலக்கியத்துக்கு அவர் ஆற்றிய சேவைகள் அதிகம். அவருடைய ஆலோசனையின் கீழ் மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவையின் முயற்சியில் தொடங்கப் பட்ட ஆண்டுச் சிறுகதைப் போட்டி இந்த நாட்டின் சிறுகதை வரலாற்றில் ஒரு மைல்கல்லாக ஆகியுள்ளது. 1986முதல் இதில் பரிசு பெற்ற கதைகள் நூல் உருவில் வந்து கொண்டுள்ளன.

## மலேசியத் தமிழ் இலக்கியம்

இரா. தண்டாயுதம் பதவிக் காலம் முடிந்து தமிழகம் திரும்பி அங்கே அகால மரணமடைந்தபிறகு அவருடைய நினைவாக "டாக்டர் தண்டாயுதம் நினைவிலக்கியப் பேரவை" தொடங்கப் பட்டது. அதனை முன்னின்று நடத்தியவர் அவருடைய நெருங்கிய நண்பரும் எழுத்தாளருமான வீ. செல்வராஜ் ஆகும். பேரவை மூலம் வீ. செல்வராஜ் ஆற்றிய முக்கிய பணி ஆண்டுதோறும் "மலேசியத் தமிழ் இலக்கியம்" என்ற தலைப்பில் சிறுகதைகள், கவிதைகள், ஒரு குறுநாவல் ஆகியவற்றைக் கொண்ட ஒரு தொகுப்பை வெளியிட்டதாகும். இந்தத் தொகுப்புகளை, குறிப்பாக வெளி நாட்டுத் தமிழர்களிடையே மலேசிய இலக்கியத்தை அறிமுகப் படுத்தும் கருவியாக செல்வராஜ் கருதி அப்படியே செயல் படுத்தினார். 1988 - 1994 ஆகியவற்றுக்கு இடைப்பட்ட காலத்தில் ஆறு தொகுப்புகள் வெளியாகின.

## நூல் பதிப்புகள்

1950களிலிருந்தே இந்த நாட்டின் எழுத்தாளர்கள் மிகுந்த சிரமங்களுக்கிடையில் புத்தகப் பதிப்புகளை மேற்கொண்டு வந்திருக்கிறார்கள். கட்டுரைத் தொகுப்புகள், ஆய்வு நூல்கள், கவிதைத் தொகுப்புகள், காவியங்கள், சிறுகதைத் தொகுப்புகள், நாவல்கள், புதுக்கவிதைத் தொகுப்புகள் ஆகியவை காலந்தோறும் பதிப்பிக்கப்பட்டு மலேசியத் தமிழ் இலக்கியத்திற்குச் செழுமை சேர்த்துள்ளன.

1995இல் இலங்கை எழுத்தாளரான மாத்தளை சோமு, மலேசியச் சிறுகதைகள் சிலவற்றைத் தொகுத்து "மலேசியத் தமிழ் உலகச் சிறுகதைகள்" என்னும் தலைப்பில் தமிழ்நாட்டில் பதிப் பித்தார். இந்தத் தொகுப்பு பின்னர் மலேசிய இடைநிலைப் பள்ளிகளில் பாடப்புத்தகமாகவும் வைக்கப்பட்டது.

1998இல் "மலேசிய நண்பன்" நாளிதழ் சிறந்த எழுத்தாளர்கள் பதின்மூவரை அழைத்து சிறுகதைகள் எழுதச் சொல்லி அவர்

களுக்கு ஆளுக்கொரு உயர்ந்த ரகக் கடிகாரத்தையும் பரிசாக அளித்தது. "கடிகாரக் கதைகள்" என்ற தொடரில் வெளியான இக்கதைகளைப் பின்னர் "சமுதாயக் கதைகள்" (1999) என்னும் தலைப்பில் ஒரு தொகுப்பாக வெளியிட்டு அதற்குப் பெரும் வெளியீட்டு விழாவையும் நடத்தியது.

2003ஆம் ஆண்டில் தமிழ் நாட்டின் பழம்பெரும் இதழான "கலைமகள்" ஆசிரியர் கீழாம்பூர் அவர்களின் முயற்சியில் 32 மலேசியச் சிறுகதை எழுத்தாளர்களின் படைப்புகள் "மலேசியச் சிறுகதைகள்" என்னும் தலைப்பில் வெளியிடப்பட்டன.

## ஆண்டுதோறும் விருதுகள் அமுதசுரபிகள் நாவலுக்காக

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் 1988 முதல் காலஞ் சென்ற அமைச்சர் டான் ஸ்ரீ மாணிக்கவாசகம் அவர்கள் நினைவாக ஆண்டின் ஒரு சிறந்த நூலுக்கு "டான் ஸ்ரீ மாணிக்க வாசகம் புத்தகப் பரிசு" என்ற பெயரில் சான்றிதழும் 5000 ரிங்கிட் ரொக்கமும் அளித்துக் கௌரவித்து வருகிறது. இந்தப் பரிசை இதுவரை வென்றவர்கள்: "மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்" என்னும் நூலுக்காக முரசு நெடுமாறன் (1998); "அந்திம காலம்" நாவலுக்காக ரெ. கார்த்திகேசு (1999); "சமுதாயச் சீர்கேட்டுக்கு வித்திடும் காதல், மணவாழ்க்கை, குழந்தை வளர்ப்பு: சிக்கலும் தீர்வும்" என்னும் ஆய்வுக் கட்டுரை நூலுக்காக கே.எம். குணா (2000); "அமாவாசை நிலவு" நாவலுக்காக மா. இராமையா (2001); "ஆர். சண்முகம் கதைகள்" சிறுகதைத் தொகுப்புக்காக ஆர். சண்முகம் (2002); "செய்கு கனான் காவியம்" நூலுக்காக ப. மு. அன்வர் (2003); "மனமே சுகமே" கட்டுரை நூலுக்காக சுவாமி பிரம்மானந்த சரஸ்வதி (2004); "ஊசி இலை மரம்" சிறுகதைத் தொகுப்புக்காக ரெ. கார்த்திகேசு (2005); "அமுத சுரபிகள்" நாவலுக்காக ப. சந்திரகாந்தம் (2006); "புயலில் மலர்ந்த பூக்கள்" கவிதை நூலுக்காக கரு. வேலுசாமி (2007).

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் 1983 தொடங்கி எழுத்தாளர்களுக்கும் எழுத்துத்துறைக்குப் பணிபுரிந்தவர்களுக்கும் ஆண்டுதோறும் தங்கப் பதக்கங்கள் வழங்கிப் பெருமைப்படுத்தி வருகிறது. இவை மலேசியாவில் தமிழுக்குத் தொண்டாற்றி மறைந்த பெரியவர்கள் பெயர்களில் வழங்கப்படுகின்றன. மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையின் தலைவராகப் பணி யாற்றிய தமிழறிஞர் பேராசிரியர் தனிநாயக அடிகளார், தமிழர் திருநாளின் தந்தை தமிழவேள் கோ. சாரங்கபாணி, மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் அடிநாள் தலைவரும் பத்திரிகை

யாசிரியருமான திரு சி.வீ. குப்புசாமி, மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் முன்னாள் தலைவரும் பத்திரிகையாசிரியரும் இலக்கிய வாதியுமான முத்தமிழ் வித்தகர் முருகு சுப்பிரமணியன், தமிழ் இளைஞர் மணி மன்றத்தின் தலைவரும் கலைஞரும் எழுத்தாளரு மான சமூகக் கலைமாமணி சா.ஆ. அன்பானந்தன் ஆகியோரின் நினைவாக இந்த விருதுகள் வழங்கப்படுகின்றன. இதுவரை சுமார் 100 பேருக்கு இவ்விருதுகள் வழங்கப்பட்டுள்ளன.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்க ஏற்பாட்டில் மறைந்த பத்திரிகாசிரியரும் அரசியல்வாதியும் அமைச்சருமான டான் ஸ்ரீ ஆதி நாகப்பன் பெயரிலும் அவருடைய குடும்பத்தாரின் ஆதர வுடன் ஆண்டுதோறும் விருதுகளும் நிதியும் அளிக்கப்படுகிறது. இது தமிழ் எழுத்து, பண்பாடு, கலை என்ற பிரிவுகளில் சிறந்தவர் களுக்கு அளிக்கப்படுகிறது. இதுவரை ஏறக்குறைய 50 பேர் இந்தப் பரிசுகளைப் பெற்றிருக்கிறார்கள்.

மலேசிய பாரதிதாசன் இலக்கிய அமைப்பும் ஆண்டு தோறும் பெரிய அளவில் "எழுத்தாளர் தினம்" ஒன்றினை நடத்தி எழுத்தாளர்களுக்கு விருதுகள் அளித்துக் கௌரவித்து வருகிறது. இவற்றுள் சிறந்ததாக சங்கிலிமுத்து - அங்கம்மாள் விருது ஒவ்வொரு ஆண்டும் 5000 ரிங்கிட் பணத்துடன் அளிக்கப்பட்டு வருகிறது.

இவற்றோடு மலேசியப் படைப்பாளர்கள் சங்கம் வழங்கும் டத்தோ பத்மனாதன் விருதும், மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கங்களின் பேரவை தனது ஆண்டுக் கூட்டத்தின்போது வழங்கும் விருதுகளும் தமிழ் எழுத்தாளர்களின் எழுத்து முயற்சிகளுக்குப் பெரும் தூண்டுகோல்களாக விளங்கி வருகின்றன.

## முடிவுரை

தமிழ்நாட்டுக்கு வெளியே இலங்கையைத் தவிர்த்து மலேசியாவில்தான் தமிழ் இலக்கிய உற்பத்தி அடர்த்தியாக இருக்கிறது. மலேசியத் தமிழ் நாளிதழ்களும் காலவாரி இதழ்களும் படைப்பிலக்கியத்துக்கு மிகச்சிறந்த ஆதரவை அளித்து வருகின்றன. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் இந்நாட்டில் படைப்பிலக் கியத்தை செழுமைப்படுத்த தொடர்ந்த நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தில் தீவிரமான தமிழ்ப் பற்றும் தமிழைக் காலங்காலமாக வாழ வைக்கவேண்டும் என்னும் அர்ப்பணிப்பு உணர்வும் உள்ளன. இவை தொடர்ந்து நிலைத்திருக்கும் வரையிலும் படைப்பிலக்கியச் செழுமை தொடர்ந்து அதிகரித்தே வரும்.

# மலேசியத் தமிழ்க் கட்டுரை இலக்கியம்[i]

## (முனைவர் ரெ. கார்த்திகேசு)

மலேசியாவில் கட்டுரை இலக்கியங்கள் பற்றி எழுதும் முல்லை இராமையா இப்படிக் கூறுகிறார்: *"(கடந்த 130 ஆண்டுகளில்) மலேசியாவின் பல நகரங்களில் 200-க்கு மேற்பட்ட பத்திரிகைகள் (நாள், வார, மாத இதழ்கள்) பதிப்புக்குக் கொண்டு வரப்பட்டிருக்கின்றன. அந்தப் பத்திரிகைகளையெல்லாம் சிறிது காலமோ நீண்ட காலமோ வாழவைக்கக் கட்டுரைகள் பெரும் பங்கு ஆற்றியிருக்க வேண்டும்."*[ii]

மலேசியாவில் தமிழர் வாழ்வின் ஆரம்பக் கட்டங்களில் அவர்களின் மொழி, கலை, இலக்கிய, சமுதாய வாழ்வின் பிரதி பலிப்பாக இருந்து அவற்றை வழிநடத்தவும் இந்தக் கட்டுரைகள் பெரும் பங்கு ஆற்றியிருக்கின்றன என்பது சரியான ஊகமே. இக்கட்டுரைகள் சிலவேளைகளில் நூல் உருவம் பெறும்போது தான் அவை வரலாற்றில் நிலைக்கின்றன. அவற்றைப் பற்றியே இக்கட்டுரையில் பார்க்கவிருக்கிறோம்.

### 1. தொடக்க காலம்

மலாயாவில் தொடக்க காலத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ள நூல்களுள் 1887இல் பலவேந்திரம் இராயப்பன் என்பவர் எழுதிய "சத்திய வேத சரித்திர சாரம்" என்னும் கிறிஸ்தவ நூலும், 1890இல் பதிப்பிக்கப்பட்ட "பதானந்த மாலை" என்னும் இஸ்லாமிய சமய நூலும் குறிப்பிடப்படுகின்றன. இவற்றுள் கவிதைக் கூறுகள் அதிகம் இருந்தாலும் உரைநடைக் கூறுகளும் இருந்திருக்கலாம் என யூகிக்கலாம்.

தொடக்ககாலப் பதிப்பு நூல்கள் சமய நூல்களாகவே இருந்திருக்கின்றன. அச்சியந்திரம் ஆசியாவில் தோன்றிய ஆரம்ப காலத்தில் கிறித்துவ சமயப் பிரச்சாரம் தலையோங்கி இருந்ததால் அதுவே முதல் அச்சு உற்பத்தி ஆயிற்று. இதனை முன்னோடியாக வைத்து இந்து, இஸ்லாமியப் பிரச்சார இலக்கியங்களும் அச்சேறின.

இராம சுப்பையா தொகுத்துள்ள Tamil Malaysiana என்னும் நூலின்படி[iii] 1920முதலே மலாயாவில் நூல் பதிப்புகள் தொடங்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. உதாரணமாக 1920இல் "தமிழின் பெருமை" (டி.கே. கந்தையாப்பிள்ளை); 1928இல் "சத்திய தரிசனம்" (ஆர். சுவாமி); 1931இல் "தமிழன்" (வே. கந்தையா); 1931இல் "பத்து மலை மகத்துவம்" (அற்புதானந்தா); 1932இல் "அகில மலாயா தமிழர் மாநாடு" (கோ. சாரங்கபாணி); 1933இல் "தமிழ் மக்கள் மாண்பு" (வ.மு. கனகசுந்தரம்); 1933இல் "யாழ்ப்பாணக் குடியேற்றம்" (சிவானந்தன்); 1935இல் "கடிதங்களும் அவை எழுதும் முறையும்" (பி. கோவிந்தசாமி); 1936இல் "எங்கள் எதிர்காலம்" (சி. சின்னதுரை); 1936இல் "கடவுளின் உண்மைத் தோற்றம்" (எஸ்.கே. சின்னமுத்து); 1936இல் "உலகம் போற்றும் உத்தம நபி" (உ. அப்துல் அனீஃப்); 1937இல் "பண்டித நேருஜியின் மலாயாச் சுற்றுப் பயணச் சரித்திரம்" (நெல்லை இரா. சண்முகம்); 1937இல் "வருங்கால நவயுகம்" (சீ.வி. குப்புசாமி); 1937இல் மலாயாவின் தோற்றம்" (முத்துப் பழனியப்பச் செட்டியார்); 1939இல் "மலாயா மான்மியம்" (சரவண முத்து).

இவை போலவே இந்து, இஸ்லாமிய, கிறிஸ்துவ சமய விளக்கங்களும், மலாயாவின் வரலாறும், இந்திய வரலாறும், தமிழர் சமுதாய நிலையும் மலாயாவில் பதிப்பிக்கப்பட்டுள்ள நூல்களில் அதிகம் எழுதப்பட்டுள்ளன.

1940களில் சுவாமி சத்தியானந்தா மலாயாவில் வாழ்ந்திருந்து "சுத்த சமாஜம்" என்னும் அனாதைக் குழந்தைகள் ஆசிரமத்தை நிறுவியதுடன் மலாயாவின் அரசியல் சமூக வரலாறுகள் பற்றியும் இந்து சமயம் பற்றியும் நூல்களும் எழுதினார். பிரமச்சாரி கைலாசம் என்பது அவருடைய இன்னொரு பெயரும் ஆகும். அவருடைய நூல்களில் குறிப்பிடத்தக்கன: 1940இல் "மலாயா சரித்திரம்"; 1941இல் "மலாயா தேசிய சரித்திரக் காட்சிகள்"; 1950இல் "கண்ணன் சரித்திரம்"; 1952இல் "நமது சமய விளக்கம்"; 1953இல் "உயர்ந்தோர் உலகு."

1935 முதல் திராவிடர் கழக சீர்திருத்தப் பிரச்சாரங்கள் பற்றிய நூல்கள் எழுதப்பட்டன. எடுத்துக்காட்டாக 1939இல் "பெரியார் ஈ.வே.ரா." (சீ.வி. குப்புசாமி); 1955இல் "வரலாற்றில் தமிழகம்" (கா.ப. சாமி) ஆகியவை 1935இல் அ.சி. சுப்பையா "சுந்தரமூர்த்தி நாயனார்

கிரிமினல் கேஸ்" என்னும் அரிய கற்பனை நூலை எழுதினார். பரமசிவன், சுந்தரமூர்த்தி நாயனாருக்குச் செய்தது துரோகம் என்னும் தொனியில் நீதிமன்ற வழக்காக அவர் எழுதியது புராணக் கதை களைக் கேலிசெய்யும் திராவிடர் கழகப் பிரச்சாரத்தின் அடிப்படை யிலேயே ஆகும்.

## 2. தமிழ் முரசு தந்த ஊக்கம்

சிங்கப்பூரில் கோ. சாரங்கபாணி ஆசிரியராக இருந்து நடத்திய தமிழ் முரசு நாளிதழில் எல்லாவித இலக்கிய வடிவங்களையும் ஊக்குவிக்க வேண்டும் என்று 1952இல் நடத்தப்பட்ட எழுத்தாளர் பேரவை, கட்டுரைகளையும் ஊக்குவித்துப் பயிற்சியும் அளித்தது. தரக்கட்டுப்பாட்டிற்கு எந்த அளவிற்கு அந்தக் காலத்திலேயே, எழுத்தாளர் பேரவை முக்கியத்துவம் கொடுத்தது என்பது கவனிக்கத் தக்கது.

எந்த ஒரு படைப்பும் உறுப்பினரான இரண்டு எழுத்தாளர் களுக்கு அனுப்பப் பெற்றுத் திருத்தம் பெற்ற பின்னரே அச்சில் ஏறமுடியும். மற்றுமொரு விதி, பேரவையில் உறுப்பியம் பெற்ற வர்கள் ஒவ்வொரு மாதமும் ஒரு படைப்பை ஒப்படைக்க வேண்டும். இது, எழுத்தாளர்களைத் தொடர்ச்சி குன்றாமல் வளர்ப்பதற்காக எடுத்துக்கொண்ட முயற்சி.

தாளிகைகளில், அறிவுபூர்வமான சிந்தனைகளையும், எழுத் தாற்றலையும் வளர்ப்பதற்கு, வேண்டுமென்றே முடுக்கிவிடப்பட்ட சில சர்ச்சைகள் கட்டுரைத் துறையை வளர்த்தன. பேரவையை முன்னின்று நடத்திய சுப. நாராயணன் (கந்தசாமி வாத்தியார்) "அண்ணா அறிஞரா?" என்ற கேள்வியை எழுப்பினார். அண்ணாவின் எழுத்தில் தணியாத ஆவல் கொண்டிருந்த பலரை இந்தக் கேள்வி ஆவேசகம் கொள்ளச் செய்தது. அண்ணா அறிஞர் தான் என்று பல சான்றுகளுடன் பலர் எழுதினார்கள்.

அடுத்து, "திருக்குறள் அபத்தக் களஞ்சியம்" எனும் கட்டுரைத் தொடரை சுப. நாராயணனே எழுதி தமிழ்முரசில் வெளியிட்டார். இதற்குப் பதிலாக "திருக்குறள் அறிவுக் களஞ்சியம்" என்ற பதில் கட்டுரையை தி.சு. சண்முகம் எழுதினார்.

புதுமைப்பித்தன் கதைகள் ஆபாசமானவை எனும் பொதுக் கருத்தை தீவிரமாக எதிர்த்து, சுப. நாராயணனும் மா.செ. மாய தேவனும், அவை விரசமற்றவை எனும் ஆய்வுக் கட்டுரைகளைத் தக்க சான்றுகளுடன் எழுதி "இலக்கியத்தில் புதுமைப்பித்தன்" எனும் நூலை 1961இல் வெளியிட்டனர்.

## 3. சுதந்திர மலேசியாவில் (1957-க்குப் பின்னர்)

மலாயா சுதந்திரம் அடைந்த காலத்தில் இந்தியர்கள் (பெரும் பாலும் தமிழர்கள்) புதிய நாட்டில் தங்கள் மொழி, பண்பாடு ஆகியவற்றுக்கு உரிய அங்கீகாரம் பெறவேண்டும் என்னும் மன நிலையும் பொருளாதாரத்தில் எழுச்சி பெறவேண்டும் என்ற மன நிலையும் உயர்ந்து இருந்தது. தமிழர் எழுச்சிக்காக கோ. சாரங்க பாணி தமிழர் திருநாள் இயக்கத்தைத் தொடங்கியதும் இந்தக் காலகட்டத்திலேயே ஆகும். இந்த உணர்வுகளைக் குறிக்கும் கட்டுரை நூல்கள் பல சுதந்திரம் அடைந்த காலத்திலிருந்து தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன.

மா.செ. மாயதேவன் இலக்கியம், சமுதாயம் இரண்டிலும் தன்னை முற்றாக இணைத்துக் கொண்டவர். 1958இல் "தமிழர் நாகரிகமும் கலையும்" என்னும் நூல் ஒன்றினை அவர் பதிப்பித்தார். 1968இல் "மலேசியாவில் தமிழர்கள்" என்னும் நூலையும் எழுதினார். இவரே தமிழ்ப் புத்திலக்கியத் தொண்டாக புதுமைப்பித்தன் படைப்புகள் பற்றிய கருத்தரங்கு ஒன்றை நடத்தி அக்கருத்தரங்கக் கட்டுரைகளை 1961இல் பதிப்பித்தார். இதனைத் தொடர்ந்து மலேசிய எழுத்தாளரான மா. இராமையாவின் எழுத்துகளைப் பாராட்டும் முகமான விழா ஒன்றையும் நடத்தி அந்தக் கட்டுரை களை 1975இல் "மா. இராமையாவின் இலக்கியப் பணி" என்ற தலைப்பில் வெளியிட்டார்.

கா. கலியபெருமாள் நீண்டகாலம் தமிழாசிரியராக தமிழுணர்வோடு ஏராளமான கட்டுரைகளை எழுதினார். 1965இல் "மலேசியாவில் தமிழர் திருநாள்" என்னும் ஒரு நூலை எழுதினார். இவர் மலேசியத் தமிழ்ப் பள்ளிக் குழந்தைகளுக்குப் பாடநூல்கள் பலவற்றையும் நிறையத் துணை நூல்களையும் எழுதியுள்ளார்.

## 4. ஐம்பது முதல் எழுபதுகள் வரை இலக்கிய விளக்க நூல்கள்

எல்லாக் காலங்களிலும் இலக்கியம் கற்ற அறிஞர்கள் தொடர்ந்து இலக்கிய நூல்களைப் படைத்து வந்திருக்கிறார்கள். இவர்களுள் முக்கியமானவர் ரெ. இராமசாமி. யாப்பிலக்கணம் நன்கறிந்த புலவரான இவர், வானொலியில் தொடர்ந்து இலக்கிய உரைகள் ஆற்றியதுடன் நூல்களும் வெளியிட்டுள்ளார். அவருடைய நூல்களில் குறிப்பிடத்தக்கன: 1967இல் "பாரதியின் காதலி"; 1976இல் "கம்பரின் காவிய ஓவியம்" ஆகியவை.

மலேசியாவில் பணிபுரிவதற்காக தமிழ்நாட்டிலிருந்து வந்திருந்த சில அறிஞர்களும் இலக்கிய நூல்கள் படைத்து இங்கு பதிப்பித்துள்ளார்கள். சில எடுத்துக்காட்டுகள்: ஈ.ச. விசுவநாதன், "வான் கலந்த மாணிக்கவாசகம்" (1964); கா.பொ. இரத்தினம், "கல்கியின் இலக்கியத்திறன்", (1964); ப. அருணாசலம், "கவியரசர் பாரதி", (1966); சா. அமீது, "சிந்தைக்கினிய சிலம்பு", (1962).

இந்தக் காலகட்டத்தில் எழுதப்பட்ட சில பிரயாண நூல்கள்: ஏ. சண்முகம், "போபாலில் கபி கபி", (1978); வே. விவேகானந்தன், "அஜந்தா அழைக்கிறது", (1979).

## 5. 1980 - 1990களில் மலேசியத் தமிழ்க் கட்டுரை நூல்கள்

80களில் அச்சுத் தொழிலின் முன்னேற்றமும் படிப்போர் தொகைப் பெருக்கமும் நூல்களின் பதிப்பை இலகுவானதாக ஆக்கியதால் மேலும் நூல்கள் பல்கிப் பெருகுவதாயின. நூல்களின் கருப்பொருள்களும் பல்வேறாகின.

### 5.1. சமய ஆன்மீக நூல்கள்

#### சிந்தனைகள்

பொதுவாக சமயம் ஆன்மீகம் தொடர்பான நூல்களே அதிகம் வெளிவந்துள்ளன. சித. இராமசாமி பல நூல்கள் எழுதினார். 1985இல் அவரின் "தேவாரத் தேன்", "ஆன்மீகச் சிந்தனைகள்" ஆகியவையும் 1989இல் "இந்து சமயம் - ஒரு கண்ணோட்டம்" என்ற நூலும் வெளிவந்தன. எஸ்.ஆர்.எம். பழனியப்பன் 1995இல் "நகரத்தாரின் குலதெய்வங்கள்" மற்றும் 1996இல் "பருவநாள் விழாக்களும் பலன் தரும் விரதங்களும்" எழுதினார்.

இவற்றுக்கு எதிராக சமய / சடங்கு மறுப்புக் கொள்கை நூல்களும் வெளிவந்தன. நாரண திருவிடச்செல்வன் 1991இல் "அலகுக் காவடி, தீமிதி: அருளா அறிவியலா?" என்னும் நூலை எழுதினார். குறள் நெறி போற்றும் நூலாக சி. மணிக்குமரன் 1996இல் "வள்ளுவர் சொல்லே வேதம்" என்னும் நூல் எழுதினார்.

ஒரு கிறிஸ்துவ சமய போதகரும் சமுதாயச் சிந்தனையாளருமான வே. தேவராஜுலு இக்காலகட்டத்தில் பல நூல்கள் வெளியிட்டார்: "உறவாடும் உண்மைகள்", "புதிய வாழ்க்கை", "நீதியின் பாதையில்", "இன்று புதிதாய்ப் பிறந்தோம்", "அருட்சுவைக் கதைகள்" ஆகியவை அவற்றுள் சில.

## 5.2. வாழ்க்கை வரலாறு, அனுபவங்கள் முதலியன

இந்தக் காலகட்டத்தில் மலேசியாவில் வாழ்ந்த முக்கிய சமுதாயத் தலைவர்களின் வரலாறுகள் நூல்களாகியுள்ளன. தமிழ்ச் சமுதாயத்திற்கு விழிப்புணர்வு ஏற்படுத்திய தலைவரை அறிமுகப் படுத்தும் நூலாக 1980இல் மு. திருவேங்கடம் எழுதிய "கோ. சாரங்க பாணி" வெளிவந்தது. 1994இல் தமிழ் அமைச்சர் சாமிவேலு பற்றிய "நாயகன் கண்ட சாமிவேலு" என்னும் நூலை மலர்விழி குணசீலன் எழுதினார். அதைத் தொடர்ந்து அதே ஆண்டில் இந்திராணி சாமிவேலு பற்றிய "மகளிர் மாமணிக்கு ஓர் மகுடம்" என்ற நூலை கலாராமு வெளியிட்டார்.

## 5.3. தமிழ் மொழி, இனம் பற்றிய நூல்கள்

கா. கலியபெருமாள் அதிகம் நூல்கள் எழுதியுள்ள நல்ல தமிழ்ச் சிந்தனையாளர். அவர் எழுதிய முக்கிய நூல்கள்: 1983இல் "செந்தமிழர் சிந்தனைகள்"; 1985இல் "உலகத் தமிழர்"; 1993இல் "தமிழர்கள் சிந்திக்கிறார்களா?" தமிழர்களிடையே காணப்படும் திருமணம் மற்றும் இறப்பு பற்றிய சடங்குகளை நெறிப்படுத்தும் இரண்டு முக்கிய கையேடுகளையும் அவர் எழுதியுள்ளார். "தமிழர் திருமண முறைகள்", "நீத்தார்கடன் நெறிமுறைகள்" என்னும் தலைப்பு களில் அவை வெளிவந்துள்ளன.

உலகத் தமிழ்ப் பண்பாட்டு நிறுவனத்தின் தலைவராக இருந்த இர. ந. வீரப்பன், 1992இல் "உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்க வரலாறு" என்னும் நூலை எழுதினார். தமிழர்கள் குழந்தை களுக்குத் தமிழில்தான் பெயரிடவேண்டும் என்பதை வலியுறுத்தி 1980இல் நாரண திருவிடச்செல்வன் "தமிழில் பெயரிடுவோம்" என்னும் நூலை எழுதினார். இது பல பதிப்புகள் கண்டிருக்கிறது.

தமிழின் பயன்பாட்டுச் சிதைவை எடுத்துக்காட்டும் நூலாக இரா. முருகனார் 1984இல் "நசிவுறும் நற்றமிழ்" எழுதினார். தமிழா ராய்ச்சி மாநாடுகளில் தாம் கலந்துகொண்ட அனுபவங்களைப் பத்திரிகையாளரான வே. விவேகானந்தன் 1993இல் "உலகம் கண்ட தமிழ்" என்னும் தலைப்பில் எழுதினார்.

## 5.4. தமிழ் இலக்கியம், கலைகள் சார்ந்த கட்டுரை நூல்கள்

பொதுவாகத் தமிழ் இலக்கியத்தையும் மலேசிய இலக்கியங் களையும் போற்றவும் விமர்சிக்கவுமான நூல்களும் காலம்தோறும் தோன்றியவாறே உள்ளன. 1990இல் கா. கலியபெருமாளின் "கவிதை

இன்பம்" வெளிவந்தது. 1991இல் இலக்குமி மீனாட்சி சுந்தரத்தின் "இலக்கிய அரும்புகள்" வெளிவந்தது. சிங்கப்பூர் மலேசியக் கவிஞர் பற்றி 1992இல் இர. ந. வீரப்பன் "மலேசியப் பாவரசு ஐ. உலகநாதன்" என்னும் நூல் எழுதினார்.

புத்திலக்கிய ஆய்வாளரான வே. சபாபதி 1995இல் "விடுதலைக்குப் பிந்திய தமிழ் நாவல்கள்" என்னும் நூலை வெளியிட்டார்.

மலேசியாவில் மேடை நாடகங்கள் பற்றி பல நூல்கள் வெளிவந்துள்ளன. 1987இல் அ. மணிசேகரன் "மலேசியாவில் மேடை நாடகங்கள்" என்னும் நூலை எழுதி அந்த வரலாற்றை ஆவணப் படுத்தினார். 1994இல் மேடை நாடகக் கலைஞர் ஆர். பி. எஸ். மணியம் "மலேசியத் தமிழ் நாடகங்கள்" எழுதினார்.

தன்முனைப்பை ஊட்டும் நூல்களாகப் பல வந்துள்ளன. 1991இல் சி. த. இராமசாமி "வாழ்வு நமதே", "எண்ணம்போல் வாழ்க்கை" என்னும் இரு நூல்களையும், சுப்பிரமணியம் சுப்பையா "உனக்குள் இருக்கும் உன்னை நம்பு" என்னும் நூலையும் வெளியிட்டார்கள். தன்முனைப்புப் பயிற்சியாளரான ரெ. கோ. ராசு எழுதிய நூல்களில் 1998இல் வெளிவந்த "எல்லோரும் முன்னேறுவோம்", "உங்களால் முடியும்", "வெற்றிப் பாதையில்" என்னும் நூல்கள் முக்கியமானவை.

## 6. கடந்த பத்தாண்டுகளில் (1996 - 2006) கட்டுரை நூல்கள்

மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தின் போக்குகளைப் பிரதிபலிக்கும் சிந்தனைகளை எழுத்தில் பதிக்கும் கட்டுரை முயற்சிகள் கடந்த பத்தாண்டுகளில் தொடர்ந்து நடைபெற்று வந்திருக்கின்றன. எளிதாகவும், மலிவாகவும் ஆகிவரும் அச்சு வசதிகள் இந்த முயற்சியை மேலும் தீவிரப்படுத்தியிருக்கின்றன என்றும் சொல்லலாம்.

### 6.1. அரசியல் வரலாறு / அரசியல் நிலைமை குறித்த நூல்கள்

மலேசியத் தமிழர்களின் வரலாற்றின் முக்கிய கட்டங்களை நினைவுகூறும் நூல் ஒன்று இந்தக் காலகட்டத்தில் வெளியாகிற்று. நாடறிந்த நல்ல எழுத்தாளரும் நாடக ஆசிரியருமான மெ. அறிவானந்தன் எழுதிய "இது எங்கள் சுவடு" (2005) என்னும் நூல் மலேசியாவில் இந்தியர்கள் - குறிப்பாகத் தமிழர்கள் - ஒப்பந்தக் கூலிகளாகக் கால் பதித்த காலத்திலிருந்து இன்று வரை அவர்கள்

*அடைந்துள்ள ஏற்றத்தாழ்வுகளை ஒரு சுவையான கதை போலச் சொல்லும் நூல். தமிழ் சமூகத்தையும், கலாசாரத்தையும், மொழியையும் ஆதி நாளில் நிலைப்படுத்திய தமிழ்த் தலைவர்கள் பற்றியும் இயக்கங்கள் பற்றியும் மிக அரிய தகவல்களை அரிய புகைப்படங்களோடு மெ. அறிவானந்தன் இதில் தொகுத்துக் கொடுத்திருக்கிறார்.*

*இந்தப் பத்தாண்டு காலகட்டத்தில் அரசாங்கக் கொள்கைகளையும் தலைவர்களையும் போற்றும் நூல்களும் வந்திருக்கின்றன.*

*மலேசியாவின் இப்போதைய பிரதமர் அப்துல்லா படாவி 2003இல் நாட்டின் ஐந்தாவது பிரதமராகப் பதவி ஏற்றார். எல்லாத் தரப்பினருக்கும் இணக்கமான ஆன்மீக உணர்வுள்ள அன்பான மனிதர் என அவரை நாடு ஏற்றுக்கொண்டது. அதை ஒட்டி "அற்புத மனிதர் அப்துல்லாஹ்" (2004) என்னும் வாழ்க்கை வரலாற்று நூலை முகம்மது இக்பால் என்பவர் எழுதி வெளியிட்டார். இஸ்லாமியக் கல்வி வாரியம் இந்த நூலை வெளியிட்டுள்ளது. இந்த நூலுக்கு வாழ்த்துரை வழங்கியுள்ள மலேசிய அமைச்சர் சாமிவேலு "அப்துல்லா படாவி அவர்கள் மாறி வரும் உலகச் சூழலுக்கேற்ப நாட்டை மிகவும் நிதானத் துடனும் நேர்மையுடனும் வழிநடத்தி வருகிறார். இன்றைய பிரதமர் அவர்களின் வாழ்க்கைக் குறிப்புகள் தமிழ் மொழியில் அறவே இல்லை எனும் குறையை நண்பர் அவர்கள் நிறைவு செய்திருக்கிறார்" எனக் குறிப்பிடுவது மிகச் சரியே ஆகும்.*

*மலேசியாவில் ஆளும் கூட்டணியின் ஒரு அங்கமாக விளங்கும் மலேசியர் இந்தியர் காங்கிரஸ் நாட்டின் சுதந்திர வரலாற்றோடு பின்னிப் பிணைந்திருப்பதுடன் மலேசியாவில் தமிழ் மொழி, பண்பாடு, கலைகள், இலக்கியம் ஆகியவற்றின் காவலனாகவும் இருந்துவருகிறது. இதன் வரலாறு பற்றியும் அதன் தலைவர்கள் பற்றியும் சில நூல்கள் இந்தக் காலகட்டத்தில் வந்துள்ளன. 1998இல் அண்மைய மறைந்த தலைவர் குறித்து "ம.இ.கா.வில் தான் ஸ்ரீ மாணிக்கவாசகம்" (1966) என்னும் நூலை கு. சோணை முத்து எழுதினார். ம.இ.காவை வளர்த்தெடுத்த முக்கிய தலைவர்களுள் ஒருவர் மாணிக்கவாசகம். இந்த நூல் அவருடைய அரசியல் பணிகள் பற்றியே அதிகம் குறிப்பிட்டாலும் அவருடைய சமூக சேவைகள் பற்றிய முக்கிய குறிப்புகளும் உள்ளன.*

*"ஜான் திவி முதல் சாமிவேலு வரை" (1998) என்னும் அரசியல் வரலாற்று நூலை ப. சந்திரகாந்தம் எழுதினார். ம.இ.கா.வின் நிறுவனத் தலைவர் திவி முதல் இன்றைய தலைவர் சாமிவேலு வரை அந்த அரசியல் இயக்கம் வளர்ந்த வரலாற்றுக் குறிப்புகள் இந்த நூலில் உள்ளன. இதே ஆசிரியர் 1999இல் "சாதனைப் படிகளில் சாமிவேலு" என்னும் நூலையும் மற்றும் தேசிய நிலநிதிக்*

கூட்டுறவுச் சங்கத்தின் தலைமை நிர்வாகி சோமசுந்தரம் குறித்து "கூட்டுறவுக் காவலர்" என்னும் நூலையும் எழுதினார். மலேசிய இந்தியர்களின் அரசியல் மற்றும் சமூக வரலாற்றினைத் தெரிந்து கொள்ள அரிய தகவல்களை வழங்கும் நூல்கள் இவை.

இந்தக் காலகட்டத்தில் அமைச்சர் ச. சாமிவேலு குறித்த வேறு சில நூல்களும், மறைந்த வீ.தி. சம்பந்தன் குறித்த சில நூல் களும், மறைந்த மலேசியப் பிரதமர் குறித்த ஒரு நூலும் வெளி வந்துள்ளன. கடைசி இரண்டு தலைப்புகளில் உள்ள நூல்களை பூ. அருணாசலம் எழுதினார்.

கடந்த பத்தாண்டுகள் மலேசியா சுதந்திரம் அடைந்த அரை நூற்றாண்டுக் கட்டத்தைக் குறிக்கின்றன. இது சமுதாயம் தனது பொருளாதார, சமூக நிலைமைகளை மறுபரிசீலனை செய்யும் காலகட்டமாகவும் அமைந்திருக்கிறது.

இந்த சுதந்திர அரைநூற்றாண்டில் மலேசியா தீவிர பொருளாதார வளர்ச்சி பெற்று, ஏறக்குறைய ஒரு வளர்ச்சியடைந்த நாட்டின் ஸ்தானத்தை எதிர்நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது. ஆனால் முதலீட்டுவத்திற்கு முழு முதன்மை கொடுத்து, சமூக நீதிகள் பின்னுக்குத் தள்ளப்பட்டுவிட்ட போக்காகவே இதன் விமர்சகர்கள் இதனைப் பார்க்கிறார்கள். முக்கியமாக அடிநாளில் அதனை வளப்படுத்த உழைத்த தமிழ்ச் சமூகம் நாட்டின் பொரு ளாதார வெற்றிக்கனிகளை சரிசமமாக அனுபவிக்கத் தொடங்க வில்லை என்ற பெரும் குறைபாடு இந்தச் சமூகத்தில் எழுந்து அதன் சிந்தனைப்போக்கை ஆக்கிரமித்துள்ளது எனலாம். நாட்டின் நிர்வாகத்தில் தமிழ்ச் சமுதாயத்திற்கு அளிக்கப்பட்டிருக்கும் பங்கு ஒரு கண்துடைப்பாகவே செயல்படுகிறது என்றும், பொதுவாகவே அரசு தன் வளங்களைப் பகிர்ந்து கொடுப்பதில் பாரபட்சம் காட்டுகிறது என்றும் பரவலான குறைபாடுகள் எழுகின்றன.

இந்த சிந்தனைகளுக்குக் கட்டியம் கூறும் முகத்தானாக "அலைகள்" என்னும் இயக்கம் "ஒதுக்கப்படும் சமுதாயம்" (1993) என்னும் நூலை வெளியிட்டது. தே. ஜெயகுமார் முதலிய நால்வரை ஆசிரியர்களாகக் கொண்ட இந்த நூல் தமிழ்ச் சமுதாயம் முக்கிய பொருளாதார நீரோட்டத்திலிருந்து ஒதுக்கப்பட்டு விட்டது என்பதை நிறுவுகின்றது. பக்கத்துக்குப் பக்கம் கேலிச் சித்திரங்களைக் கொண்டதாக இருக்கிறது. அட்டையில் "கார்ட்டூன் புத்தகம்" என்றே போடப்பட்டுள்ளது. "தூரநோக்குத் திட்டம் 2020இல் தொழிலாளர்களுக்கு என்ன இருக்கிறது?"; "ரப்பர் தோட்டத் தொழிலாளர்களின் தொடரும் ஏமாற்றங்கள்"; "சுரண்டல் மேல் சுரண்டல்" முதலிய 6 அத்தியாயங்கள் உள்ளன.

பின்னர் இதே அலைகள் இயக்கம் தோட்டப் பாட்டாளிகளின் சிதைந்து வரும் நிலைமையை முதன்மைப்படுத்தி "எழுச்சி" (1997). என்னும் நூலை வெளியிட்டது. "(மலேசிய) வளர்ச்சி நாட்டு மக்கள் அனைவருக்கும் சென்றடையவில்லை. நாட்டின் வளர்ச்சிக்காக உடல் உழைப்பை வழங்கி வரும் நாட்டு மக்கள் இன்னும் ஒதுக்கப்பட்ட நிலைமையிலேயே உள்ளனர். இதில் சுமார் 7 லட்சம் மக்கள்தொகையைக் கொண்ட தோட்ட மக்களும் அடங்குவர்" என இதன் முன்னுரையில் கூட்டாசிரியர்களான இரா. மோஹனராணி, தே. ஜெயகுமார், இரா. நேரு ஆகியோர் குறிப்பிட்டுள்ளனர்.

அரசியல் அறிவியல் துறைப் பேராசிரியரான பி. ராமசாமி "மலேசியத் தோட்டத் தொழிலாளர்களின் வாழ்வும் போராட்டங்களும்" (1999) என்னும் நூலை வெளியிட்டார். அவருடைய ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பான இது மலேசியாவில் தோட்டப் பாட்டாளிகளின் வரலாற்றை விமர்சன நோக்கில் கூறுகின்ற முக்கிய ஆவணமாக அமைந்தது. இந்நூலுக்குப் பதிப்புரை வழங்கியுள்ள பசுபதி சிதம்பரம் "நம் முன்னோர் தம் வாழ்வியலில் பதித்த உதிரச்சுவடுகளின் வடிவம் இந்நூல். இந்நூலை மலேசியத் தேசியப் பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் பி. ராமசாமி தம் பட்டப்படிப்பு ஆய்வுக்காக மேற்கொண்டிருந்தார். தமிழில் இந்நூலை வெளிக் கொணர வேண்டும் என்ற எமது பேராவல் இப்போது நிறைவேறியிருக்கிறது. இங்கும் தமிழகத்திலும் இதற்கான மொழிபெயர்ப்புப் பணிகள் நடந்தன" எனக் குறிப்பிட்டுள்ளார்.

மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தின் சரிவுகள் பற்றித் தீவிரமாக எழுதியுள்ள நூலாசிரியர்களில் ஒருவர் மு. வரதராசு. ஏற்கனவே "மலேசியத் தோட்டத் தொழிலாளர்கள்: வரலாறும் பிரச்சினைகளும்"; "மலேசியா: எங்கே என் பங்கு" என்னும் நூல்களை இயற்றியுள்ள இவர் இக்காலகட்டத்தில் "எரிந்து கொண்டிருக்கும் தமிழினம்" (2004) என்னும் நூலை எழுதி வெளியிட்டார்.

இதன் முன்னுரையில் இதன் வெளியீட்டாளர்களான அறிவாலயம் இயக்கத்தினர் நூலாசிரியரை இப்படி வருணிக்கிறார்கள்: "நூலாசிரியர்கள் பலர் தமது அறிவுத்திறனின் வெளிப்பாடாக நூல்களை எழுதி வெளியிடுவர். வரதராசு இப்போக்கிலிருந்து மாறுபட்டவர். தம் சமகாலத்து மக்களின் எழுச்சிப் போராட்டங்களைப் பதிவு செய்வார். தம்முடைய மக்களின் கடந்த காலப் போராட்டங்களைப் பதிவு செய்வார். மக்களுக்கு எதிரானவர்கள் எவ்வளவு பெரிய பதவியிலிருந்தாலும் ஆதாரங்களோடு அவர்களை அம்பலப்படுத்தத் தயங்க மாட்டார்."

இந்நூலில் தமிழர்களின் பல சமகாலத் தோல்விகளையும் துரோகங்களையும் அவர் படம்பிடிக்கிறார். தென்னிந்தியத் தொழிலாளர்களின் நிதி வாரியம், செலஞ்சார் தோட்டத்தில் அடிமை முறை, தொழிலாளர் மேம்பாட்டுக் கூட்டுறவுக் கழகம், தோட்டத் தொழிலாளர் வீட்டுடமைத் திட்டம் போன்ற பல நிறுவனங்களின் தோல்விகளை இதில் அவர் முன்வைத்து விமர்சிக்கிறார்.

மா. ஜானகிராமன் மலேசிய இந்தியர்களின் நிலை பற்றித் தொடர்ந்து எழுதி வந்துள்ளார். அப்படிப் பல ஆண்டுகளில் அவர் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பாக "மலேசிய இந்தியர்களின் இக்கட்டான நிலை" (2006) என்னும் நூலை வெளியிட்டார். மலேசிய இந்தியர்கள் (பெரும்பாலும் தமிழர்கள்) மலேசியாவின் வளப்பத்தில் இன்னும் போதிய பங்கினைப் பெறாமல் மறுக்கப் பட்டிருக்கிறார்கள் என்ற கருவினையே வலியுறுத்துவனவாக இக்கட்டுரைகள் அமைந்துள்ளன.

இதன் முன்னுரையில் நூலாசிரியர் இப்படிக் கூறுகின்றார்: நாட்டில் ஏறக்குறைய 17 லட்சம் இந்தியர்கள், மக்கள் தொகையில் 7.6 விழுக்காடு என்ற நிலையில் உள்ளனர். மலேசிய இந்தியர்கள் சமூகப் பொருளாதார, கல்வி நிலையில் ஓரளவு வளர்ச்சி அடைந் திருந்த போதிலும் நாட்டில் உள்ள மற்ற சமூகங்களின் மேம்பாடு போன்றவற்றோடு ஒப்பிடுகையில் இன்னும் பின்தங்கிய நிலையில் தான் உள்ளனர். நாடு சுதந்திரம் அடைந்து 48 ஆண்டுகள் கடந்தும் இந்தியர்களின் அவலங்கள் சமுதாயத்தின் மத்தியில் வெளிச்சம் காட்டிக் கொண்டிருக்கின்றன என்பதனை நாம் மறுப்பதற்கில்லை. ஒரு தன்னிறைவு அடையாத, எப்போதும் மற்றவர்களை எதிர் பார்க்கும் சமூகமாக ஒவ்வொரு கால கட்டத்திலும் இந்திய சமுதாயம் இருந்து வந்துள்ளது."

இந்த அரசியல் சமூகப் பொருளாதாரச் சிந்தனை வரிசையில் ஆகக் கடைசியாக வந்துள்ள நூல் ஒரு அரசியல்வாதியும் முன்னாள் பத்திரிகையாளருமான பொன்முகத்தின் "மலேசிய அரசியலில் தமிழர்களின் எதிர்பார்ப்பும் ஏமாற்றமும்" (2007). தமது நோக்கத்தை அவர் முன்னுரையில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். "இந்த நாட்டின் ஆளும் கட்சி அரசியல் தலைவர்களும், அரசாங்கத்தின் நடவடிக்கைகள் வெளிப்படையாக இருக்கக்கூடாது என்னும் அவர்களின் சிந்தனையும் நாட்டின் எதிர்கால அரசியல் ஆரோக் கியத்திற்கு ஏற்புடையதாக இல்லை. இந்த அரசியல் சூழ்நிலையில் தான் இந்தப் புத்தகத்தை உங்களுக்குப் படிக்கக் கொடுத்திருக் கிறேன். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கத்தின் தவறான போக்கைக் கண்டிக்கவேண்டும் என்னும் உரிமை உங்களுடையது."

பொதுவாக மலேசியத் தமிழர்களின் இன்றைய நிலையின் சரிவை உரக்கக் கூறும் நூல்கள் அதிகம் வந்திருப்பது ஒரு வகையில் அரசாங்கம் மக்களின் குரல் ஒலிக்கக் கொடுத்திருக்கும் தாராள மயப் போக்கைக் குறிக்கிறது என்றும் சொல்லலாம்.

## 6.2. சமூக தனிமனித நோக்கு நூல்கள்

தமிழ்ப் பத்திரிகைத் துறையில் நீண்டநாள் அனுபவம் உள்ள எம். துரைராஜ் தமது அனுபவங்களைத் திரட்டி 2001இல் "பாதைகள் பயணங்கள்" என்னும் நூலை வெளியிட்டார். மலேசியாவில் சமூகம், பத்திரிகைத்துறை, அரசியல், இலக்கியம் ஆகியவற்றில் பின்னிப் பிணைந்திருக்கும் துரைராஜின் இந்த நூல் மலேசிய இந்தியர்களின் வரலாற்றில் உள்ள பல நிரப்பப்படாத பக்கங்களை நிரப்ப உதவும் நூல் என வருணிக்கலாம். 2003இல் ஒரு மலேசிய இந்தியர் காங்கிரஸ் பிரமுகரான சு. சுப்பிரமணியம், "மனதில் வரைந்த மனிதர்கள்" என்னும் நூலை எழுதினார். இந்த இரண்டு நூல்களுமே இந்த நாட்டின் முக்கிய சமுதாய, அரசியல் விளைவு களை, பழுத்த அனுபவம் வாய்ந்த மனிதர்களின் தனிப்பட்ட பார்வைகளை திறந்த மனத்தோடு முன்வைக்கும் நூல்களாகும். தொடர்ந்து துரைராஜ் தமது சமுதாயக் கருத்துக்களைத் திரட்டி "நினைக்கத் தெரிந்த மனமே" (2005) என்னும் நூலையும் வெளியிட்டார்.

பத்திரிகைத் துறை அனுபவங்களைத் தொகுத்து வெளியிட்ட இன்னொரு பத்திரிகையாளர் வீ. செல்வராஜ். "சில உண்மைகள்", "ஒரு வித்தியாசமான பார்வை", "ஒரு பத்திரிகையாளனின் பார்வையில்" (2002) முதலியன அவரது நூல்கள்.

1934இல் மலாயாவுக்கு வந்து ஒரு சாதாரணத் தொழிலாளி யாக வாழ்க்கையைத் தொடங்கி, தொழிற்சங்கவாதியாகவும், நடிக ராகவும், சமுதாயத் தொண்டராகவும் திகழ்ந்த ப.ஆ. முருகேசுவின் "நான் நடந்து வந்த பாதை" (2001) சுவையான சமூக வரலாற்றுத் தகவல்களைக் கூறும் சுய சரிதை.

## 6.3. மலேசியத் தமிழ்க் கலாசார, மொழி, இலக்கியக் கூறுகள்

மலேசியத் தமிழர்களின் சிறப்பான மொழி, கலாசாரக் கூறுகளைக் கூறுகின்ற நூல்கள் சிலவும் வெளிவந்துள்ளன. பழம் பெரும் பினாங்கு மாநிலத்தை வசிப்பிடமாகக் கொண்ட பி.எல். சிங்காரம் எனும் கவிஞர் "பினாங்குத் தென்றல்" (2001) எனும்

நூலை எழுதினார். பினாங்கில் நகரத்தார் சமூகத்தினர் அமைதி யாக ஆற்றியுள்ள மிகக் கணிசமான வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த செயல்களை அவர் இதில் ஒரு பூரிப்போடு திரும்பத் திரும்பக் கூறுவதைக் காணலாம். பினாங்கு நகரத்தார் கோயில் களின் கட்டிட அமைப்பு, வரலாறு, விழாக்கள், முக்கியமாகத் தைப்பூசம் பற்றிய பல அரிய தகவல்கள் இதில் இருக்கின்றன.

கா. கலியபெருமாள் அதிகம் நூல்கள் எழுதியுள்ள நல்ல தமிழ்ச் சிந்தனையாளர். இவருடைய பதிப்பு முயற்சிகளின் சிகரமாக 1997இல் "தமிழ்ப் பண்பாட்டுக் களஞ்சியம்" என்னும் 1102 பக்கங்கள் கொண்ட பெருநூலைத் தொகுத்து வெளியிட்டார். தமிழ்நாடு, மலேசியாவில் உள்ள பல தமிழறிஞர்கள் இதில் கட்டுரைகள் வழங்கியுள்ளார்கள். தமிழர்களின் பண்பாட்டையும் மரபுகளையும் பிழிந்து கொடுக்கும் பல கட்டுரைகள் இதில் இருப்பதுடன், திருமணம், இறப்பு முதலிய சடங்குகளைத் தகுதரப்படுத்தியும் தந்திருக்கிறார். 2004இல் "வளர்தமிழ்ச் சிந்தனைகள்" என்னும் மொழி பற்றிய கருத்துக் கட்டுரைகளையும் தொகுத்து வெளியிட்டார்.

பழம்பெரும் எழுத்தாளரான மா. இராமையா 1996இல் "மலேசியத் தமிழ் வரலாற்றுக் களஞ்சியம்" என்னும் அரிய வரலாற்று நூலை எழுதினார். தாம் ஏற்கனவே 1978இல் எழுதிய "மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு" என்னும் நூலை விரி வாக்கம் செய்து எழுதிய நூல் இது. புத்திலக்கிய ஆய்வாளரான வே. சபாபதி 1995இல் "விடுதலைக்குப் பிந்திய தமிழ் நாவல்கள்" நூலையும், தொடர்ந்து 1996இல் "விடுதலைக்கு முந்திய தமிழ் நாவல்கள்" நூலையும் வெளியிட்டார்.

மலேசியாவில் இதுகாறும் வெளியான கவிதைகளைத் தொகுத்து அவற்றிற்கு ஒரு நெடிய ஆய்வு முன்னுரையும் எழுதி 1997இல் முரசு நெடுமாறன் "மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்" என்னும் நூலை வெளியிட்டார். மேற்கண்ட நான்கு நூல்களும் மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் முக்கியமான நூல்களாக அமைந்தன. முரசு நெடுமாறனின் நூலுக்கு 1998இல் ஆண்டின் சிறந்த நூலாக டான் ஸ்ரீ மாணிக்கவாசகம் விருது வழங்கப்பட்ட தோடு அதே ஆண்டில் இலக்கியச் சேவைக்காக அவருக்குத் தமிழ்நாட்டின் பாவேந்தர் பாரதிதாசன் விருதும் வழங்கப்பட்டுள்ளது.

இந்தக் காலகட்டத்தில் மலேசியத் தமிழ் இலக்கியத்தை ஆய்வு நோக்கில் காணும் நூல்கள் பல பதிப்பிக்கப்பட்டன. அவற்றுள் 2001இல் சை. பீர்முகம்மது தொகுத்தளித்த "மலேசியத் தமிழர்களின் வாழ்வும் இலக்கியமும்" என்ற நூலும், 2004இல் ரெ. கார்த்திகேசு எழுதிய "விமர்சன முகம்" என்னும் நூலும் முக்கியமானவை ஆகும்.

“விமர்சன முகம்” மலேசியாவில் புத்திலக்கியத்தைத் திறனாய்வு செய்யும் முதல் நூல் என்று சொல்லலாம். சை. பீர்முகம்மதுவின் இலக்கியச் சிந்தனைகளைக் கொண்ட கட்டுரைத் தொகுப்பான “திசைகள் நோக்கிய பயணங்கள்” (2006) காலச்சுவடு வெளியீடாக வந்தது.

ரெ. சண்முகம் என்னும் இசை, மேடை, வானொலி, தொலைக்காட்சிக் கலைஞர் “இந்த மேடையில் சில நாடகங்கள்” (1997) என்னும் தலைப்பில் தம் மேடை நாடக அனுபவங்களை எழுதினார்.

இந்தக் காலகட்டத்திலேயே கி. சுந்தர்ராஜ் எழுதிய பொது அறிவுக் கட்டுரைகளாக “நாங்கள் பேசினால்”, “விலங்குகள் பேசினால்”, “ஐந்து மூலங்கள்” (2003) ஆகியவை வெளிவந்தன.

மலேசியத் தேசியப் பல்கலைக்கழகத்தின் வரலாற்றுத்துறை, மலேசிய / சிங்கப்பூர் தமிழ்க் கல்வி மொழி, இலக்கியம், பண்பாடு ஆகியவற்றின் முன்னோடிகளின் சுருக்க அறிமுகம் கொண்ட “நம் முன்னோடிகள்” (2000) என்ற நூலைப் பதிப்பித்துள்ளது. மலாய் மொழியை அதிகாரத்துவப் பயிற்றுமொழியாகக் கொண்ட இந்தப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள ஒரே தமிழ் நூல் இது எனலாம். அங்கு வரலாற்றுத் துறையில் விரிவுரையாளராக இருந்த திலகவதி குணாளன் அவர்களின் பெரு முயற்சியில் இந்த நூல் வெளிவந்திருப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் இந்தப் பத்தாண்டு காலகட்டத்தில் மலேசியத் தமிழ் இலக்கியம் குறித்த சில நூல்களை வெளிக்கொணர்ந்தது. மலேசியத் தமிழ் எழுத்தாளர்களில் இருப்பவர்கள், மறைந்தவர்களின் 358 பெயர்கள் அடங்கிய எழுத்தாளர் விவரங்கள் அகரமுதலியாகத் தொகுக்கப்பட்ட “மலேசியத் தமிழ் எழுத்தாளர்கள்” (2004) என்னும் நூல் முக்கியமானது. 2004இல் சங்கத்தின் குழு ஒன்று தமிழ்நாடு / புதுச்சேரிப் பயணம் மேற்கொண்டபோது பதிப்பித்து வழங்கப்பட்ட “மலேசியத் தமிழ் இலக்கியம் : ஓர் அறிமுகம்” (2004) என்னும் நூல் மலேசியத் தமிழ் எழுத்து வடிவங்களைச் சுருக்கமாக அறிமுகப்படுத்துகிறது. 2005இல் சங்கம் நடத்திய மலேசிய - சிங்கப்பூர் தமிழ் இலக்கியக் கருத்தரங்கத்தின் கட்டுரைகள் அடங்கிய நூல் “மலேசிய, சிங்கப்பூர் தமிழ் இலக்கியம் 2005” (2007) பதிப்பிக்கப்பட்டுள்ளது.

## 6.4. சமய ஆன்மீக நூல்கள்

இந்தக் காலகட்டத்தில் சமய, ஆன்மீக நூல்கள் பல வந்தன.

1997இல் சித. இராமகிருஷ்ணன் "விஞ்ஞானம் மெய்ஞ் ஞானம்: இந்து சமய விளக்கம்" என்னும் நூலை எழுதினார். "பல ஆண்டுகளுக்கு முன்னமே நான் இந்து சமயத்தைப் பற்றிப் பொது மேடைகளில் பேச முன்வந்தபோது எனது நாட்டம் நம் சமயத்தின் அறிவியல் அஸ்திவாரத்தைப் பற்றி எண்ணத் தலைப்பட்டது. அதன் விளைவாகப் பல நூல்களைப் படித்தும் சிந்தித்தும் ஆராய்ச்சிகள் செய்தும் குறிப்புகள் எடுக்க ஆரம்பித்தேன். "இந்து சமயமும் அறிவியலும்" என்ற தலைப்பிலேயே அதிகம் பேசியும் எழுதியும் வந்தேன். அதன் விளைவாகவே விஞ்ஞானம் - மெய்ஞ் ஞானம் எனும் தலைப்பில் "சக்தி" மாத இதழில் பல மாதங்கள் எனது கட்டுரைகள் வெளிவந்தன. அவற்றின் தொகுப்பே இந்நூல்" என முன்னுரையில் அவர் குறிப்பிடுகிறார்.

எஸ்.ஓ.கே. உபயதுல்லா 2002இல் "இஸ்லாம்" என்னும் நூலை வெளியிட்டார். கிறிஸ்தவ சமய போதகரான மு. இராஜன் 2002இல் "இயேசு செய்த அற்புதங்கள்", மற்றும் "கவிஞர் கண்ட இயேசு", "குமரிக் கண்ட நாகரிகமும் விவிலியமும்" என்னும் நூல் களை எழுதியுள்ளார்.

ஒரு முன்னாள் வானொலிக் கலைஞரான எஸ்.ஆர்.எம். பழனியப்பன் பின்னாளில் ஆன்மீகவாதியாகி பல அரிய நூல் களைத் தமிழில் இயற்றியுள்ளார். நாட்டுக்கோட்டைச் செட்டியார் சமூகத்தைச் சேர்ந்த எஸ்.ஆர்.எம். அந்த சமூகத்தின் வரலாறு, மரபுகள் பற்றிச் சிறப்பாக எழுதுகிறார். "நகரத்தாரின் குலதெய்வங்கள்" (1995) என்னும் அரிய ஆராய்ச்சி நூல் நகரத்தார் தாயகங்களில் உள்ள குலதெய்வங்களையும் கோயில்களையும் வருணிக்கும் நூல். மற்றும் "பருவநாள் விழாக்களும் பலன் தரும் விரதங்களும்" (1996), "ஞானப்பேர் நவில வைத்தார்" (1998) ஆகிய நூல்களை எழுதினார்.

1998இல் அவருடன் மனமொன்றி இணைபிரியாது வாழ்ந்த அவருடைய துணைவியார் திருவாத்தாள் மரணமுற்றதைத் தொடர்ந்து அவரோடு தான் வாழ்ந்த இல்லறவாழ்வையும் ஆன்மீக வாழ்வையும் மனமுருக வருணிக்கும் "பூவின் நாயகி" (2002) என்னும் நூலை அவர் எழுதினார். இந்த நூல் தமிழ் / ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் அமைந்தது. ஒரு தனிப்பட்டவரின் வாழ்க்கை வருணனை என்றாலும் மலேசியாவில் ஒரு மரபு சார்ந்த தமிழ்க்குடும்பம் தனக்கேற்ற உன்னத வாழ்வு வாழ உரிய சுதந்திரம்

இருப்பதை உட்கருத்தாய்க் கொண்டு அழகிய தமிழில் கூறப்பட்டுள்ள நூல் இது.

மலேசியாவில் இந்து சமயமும் அது சார்ந்த ஆன்மீகமும் செழித்திருப்பதைக் குறிப்பதாக பல நூல்கள் வெளிவந்துள்ளன. சுவாமி பிரம்மானந்தா மலேசியாவில் பிறந்து வளர்ந்து படித்து ஆசிரியத் தொழில் ஆற்றி பின்னர் தீட்சை பெற்றுத் துறவியாகி ஓர் ஆசிரமத்தையும் நடத்திவருகிறார். எளிய, தெளிந்த தமிழில் மலேசியத் தமிழ்ச் சமுதாயத்துக்கு வேண்டிய கருத்துகளை அவர் இந்தக் காலகட்டத்தில் இரண்டு நூல்களாகக் கொண்டு வந்தார். "மனமே சுகமே" (2003) என்னும் கட்டுரைத் தொகுதி பெரும் வரவேற்பைப் பெற்றதுடன் அந்த ஆண்டுக்கான சிறந்த கட்டுரை நூலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு 2004ஆம் ஆண்டு தான் ஸ்ரீ மாணிக்க வாசகம் புத்தகப் பரிசினையும் பெற்றது. இதனைத் தொடர்ந்து "வாழ்வே தவம்" (2006) கட்டுரைத் தொகுப்பும் வெளிவந்தது.

## 6.5. தன்முனைப்புக் கட்டுரை நூல்கள்

டைனமிக் தன்முனைப்பு மையத்தை நடத்தி வரும் டாக்டர் கேப்ரியல் "டைனமிக் தன்விழிப்புணர்வுதான் தலைசிறந்த வழி காட்டி" (2003) என்னும் பெரும் நூலை வெளியிட்டார். மு. கணேசன் "மனமே விழித்திடு" (2004) வெளியிட்டார். தொடர்ந்து "சுடா விட்டால் அது சூரியனல்ல" (2006) என்னும் நூலையும் அவரே வெளியிட்டார். இந்தகால கட்டத்தில் காதர் இப்ராஹிம் போன்ற தன்முனைப்புப் பயிற்சியாளர்கள் பல நூல்கள் வெளியிட்டுள்ளனர்.

## 6.6 பிரயாணக் கட்டுரைகள்

கடந்த பத்தாண்டுகளில் வந்த பிரயாணக் கட்டுரை நூல்களில் சை. பீர்முகம்மதுவின் இரு நூல்கள் மிக முக்கியமானவை. அவருடைய ஆஸ்திரேலிய பிரயாண அனுபவங்களைத் தொகுத்து 1997இல் "கைதிகள் கண்ட கண்டம்" என்னும் நூலை எழுதினார். இதைத் தொடர்ந்து தமது இந்தியப் பயணத்தை அடிப்படையாக வைத்து 1998இல் "மண்ணும் மனிதர்களும்" என்னும் நூலை எழுதினார். அழகிய தமிழ் நடையில் பிரயாணச் செய்திகளோடு பீர்முகம்மதுவின் அரிய சிந்தனைகளையும் பின்னி வழங்கும் இந்த நூல் தமிழ்நாட்டிலும் பரவலாக அறிமுகம் பெற்றுப் பாராட்டுக் களும் பெற்றது. தமிழக "குமுதம்" இதழின் ஆசிரியரால், தாம் படித்த அவ்வாண்டுப் புத்தகங்களிலேயே சிறந்த புத்தகமாக அதன் பெயர் குறிப்பிடப்பட்டது.

## 6.7. இணையத் தமிழ் இலக்கியம்

*மலேசியத் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சியில் இணைய இலக்கியமும் இடம் பெறத் தொடங்கியிருக்கிறது. மலேசியாவில் இருந்து இயங்கும் வலைத்தளங்களில் முக்கியமானது டாக்டர் சி. ஜெயபாரதி நடத்திவரும் "அகத்தியர்" தளமாகும். தமிழ் மொழி, கலாசாரம், தொன்மம், வரலாறு ஆகிய பல பொருள்களில் அவர் இணையத்தில் எழுதியுள்ள கட்டுரைகள் "இணையத்தில் ஜெய்பி" (2001) என்னும் தலைப்பிலும், "நாடி ஜோதிடம்" (2002) என்னும் தலைப்பிலும் நூல்களாக வெளிவந்துள்ளன. இணைய மாநாடுகள் நடந்தபோதெல்லாம் வெளியிடப்பட்ட மலர்களில் இணையத்தின் தமிழ்ப் பயன்பாடு பற்றியும் தொழில் நுணுக்கம் பற்றியும் பல கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன.*

## 7. முடிவுரை

*மலேசியாவில் தமிழ் இதழ்கள் இருக்கும்வரை எல்லாவிதச் சமுதாயக் கூறுகளையும் விவாதிக்கவும் விளக்கவும் தமிழ்க் கட்டுரைகள் மற்றும் கட்டுரை நூல்கள் தொடர்ந்து வெளிவரும் என்பதில் ஐயமில்லை. மற்ற இலக்கிய வடிவங்களைவிடவும் கட்டுரை களுக்கே வற்றாத கருப்பொருள்கள் இருந்துவரும்.*

---

i. இந்தப் பகுதி பெரிதும் முல்லை இராமையா "மலேசியத் தமிழ் இலக்கியம் : ஓர் அறிமுகம்" என்னும் நூலில் "கட்டுரைகள்" என்னும் கட்டுரையின் (பக். 64) பல பகுதிகளைப் பயன்படுத்திக் கொண் டுள்ளது. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், குவாலலும்பூர் (2004).

ii. முல்லை இராமையா "மலேசியத் தமிழ் இலக்கியம் : ஓர் அறிமுகம்" என்னும் நூலில் "கட்டுரைகள்" என்னும் கட்டுரையில் கண்டபடி.

iii. இராம. சுப்பையா (1969) Tamil Malaysiana; University of Malaya Library, Kuala Lumpur. (தலைப்பு, முன்னுரை, பதிப்புரை முதலியன ஆங்கிலத்திலும் நூல் பட்டியல்கள் தமிழிலும் உள்ளன.)

# மலேசியத் தமிழ் மரபுக் கவிதை (1996 – 2006)

## (முனைவர் முரசு நெடுமாறன்)

*மலேசியத் தமிழிலக்கியத்தின் அகவை 120 ஆண்டுகள்தாம். மேலும், அதன் முற்பகுதி தமிழகத்திலிருந்தும், இலங்கையிலிருந்தும் புலம்பெயர்ந்து வந்த பெருமக்களால் உருவானதாகும். இக்குறுகிய காலகட்ட வளர்ச்சியின் முதிர்ச்சி எத்தகையதாய் இருக்குமென்பது சொல்லித் தெரிய வேண்டுவதன்று. மிக மிக நெருக்கடியான சூழலில், எழுத்தை முழுநேரத் தொழிலாய்க் கொண்டிராத நிலையில், பின்புல வலுவில்லாமல், புலமைபெற - அதனை ஆழப்படுத்திக் கொள்ள வாய்ப்பில்லாமல், ஊக்கம் நல்க விரிவான அடிப்படை இல்லாமல், படைப்பு பரவும் - விலை போகும் வாய்ப்பில்லாமல் ஆர்வம் ஒன்றனை மட்டுமே முதலீடாகக் கொண்டு, தட்டுத் தடுமாறி நடைபோட்டு வளர்ந்து வருவது மலேசியத் தமிழிலக்கியம். இவ்விலக்கியத்தை ஒரு தட்டிலும், தமிழக, இலங்கை இலக்கியங்களை ஒரு தட்டிலும் வைத்து எடைபோட்டுப் பார்க்கக்கூடாது. ஓட்டத்தில் வல்ல ஓர் இளைஞனுடன் வளரும் சிறுவனை ஒப்பிட இயலாதன்றோ? எனவே, உள்ளதைக் கொண்டு நல்லது செய்தல் என்னும் முறையில் அதன் வளர்ச்சிக்கேற்ப மலேசியத் தமிழ்க்கவிதை (மரபு) இலக்கியம் ஈண்டு கண்ணோட்டமிடப்பெறுகிறது.*

*கடந்த பத்தாண்டு கால மலேசியத் தமிழ்க் கவிதை இலக்கியம் என்னும்பொழுது, 1996 - 2006 ஆம் ஆண்டுகளுக் கிடையிலான காலத்தில் தோன்றிய இலக்கியம் என்று கொள்ளஇயலாது. மேற்படி காலகட்டத்தில் நூல்வடிவம் பெற்ற இலக்கியம் என்றே கொள்ளுதல் வேண்டும். இருபது முப்பது ஆண்டுகளுக்கு முற்பட்ட படைப்புகள் கூட கடந்த பத்தாண்டு காலத்தில் நூல் வடிவம் பெற்றிருக்கலாம். அதனால், கடந்த பத்தாண்டு காலத்தில் வெளிவந்த நூல்களில் இடம்பெற்றுள்ள இலக்கியம் பற்றியதாகவே இக்கட்டுரை அமையும்.*

'மரபுக்கவிதை' என்பது தலைப்பாதலால் 'மரபு' குறித்து ஈண்டுச் சில சொல்வது பொருத்தமாகும். "வழி வழியாக வந்த நீண்ட பாரம்பரியத்தையும், அந்தப் பாரம்பரியம் சேமித்து வைத்த அனுபவங்களின் வெளிப்பாட்டு ஊடகங்களான கலை, இலக்கியம், பண்பாடு, பழக்க வழக்கங்கள் அனைத்தையும் ஒட்டு மொத்தமாகக் குறிக்கும் அடையாளச் சொல் மரபு" (சிற்பி பாலசுப்பிரமணியம், 2005 : 37).

இத்துணை ஆழ, அகலங்கொண்ட எண்ணற்ற சிறப்புகளை உள்ளடக்கிய மரபின் மாண்பினை உணராமல், மரபைப் போற்று கிறவர்களெல்லாம் பழமைவாதிகள் என்று குறைத்துக் கூறி, எதற்கும் கட்டுப்படாமல், அடிப்படை இலக்கண விதிகள் கூட விலங்குகள் என்று எண்ணி, மனம் போன போக்கில் எழுதி வருவோர் பெருகி வரும் காலத்தில், எவ்வகையான புதுமையும் மரபைப் பாழ் படுத்துதல் கூடாது என்னும் உறுதியோடு பா வடிக்கும் பாவலர்கள் பாராட்டிற்குரியவர்கள். அப்பாவலர்களால் எழுதப் பெற்றுக் கடந்த பத்தாண்டுகளில் வெளிவந்த நூல்களின் வகைகளையும் பாடு பொருள் முதலாயவற்றின் வகைகளையும் பொதுவாகக் கண்ணோட்டமிடுவதே (இக்கட்டுரையாசிரியர் படைப்புகள் நீங்கலாக) இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## நூல்களின் எண்ணிக்கையும் வகைகளும்

இங்கு கடந்த பத்தாண்டுகளில் 36 கவிதை நூல்கள் (திரட்டல் முயற்சியில் கிட்டியவை) வெளிப்போந்துள்ளன. அவற்றுள் பாவலர் பலரின் பாக்கள் அடங்கிய தொகுப்புகள் 4, பாவலர் ஒருவரின் பல பாக்கள் அடங்கிய தொகுப்புகள் 12, சிற்றிலக்கிய வகைகள் 7, பெரும்பாவியங்கள் 2, குறும்பாவியங்கள் 6, சிறுவர் பாடல்கள் தொகுப்புகள் 3, பாவரங்கப் பாத்தொகுதிகள் 2 ஆகும்.

பத்தாண்டுகளில் 36 நூல்கள் வெளிவந்திருப்பது பெரிய எண்ணிக்கை ஆகாது எனினும், பல்வேறு நெருக்கடிகளுக்கிடையே, சோர்வுற்றுத் தளர்ந்துவிடாமல் பல இலக்கிய வகைகளைக் கொண்ட கவிதை நூல்கள் வெளிவந்திருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும்.

## நூல்களும் வகைகளும்

வெளிப்போந்துள்ள 16 தன்னுணர்ச்சிப் பாக்கள் கொண்ட நூல்களுள், இக்கட்டுரை ஆசிரியர் தலைமையேற்றுத் தொகுத்து உருவாக்கி வெளியிட்ட **'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்'** மிகப்பெரிய அளவினதாகும். 1080 பக்கங்கள் கொண்ட இத்தொகுப்பு,

மலேசியத் தமிழர் வரலாற்றோடு 254 பாவலர்தம் 650 பாக்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது. 1997இல் வெளிப்போந்த இதனில், 1886ஆம் ஆண்டு முதல் 1996ஆம் ஆண்டு வரையிலான 100 ஆண்டு காலக் கவிதைகள் இடம்பெற்றுள்ளன.

இதனையடுத்து பலரின் பாக்களைக் கொண்டு வெளிவந்த நூல்களுள் குறிப்பிடத்தக்கது, மலேசியத் தமிழ்க்கவிதை மாநாட்டின் போது (2000) வெளிவந்த **'மலேசியத் தமிழ்க் கவிதைகள்'** என்ற நூலாகும். இதனில் 63 பாவலர்தம் கவிதைகள் இடம்பெற்றுள்ளன. பலரின் பாக்களைத் தொகுத்து உங்கள், குரல் வெளியீடாகச் சீனி நைனா முகம்மது வெளியிட்ட **'கவிதைப் பூங்கொத்து'** (2004) என்ற நூலும் குறிப்பிடத்தக்கதாகும். சிங்கப்பூர், தமிழகக் கவிஞர் சிலர் பாக்களும் இதனில் இடம் பெற்றுள்ளதெனினும் மலேசியப் பாவலர்தம் 17 பாக்களும் பாவலர் வரலாற்றுக் குறிப்புகளும் இதனில் அடங்கியுள்ளன. இந்நூல் 5ஆம் படிவ (SPM) மாணவர்க் கான தமிழ் இலக்கியப் பாடநூல்களுள் ஒன்றாகக் கல்வியமைச்சால் தெரிவு செய்யப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது. பாவலர்பலர் பாக்கள் அடங்கிய தொகுப்புகளில் மற்றொன்று **'நால்வர் கவிதைகள்'** ஆகும். தமிழகத்தில் இரட்டைப் புலவர்கள் புகழ்பெற்று விளங்கினர். அதுபோல் இங்கு நால்வர் இணைந்து கவிதை பாடியுள்ளனர் என்பதற்குச் சான்றாய் விளங்குகிறது இந்நூல். இங்கு மூவர் கொண்ட குழுவினராகத் திரிகூடரும் இருந்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

ஒருவரின் தன்னுணர்ச்சிப் பாக்கள் அடங்கிய தொகுதிகள் என்று பார்க்கும்போது 14 நூல்கள் கண்ணில் படுகின்றன. இவ்வகை நூல்களுள் எடுப்பாக விளங்குவது கரு. வேலுச்சாமியின் **'புயலில் மலர்ந்த பூக்கள்'** ஆகும். இது 106 தலைப்பில் பாடல்களைக் கொண்டு 198 பக்கங்களில் பெரிய அளவினதாய் விளங்கும் நூல் என்பதோடு, உள்ளுறையாலும் உயர்ந்து நிற்கும் நூலாகும். இவற்றோடு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தால் நடத்தப்பெற்றுவரும் டான்சிறீ மாணிக்கவாசகம் புத்தகப் பரிசுத் திட்டத்தின் கீழ், 2003-2006ஆம் ஆண்டுகளில் வெளிவந்த கவிதை நூல்களுள் இது சிறந்த நூலாகத் தேர்ந்தெடுக்கப்பெற்று, 7000 மலேசிய வெள்ளியைப் பரிசாகப் பெற்ற (12.10.2007) நூலாகும்.

இவ்வகை நூல்களை மிகுதியாக வெளியிட்டவர் பொன். நாவலன். இவர் மூன்று நூல்கள் வெளியிட்டுள்ளார். கவிஞர் பெ.மு. இளம்வழுதியின் இரு நூல்கள் வெளிவந்துள்ளன. தன்னுணர்ச்சிப் பாக்களைக் கொண்ட நூல்களில் இதழ்களில் வெளிவந்த தனிப் பாடல்கள், அவ்வப்போது நடந்த நிகழ்வுகளை ஒட்டிய பாடல்கள், போட்டிகளில் பரிசு பெற்ற பாக்கள், இசைப் பாடல்கள் போன்ற பல வகைகள் அடங்கியுள்ளன.

## சிற்றிலக்கியங்கள்

இக்காலகட்டத்துள் ஏழு சிற்றிலக்கிய நூல்கள் வெளி வந்துள்ளன. அவற்றுள் பலவகைகளைக் காணமுடிகிறது. காரைக் கிழாரின் **'சம்பந்தர் அந்தாதி'** எடுப்பான தோற்றத்தோடு விளங்கு கிறது. கட்டளைக்கலித்துறை யாப்பில் அமைந்த இது, 'கூட்டுறவுத் தந்தையெனப்பெறும்' (துன்) சம்பந்தனின் தன்னலமற்ற உயரிய தொண்டையும் அதன் பயனால் விளைந்த நன்மைகளையும் பலவாறு எடுத்துரைக்கிறது. அந்தாதி என்ற வகையில் மற்றொன்று இரா. சண்டமாருதத்தின் (டி.வி.ஆர்.பி) **'கவிக்கோ (வசை) அந்தாதி'** யாகும். இது (கவிக்கோ) அப்துல் ரகுமானை வசைபாடும் நூலாகும். இதே பாடுபொருளில் அதே ஆசிரியரால் எழுதப்பெற்ற எண் செய்யுள் வகையைச் சார்ந்த **'ஏனிந்த பிடிவாதம் கவிக்கோவுக்கு'** என்பதாகும். இவை கடுமையான, நயமற்ற **'வசைமொழிகள்'** கொண்டவையாய் உள்ளன. எண் செய்யுள் என்னும் வகையுள் மேலும் இரு நூல்கள் வெளிவந்துள்ளன.

## பாவிய வகைகள் – பெரும்பாவியங்கள்

பெரும்பாவியம் என்னும் சிறப்பிற்குரிய இரு பெருநூல்கள் இக்காலப் பகுதியில் வெளிவந்திருப்பது குறிப்பிடத்தக்கது. முருகு துரை (டாக்டர் மு. துரைசாமி) இயற்றிய **'பாவேந்தர் காப்பியம்'**, **'அம்பேத்கர் காப்பியம்'** (இரண்டாம் பகுதி) ஆகியன அப்பெருங் காப்பியங்களாகும். பாவேந்தர் காப்பியத்தின் முதற் பதிப்பு 2003 ஆம் ஆண்டு வெளிவந்தது. அம்பேத்கர் காப்பியத்தின் முதற்பகுதி 2005இல் வெளிவந்தது. மூன்றாம் பகுதி அடுத்து வரவுள்ளது என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். இவை சிக்கலற்ற மிக எளிய நடையில் வரலாற்றை, வாழ்க்கை நிகழ்வுகளை உள்ளது உள்ளபடி எடுத்துரைக்கும் தன்மையனவாகும்.

குறும்பாவியங்கள் என்னும் வகையில் ஆறு நூல்கள் வெளி வந்துள்ளன. அவற்றுள் பாவிகத் தன்மையால் சிறந்து விளங்குவது ப. மு. அன்வர் பாடிய 'செய்குசனான்' என்ற குறும்பாவியாகும். "பாரசீகப் பெருங்கவிஞர்கள் என்னும் நூலைப் படித்தேன். அதனில் இருந்த செய்குசனான் கதை என்னை ஈர்த்தது. அப்போதே முடிவு செய்தேன் இதைக் குறுங்காவியமாகப் பாட வேண்டு மென்று" என நூலாசிரியர் கூறுகிறார். இஸ்லாமிய இலக்கியமான இதனில் பயிலும் சமயச் சொற்களுக்குரிய விளக்கங்களும் தரப் பெற்றிருப்பதால் இதனைப் படிக்கும் எவரும் எளிதில் புரிந்து கொள்ளலாம். இந்நூல் டான் சிறீ மாணிக்கவாசகம் பரிசுத்

திட்டத்தில் முதல் நிலை பெற்று 5000 மலேசிய வெள்ளி பரிசு பெற்றதென்பது (04.10.2003) குறிப்பிடத்தக்கது.

குறும்பாவியங்களில் முருகுதுரையின் 'அணையா விளக்கு', குடியினால் விளையும் தீமைகளை எடுத்துரைக்கும் கதையினைக் கொண்டதாகும். இதன் முதல் பதிப்பு 1991இல் வெளிவந்தது. இரா. பாண்டியன் இயற்றிய **'இலட்சியப்பெண்'**, பெ. மு. இளம் வழுதி இயற்றிய **'வெற்றித் திருமகள் முத்தம்மா'**, **'புதுமைப்பெண் எழிலரசி'** ஆகியன தோட்டத் தொழிலாளர் தொடர்புடைய கதை களைக் கொண்டவையாகும். பெ. மு. இளம்வழுதியின் இன்னும் இரு குறும்பாவியங்களான **'மலேசிய மண்ணின் வரலாறு'; 'மலேசியத் தமிழாசிரியர்'** ஆகியன வரலாற்றை அடிப்படையைக் கொண்டவை. 'மலேசிய மண்ணின் வரலாறு', பரமேசுவரன் காலம்தொட்டு நிகழ்ந்த வரலாற்றை எடுத்துரைப்பதாகும். கடந்த பத்தாண்டுகளில் வெளிவந்த ஆறு குறும்பாவியங்களுள் நான்கை பெ. மு. இளம்வழுதி இயற்றியுள்ளார்.

## குழந்தை / சிறுவர் பாடல்கள்

1997இல் வெளிவந்த **'மலேசியத் தமிழ்க்கவிதைக் களஞ் சியத்'**துள் 60 சிறுவர் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. கம்பார் கனிமொழி **'இனிய வாழ்க்கை'** என்ற தலைப்பில் ஓர் இளையர் பாட்டு நூல் வெளியிட்டுள்ளார். இக்கட்டுரையாசிரியர் **'பாடிப் பழகுவோம்' 1, 2** ஆகிய இருநூல்கள் வெளியிட்டுள்ளார். இவ்விரு நூல்களிலும் உள்ள பாடல்கள் முன்பே இரு ஒலி, ஒளி வட்டு களாய் வெளிவந்துள்ளன.

கடந்த பத்தாண்டுகளில் இங்கு வெளிவந்த நூல்கள் என்னும் போது வேறு சிலவும் கண்ணில் படுகின்றன. மலேசியாவில் பிறந்து சிங்கப்பூரில் வளர்ந்து தமிழ்க்கவிஞர் படையை உருவாக்கியும், இவ்வட்டாரத்தில் கவிதைப் பயிர் செழிக்கவும் பேரளவு துணை நின்றவர் ஐ. உலகநாதன். இவர் தம் **சந்தனக் கிண்ணத்தின்** மூலம் தமிழகத்தின் பார்வையை இங்கு திருப்பியவருமாவார். **'கவிவாணர்' 'மலேசியப் பாவரசு'** என்னும் விருதுகளுக்குரிய இவர், இப்பொழுது தமிழகத்தில் வாழ்ந்தாலும், இன்னும் **'மலேசியக்கவிஞர்'** என்னும் அடையாளம் மாறாமல் உலாவந்து கொண்டிருக்கிறார். அவர் இயற்றிய **"பாவாணர் புகழ்ச் சிந்து** (2006); **'உடைந்த வீணை** (1998), **'முப்பாலில் மூன்றாம் பால்'** (காலக்குறிப்பில்லை) போன்ற நூல்கள் வெளிவந்துள்ளன. பாவாணர் புகழ்ச் சிந்தில்,

"தூயதமிழ் நீயளித்த ஆக்கம் - நன்றி
தோன்ற அதைக் காட்டுவதென் நோக்கம்"

என்று நூல் உருவான நோக்கத்தைக் கூறும் பாவலர், பாவாணரை இனிக்க இனிக்கப் பாடும் நிலையான பதிவாய் நூலை அணி பெறத் தந்துள்ளார். **'உடைந்த வீணை'** ஒரு சிக்கலை உள்ளடக்கிய குறும்பாவியம். தொடர்வண்டிப் பயணத்தின்போது தினச்சுடர் பா.சு. மணி கூறிய கதையின் பாவடிவம் இது. "புழுதியில் எறியப்பட்ட ஒரு வீணையை உலகநாதன் இங்கு புலம்ப வைத்திருக்கிறார், பெண்ணடிமை தீராத இந்த நாட்டில்' என்று, கதை சொன்னவரே முன்னுரையில் கூறுகிறார்.

ஐ. உலகநாதனின் மற்றொரு நூல், **'முப்பாலில் மூன்றாம் பால்'** என்பதாகும். திருக்குறள் காமத்துப்பால் முழுவதையும் வெண்பா யாப்பில் பொருள் விளங்கப் பாடியுள்ளார். வைரத்தைத் தங்கத்தில் பதித்ததுபோல் இவர் முயற்சி திருவினையாகியுள்ளது என்று சொல்லத்தக்க அளவு வெற்றி கண்டுள்ளார்.

"தெய்வத் திருமகளோ, தேர்ந்த மயிலவளோ
மையலறு தோடணிந்த மங்கையோ - அய்யனே
மெய்யறிய மாட்டாமல் மெய்யே மயங்குதே
அய்யம் அகற்றுவார் யார்? (குறள் - 1081)

என்று தொடங்கி,

"காதலர் உடலே காமத்திற் கின்பமாம்
மோதல் முடிந்தவுடன் முன்னெழுந்து - காதவிழ்க்கும்
கூடல் அதற்கின்பம் கொஞ்சுகிற நெஞ்சகத்தின்
பாடலே கட்டிற் பயன்" (குறள் - 1330)

என்று முடிகிறது. இம்முயற்சி குமரேச வெண்பாவை நினைவு படுத்துகிறது.

இங்கு இன்னும் இருநூல்கள் பற்றியும் குறிப்பிடுதல் சாலும். தமிழகத் தலைவர்களில் 'பெரியார்' தொட்டுக் 'கலைஞர்' வரை பாட்டுடைத் தலைவர்களாய்க் கொண்டு இங்குள்ள பாவலர்கள் நிரம்பப் பாடியுள்ளனர். மலேசியத் தலைவர்களை, சான்றோர்களைத் தமிழகக் கவிஞர் அங்ஙனம் ஏற்பதில்லை. ஒரு சில தலைவர்கள் பற்றிச் சிலர் தனிப்பாட்டுகள் பாடி இருக்கலாம். இக்குறை நீங்கும்வண்ணம் உவமைப்பித்தன் (முனியமுத்து) இரு சிற்றிலக்கிய நூல்களைப் படைத்துள்ளார். 'ஆதிகுமணன் ஐம்பெரு நூறு' (1997) என்பது ஒரு நூல்; **'ஆதிகுமணன் அணிமணி மாலை'** என்பது மற்றொரு நூல். ஆதிகுமணன் அணிமணி மாலையில்,

"வேணி தரித்தும் விரைகங்கை மூழ்கியும்
தாணுவெனும் வெற்பில் தவமிருந்தும் - காணரிய
ஈசனையே எண்ணும் இருடியர்போல் எண்ணாம
ஆசையனைப் பாடும் அகம்" (ப. 65)

என்னும் பாவில், தம் பாட்டுடைத் தலைவர் மேல் படைப்பாளர் வைத்திருக்கும் உயரிய மதிப்பு வெளிப்படுகிறது. 'ஆதிகுமணன் ஐம்பெரு நூறு' பற்றி ஆசிரியர் கூறும்பொழுது

"சங்க காலம் ஐங்குறுநூறு
எங்க காலம் ஐம்பெரும்நூறு" (ப. 14)

என்கிறார். இந்நூல் குறித்து ஆய்வுவல்லுநர் சி. இ. மறை மலை நூல் முன்னுரையில் கூறும்பொழுது," இடைக்காலப் பிரபந் தங்களை இருபத்தோராம் நூற்றாண்டுக்கு இழுத்து வந்திருக்கிறார் புலவர் உவமைப்பித்தன்" என்கிறார்.

## பாடுபொருள் வகைகள்

மலேசியத் தமிழ்ப்பாவலர்களின் மேற்படி நூல்களைக் கண்ணோட்டமிடும் பொழுது பல்வகையான பாடுபொருள்களைக் காணமுடிகிறது. அவற்றைக் கீழ்க்காணும் தலைப்புகளில் அடைக்கலாம்:

1. இறைநுகர்வு, 2. இயற்கை ஈடுபாடு, 3. நாடு, 4. சமுதாயம், 5. காதல் 6. வாழ்த்து 7. இரங்கல் 8. பொது 9. சிறுவர் பாடல்கள் என அடங்கும் இப்பாடு பொருள்கள், பலவாறு விரிவு காண்கின்றன.

## இறைநுகர்வு

இறைநுகர்வு தொடர்பாக இரு சிறுநூல்களே வெளிவந்திருப்பதால், அது குறித்து நிரம்பப் பாடல்கள் கிட்டவில்லை. சில நூல்களில் ஆங்காங்கே சில பாக்களே இவ்வகையில் கிட்டுகின்றன. **'தினம் ஒரு திருப்பாடல்'** என்ற சி. காவேரிநாதனின் நூல், முழுக்க முழுக்க இறைநுகர்ச்சி கொண்ட பாக்களைக் கொண்டுள்ளது:

"எனக்கேது இனித்துன்பம் இன்பாதம் தொட்டேன்
எனையேற்று அணைத்தீரே என்னென்பேன் இன்பம்!
வினைக்கேற்ற பெருலாபம் வேண்டாமல் பெற்றேன்
துணைவனே தீஞ்சுவடு தொடர்கின்றேன் பாரீர்" (ப. 26)

என்பது அதனில் ஒரு பாடல். சோலை முருகன் **'ஆன்மாவின் குரல்'** என்ற நூலில் இறை நுகர்ச்சிப் பாடல்களுடன் பொதுவான சில பாடல்களும் அடங்கியுள்ளன. இப்பாடுபொருளில், இறைவன் பெயரால் தந்திரங்கள் செய்து ஏமாற்றும் பேர்வழிகளை நம்பும் மூடத்தன்மையைச் சாடும் பாடல்களும் பிறந்துள்ளன.

"சிறுதெய்வப் பூசையினைச் செய்து - கையில்
சில பொருள்கள் கொண்டு வந்து காட்டும்
திறமைக்கு அடிவணங்கும் மக்கள் - அன்னார்
செய்கின்ற தந்திரத்தை எண்ணார்" (ப. 274)

என்று துன்புறுகிறார் ரெ. சண்முகம் (மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம்).

## இயற்கை ஈடுபாடு

இயற்கை ஈடுபாடு என்னும்போது, இத்துறைப் பாக்களும் அருகியே உள்ளன. அழகின் சிரிப்பு (பாரதிதாசன்), எழிலோவியம் (வாணிதாசன்) போன்று இயற்கையைப் பாடும் தனிநூல் எதுவும் வரவில்லை எனினும், ஆங்காங்கே சில இயற்கையின் புன்னகை தென்படவே செய்கின்றன.

சிலப்பதிகாரத்தின் கானல்வரியில் **'நடந்தாய் வாழி காவேரி'** என்று பாடி, இளங்கோவடிகள் காவிரி ஆற்றைச் சொல்லோவிய மாக்கி இலக்கியத்தில் வாழ வைத்திருக்கிறார். மலேசிய ஆறு ஏதேனும் அச்சிறப்பைப் பெற்றுள்ளதா என்று ஆராய்ந்தபோது, **'கோம்பாக் ஆறு'** என்று ஆற்றின் பெயராலேயே ஒரு நூல் வெளி வந்திருப்பதைக் காணமுடிந்தது; இலக்கியப் போட்டியில் பரிசு பெற்ற ஒரு கவிதை இடம்பெற்றுள்ள அந்நூல், ஒரு மலேசிய ஆற்றின் பெயராலேயே வெளிவந்திருப்பது மலேசியப் பாவலர் இம்மண்ணின்மேல் வைத்திருக்கும் அன்பிற்கு ஒரு சான்றாகும். அக்கவிதையின் ஒரு கண்ணி இது:

"காலையிலே கதிரவனால் தங்கமாகிக்
கடும்பகலில் கன்னியரின் கன்னமாகி
மாலையிலே செம்பரத்தைப் போல மாறி
மணி இரவில் வெண்ணிலவால் முல்லையாகிச்
சோலையிலே தென்றலுக்குத் தொட்டில் கட்டித்
தூங்காமல் நிறம்காட்டும் கோம்பாக் ஆறு"

(தீ. சி. பொன்னுசாமி, கோம்பாக் ஆறு, ப. 66)

இயற்கையைப் பற்றி மிகுதியாக எழுதியிருப்பர் பெ. மு. இளம்வழுதி. முகில் பற்றிய அவர் எண்ணம் இங்ஙனம் கவிதை வடிவெடுக்கிறது:

"அலைகடலில் உருவடைந்தே
அடிவயிறு கருசுமந்து
மலைமுடியில் உறங்கியங்கே
மகளிர்தம் கருமுடிமேல்
அலையலையாய் சுருள்சுருளாய்
அழகமைந்து நகர்ந்தங்கே
கலைவழங்கி எழில் கூட்டும்
கருமுகிலே வாழியவே!" (ப. 43)

காலை அழகுபற்றிக் குறிப்பிடத்தக்க ஓர் இனிய கவிதை இங்கு எடுத்துக்காட்டத்தக்கதாய் உள்ளது. 'செய்குசனான்' குறும் பாவியத்தில் வரும் அதனை அழகு கொஞ்சப் பாடியவர் ப. மு. அன்வர்.

"கங்குல் படலைக்
கலைத்துக் கடல் முடிமேல் - புதுக்
கற்பனைக் காவியம் போலே - அதிர்ச்
சிங்கம் எழுந்தது
தீட்டிய சித்திரம் போலே!" (ப. 31)

இருள் மறைய எழுந்த கதிரவனை, அதிர்ந்தெழும் சிங்கத்திற்கு உவமை காட்டிக் கற்பனைக் காவியம் படைக்கும் கவிஞர், கதிரெழும் காட்சியைத் தீட்டிய சித்திரம் என்கிறார். அவர் பாவே, ஓர் ஓவியமாக — சித்திரமாகப் பொலிவுபெற்று ஓங்கி நிற்கிறது.

இயற்கை குறித்த மற்றொரு நயமான பாடல் ஈண்டு எடுத்துக் காட்டத்தக்கது:

"மொட்டாய் இருந்தால் ஓரழகும்
முழுதும் மலர்ந்தால் ஓரழகும்
பட்டாய் விளங்கும் பளபளப்பும்
பனிநீர் முத்தின் மினுமினுப்பும்
பட்டால் சிலிர்க்கும் தென்றலினால்
பரப்பும் மணத்தின் புது மயக்கும்
செட்டாய்ச் சேர்த்து வைத்திருக்கும்
சீதளப் பூவோர் உயிர்க் கவிதை"

(கவிதைப் பூங்கொத்து, ப. 27)

ஒரு மலரைக் கவிதையாக உருவகப்படுத்திக் காட்டும் இச்சொல்லோவியம், கரு. திருவரசை ஒரு பண்பட்ட கவிஞரெனச் சான்று பகர்கிறது.

## நாடு

'நாடு' என்ற பாடுபொருளில் நிரம்பவே பாக்கள் உள. நாட்டு வரலாறு, வளம், விரைந்து கண்டுவரும் மேம்பாடு, பற்றுறுதி போன்ற கருப்பொருள்களில் பாடுபொருள் விரிவுகண்டுள்ளது. **'மலேசிய மண்ணின் வரலாறு'** என்ற தலைப்பில் மலாக்காவை உருவாக்கிய பரமேசுவரன் முதல், தொடர்ந்து பத்து வரலாற்று நாயகர்களைத் தமிழிலக்கியத்தில் வாழவைத்திருக்கிறார் பெ. மு. இளம்வழுதி.

நாட்டில் தமக்குள்ள உரிமையைச் சங்கு சண்முகம் எடுத்துரைக்கும் பாங்கு இது:

"இந்த நாடு எங்கள் நாடு
    இந்த நாட்டு மண்ணிலே
இன்றிருக்கும் உயிர்கள் யாவும்
    எங்கள் தாயின் பிள்ளையே!
இந்த வானம் எங்கள் வானம்
    இந்த வானின் மீதிலே
இங்கும் அங்கும் ஓடும் மேகம்
    எங்கள் தாயின் கூந்தலே"

(கவிதைப் பூங்கொத்து, ப. 39)

இங்ஙனம் நாட்டில் இனங்களுக்குரிய உரிமை பேசும் பாக்க ளோடு பல்லினம் சேர்ந்து வாழும் சிறப்புப் பற்றிய பாக்களும் பாடப் பெற்றுள்ளன. இரா. பாண்டியன் தம் இலட்சியப்பெண் குறும்பாவியத்துள் அவ்வுணர்வை வெளிப்படுத்துகிறார்:

"உள்ளத்தால் உணர்வால் மற்றோர்க்
    குதவிடும் பண்பால் பற்றால்
கள்ளத்தால் பிறரின் வாழ்வைக்
    கவிழ்க்கஎண் ணாத மக்கள்
சொல்லத்தான் ஓர்வ யிற்றில்
    தோன்றினா ரன்ன மூன்று
நல்லினத் தாருங் கூடி
    நலமுற வாழும் நாடே!" (ப. 133)

## மொழிப்பற்று

வாழும் நாட்டின்பால் பற்றுக்கொண்டு வாழும் தமிழர், தங்கள் தாய்மொழியை மறந்துவிடவில்லை. எதிர்கொண்ட எதிர்ப்புகளையெல்லாம் முறியடிக்க, சொந்த இனத்தவரின் அழிவு முயற்சிகளிலிருந்து அதனைக் காப்பாற்ற நடத்திய போராட்டங்கள் பல. அஃது அடுத்தடுத்து நடந்துவரும் ஒரு தொடர் போராட்டமாகவே நீடித்துவருகிறது. தமிழ்ப்பள்ளிகளைக் காப்பாற்ற ஒருமுறை சமுதாயம் துடித்தெழுந்தபோது கரு. வேலுச்சாமி உணர்ச்சிக் கொந்தளிப் போடு இப்படிக் குரல் எழுப்பினார்:

"பேய்மார்பில் பால்குடித்துப் பேணி உடல்வளர்ப்பார்
தாய்மார்பில் பால்குடிக்கத்தாக முறார் அம்மானை
தாய்மார்பில் பால்குடிக்கத்தாக முறார் எஞ்ஞான்றும்
தோய்வார் வழிமாறித் தொல்லுலகில் அம்மானை
சோகமிது சூழ விவேகமென்ன அம்மானை"

(மலேசியத் தமிழ்க்கவிதைக் களஞ்சியம், ப. 309)

இப்போராட்ட உணர்வுதான் இன்று சமுதாயத்தின் 52 விழுக்காட்டுப் பிள்ளைகள் தமிழ்ப்பள்ளிகளில் சேர்ந்து பயிலும் ஒரு நன்னிலையை ஏற்படுத்தியுள்ளது. இனத்திற்குக் காப்பாக விளங்குவது, அடையாளமாக நின்று நிலைப்பது தாய்மொழிதான் என்பதனைப் பாவலர் பலர் எடுத்துக் காட்டியுள்ள பாக்கள் பல **'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சிய'**த்துள் இடம்பெற்றுள்ளன.

"சித்தத்தில் ரத்தத்தில் சேர்ந்தது பண்பாடு,
சிதையாமல் காப்பதற்கு மொழிதான் முதல் தேடு" (ப. 312)

என்று கரு. திருவரசும்,

"மண்ணுக்கும் தூய மொழிநலம் பேணி
வளர்ப்ப தல்லால் காப்பேது?" (ப. 320)

என்று எல்லோனும்,

"மாண்புறுநம் தமிழ்வாழ வகைகாண
வரிந்து கட்டி வருவீர் இன்றே!" (ப. 315)

என்று கா. பெருமாளும் எழுப்பும் குரலும் ஈண்டு எடுத்துக் காட்டத்தக்கன.

## சமுதாயம்

## மலேசியாவில் தமிழர் நிலை

இந்தியத் துணைக் கண்டத்தின் தென்பகுதியான தமிழகத்திலிருந்து இங்கு வந்த தமிழர் பற்றிய செய்திகளை எடுத்துரைத்தால் அஃது ஒரு பெருநூலாய் விரியும். கவிதைகளின் பின்புல விளக்கத்திற்காக ஈண்டுச் சில சொல்லப்படுகின்றன. மலைகளும் காடுகளும் நிறைந்த இந்நாட்டை வளமான விளைநிலமாக்கவே ஆங்கிலேயரால் இந்தியர் - திராவிடர் - குறிப்பாகத் தமிழர் (85%) புலம்பெயர்ந்து இங்கு வந்தனர்.

இங்கு புலம்பெயர்ந்து வந்தவர் தொகை 40 இலக்கம். ஒப்பந்தம் முடிந்து தாயகம் திரும்பியோர் 28 இலக்கம். நாட்டு உருவாக்கப் பணிகளில் உயிர்விட்டோர் 12 இலக்கம் பேர். சயாமில் சப்பானின் (மரண) ரயில்பாதை (Death Railway) அமைக்க அழைத்துச் சென்று அப்பணிச்சுமையால் மாண்டோர், உரிய காலத்தில் குடியுரிமை பெறாததால் வேலை இணக்கச் சீட்டு (Work Permit) முறையால் வேலைவாய்ப்பிழந்து, வாழ்விழந்து மூலத்தாயகம் திரும்பியோர் தொகை யாவும் ஓர் இலக்கத்தை எட்டுகிறது. (S.K. Sandu, 1969:310-314). இப்போதைய இந்தியர் எண்ணிக்கை 18 இலக்கம். இவர்தம் வாழ்க்கைத் தரத்தின் நிலை யாது?

கடந்தகாலத் தாக்கங்களிலிருந்து இன்னும் சமுதாயம் முற்றாக விடுதலை பெறமுடியவில்லை எனினும், படிப்படியாக முன்னேற்ற ஒளிவந்து கொண்டிருப்பதனை மறுக்கவியலாது! பாவலர் பார்வையில் சமுதாயம் எப்படிப் படம்பிடிக்கப் பட்டிருக்கிறது என்பதற்குச் சில எடுத்துக்காட்டுகள் தரப்பெறுகின்றன.

மலேசியப் பாவலர் படைப்புகளில் விஞ்சி நிற்பது சமுதாயமே. சமுதாயத்தை அவர்கள் பல கோணங்களில் கண்ணோட்டமிட்டிருக்கின்றனர். ஏழைமைக்கு இரங்கி, இயலாமைக்கு வருந்தி, சோம்பிக்கிடப்பதற்குச் சினந்து, தன்முனைப்பற்றுக் கிடப்பதற்குக் கொதித்து, வன்முறை ஆட்டிப் படைப்பதற்கு அழுது, சிறார் கொடுமை கண்டு வெந்துருகி, வளர்ச்சிநிலை காணுதுங்கால் மகிழ்ந்து, வெற்றிகளைக் குவிக்குங்காலத்துப் பூரித்து உணர்ச்சிச் செறிவான பாக்களைப் படைத்துள்ளனர்.

## நாட்டு உருவாக்கத்தில்...

நாட்டு உருவாக்கத்திற்காக உயிரை ஈகம் செய்தோர் பற்றிப் பாடிடப் பாவலர் தவறியதில்லை. இன்றைய சூழலையொட்டிப்

பாவியம் இயற்றுவோர்கூட பழைய வரலாற்றுச் சுவடுகளை எடுத்துக்காட்டாமல் விடுவதில்லை. **'இலட்சியப்பெண்'** என்ற குறும்பாவியத்தில் இரா. பாண்டியன் பழைய வரலாற்றை நினைவு கூர்கிறார்:

"அட்டைகள் கடித்தும் அரவுகள் கடித்தும்
அழிந்தனர் எம்மவர் லட்சம்
மட்டைகள் களைந்து செம்பனை வளர்க்க
மடிந்தனர் எம்மவர் லட்சம்
பட்டைகள் உரித்த மரமென மரணப்
பாதையில் மாண்டனர் லட்சம்
கட்டைகள் களைந்து சாலைகள் போட்டுக்
கழிந்தனர் எம்மவர் லட்சம்" (ப. 202)

இது நாட்டு உருவாக்கத்திற்கு உயிரிழந்தவர்களைப் பற்றியதாகும். வெவ்வேறு நிலைமைகளைப் பாடும் பாடல்கள் பல உள்ளன. ஒவ்வொரு நிலைக்கும் ஒரு சில பாடலடிகள் ஈண்டு எடுத்துக்காட்டல் பெறுகின்றன.

## ஏழைமை

வறுமையுற்றோர் தமிழ்ச் சமுதாயத்தில் அதிகம். அவர்கள் கொட்டும் உழைப்போ மிகுதி. ஆனால், வருவாய் குறைவு. தற்பொழுதைவிட கடந்த பத்தாண்டுகளுக்கு முந்திய சமுதாயத்தின் நிலை மிகவும் இரங்கத்தக்கது. இதனைப் படம்பிடித்துக் காட்டு கிறார் கரு. வேலுச்சாமி:

மனைவி சமையல் வேளையில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறாள். வெளியே சென்று வீடு திரும்பிய கணவன், "சமையல் ஆகிவிட்டதா?" என்று வினவுகிறான். அதற்கு அவள்,

"முடிந்தது என்ற வாறு
முன்னுக்கு மங்கை வைத்தாள்
வடிந்தகண் பிள்ளை கட்கும்
எனக்குமாய்ப் பங்கு வைத்தாள்
கடிந்தழும் பிள்ளை கட்குக்
கருவாட்டை எடுத்துப் போட்டாள்
கடிக்கநான் காயைப் போட்டாள்
தன்வயிற்றைக் காயப் போட்டாள்"

(புயலில் மலர்ந்த பூக்கள், ப. 104)

'*தன் வயிற்றைக் காயப்போட்டாள்*' என்று பாவலர் மடக்கிக் கூறும் அடி, தமிழ்க்குடும்பங்கள் பலவற்றின் ஏழைமை நிலையையும், எத்தனையோ துன்பங்களைத் தாங்கிக்கொண்டு குடும்பங்கள் அழிந்துபடாமல் காலத்தை ஓட்டத் தாய்க்குலம் செய்யும் ஈகத்தையும் அடுக்கிக் கூறுகிறது. அதே பாவலர் இன்னொரு பாட்டில், தோட்டப்புறத் தமிழர் வாழ்வைக் கண்முன் கொண்டு வந்து நிறுத்துகிறார்:

"தேயிலைத் தோட்டம் வந்து
 தேய்கிற தமிழன் தூங்கப்
பாயிலை, பசியைத் தாங்கப்
 பழகிய வன்போல் ஆனான்
வாயிலை அவனுக் கென்று
 வாழ்பவர் கூடி ஆங்கோர்
கோயிலைக் கட்டி வைத்துக்
 கும்பிடு நீயே என்றார்! (மேலது, ப. 55)

## இயலாமை

தேயிலைத் தோட்டங்களில் மட்டுமன்றி ரப்பர், செம்பனைத் தோட்டத் தமிழர் நிலையும் இதுதான். தமிழ் இனத்தில் படிந்துள்ள இழிவுகள் குறித்துக் கவிஞர்கள் பாடத் தவறவில்லை. **'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சிய'**த்துள் இடம்பெற்றுள்ள கா. பெருமாளின் பாட்டு இப்படி ஒலிக்கிறது:

"தாள்வருடி அடிமையெனச் சாக்கடையில் வீழ்ந்து
தவிப்பதையே மோட்சமெனும் தன்மான மிழந்தோர்
மீளும்வகை காணாது வெளிப்பகட்டுக் காக
மேன்மைதன்னைப் பேசுவதால் மீட்சியுண்டோ சொல்வாய்?

(ப. 321)

## சோம்பல்

இங்ஙனம் பிற்போக்குத் தன்மையை — இழிவைச் சுட்டிக் காட்டும் பாவலர், "எல்லாம் தலைவிதி" என்று முயற்சியின்றிச் சோம்பிக் கிடப்பவரைச் சாடாமலும் விட்டதில்லை:

"தின்றுவிட்டுத் தினம்தூங்கி எழுந்துபாழ்
திண்ணைப் பேச்சில் சுகம் என்றாய் - பகை
வென்று வீழ்த்தியநன் மூன்று முடிவேந்தர்
வீர வரலாற்றைக் கொன்றாய்

(பொன் நாவலன் கவிதைகள், ப. 6)

தொன்மை உத்தியோடு சோம்பலால் ஏற்படும் தாழ்வு நிலையை எடுத்துக்காட்டி சுறுசுறுப்புக் கொள்ளச் சமுதாயத்தைத் தூண்டு கிறார் பாவலர்.

## முனைப்பின்மை

வீணே பேசிக் காலத்தைப் பாழடித்துத் தாழ்ந்து கொண்டி ருக்கும் நிலை மாறவேண்டுமென்று குரல் கொடுக்க நினைத்த ஈப்போ முத்துப் பாண்டியன் தம் உணர்வுகளை இப்படிக் கொட்டு கிறார்:

"வீண்பேச்சு ஆகாது; வெற்றிவாகை சூடாது - நீ
வீரத் தமிழ்மகனே வீழ்ந்துவிடக் கூடாது!
ஏன் போச்சு எல்லாமும் எனச் சிந்தி - உன்னை
எவன்வந்து வீழ்த்துவது...?"

தன்முனைப்பைத் தூண்டும் இதுபோன்ற பாக்களை நிரம்பத் தந்துள்ள பாவலர்கள், சமூகத்தில் தலைகுனிவை ஏற்படுத்தும் 'வன்முறை' குறித்தும் கண்ணீர் விட்டுப் பாடியுள்ளனர்.

## வன்முறை

கடந்த பத்தாண்டு காலத்திற்குச் சற்று முன்பிருந்தே சமுதாயத்தின் ஒரு பகுதி வாழ வழியற்றதால் நெறி இழந்து வன்முறையில் ஈடுபட்டுத் தாழ்வை வரவழைத்துக்கொண்ட நிலையைப் பாவலர் பலர் ஏடுகளில் எழுதியுள்ளனர். அவை இன்னும் நூலாக்கம் பெறவில்லை.

"கத்திக்கு மதிப்பளிக்கும்
காலிகள் வளர்ந்த தாலே
புத்திக்கு மதிப்பில் லாமல்
போனது சமுதாயத்தில்..." (ப. 12)

என்ற ஒரு பாடலைக் **'கரும்பும் கண்ணீரும்'** என்ற தம் நூலில் பொன். நாவலன் சேர்த்திருக்கிறார்.

இச்சிக்கலைப்பற்றி **'கோம்பாக் ஆறு'** என்ற தம் நூலிலும் தீ. சி. பொன்னுசாமி ஒரு பாடலை இடம் பெறச் செய்துள்ளார்.

## சிறார் கொடுமை

எல்லா இனத்திலும் பரவலாகக் காணப்படும் சிறார் கொடுமைகள் குறித்துப் பலரும் வருந்திப் பாடியுள்ளனர். **பால சுந்தரம்** என்ற சிறுவனைப் பெற்றோர் சரிவரப் பேணாததால் அவன் பிறரால் வன்கொடுமைக்கு ஆளாகி மாண்டான். அவன் இறப்பு கல்நெஞ்சங்களையும் கலங்கச் செய்தது; நாட்டில் எல்லா இனத்தவரிடையேயும் ஒரு பேரலையை உருவாக்கிற்று; அரசுக்கும் அதிர்ச்சி தந்து அதன் பார்வையைத் திருப்பிற்று. பாவலர் பலரும் அக்கொடுமையைப் பாட்டாக்கினர்; பொன். நாவலனின் பாடல் அடிகள் இவை:

"பச்சை பசுந்தளிராம் பால சுந்தரத்தைப்
பாவி நெருப்பாலே சுடுவதா? - போதை
இச்சை வெறியாலும் ஈனத் தனத்தாலும்
இன்னும் சமுதாயம் கெடுவதா?

(பொன் நாவலன் கவிதைகள், ப. 10)

இங்ஙனம் பிறர் குழந்தைகளைக் கொடுமைப்படுத்துவது ஒருபுறமிருக்க சொந்தக் குழந்தைகளையே கொடுமைக்கு ஆளாக்கும் 'சடலங்களும்' இருக்கவே செய்கின்றன. தெய்வ நிலையில் வைத்து எண்ணப்படுபவள் தாய். அத்தாய்குலத்தைச் சேர்ந்த, சேரத் தகுதி யற்ற 'அரக்கி' ஒருத்தி தன் குழந்தையின் உயிருக்குத் தானே கூற்றானாள். தாளிகையில் வந்த செய்திகண்டு உருகிய வீ. பூபாலன், தாயின் உணர்வைத் தன்மேல் ஏற்றிக் கொண்டு உகுக்கும் கண்ணீர் இது:

"பத்துமாதம் சுமந்த உன்னைப்
படுகுழியில் தள்ளவோ குலக்கொடியே!
செத்துநீ கிடந்தது உந்தன்
சீவனுக்கு யெமன்நானோ மலர்க்கொடியே?
எத்தனை கண்ணீர் வடித்து மென்ன?
என்பழி பாவம் குறையவா செய்யும்?
கத்திநான் கதறும் குரலைக்
கடவுளும் இனிமேல் கேட்க மாட்டான்!

(பூச்சரங்கள், ப. 28)

'சிறார் கொடுமை' என்னும் பொழுது பாவலர்கள் மலேசியா விற்கு உட்பட்ட பகுதியை மட்டும் நோக்கவில்லை. அவர்கள் பரவலாகத் தங்கள் பார்வையைச் செலுத்தியுள்ளனர். இலங்கையில் சிங்களப் படையினர் தமிழர்க்குச் செய்த கொடுமைகள் பல. இளஞ்சிறார்களுக்கு, பள்ளிப் பிள்ளைகளுக்கு, விடலைப் பருவத்

தினருக்கு - பொதுவாக அனைத்து மக்களுக்கும் அவர்கள் புரிந்த - புரியும் கொடுமைகள் உலக மக்களை இரங்கி உருகச் செய்வ தாகும். அவற்றில் ஒரு நிகழ்வைக் கூறும் காரைக்கிழார் பாடல் **'மலேசியத் தமிழ்க்கவிதைகள்'** நூலில் இடம்பெற்றுள்ளது.

> "கிருஷாந்தி என்னும் கிளி இள முகையை
> எருமைகள் மிதித்ததால் எழுந்த வெளிச்சத்தில்
> ஊரெல்லாம் புதைகுழி உண்மை தெரிந்தது!
> யாரெல்லாம் என்னென்ன செய்ததும் புரிந்தது!
> என்னரும் செல்வமே, எனக்குத் தெரியும்
> உன்னுயிர், உடலம் போயினும் என்ன உன்
> எலும்புக் கூடின் எஃது உரம் அறிவேன்! எழும்புக!
> புதைகுழி விட்டு எழும்புக! தனித்தமிழ் ஈழம்
> கைவரும் வரைக்கும் தனித்தனி எலும்புத் துண்டுகள்
> யாவும் ஆயுதம் ஆகட்டும்!
> அரக்கரை ஒழிக்கட்டும்!
> ஓயுதல் ஈழத்தாய் மடியினில் மட்டுமே!

எல்லாவற்றையும் இழந்து உயிர்ப் போராட்டம் நடத்தும் ஓர் இனத்தில் ஓலக்குரலோடு உறுதி நிறைந்த போராடட உறுதி யையும் நம்பிக்கையையும் இப்பாட்டு எடுத்துரைக்கிறது.

'கிருஷாந்தி' ஒரு விடலைப் பெண். அவள் மாந்த உணர்வே அணுவளவும் இல்லாத காட்டு விலங்காண்டிகளான போர்ப் படையினரால் வல்லுறவுக்கு ஆளாக்கப்பட்டுக் கொடூரமான முறையில் கொலை செய்யப்பட்டாள். அந்தச் செய்தி வெளியான பின், அவளைப்போல் அக்கொடுமைக்கு ஆளானவர் புதைகுழிகள் கண்ணில்பட்டன; உலக மக்களைக் கலங்கவைத்தன. மாந்தநேயம் மிக்கவர் கண்ணீர் கிருஷாந்தியின் புதைகுழிமேல் வீழ்ந்தது.

இச்செய்தி, காரைக்கிழரை அச்சிறுமியின் தாயாக்கிக் கதற வைத்தது. ஈழத்தாய் அல்லவா? கதறலோடு மகளின் அழிவில் ஓர் ஆக்கம் விளையுமென்று அந்தத் தாயின் மனம் நம்பிக்கை கொள் கிறது. கவிஞர், கொடுமைக்காளான விடலையை 'இளமுகை' என்றும், அந்த முகையைக் கசக்கியெறிந்த கொடியவர்களை 'எருமைகள்' என்றும் முரணாக இரு மாந்த உருவங்களை உருவக உத்தியில் எடுத்துக்கூறும் பாங்கு, கவிதையில் பதிந்துள்ள உணர்வுத் தேக்கத்தைச் சுட்டிக்காட்டும் ஓவியங்களாகி நடந்த கொடுமையைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்திக் கலங்கச் செய்கின்றன.

சமுதாயத்தின் பல கோணங்களையும் கண்ணோட்டமிட்ட பாவலர், அதன் வளர்ச்சி முகத்தைக் கண்டபோது மகிழ்ந்து

*கூத்தாடியும் உள்ளனர். **'புயலில் மலர்ந்த பூக்களில்'** கரு. வேலுச் சாமியின் மகிழ்ச்சி வெள்ளம் இது.*

சற்றே விழித்ததில் எத்தனை
சாதனை மேவுகிறாய்! - வெறும்
சம்பிர தாயச் சனியன் முதுகிலும்
தன்கணை ஏவுகிறாய்
பொற்றே ருருட்டிப் புறப்பட்டு விட்ட
புதுப்பய ணம் உனக்கே! உனைப்
போற்றிப் புகழும் புகழின் உச்சிமேல்
போதும் தமிழ் எனக்கே! (ப. 78)

*எழுச்சியை நோக்கத் தொடங்கிவிட்ட இனத்திற்கு இனித் தடைகள் இல்லை என அவர் இங்ஙனம் ஊக்கமூட்டித் தட்டிக் கொடுக்கிறார்.*

"எட்டுத் திசைப்புயல் வீசும் எனின்இனி
எங்கள் விளக்கெரியும்! - வெறும்
ஏழைப்பட் டாளந்தான் இந்த இனமென்
றிருந்த வழக்கொழியும்!
சொட்டுச் சுடர்ந்தது சூரியன் உன்னைத்
தொடாதினி நள்ளிரவே! - பெரும்
சோதனை தீர்ந்த இனமே! உடன்திற
சொர்க்கவா யிற்கதவே! (ப. 100)

*மலேசியத் தமிழ் - இந்திய சமுதாயம் ஏழைச் சமுதாயமாக இருந்தாலும் அவ்வப்போது சில வெற்றிகளைக் கண்டே வருகிறது; விளையாட்டுத் துறையில், தொழில்நுட்பத் துறை போன்றவற்றில் அதன் வெற்றிகள் மற்ற இனத்தவரால் மதிக்கத்தக்க நிலையைக் கண்டுள்ளன.*

## இமய உச்சியைத் தொட்ட இருவர்

*மலையேறுவது ஒரு கலை. அதனில் பலர் ஈடுபட்டு வரு கின்றனர். அத்துறையில் மகேந்திரன, மோகனதாஸ் ஆகிய இரு வீரர்கள் சாதனை உலகம் புகழ்ந்த சாதனையாகும் அவ்விருவரும் இமயத்தின் உச்சியில ஏறி மலேசியக் கொடியை நட்டு, வரலாற்றில் இடம்பெற்றவாகள ஆவா அவர்கள் புரிந்த சாதனையைப் பலரும புகழ்ந்து பாடியுள்ளனா. **'கரும்பும் கண்ணீருமே'** எனற நூலில இடமபெற்றுள்ள பொன். நாவலன கவிதை இது*

"இமயத்தை தொட்டு வந்த
இரட்டையர்கள் இருவருக்கும்
அமுதான தமிழ்ப்பாட்டில்
அலங்காரம் செய்கின்றேன்
மோகனதாஸ், மகேந்திரன்
மூப்பான செயல்தன்னை
முத்தமிட்டு வாழ்த்துவதே
முத்தமிழின் செயலாகும்!" (ப. 60)

*இங்ஙனம் சமுதாயத்தைப் பல கோணங்களில் நோக்கிப் பாட்டின்வழி அந்த உணர்வலைகளை வடித்துள்ளனர் பாவலர்கள்.*

*மலேசியத் தமிழ்க்கவிதைத் துறையில் இயற்கை பற்றிய பாடல்கள் குறைவு என்று முன்பே கூறப் பெற்றது. காதல் பற்றிய பாக்கள் நிலையும் அதுவே. இதழ்களில் வந்திருக்கலாம். நூல்களில் தேடுமபொழுது அத்துறையில் ஒரு நிறைவு தெனபடவில்லை. உள்ள பலவற்றில் காதலில் தோய்ந்த உணர்வு அத்துணை நிறைவாக வெளிப்படவில்லை. நல்ல சில பாக்கள் ஈண்டு எடுத்துக்காட்டப பெறுகின்றன.*

*காதல் உணர்வுகளைப் பாட்டாக்குவதில் கரு. வேலுச் சாமிக்கு நல்லிடம் உண்டு; இனிய பல பாக்களை அவர் வழங்கி யுள்ளார். ஒரு பாட்டின் சில அடிகள் இவை:*

ஆய கலைகள்தாம் அப்படியோ - அவன்
ஆய்ந்த கலைகள்தாம் இப்படியோ?
மாய உலகத்துச் செப்படியோ - மன
வாட்டம் குறைப்பது எப்படியோ?

(புயலில் மலர்ந்த பூக்கள், ப. 159)

*இப்படி ஏக்க வினா எழுப்பும் அவர் 'இதழ்பதது' எனற தலைப்புக் கொண்ட கவிதையிலே இதழின் சிறப்பை இப்படி எடுத்துரைக்கிறார்:*

"தென்றலிலே தோய்ந்த சிறுமுல்லை மொட்டலரும்
புன்னகையில் தோய்ந்த புலருமிதழ் - வண்ணம்
புரக்கும் மதுவிருக்கும்பூவதுவாய்த் தானும்
சுரக்குமிதழ் முல்லைச் சுகம்" (மேலது, ப. 175)

*காதலரிடையே ஏற்படும் பிரிவு கொடுமையானது.*

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை" (குறள் - 1151)

என்று பிரிவின் துன்பத்தைத் திருவள்ளுவர் எடுத்துரைப்பார். சங்க அக இலக்கியங்களில் இத்துறை ஓவியங்களைப் பரக்கக் காணலாம்.

ப. மு. அன்வரின் 'செய்குசனான்' என்ற குறும்பாவியத்துள் ஒரு பாடல் வருகிறது. மரியம், செய்து தன்னை விட்டுப போய் விட்டான் என்பதறிந்து புலம்பும் உணர்வை வெளிப்படுத்தும் பாடல் அது. கதைத்தலைவி பிரிவுத் துன்பத்தால் துடிக்கும் காட்சி கண்முன் தெரியும வண்ணம் அப்பிரிவுணர்த்தும் பாங்கு அமைந் துள்ளது:

"போனீரே ஐயா என்னைப்
பொழுதெலாம் உயிரில் வைத்துத்
தேனீரம் காயா வண்ணம்
தித்திக்கத் தழுவல் நீத்துப்
போனீரோ? செத்தொழிந்து
போவெனச் சொலாது சொல்லிப்
போனீரோ எனக்க லங்கிப்
பொழுதெலாம் கரைய லானாள!" (ப. 171)

"பொழுதெலாம் கரைய லானாள்" என்ற அடி, அவளின் அப்போதைய துன்பத்தை மட்டுமன்றி அதன் தொடர்ச்சியையும் கூறா நிற்கிறது. காசிதாசனுக்குத் தம் காதலின் இடை நுரைப் பூவைப் போல் தெரிகிறது அவளை எணணி அவர் நூலறுந்த பட்டம் போல் தவிக்கிறாராம். இககலை உணர்வை எடுததுரைக்கும் பாடல் அடி வருமாறு

"நுரைப்பூவை இடையாகக் கொண்ட பெண்ணே
நூலறுந்த பட்டம்போல் தவிக்கின் றேனே!"

(புதுவெள்ளம், ப. 21)

காதல் தோல்வியால துடிக்கும் ஓர் ஆணின் குரலையும் மலேசியக் கவிஞர்கள் பதிவுசெய்துள்ளனா. **'பூச்சரங்களில்'** பூபாலன் 'காதலித்துப் பாாக்கவேண்டும்' என்ற தலைப்பில் காதல் தோல்வி பற்றி வரைந்துள்ளார். காதல், வந்த வழியே திரும்பிப போக வேண்டும். காதல் வயப்படும் இளமபருவம் செத்தொழிய வேண்டு மெனறு வெந்து நொநது துடிக்கும் ஒரு துன்பக் குரல இது:

"வாலிபங்கள் சாகவேண்டும் - காதல்
வந்தவழி போக வேண்டும்
நாளை மனம் நோக வேண்டும் - நேற்று
நடந்ததெல்லாம் வேக வேண்டும்" (ப. 78)

இயற்கை படைப்பில் தவிர்க்கவியலாத உணர்வாக — உயிர்ப்பாக விளங்கும் காதல், சிலரை இப்படியும் பாடாய்ப்படுத்தி விடுகிறது.

## வாழ்த்து

மலேசியத் தமிழ்க்கவிதைகளில் காணப்படும் பாடுபொருள் களில் வாழ்த்தும் ஒன்று. அரசியல், சமுதாயத் தலைவர்களை, சான்றோர் பெருமக்களை, இயக்கங்களை, நிகழ்வுகளைப் பாவலர்கள் வாழ்த்திப் பாடியுள்ளனர். இவ்வகையில் கவிஞர்களின் பார்வை உள்நாட்டு அளவில் நின்று விடவில்லை; உலக அளவு பரந்து விரிந்துள்ளது. உலக மக்களுக்குப் பயன்படும் செயலைச் செய்தவர் யாராக இருந்தாலும், எந்த நாடாக இருந்தாலும் வாழ்த்தத் தவற வில்லை மலேசியப் பாவலர்கள். அரங்கக் கவிதைகள நூலில் மைதீ. சுல்தான் தாயகத்தை இப்படிப் பூரிப்போடு வாழ்த்துகிறார்:

"நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமாய்
நலத்துடன் வளர்ந்திடும் மலையகம்
சீலமும் செம்மையும் சேர்ந்துநன் றொளிரவே
செப்புவோம் வாழ்கநம் தாயகம்!" (ப. 76)

விடுதலைத் தந்தை துங்கு அப்துல் ரகுமான் புத்ராவைத் தமிழ்க் கவிஞர்கள் இனிக்க இனிக்கப் பாடிப் பரவியுள்ளனர். தம் **'புது வெள்ளம்'** என்ற பாத்தொகுதியில் காசிதாசன் வரைந்துள்ள பாடல் இது:

"வண்ணக் கதிரவன் விண்ணின்று மலையக
வடக்குத் திசையில் தோன்றியது - சோழ
மன்னர் குலம்வந்த மன்னர்குலத் தங்கம்
மாமணி துங்குவென் றாகியது!" (ப. 108)

இனத்தலைவர்களை வாழ்த்திய பாடல்களும் நிரம்ப வெளி வந்துள்ளன. தோட்டங்கள் துண்டாப்பட்டபோது அந்தப் பேரிடரி லிருந்து இனத்தைக் காக்கக் கூட்டறவுச் சங்கம் கண்ட (தந்தை துன்) சம்பந்தனைப் பாடாத கவிஞர் இலர். ஒட்டு மொத்தமாக அனைவர் பாராட்டுதல்களையும் வணக்கத்தையும் பெற்ற ஒரே பெருந்தலைவர் (துன்) சம்பந்தன். அவரைப பற்றிய இரண்டே பாடல் பகுதிகள் ஈண்டு எடுத்துக் காட்டுகளாகத் தரப பெறு கின்றன. பாட்டில் இனம் உற்ற துயரும் அதனைத் துடைத்து வாழ்வளிக்கச் சம்பந்தன் மேற்கொண்ட தொண்டும் துல்லியமாய் எடுத்துரைக்கப் பெறுகின்றன, "மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்

*சியத்தில் இடம் பெற்றுள்ள மிக நீண்ட பாடல் அது. அதிலிருந்து சில அடிகள் மட்டும் ஈண்டுத் தரப் பெறுகின்றன:*

“துண்டுவிழும் தோட்டத்தில் துவண்டு கிடந்தவரைக்
கண்டு மனம்வாடிக் கவலையுற்றான் அம்மானை!
கண்டு மனம்வாடிக் கவலையுற்ற சம்பந்தன்
பெண்டு பிள்ளைகள் வாழப் படியளந்தான் அம்மானை
படியேறி வந்தவர்க்கு மடியானான் அம்மானை”

(ஞானதாசன் ப. 532)

*பால் நினைந்தூட்டும் தாயெனப் பரிவுறும் மனங்கொண்ட சம்பந்தன், செல்வராய்ப் பிறந்து தொண்டில் செல்வத்தைத் தொலைத்து ஏழையாயப் புகழுடமபெய்தியவர்; விடுதலைக்கு வித்திட்ட நாட்டின் மூத்த அமைச்சர்களில குறிப்பிடத்தக்கவராய் விளங்கிய அவர், உலகத் தலைவர்களில் ஓர் ஒளிமணியாய்த் திகழ்பவர். அப்பெருமகனைப் பாட்டுடைத் தலைவராய்க் கொண்டு காரைக்கிழார் கட்டளைக்கலித்துறை யாப்பில் ஓர் அந்தாதி பாடியுள்ளார். அதனில் உயர்வு நவிற்சி இன்றி இயல்பான தன்மையில் இபபடி அடையாளங காட்டுகின்றார் (கூட்டுறவுத் தந்தை சம்பந்தனை):*

“விளைத்தனன் அன்றி விளைந்த பொருளைத் தனக்கெனவே
வளைத்தனன் அல்லன்; வரம்பறப் பேசி வரும்பயனில்
பிழைத்தனன் அல்லன்; பிறர்தரக் காணும் பெருந்துயரால்
மலைத்தவன் அல்லனெம் மாதவச் சம்பந்த மாமணியே” (ப. 17)

*மலேசிய இந்தியர் - தமிழர் தலைவர் (டத்தோ சிறீ) ச. சாமி வேலு தலைமையைப் புகழ்ந்து பல பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியத்தில் தீ. சீ. பொன்னுசாமி பாடியுள்ள பாடலின் சில அடிகள் கீழே தரப் பெறுகின்றன:*

“பொதுப்பணித் துறைக்கே மேலும்
புகழ்மணி சேர்த்த எங்கள்
நதிப்பணி அமைச்சே! நாட்டின்
நற்பெயர் உலக ஏட்டின்
பதிப்பிலே மலரச் செய்து
பாரெல்லாம் மணத்தைத்தந்து
புதுப்புது வரலா றெல்லாம்
பூத்ததும் உன்னா லன்றோ?
தங்கமே சாமி வேலு
சிங்கமே வாழ்க! வாழ்க! (ப. 527)

*மலேசியத் தமிழ்ப்பாவலர்கள் நாட்டு எல்லைக்குள் தங்கள் உணர்வு வெளிப்பாடுகளை முடக்கிக்கொள்ளவில்லை. உலகப் பார்வையையும் அவர்கள் கொண்டுள்ளனர். குறிப்பாக இந்தியாவின் தமிழ்நாட்டின் பால் அவர்கள் பார்வை நிரம்ப விழுந்துள்ளது. தமிழகப் பெருந்தலைவர்களான உலகத் தமிழர் இனஉணர்வோடு மதித்துப் போற்றும் தலைவர்களான — (தந்தை) பெரியார், (பேரறிஞர்) அண்ணா, (கலைஞர்) மு. கருணாநிதி ஆகிய பெரு மக்களைப் பற்றிய பல பாடல்கள் இங்கு நூலுருப் பெற்றுள்ளன. மேற்கண்ட மூன்று தலைவர்களையும் பற்றிய பாடலின் சில அடிகள் எடுத்துக்காட்டிற்காகத் தரப்பெறுகின்றன. 'ஆன்மாவின் குரல்' என்ற நூலில் சோலை முருகன் தந்துள்ள பாடல் இது:*

"திருக்குவளை மண்பிறந்த
தமிழகத்தின் தவப்புதல்வன்
திர(ா)விடத்தில் பெரியாரின்
நிழலாக வந்துதித்தோன்
அறிஞர்க்கு நல்லறிஞர்
அண்ணாவின் அடிச்சு வட்டில்
பிரியமுள்ள தமிழ் நிலத்தைப்
பேண வந்த பெருமகனார்" (ப. 35)

*இங்ஙனம் தென்னகத் தலைவர்களைப் பாடிய கவிஞர்கள் வடபுலப் பெருந்தலைவர்களையும் பாடத் தவறவில்லை. இப்பாடல் அதற்குச் சான்று கூறுகிறது.*

"புத்தரும் காந்தி; போற்றும்
புராணத்து மேலோர், ாபட்டுச்
சித்தரும் சீர்திருத்தச்
செம்மல்கள்; காலம் வாழ்த்தும்
புத்தகச் சான்றோர் பள்ளி
போகாத மேதை; மேன்மை
வித்தகம் கொண்டோ ரெல்லாம்
விளங்கிடும் திருநா டாகும்!" (ப. 74)

*இப்பாடலை இயற்றியவர் காசிதாசன்; நூல், புது வெள்ளம்.*

*புலவா மடியில் மட்டுமே தவழ்ந்து கொண்டிருந்த தமிழ்க் கவிதையை மக்கள் அரங்கிற்குக் கொண்டுவந்த மேலோர் பலர். அவர்களுள குறிப்பிடத்தக்க இருவர் பாரதியாரும், பாரதிதாசனும ஆவர். அப்பெருமக்கள் தமிழகத்திறகு மட்டுமல்லாமல் உலகத் தமிழ்க்கவிதைத் துறைக்கே முன்னோடிகள், வழிகாட்டிகள் ஆவர். மலேசியத் தமிழ்க் கவிதைத்துறை அவ்விருவர் அடியொற்றியே*

வளர்ந்துவருகிறது. மலேசியக் கவிஞர்கள் நன்றி உணர்வோடு அவர்களைத் தங்கள் பாடல்களில் பதிவு செய்துள்ளனர். பொன் நாவலன் தம் நூலில் (புதுமைக் கவிஞர் பொன். நாவலன் கவிதைகள்) தந்துள்ள பாவடிகள் இவை:

"பாட்டுப் பயிர்வளர்த்த பாரதியே வணங்குகிறேன்
ஏட்டில் அடங்காத எழுச்சிக் கவியுரைத்த
பாட்டன் பாவேந்தன் பாட்டுக்கு நீர்பாய்ச்சி
பாட்டுப் பரம்பரைக்குப் பல்லவியாய் வந்தவனே!" (ப. 106)

மலேசியத் தமிழ்ப்பாவலரிடையே பாரதியார் கவிதைகள் ஏற்படுத்திய தாக்கத்தை விடப் பாரதிதாசன் கவிதைகள் ஏற்படுத்திய தாக்கமே மிகுதி. பாரதிதாசனால் கவரப்பெற்று அவருடன் நெருங்கிப் பழகிய முருகு துரை (டாக்டர் மு. துரைசாமி) என்பவர் பாரதிதாசன் வரலாற்றை 612 பக்கங்களில் ஒரு பெருங் காப்பிய மாகப் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

"பாரினில் பழம்பெரும் பாரத நாட்டில்"

என்று தொடங்கும் அக்காப்பியம்,

"வாழியநாள் மட்டிலும் தாமும் தமிழும்"
ஒன்றென வாழியவே"

என்று முடிகிறது. இதேபோல், உலகின் பல நாட்டுத் தலைவர் களும் மலேசியத் தமிழ்க்கவிதைகளில் பாட்டுடைத் தலைவர் களாய் வலம் வருகின்றனர். சமுதாய, நாட்டு, உலகத் தலைவர்களை வாழ்த்தும் மலேசியத் தமிழ்க் கவிஞர்கள், பெருமக்கள் புகழுடம் பெய்தும்போது இரங்கல் பாடவும் தவறியதில்லை.

## இரங்கல்

மலேசியாவின் இரண்டாவது தலைமை அமைச்சராய் விளங்கிய (துன்) அப்துல் ரசாக் புகழுடம் பெய்தியபோது, உள்ளத்தை உருக்கும் வண்ணம் ஒரு கவிதையைப் பாடினார் தீ. சி. பொன்னு சாமி. பொங்கல் கொண்டாடத் தமிழர் இல்லங்கள் விழாக் கோலம் பூண்டிருந்த நேரத்தில் அத்தலைவர் வெளிநாட்டில் உயிர் நீத்த செய்திவந்தது. பொங்கல் ஏற்படுத்திய மகிழ்ச்சி துன்பமாகிக் கண் களில் நீர்பெருகச் செய்தது. இதோ அக்கண்ணீர் வரிகள்:

"கரும் பினைக் கடித்தேன் சாறோ
கண்களில் வழிந்த தம்மா!

நறுஞ்சுவைப் பொங்கற் பாலும்
நாவினில் கசந்த தம்மா!

.........................................

"ஓர்மையில் சீர்மை கண்ட
உத்தமன் ரசாக்கே உன்றன்
வேர்வையில் பனிமுத் துக்கள்
விளைந்தவை கோடி கோடி!
பார்வையில் தந்தை யாகிப்
படைப்பதில் தெய்வ மானாய்!" (ப. 546)

*பாடல் இடம்பெற்ற நூல்* ***'மலேசியத் தமிழ்க்கவிதைக் களஞ்சியம்'****. அதே நூலில் மலேசிய, சிங்கப்பூர்த் தமிழினத் தலைவராய் விளங்கி மறுமலர்ச்சிக்கு வித்திட்ட பெருந்தலைவர் (தமிழவேள்) கோ. சாரங்கபாணி புகழுடம் பெய்தியபோது ஒட்டு மொத்த சமுதாயமும் கண்ணீர் விட்டது. எல்லோன் பாட்டு இதற்குச் சான்று பகர்கிறது:*

"நிலைப்படத் தமிழர் வாழ்வில்
நெறிபடப் பட்டு ழன்றோன்
அலைபட அலைந்த காதை
ஆழியும் படுமோ என்றே
கலைபடச் சாய்ந்தால் நெஞ்சம்
கனல்படும் யார்பொ றுப்பார்?
தலைபடத் தலைப்பட்டோர் யார்?
தமிழ்மலை தமிழ வேளே! (ப. 558)

*இங்ஙனம் மலேசியாவில், அயல்நாடுகளில் தமிழ்ச் சான்றோர் மறைவெய்துங்கால் கவிஞர்கள் உருகி இரங்கல் பாடியதுபோல தொழிற்சங்கம் சார்ந்தும் அரசியலில் எதிர்க்கட்சி வரிசையில் நின்றும் தொழிலாளர் உரிமைக்கும், நாட்டு இனநலனுக்கும் குரல் கொடுத்த தலைவர்களுள் ஒருவரான (டாக்டர்) டேவிட் உலக வாழ்வு நீத்தபோது பாவலர்கள் இரங்கல் பாடத் தவறவில்லை. பொன். நாவலன் இப்படி இரங்குகிறார்:*

*மார்டின் லூதர் முதலாய உலகத் தலைவர்களுக்கும் மலேசியத் தமிழ்ப் பாமனங்கள் உருகியுள்ளன.*

"மறைந்த மண்ணில்
கலந்தாய் தொண்டில்
நிறைந்தாய் நெஞ்சில்
நிலைத்தாய் புகழில்"

## சிறுவர் பாடல்கள்

*வளர்ந்தவர் இலக்கியத்திற்கு முன்னோடியாய் விளங்குவது குழந்தை இலக்கியம். "குழந்தைகளுக்கும் சிறுவர்களுக்கும் எழுதுவது என்பது அரிய கலை. அது எல்லாராலும் முடியாது. பலர் அதைக் கிள்ளுக்கீரையாகவே நினைத்து அலட்சியப் படுத்துகின்றனர். அதனால் அண்மைக் காலம் வரை குழந்தை இலக்கியம் தமிழில் கவனிப்பாரற்ற நிலையிலேயே இருந்துவருகிறது." (மா. இராம லிங்கம், 1999: 283)*

தேசிக விநாயகத்தால் அடித்தள மிடப்பெற்று, அழ. வள்ளியப்பா, மயிலை சிவமுத்து, தணிகை உலகநாதன் போன்ற பெருமக்களால் வளர்க்கப்பெற்ற குழந்தை இலக்கியம், அழ. வள்ளி யப்பாவிற்குப்பின் தேக்க நிலையை அடைந்துள்ளது. பூவண்ணன், செல்லகணபதி, குழ. கதிரேசன் போன்றோர் நூல்கள் நிரம்ப வந்துள்ளன. எனினும், அது பெறவேண்டிய சிறப்பை இன்னும் பெறவில்லை. யார் கைக்கு அது சென்றடைய வேண்டுமோ அவர்கள் கைக்கு நிறைவாகச் சென்று சேரவில்லை; கால மாற்றத்திற்கேற்ற வடிவத்தை அஃது இன்னும் பெறவில்லை.

மலேசியத் தமிழ்க் கவிதையுலகில் குழந்தை / சிறுவர் பாடல் களுக்குத் தேவை உண்டெனினும், அதன் வளர்ச்சி, உரமற்ற நிலத்தில் நடப்பட்ட பயிர் போன்றே உள்ளது.

*"1980 - 89ஆம் ஆண்டுகள் சிறுவர் இலக்கியத்திற்குப் பேரெழுச்சியை ஏற்படுத்திய காலம். மலேசியக் கல்வியமைச்சு, தொடக்கப்பள்ளிகளுக்கான புதிய தமிழ்ப் பாடத்திட்டம் வகுத்து நடைமுறைப்படுத்தியபோது (1983) சிறுவர் இலக்கியத்திற்கான தேவை மிகுந்தது. இக்காலகட்டத்தில் பள்ளிப் பாடநூல்களில் சேர்க்கவும், நூலகத்திற்கான துணைப்பாட நூல்களுக்கும் நிரம்பப் பாடல்கள் தேவைப்பட்டன." (முரசு. நெடுமாறன், 2001: 49).* அவ்வாய்ப்பைப் பயன்படுத்தி நூல்கள் வெளிவந்தன. ஆனால் அது தொடராமல் போயிற்று. கடந்த பத்தாண்டுகளில் அத்துறை மிகவும் குன்றிய நிலையை அடைந்துள்ளது.

1997இல் வெளிவந்த **'மலேசியத் தமிழ்க்கவிதைக் களஞ்சியத்'**தில் 11 கவிஞர்களின் 60 பாடல்கள் இடம்பெற்றன; 2000ஆம் ஆண்டில் ஒரு நூலும், 2005ஆம் ஆண்டில் இரு நூல் களும் வெளிவந்தன. (இவை கட்டுரை ஆசிரியர் நூல்கள்). இத்துறை வளர்ச்சிக்குத் துணை நின்றோர் சோமசன்மா, சி. வேலுசுவாமி, பொன்முடி, ஆ. தம்பாய் முனியாண்டி, இக்கட்டுரை ஆசிரியர் போன்றோராவர். இத்துறைப் பாக்கள் சில ஈண்டு எடுத்துக்

*காட்டப் பெறுகின்றன. முதலில் வருவது 'அழகு' பற்றிய சோம சன்மாவின் பாடல் ஆகும்.*

"வண்ண மலரின் அழகு - தூய
வான வில்லின் அழகு
சின்ன மழலை அழகு - நீயும்
தினமும் பார்த்துப் பழகு" (ப. 653)

*அடுத்து அதேநூலில் இடம்பெற்றுள்ள சி. வேலுசுவாமியின் கவிதை தரப்பெறுகிறது. இது நாடு பற்றிய பாடல் ஆகும்.*

"இன்ப மலேசிய நம்நாடு
இதற்கிணை இலையென நீபாடு
துன்பம் தொலைந்தது எனஆடு
துயர்களை வோமென அன்போடு!" (ப. 656)

*மேற்படி நூலில் இடம்பெற்றுள்ள பொன்முடியின் பாடல், தமிழின் சிறப்புப் பற்றியது.*

அருமைச் செல்வம் தமிழ்ச்செல்வம்
அறிவாய் தம்பி அதுநமக்குப்
பெருமை நல்கும் புவியில்நம்
உரிமைப் பயிர்க்கு நீராகும்! (ப. 656)

*கனிமொழி குபபுசாமியின்* **'இனிய வாழ்க்கை'** *என்ற நூலில் 140 சிறு சிறு பாடல்கள் உள. இவை பெரும்பாலும் இளைஞர்க் குரிய கருத்துகள் கொண்ட பாடல்களாக உள. அவற்றிலிருந்து ஒரு பாடல் ஈண்டு தரப்பெறுகிறது:*

"இனிமையே வாழ்வின் நோக்கு
இனிமையை முகத்தில் தேக்கு
இனிமையைச் சொல்லில் காட்டு
இனிமையைச் செயலில் நாட்டு"

(இனிய வாழ்க்கை, ப. 5)

*தமிழில் மழலைப்பாக்கள் அரிதாகவே உள. "ஆறு வயதிற்கு உட்பட்ட குழந்தைகள் பாடக்கூடிய ஓசை நயமிக்க பாடல்கள் பெருகவேண்டும் (இலக்குமி மீனாட்சிசுந்தரம், 1987: 88) என்பார். மேலும் விடலைப் பருவத்தினருக்கேற்ற பாடல்களும் குறைவாகவே உள்ளன.*

"உயரத் துடிக்கிறாய் உரிய வழியெது?
உனக்குத் தெரியுமா தம்பி - கொஞ்சம்

உட்கார்ந்து முதலில் சிந்தி
உயர்வு தாழ்வுக்கோர் உண்மைக் காரணம்
உள்ளத்தில் இருக்குது தம்பி - அதை
ஒழுங்கு படுத்துநீ முந்தி!" (ப. 77)

*'கவிதைப் பூங்கொத்து' நூலில் சீனி நைனாமுகம்மது எழுதிய பாடல் இது. தமிழ்மொழிப் பாடத்திற்கும், நன்னெறிக் கல்வி முதலாய பாடங்களுக்கும் இதுபோன்ற உயிர்ப்பான கவிதைகள் தேவை. பாடநூல்களில் குறிப்பிட்ட நோக்கத்திற்காக இயற்றப் படும் பாடல்களும் உயிர்ப்பும், உணர்ச்சிச் செறிவு மிக்கதாகவும் அமைதல் வேண்டும். புத்துலகிற்கேற்ற வடிவமைப்போடு அவை வெளிப்படுதல் வேண்டும். இல்லையேல் மாணவர் உள்ளத்தில் நீக்கமற நிலைத்திருக்க வேண்டிய பாட்டுச் செல்வம் பசையற்ற தாகிப் பயனற்றுப்போகும்.*

## பொது

*பல்வேறு தலைப்புகளில் பாடுபொருள்களின் முகம் ஓரளவு தெரியும் வண்ணம் சில கவிதையடிகள் எடுத்துக்காட்டப் பெற்றன. இன்னும் எடுத்துரைக்கப்பெற வேண்டியவை நிரம்ப உள. எனினும் சுருக்கம் கருதிப் பொதுவாக மேலும் சில ஈண்டுக் காட்டப் பெறுகின்றன.*

*நாடு வளமான திக்கை நோக்கி விரைந்து நடைபோடுகிற தெனினும் - 2020ஆம் ஆண்டில் முழுவளர்ச்சி பெற்ற நாடாக இதனை ஆக்கும் தொலைநோக்குத் திட்டம் வெற்றி முகம் காட்டத் தொடங்கியுள்ளது. எனினும் வளத்திற்குத் தன்னை ஈகம்செய்த ஓரினம் உயர்ந்த வளமனையின் முதல் படியில்கூட இன்னும் கால் பதிக்கவில்லை என்று வருந்தும் குரலை ஈண்டும் எடுத்துக் காட்டவே வேண்டும்.*

*ஒரு பாமனம் இப்படி எண்ணுகிறது: பழைய துன்ப வரலாற்றை நினைவூட்டி, எதிர்கால நம்பிக்கையைத் தருகிறது, அது -*

"செம்மண்ணில் கலந்திருக்கும் நமது ரத்தம்
சிற்றாற்றில் கலந்திருக்கும் நமது வேர்வை
இம்மண்ணில் நம்முன்னோர் எலும்புக் கூடும்
இருக்கிறது புதையுண்டு காட்டில் மேட்டில்
'அம்மா'வென் றலறிதுயம் "அய்யோ" வென்றே
ஆர்த்ததுவும் இன்னும்தான் எதிரொ லிக்கும்

நம்மோடு வரலாறு முடிவ தில்லை
நாளை என்னும் நாள்மலரக் காத்திருப்போம்!"
(தீ. சி. பொன்னுசாமி, கோம்பாக் ஆறு, ப. 24)

தோட்டப்புறங்களில் நிறைய வருவாய் கிட்டாத நிலையிலும் ஓர் அமைதியான வாழ்வு முறை இருந்தது; ஒரு நெறிக்குட்பட்ட அமைப்பு இருந்தது; வாழ்வில் ஏதோ ஒரு நம்பிக்கை இருந்தது. தோட்டங்கள் அழிய அழிய அங்கு வாழ்ந்தோர் புறம்போக்கு நிலங்களில் குடிசைகளைப் போட்டுக் கொண்டு வாழ்வை ஓட்டும் ஒரு பாழ்நிலை ஏற்பட்டது. இன்று ஒரு பகுதியினரிடையே ஏற்பட்டுள்ள தாழ்வுகளுக்கெல்லாம் புறம்போக்கு நிலக் குடிசைப் பகுதி அமைப்பே அடிப்படைக் காரணங்களாகும்.

"புறம்போக்கு நிலத்தினிலே வீடுகட்டிப்
புண்பட்டு வாழுகிறான் தமிழ னிங்கு" (பூங்குயில், ப. 3)

என்னும் ச. வீ. கலைச்செல்வனின் குமுறல் மேற்படி செய்திகளை மட்டுமல்லாமல் அதற்கு மேலும் பல செய்திகளை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறது. அன்று தொட்டு இன்று வரை இனஒற்றுமை தமிழினத்திற்குச் சொந்தமானதாய் இல்லை. தாழ்வுகளுக்கெல்லாம் அதுவே காரணமாய் உள்ளது. இதற்காக வருந்தும் சி. மா. இளங்கோ,

"இனம்காக்கும் நெஞ்சத்தை எம்ம வர்க்கே
இறைவாநீ சொந்தமாய்த் தருவ தென்றோ?"
(மலேசியத் தமிழ்க் கவிதைகள், ப. 25)

என்று இறைவனிடமே வேண்டுகிறார்.

தாய்மொழியின் இன்றியமையாமையைப் பாவலர் பலரும் எடுத்துரைத்து வருகின்றனர். அதே வேளையில் தேசியமொழி (மலாய்), ஆங்கிலம் போன்ற மற்ற மொழிகளிலும் திறன்பெற வேண்டுமென்று நினைவூட்ட மறப்பதில்லை. க. லோகநாதன் பாவடிகள் இவை:

"தாய்மொழிக் கல்வி மட்டும்
தந்திட்டால் போதா தின்று
சேய்நலன் காக்க வேண்டின்
தேசிய மொழியும் வேண்டும்."
(கவியரங்கக் கவிதைகள், ப. 43)

கவிஞர்கள் காலப்போக்கிற்கிணங்கக் கருத்துகளை எடுத்து ரைக்கத் தயங்குவதில்லை. இது கணினிக் காலமாதலால் அது குறித்தும் பல பாக்களைப் பாடியுள்ளனர்.

"தாக்கத்தை வளர்க்கிறது கணினி! வாழும்
தமிழர்கால் வைப்பதற்கும் அதுதான் ஏணி!" (ப. 49)

என்று வழிகாட்டுகிறார் **'புயலில் மலர்ந்த பூக்களில்'** கரு. வேலுச்சாமி.

மலேசியத் தமிழ்ப்பாவலர்கள் உள்நாட்டுச் சிக்கல்களை அணுகுவதுடன் நின்றுவிடுவதில்லை. இனத்தின் - உலக தமிழின நலன் குறித்தும் உணர்வுடன் பாடுகின்றனர். உலகை உற்று நோக்கி உரிய கருத்தையும் வெளிப்படுத்துகின்றனர்.

தமிழர் புத்தாண்டு எது? சித்திரை முதல் நாளா? தை முதல் நாளா? "தை முதல் நாளே" என்று பேரறிஞர்கள் முடிவு செய்து நீண்டகாலம் ஓடிவிட்டது. ஆனால் அது இன்னும் நடைமுறைக்கு வந்தபாடில்லை. அண்மைக்காலமாக இதுபற்றிய கருத்து மோதல்கள் நிகழ்ந்துவரும் நிலையில் கடந்த ஆண்டு திசம்பர் திங்களில் (உலகத் தமிழினத் தலைவர்) தமிழக முதல்வர் கலைஞர் மு. கருணாநிதி தை முதல் நாளே தமிழ்ப் புத்தாண்டு என்று (அதிகார பூர்வமாக) அறிவித்தார். அதற்கு இங்கும் எத்தனையோ எதிர்மறையான கருத்துகள் வெளிப்பட்டுத் தமிழ் நெஞ்சரை வருத்தின. மறுப்புரைகளும் வெளிப்பட்டன. மலேசியப் பாவலர் தீ. சி. பொன்னுசாமி,

"உலகத் தமிழரின் உணர்வுத் திருநாள்
அறிவுத் திருநாள் ஆம் தைமுதல்
பொங்கல் மலர்ந்து புத்தாண் டாய் ஒளிரும்"

(கோம்பாக் ஆறு, ப. 61)

என்று உறுதியுடன் நின்று எடுத்துரைக்கிறார்.

மக்கள் எந்த நாட்டில் துன்புற்றாலும் மாந்த நேயம் உடையோர் இரங்கி உருகுவது இயல்பான ஒன்று. அதிலும் சொந்த இனம் துன்புறும்போது எப்பேர்ப்பட்ட தடையிருந்தாலும் அதனை மீறி இனஉணர்வோடு குரல் எழுப்ப உணர்வுடையோர் தயங்கார். பாகிஸ்தானின் முன்னாள் குடியரசுத் தலைவர் புட்டோவிற்குத் தூக்குத் தண்டனை விதித்தது அறமற்ற செயல் என்று பாடிய காரைக்கிழார், இலங்கை மண்ணில் நடக்கும் அறமற்ற செயலுக்கு வெந்துருகித் தம் குமுறலை வெளிப்படுத்துகிறார் இப்படி:

"புத்தன் உபதேசம் பண்ணிய பூமியில்
நித்தம் புதைகுழி! நிமிண்டினால் சடலங்கள்!
வாழ வழிவிடு எனக்கேட்ட பிள்ளைகள்
ஆழப் புதைகுழி அடங்கிக் கிடக்க
அதன்மேல் நின்று புத்தனின் மந்திரம்

எதன்மேல் நின்று மாப்பழி தீர்ப்பது?
காலக்களைக் காத்திடக் காலணி அணிந்தோம்;
காலணியே எங்கள் கால்களைக் கடிப்பதா?
(மலேசியத் தமிழ்க்கவிதைகள், ப. 50)

"பாதுகாக்க வேண்டிய பொறுப்பில் உள்ள அரசே,
படுகுழியில் போட்டு மூடுகிறதே"

என்று அங்குள்ள மக்கள் கதறுவதாக, அவ்வுணர்வைத் தன் மேல் ஏற்றிக் கவிஞர் குமுறுகிறார்.

மலேசியத் தமிழ்க் கவிதைகளின் பாடுபொருள்களில் ஈழம் குறித்த உணர்வலைகளின் பாய்ச்சலுக்கு நிறைவான இடம் உள்ளது என்பதனை ஈண்டுக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

உலகத் தலைவர்களில் ஓங்கிய புகழுக்குரியர்களுள் ஒருவராக, தென்னாப்பிரிக்க மக்களின் விடுதலைத் தந்தையாக விளங்கும் மண்டேலாவின் போராட்ட மனஉறுதி குறித்து மைதீ. சுல்தான் இங்ஙனம் வியந்து பாடுகிறார்.

"கால்நூறு ஆண்டுகளாயக் கடுஞ்சிறையில் கிடந்தாலும்
கலையாத உறுதியுடன் கணைவிடுக்கத் தொடங்கியவன்"
(அரங்கக் கவிதைகள், ப. 91)

என்று மாமறவனைப் பாராட்டுகிறார். இங்ஙனம் உலகப் பார்வை கொண்ட கவிதைகளையும் மலேசியக் கவிஞர்கள் பாடியுள்ளனர் என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

## நிறைவுரை

நாடு விடுதலை அடைந்தபின் கடந்த ஒவ்வொரு பத்தாண்டு களில் வெளிவந்த நூல்களின் பட்டியலை நோக்கும்போது (பட்டியல் காண்க) 1976 - 85, 1986 - 95 ஆகிய காலங்களில்தாம் மிகுதியான நூல்கள் வெளிவந்துள்ள செய்தியை அறியமுடிகிறது. 1976 - 85க்கு இடைப்பட்ட பத்தாண்டுகளில் 71 நூல்களும். அடுத்த பத்து ஆண்டுகளில் 76 நூல்களும் வெளிவந்துள்ளன. மேற்படி காலக் கவிதைகளின் பாடுபொருளும், உணர்வு நலனும், உணர்த்தும் பாங்கும் ஓங்கி நிற்கின்றன. அக்காலப் பாக்கள் மலேசியத் தமிழ்க் கவிதைகளின் பொற்காலத்தில் (1960 - 80) பாடப்பெற்றவையாகும்; முன்னணிக் கவிஞர் பலரின் நூல்கள் வெளிவந்த காலமும் அதுவாகும்.

1956 - 65ஆம் ஆண்டுகளில் உயிரோட்டமான கவிதைகள் நிரம்ப வெளிவந்த காலம். ஆனால் நூலாக்க முயற்சி அப்போது ஓங்கவில்லை. அக்காலகட்டத்தில் 17 நூல்கள் மட்டுமே வெளி வந்தன. 1960ஆம் ஆண்டிலிருந்துதான் புதிய தலைமுறையினரின் பாக்கள் நூல் வடிவம் காணத் தொடங்கின.

அடுத்த (1966 - 75) பத்தாண்டுகளில் 29 நூல்கள் வெளி வந்தன. பின்னைய ஆண்டுகளில் நூல் வெளியீட்டுத்துறை பெரு வளர்ச்சி கண்டு வந்தநிலையில், கடந்த பத்தாண்டுகளில் அம்முயற்சி தேக்கங் கண்டது; இக்காலப் பகுதியில் 36 நூல்கள் மட்டுமே வெளிப்போந்திருப்பது சற்று அதிர்ச்சி தருவதாகவே உள்ளது. பாடுபொருளாலும், பாவிக நிலையாலும் கடந்த இருபது ஆண்டு களின் நிலையைவிடச் சற்றுக் குறைவுபட்டே உள்ளன.

சரிவு நிலைக்குப் பல காரணங்கள் இருந்தாலும் "மரபு வேண்டா; யாப்புக் கட்டுப்பாடுகள் வேண்டா; அடிப்படை மொழி இலக்கணம் கூட வேண்டா; கட்டறுத்துக்கொண்டு நினைத்த படி யெல்லாம் எழுதலாம்" என்று துணிந்து எழுதுவோர் பெருகுவதும், அவ்வெழுத்துகளுக்கு ஊடகங்கள் தரும் வரவேற்பும் ஒரு முதன்மைக் காரணமாகக் கருதப்படுகிறது; வரம்புடன் வளர நினைப்போரையும் மேற்படி உணர்வுகள் தேக்கமுறச் செய் கின்றன. மிக மிக நீண்ட ஒரு பாரம்பரியத்தின் வழிவந்த இனக் குழுவைச் சேர்ந்தவருக்கு இருக்கவேண்டிய பொறுப்புணர்ச்சி பலருக்கு இருப்பதாகத் தெரியவில்லை; கற்று உணர்ந்து தங்களை ஆழப்படுத்திக்கொள்ள வேண்டுமென்ற விழைவு இருப்பதாகவும் தெரியவில்லை.

புதுமை வரவேற்கத்தக்கதே; புலவர் மடியிலிருந்து மக்கள் கைக்குக் கவிதையைக் கொண்டுவந்த பாரதியும், பாரதிதாசனும் செய்தது புதுமைதான். ஆனால், அவர்கள் ஒரு நெறியில், மரபில் நின்றே புதுமை செய்தனர் என்பதனை மறந்து விடுதல் கூடாது.

> "புதுமை எனில் இலக்கணத்துள் அமைதல் வேண்டும்
> புரியாமல் புதுமை எனில் புடலங் காயா?"

என்று கா. இளமணி (மலேசியத் தமிழ்க்கவிதை, ப. 38) கேட்பதில் ஆழ்ந்த பொருள் உண்டு. புதுமை வழி, புதிய நடைவழி படைப்பில் பொலிவு சேர்ப்போர் சொல்லுவனவற்றை ஆழப் புரிந்துகொள்ளாமையும் மேற்படி நிலைக்குப் பெருங்காரணமாகும். யாப்பு மரபை அறிய ஆர்வம் கொள்வோர் கூட எழுத்து, அசை, சீர் போன்ற சில உறுப்புகளை மட்டும் தெரிந்துகொண்டால் போதும், கவிதைக் கோட்டை கட்டிவிடலாம் என்ற முடிவுக்கு

வந்து, புறஅமைப்பு மட்டும் கொண்ட சொற்கோவைகளை அமைக்க முற்படுவதும் பாவளம் குறைந்ததற்கான காரணமாகும்.

(சுவாமி) இராமதாசர் முதலாய பெரும் புலவர் பலர் ஒரு காலத்தில் மலேசியத் தமிழ்க் கவிதைப் பயிர் செழிக்க உரமிட்டனர். அத்தலைமுறை புகழுடம்பெய்தியபின் வழிகாட்ட, திறன்களை மேம்படச்செய்ய, குறைகளைச் சுட்டிச் செம்மைப்படுத்தத் தக்கார் மிக மிக அருகிப் போனதும் சரிவுக்குக் காரணமாகும்.

“மலேசியத் தமிழ்க்கவிதை, சரிவுகளிலிருந்து மீண்டு செழிப்ப தற்கான வழி யாது” என இக்கட்டுரையாசிரியர் காரைக்கிழாரை வினவியபோது (13.9.2007), 1950களில் திடீரென ஏற்பட்ட ஓர் எழுச்சி போல மீண்டும் ஒரு நிலை ஏற்பட்டால் உயர்வுக்கு வழி பிறக்க லாம்” என்றார். இந்த அரைகுறை நம்பிக்கைக்குப் பின்னாலும் ஒரு நம்பிக்கைச் சுடர் தெரியவே செய்கிறது.

பாலையில் பயிர் விளைந்ததுபோல அளவிட்டுச் சொல்ல முடியாத நெருக்கடி நிலையில் (தமிழவேள்) கோ. சாரங்கபாணி தமிழர் திருநாள் மூலம் ஏற்படுத்திய உணர்வே சிங்கப்பூர், மலேசியத் தமிழரைப் பல துறைகளிலும் தலைநிமிரச் செய்தது. அத்துறை களிலும் ஒன்று கவிதை. அக்காலகட்டத்தில் தொடர்புத்துறை, ஊடகத்துறை மேம்படாத காலம். இன்றை உலகைத் தன் ஆளுகைக்குக் கீழ் வைத்திருக்கும் கணினியும் அன்றில்லை. அந்த நிலையில் வளர்ந்து மேம்பட்டதுதான் மலேசியத் தமிழ்க்கவிதை. அதனைத் தொடர்ந்து பேணி வளர்க்க வழியில்லாமலில்லை.

2000ஆம் ஆண்டில் இங்கு நடந்த மலேசியத் தமிழ்க்கவிதை மாநாட்டில் கட்டுரை படைத்தபோதும், 2004ஆம் ஆண்டில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்க ஏற்பாட்டில் (தமிழகத்தில்) ஆய்வுக் கட்டுரை படைத்தபோதும் பல பரிந்துரைகள் தந்தார் இக்கட்டுரை ஆசிரியர். அவற்றின் ஒன்று பின்வருமாறு:

“அயலகங்களில் தமிழிலக்கிய வளர்ச்சிக்கு முன்பு எப்போ தையும்விட இப்போது நல்ல வாய்ப்புகள் கனிந்துள்ளன. தமிழினத் தலைவரும், தமிழக முதல்வருமான டாக்டர் கலைஞர் உலகளாவிய நிலையில் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குப் பல திட்டங்களைத் தீட்டியுள்ளார்... தமிழ் இணையப் பல்கலைக்கழக உருவாக்கக் குழுத்தலைவர் வா. செ. குழந்தைசாமி, மொழி. இலக்கியத் துறை களில் அயலகத் தமிழர்க்குப் பயனுடைய திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்த விழைவு கொண்டுள்ளார். இணையம் வந்தபின்னர் எந்த மொழியும் அழியும் சூழல் இல்லை. ஆர்வமும் செயல்பாடு களும் தொடர்ந்தால் எந்த நிலையிலும் நம் மொழி, கலை,

*இலக்கியம், பண்பாடுகளைக் காத்துத் தலைநிமிர முடியும் (முரசு. நெடுமாறன், 2000: 32).*

*தமிழின் மூலத்தாயகம் நெடுந்தொலைவில் இல்லை. கணினி மூலம் உலகமே வீட்டின் அறைக்குள் வந்துவிட்டது. தமிழ்மரபு களை அறிந்துகொள்ள, புலமையை மேம்படுத்திக் கொள்ள எத்தனையோ வாய்ப்புகளை உருவாக்கிக் கொள்ள முடியும்.*

*மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் போன்ற அமைப்புகள் இளந்தலைமுறைக்கு வழிகாட்டலாம். தக்காரைக் கொண்டு பயிற்சி வகுப்புகள், பயிலரங்குகள், தொடர் வகுப்புகள் நடத்தப் புலமையை மேம்படுத்திக் கொள்ள வழிவகுக்கலாம். கலைஞரால் உருவான தமிழ் இணையப் பல்கலைக்கழகத்தின் மூலம் சிறப்பு ஒலி, ஒளி வழிப் பாடங்கள் உருவாக்கி அளிக்கலாம். பேராசிரியர் களை இங்கு வரவழைத்து நேரடியாகப் பாடங்கள் நடத்து விக்கலாம்.*

*இவற்றின் மூலம் மலேசியத் தமிழ்க்கவிதை உறுதியாக வளம்பெறச் செய்ய இயலும்; வளம் பெறுதல் வேண்டும்.*

# 1996ஆம் ஆண்டு முதல் 2006ஆம் ஆண்டு வரை மலேசியாவில் வெளிவந்த தமிழ்க்கவிதை நூல்கள்

| எண் | நூலாசிரியர் | நூல் | பதிப்பகம் | வகை | ஆண்டு |
|---|---|---|---|---|---|
| 1. | தீ. சி. பொன்னுசாமி | கோம்பாக் ஆறு | பொன்பாவலர் மன்றம் கோலாலம்பூர் | தன்னுணர்ச்சிப்பாக்கள் | 1996 |
| 2. | காசிதாசன் | புது வெள்ளம் | ஆசிரியர் (குறிப்பில்லை) | தன்னுணர்ச்சிப்பாக்கள் | 1996 |
| 3. | ச. வீ. கலைச்செல்வன் | பூங்குயில் | மலேசியத தமிழப்பாவலர் மன்றம், கோலாலம்பூர் | தனனுணர்ச்சிபபாக்கள் | 1996 |
| 4. | முரசு நெடுமாறன் | மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம் (தொகுப்பு) | அருள் மதியம் பதிப்பகம் கிள்ளான் | தன்னுணர்ச்சிப் பாக்களும், வரலாறும் | 1997 |
| 5. | க. லோகநாதன் | கவியரங்கக் கவிதைகள் | திருமுகம் பதிப்பகம், பேராக் | அரங்கேறிய பாக்கள் | 1997 |
| 6. | பொன். நாவலன் | புதுமைக் கவிஞர் பொன் நாவலன் கவிதைகள் | குறிப்பிலலை | தன்னுணர்ச்சிப்பாக்கள் | 1997 |
| 7. | வீ. பூபாலன் | பூச்சரங்கள் | குறிப்பில்லை | தன்னுணர்ச்சிப்பாக்கள் | 1997 |
| 8 | சி. மா. இளங்கோ | மருதி | | குறும்பாவியம் | 1998 |
| 9 | நாலவர் | நால்வர் கவிதைகள் (தொகுப்பு) | பினாங்குத் தமிழ் எழுத்தாளர் சங்கம், பினாங்கு | தன்னுணாச்சிபபாக்கள் | 1999 |
| 10. | இரா. சண்ட மாருதம் | ஏனிந்த பிடிவாதம் கவிக்கோவுக்கு | மலேசியத தமிழ்ப் பாவலா மன்றம், கோலாலமபூா | சிற்றிலக்கியம் (எண் செய்யுள்) | 1999 |
| 11 | இரா. சண்ட மாருதம் | கவிக்கோ (வசை) யந்தாதி | மலேசியத் தமிழ்ப் பாவலர் மன்றம, கோலாலம்பூர் | (அந்தாதி) சிறறிலககியம் | 1999 |
| 12. | பொன் நாவலன் | கரும்பும் கணணீரும் | கெங்கா பதிப்பகம், கோலாலம்பூா | தன்னுணர்ச்சிப்பாககள் | 1999 |
| 13. | மலேசியத் தமிழ்க கவிதை மாநாட்டுப் பொதுக்குழு | மலேசியத் தமிழ்க் கவிதை (தொகுபபு) | மலேசியத் தமிழககவிதை மாநாடு | தனனுணர்ச்சிப்பாக்களா | 2000 |
| 14. | கம்பார் கனிமொழி | இனிய வாழ்க்கை | திருமகள நிலையம சென்னை | சிறுவர் / இளையர் பாடல்கள் | 2000 |
| 15. | பெ. மு இளம்வழுதி | வெற்றித் திருமகள் முத்தம்மா | மணிமேகலை பிரசுரம், செனனை | குறும்பாவியம் | 2001 |
| 16. | பெ மு. இளமவழுதி | புதுமைப்பெண எழிலரசி | மணிமேகலை பிரசுரம, செனனை | குறும்பாவியம | 2001 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 17. | பெ. மு. இளமவழுதி | இளம்வழுதி கவிதைகள் பாகம் - 1 | தமிழச்செலவன் அறக்கட்டளை பத்தாங பெர்ஜுந்தாய் | தனனுணாச்சிபபாக்கள் | 2002 |
| 18. | பெ. மு. இளம்வழுதி | புதிய நூற்றாண்டு தமிழா | தமிழ்ச்செல்வன் அறக்கட்டளை | சிற்றிலக்கியம் (எண செய்யுள்) | 2002 |
| 19. | பெ. மு. இளமவழுதி | இளமவழுதி கவிதைகள் (பாகம் - 2) | தமிழ்ச்செல்வன அறக்கடடளை பததாங் பொஜுந்தாய் | தன்னுணாசசிப்பாக்கள் | 2002 |
| 20. | பெ. மு. இளம்வழுதி | மலேசிய மண்ணின வரலாறு | தமிழச்செல்வன் அறக்கட்டளை | வரலாற்றுக் குறும்பாவியம் | 2002 |
| 21. | மைதீ. சுல்தான் | அரங்கக் கவிதைகள் | மலேசிய இஸ்லாம் தமிழமாநாட்டுக குழு, கோலாலம்பூா | அரங்கேறிய பாக்கள் | 2002 |
| 22. | ப.மு. அன்வர் | செயகுசனான் | மலேசிய இஸ்லாம் தமிழ்மாநாட்டுக குழு, கோலாலம்பூர் | குறும்பாவியம் | 2002 |
| 23. | பெ மு. இளம்வழுதி | மலேசியாவில் தமிழாசிரியா | தமிழ்ச்செல்வன் அறக்கட்டளை, பத்தாங பெர்ஜுந்தாய் | வரலாற்றுக் குறும்பாவியம | 2004 |
| 24. | ஈப்போ முத்துப்பாண்டியன் | பாண்டி முத்துகள் | நாவலன் ஆட்டோ, ஈப்போ | தனனுணாச்சிப் பாக்கள் | 2004 |
| 25. | சீனிநைனா முகம்மது | கவிதைப் பூஙகொத்து (தொகுபபு) | உஙகள் குரல் வெளியீடு, பினாங்கு | தன்னுணர்ச்சிப் பாக்கள் | 2004 |
| 26. | இரா பாண்டியன் | இலடசியபபெண் | செந்தமிழ்க் காலநூன்றம், பினாங்கு | குறும்பாவியம் | 2004 |
| 27 | கி. காவேரிநாதன் | தினம ஒரு திருப்பாடல் | அருள்சோதி பணியாக்கம, ஸ்கூடாய் | சிறறிலக்கிய எண் செய்யுள் | 2005 |
| 28 | சோலை முருகன் | ஆன்மாவின் குரல | சோலை முருகன் வெளியிட்டது | இறைநுகர்ச்சிப் பாடல்கள் | 2005 |
| 29. | முரசு நெடுமாறன் | பாடிப்பழகுவோம் -1 | அருள்மதியம் பதிப்பகம் கிள்ளான் | சிறுவர் பாடல்கள் | 2005 |
| 30 | முரசு நெடுமாறன் | பாடிப்பழகுவோம் -2 | அருள்மதியம் பதிப்பகம கிள்ளான் | சிறுவர் பாடல்கள் | 2005 |
| 31. | கரு வேலுச்சாமி | புயலில மலர்ந்த பூககள் | மலர்ச்சிப் பதிப்பகம், சிரம்பான் | தன்னுணாச்சிப் பாக்களும பிறவும | 2006 |
| 32. | காரைக்கிழாா | சம்பந்தா அநதாதி | கவிதா பதிபபகம, கோலாலமபூா | சிறறிலககியம அந்தாதி | 2006 |
| 33 | பொன். நாவலன் | கருபபுச் சிறுததையின் கவிதைப் பாய்ச்சல | மீனா எண்டாபிரைஸ், கோலாலமபூர் | தனனுணாச்சிப் பாக்கள | 2006 |
| 34. | முருகுதுரை | அணையாவிளககு | கவிதா வெளியீடு, சென்னை | குறுமபாவியம் | 2006 |
| 35. | முருகுதுரை | அம்பேத்தர் காப்பியம் (2ம் பகுதி) | கவிதா பதிப்பகம், சென்னை | வரலாற்றுக் குறும்பாவியம் | 2006 |
| 36. | முருகுதுரை | பாவேநதா் காப்பியம | கவிதா | வரலாற்றுக் குறும்பாவியம் | 2006 |

## நூல் வகைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | பாவலர் பலரின் பாக்கள் அடங்கிய தொகுப்புகள் | - | 4 |
| 2. | பாவலர் ஒருவரின் பல பாக்கள் அடங்கிய தொகுப்புகள் | - | 14 |
| 3. | சிற்றிலக்கிய வகைகள் | - | 7 |
| 4. | பெருங்காவியங்கள் | - | 2 |
| 5. | குறும்பாவியங்கள் | - | 6 |
| 6. | சிறுவர் பாடல்கள் | - | 3 |
| | ஆகக்கூடி | - | 36 |

## துணைபுரிந்த நூல்கள்


1. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1991, ஆறாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டு ஆய்வுக் கட்டுரைகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், கோலாலம்பூர்.

2. முனைவர் மா. இராமலிங்கம், 1991, இருபதாம் நூற்றாண்டு தமிழ் இலக்கியம், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை.

3. முனைவர் இலக்குமி மீனாட்சிசுந்தரம், 1991, இலக்கிய அரும்புகள், ஜெயபக்தி, கோலாலம்பூர்.

4. முரசு. நெடுமாறன், மலேசியத் தமிழ்க்கவிதை களஞ்சியம், 1997, அருள்மதியம் பதிப்பகம், கிள்ளான்.

5. முரசு. நெடுமாறன், 2000, மலேசியத் தமிழ்க்கவிதை நேற்று இன்று நாளை, கவிதை எண்டர்பிரைஸ், கோலாலம்பூர்.

6. முரசு. நெடுமாறன், 2001, மலேசியத் தமிழ்க்கவிதை (முனைவர் பட்ட ஆய்வேடு), புதுவைப் பல்கலைக்கழகம், புதுச்சேரி.

## 1956ஆம் ஆண்டு முதல் 2006ஆம் ஆண்டு வரையில் வெளிவந்த, கவிதை நூல்களின் எண்ணிக்கையும் வகையும்

| எண் | வகைப்பாடு | 1956 - 1965 | 1966 - 1975 | 1976 - 1985 | 1986 - 1995 | 1996 - 2006 | ஆகக் கூடுதல் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | தன்னுணர்ச்சிப்பாக்கள் | 9 | 6 | 23 | 25 | 14 | |
| 2. | சிற்றிலக்கியங்கள் | | 12 | 21 | 11 | 6 | |
| 3. | சிறுபாவியங்கள் | | 1 | 3 | 2 | 10 | |
| 4. | சிறுவர் பாடல்கள் | 4 | 4 | 15 | 28 | 3 | |
| 5. | இசைப் பாடல்கள் | 4 | 4 | 6 | 3 | | |
| 6. | அறநூல் | | | | 1 | | |
| 7. | வில்லுப்பாட்டு | | | | 1 | | |
| 8. | கவிதை நாடகம் | | 1 | 2 | 1 | | |
| 9. | விடுகதை | | | | 1 | | |
| 10. | பலர் பாக்களைக் கொண்ட தொகுப்புகள் | | | 2 | 2 | 1 | |
| 11. | பாவரங்கப் பாத்தொகுப்புகள் | | 1 | 1 | 1 | 2 | |
| | ஆகக்கூடுதல் | 17 | 29 | 73 | 76 | 36 | |

**குறிப்பு** : 'மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சிய'த்திலும், 'மலேசியத் தமிழ்க்கவிதைகள் நேற்று இன்று நாளை' என்ற நூலிலும், இக்கட்டுரைக்காகவும், ஆசிரியர் அரிதின்முயன்று திரட்டித் தொகுத்தளித்த பட்டியல்களின் அடிப்படையிலான பகுப்பு இது. நூல்கள் சில விடுபட்டிருக்கலாம். விவரம் தெரிந்தோர் தெரிவித்தருளினால், நன்றியோடு அடுத்தடுத்த பதிப்புகளில் சேர்த்துக் கொள்ளப்பெறும்.

# மலேசியாவில் புதுக்கவிதை இலக்கியம்

## (திருமதி இராஜம் இராஜேந்திரன்)

**ம**லேசியத் தமிழ் இலக்கியம் ஒரு நூற்றாண்டையும் கடந்து இரண்டாம் நூற்றாண்டிலும் காலடி வைத்து, தடம்பதித்து பீடு நடை போட்டு வருகின்றது. மலேசிய தமிழ் இலக்கியத்தின் முதல் குழந்தை என்கிற வரலாறு கொண்டது கவிதை இலக்கியமே ஆகும். 19ஆம் நூற்றாண்டிலும் 21ஆம் நூற்றாண்டிலும் மலேசிய தமிழ் இலக்கிய உலகிற்கு கணிசமான பங்கினை கவிதை இலக்கியம் ஆற்றி வந்தது, வருகிறது என்பது வரலாறு கூறும் உண்மை.

இவ்வாறு சுமார் ஒரு நூற்றாண்டு கால வரலாறு கொண்ட மலேசியத் தமிழ்க் கவிதை இலக்கியத்திற்குப் பலத்த போட்டி யாகவும் சரியாசனம் போட்டு அமரும் வகையிலும் தகுதியை உயர்த்திக் கொண்டு அண்மைய காலத்தில் தோன்றிய ஓர் இலக்கிய அரும்புதான் புதுக்கவிதை. 60களில் விதைத்த புதுக்கவிதைப் பயிர், பின்னர் 70களின் பிற்பகுதியில் செழித்து வளரத் தொடங்கிய நேரத்தில், மரபுக் கவிதையாளர்களுக்கும் புதுக்கவிதையாளர் களுக்கும் கடுமையான சர்ச்சைகளும், விவாதங்களும் நடந்தேறி யதைக் காணமுடிகிறது. இவ்வாறு ஏற்பட்ட இலக்கிய சர்ச்சை களும், எதிர்ப்புகளும் புதுக்கவிதை வளர்ச்சிக்கு உரமாகவும் உந்து சக்தியாகவும் அமைந்தது எனலாம்.

புதைக்க நினைத்த புதுக்கவிதை விதைக்கப்பட்டு முட்டி மோதி, முளைத்து, இன்று விருட்சமாக வளர்ந்துள்ளது. மலேசியத் தமிழ் இலக்கியத்தில் தனக்கென ஓர் இடத்தைப் புதுக்கவிதை பதிவு செய்துள்ளது. மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதை இலக்கியத்தின் இன்றைய வயது 43 ஆகும்.

இவ்வாறு 43 ஆண்டு கால வரலாறு வாய்ந்த மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதையில் கடந்த 10 ஆண்டுகளில் (1996 — 2006) நிகழ்ந்துள்ள வளர்ச்சிகளும் அதன் போக்குகளும் குறித்து விளக்கு வதாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

புதுக்கவிதை தொடர்பான ஆய்வை நிகழ்த்தும்போது. அதன் தோற்றம், வரலாறு, வளர்ச்சி ஆகியவற்றை சொல்வது முறை. எனவே, மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதை வரலாற்றையும், வளர்ச்சிக்கான அதன் தொடக்கக் கால முயற்சிகளையும் மிகச் சுருக்கமாகவும் மேலோட்டமாகவும் எடுத்துரைப்பது மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைபற்றி அறிந்துகொள்ள விரும்புபவர்களுக்கு உறுதுணையாக அமையும் என்று நம்பலாம்.

## மலேசியாவில் புதுக்கவிதைத் தோற்றம்

மலேசியாவில் புதுக்கவிதை தோன்றுவதற்குப் பல காரணங்கள் பின்புலமாக அமைந்துள்ளன. அவை இங்கே விளக்கப்படுகின்றன.

### 1.1. தமிழ்நாட்டு இலக்கியத் தாக்கம்

பெரும்பாலும் மலேசியத் தமிழ் இலக்கியம் தமிழ்நாட்டு இலக்கியப் போக்கினை அடிப்படையாகக் கொண்டு, உள்நாட்டுப் போக்கிற்கேற்ப வடிவு கொண்டு வளரும் ஒரு வடிவமாகும். எனவே, தமிழ்நாட்டில் அறுபதுகளில் புதுக்கவிதை சுறுசுறுப்புடன் வளர ஆரம்பித்தபோது, அந்தத் தாக்கம் நம் நாட்டிலும் ஏற்பட்டது. தமிழ்நாட்டில் புதுக்கவிதை 30களில் தோன்றி, 15 ஆண்டுகள் நிலவி, அதன்பின் சுமார் 15 ஆண்டுகள் தொய்வு கண்டு, 60களுக்குப் பின்தான் தொடர்ந்து வளர ஆரம்பித்தது. தமிழகத்தில் 'எழுத்து' காலப் புதுக்கவிதையாளர்களான சி.சு. செல்லப்பா, சி. மணி, பசுவையா, தருமு சிவராம், தி. சோ. வேணுகோபாலன், வைத்தீஸ்வரன், ஞானக்கூத்தன் போன்றவர்களின் புதுக்கவிதைகள் நம் நாட்டுக் கவிஞர்களுக்கு புதுக்கவிதையின் மேல் ஆர்வம் மேலோங்கக் காரணமாக அமைந்தன. எனினும் புதுக்கவிதையின் மேல் நாட்டம் இருந்தாலும் அவற்றைப் படிப்பதோடு நிறுத்திக் கொண்டவர்கள் சிலர். படிக்காமல் முகம் சுளித்தவர்கள் பலர். ஒரு நீண்ட பாரம்பரிய இலக்கண மரபுடைய தமிழுக்கு, குறிப்பாகக் கவிதைக்கு, இப்படியொரு வடிவத்தை மரபுக் கவிஞர்கள் ஏற்கத் தயாராக இல்லை. மரபை மீறும் துணிச்சலும் மலேசியக் கவிஞர் களுக்கு இல்லை. ஆனாலும் எல்லாவித எதிர்ப்புகளையும் உடைத்

தெறிந்துவிட்டு துணிச்சலாகப் புதுக்கவிதை எழுதி, மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதை இயக்கத்திற்குப் பிள்ளையார் சுழி போட்ட பெருமைக்குரியவர் சி. கமலநாதன் அவர்கள். 1964இல் இவர் எழுதிய 'கள்ளபார்ட்டுகள்' எனும் புதுக்கவிதையே மலேசியாவில் முதல் புதுக்கவிதை என போற்றப்படுகிறது. அக்கவிதையின் சில வரிகள்:

"மதியின்றிப் பிதற்றுவதும் - இங்கு
உள்ளவரை தின்று, ஊதிப் பெருப்ப தல்லால்
உருப்படியாய் செய்வதென்ன?"

## 1.2. பிறமொழி இலக்கியத் தாக்கம்

இந்தோனேசிய (மலாய்) இலக்கியத்தில் புதுக்கவிதை 1920 களிலேயே தோன்றிவிட்டது. 'அங்காத்தான் 45' (ANGKATAN 45) மிகுந்த பிரசித்தி பெற்ற இலக்கிய இயக்கமானது. இவ்வியக்கம் புதுக்கவிதை (PUISI MODEN) துறைக்குத் தனித்துவமும் உத்வேகமும் அளித்தது. அதே காலகட்டத்தில் சிங்கை, மலாயா, மலாய் இயக்கத்திலும் புதுக்கவிதை தோன்றி, மிகுந்த வரவேற்பைப் பெறத் தொடங்கி இருந்தது. மரபுக் கவிதை மேற்கத்திய பாதிப்பற்றது, புதுக்கவிதை மேற்கத்திய பாதிப்புடையது என்ற தெளிந்த இலக்கியச் சிந்தனையோடு, மலாய் இலக்கியவாதிகளும் மலாய் எழுத்தாளர் களும் புதுக்கவிதையை மலாய் இலக்கியத்தின் புது வரவாக ஏற்றுக் கொண்டனர்.

1960களில் மலாய் இலக்கியத்தின் புதுக்கிவதைத் துறை மிகுந்த வளர்ச்சியை நோக்கி பீடுநடை பயின்றது. மலாய் இலக்கியப் புதுக்கவிதைத் துறையில் ஏற்பட்ட முயற்சிகளும் வளர்ச்சிகளும் கூட தமிழில் புதுக்கவிதை படைக்கும் பாதிப்பை சி. கமலநாதன் அவர்களுக்கு ஏற்படுத்தி இருக்கலாம். மலாய் புதுக்கவிதைகள் மலாய் சமூகத்தினரிடையே ஏற்படுத்திய விழிப்புணர்வு சமுதாயப் பற்றுள்ள கவிஞர் சி. கமலநாதன் அவர்களைத் தன் இனத்திற்கு ஏற்ற புதுக்கவிதைகளைப் புனைய உந்துசக்தியாக அமைந்தது எனலாம்.

## 1.3. சமுதாய அரசியல் பின்னணி

நாடு சுதந்திரம் அடைந்துவிட்டது. சுதந்திரத்தின் துணையோடு வளமான வாழ்க்கையை ஆர்வத்துடனும் ஆவலுடனும் எதிர்

பார்த்துக் காத்திருக்கும் வேளையில், ஏக்கமும் ஏமாற்றமுமே எஞ்சி நின்றன. உண்மைக்கும், உழைப்புக்கும், நேர்மைக்கும் இங்கு நியாயமான ஊதியமும் உரிமைகளும் வழங்க மறுக்கப்பட்டன. வாழும் சுதந்திரம் வந்துவிட்டது என்று தலை நிமிர முயலும் நடுத்தர வர்க்கம், குறுக்குவழியில் செல்பவர்களுக்கும் சிறப்பு உரிமையையும் சலுகையையும் பெற்று சுகமாக வாழும் குறிப்பிட்ட சமூகத்தினருக்கும் வாழ்க்கை வசமாகிக் கொண்டிருப்பதைக் கண்டு உள்ளம் குமுறியது.

நடுத்தர வர்க்கத்தின் அவலத்தையும் அவர்களின் வளர்ச்சிக்குத் தடையாக உள்ள கட்டுப்பாடுகளையும் வரைமுறைகளையும் களைய வேண்டுமென்கின்ற முனைப்புடன் கூடிய தார்மீகக் கோபத்தின் விளைவாக வடிவங்களின், மரபுகளின் மீறல்களாகப் புதுக்கவிதை கருவியாகப் புறப்பட்டிருக்கிறது. 1964இல் சி. கமலநாதனின் 'கள்ளபார்ட்டுகள்' என்னும் புதுக்கவிதை இதற்குச் சான்றாக அமைகின்றது.

தன்னைச் சார்ந்த வர்க்கத்தினர் அனுபவிக்கும் இடர்ப்பாடுகள், அல்லல்கள், விரக்தி, மனமுறிவு போன்றவற்றை உள்வாங்கி, உணர்விலேற்றி, கவிதையாக வடித்துள்ளார் இவர். இவரது கவிதைகளில் பொருளியல் அவலம், போலி பக்தி, பொதுத் தொண்டில் பொய்மை, அரசியல் பொய்மை, அரசியல் கயமை, மக்களின் அறியாமை, கலையில் கசடு போன்றவை பாடுபொருள்களாக அமைந்துள்ளதைக் காண முடிகின்றது.

## 1.4. பத்திரிகைகளின் பங்கு

மலேசிய இலக்கியத்துறைகளான கவிதை, சிறுகதை, புதினம் ஆகிய துறைகளை ஆதரித்து வளர்த்த பெருமை தமிழ்ப் பத்திரிகைகளுக்கு உண்டு. மலேசியாவில் தமிழில் முதல் புதுக்கவிதை தோன்றிய ஆண்டிலிருந்து கணக்கிட்டால், மலேசியாவின் தமிழ்ப் புதுக்கவிதை 1964இல் தமிழ்முரசு பத்திரிகையில் வெளியானது தெரியவருகிறது. புதுக்கவிதைத் துறையைத் தொடக்கி வைத்த பெருமை தமிழ்முரசு பத்திரிகையையே சாரும். எனினும் இப்புதுக் கவிதைத்துறை 1970களின் பிற்பகுதியில்தான் மறுபடியும் துளிர் விட்டு உண்மையான வளர்ச்சியின் வாசலை வந்தடைந்தது.

தமிழகத்தில் எழுத்து, கணையாழி, சூறாவளி, கலைமகள், கலாமோகினி, கிராம ஊழியன், கசடதபற, ஞானரதம், நீலக்குயில், பிரக்ஞை, தீபம் போன்ற ஏடுகள் புதுக்கவிதைக்குத் தளம் அமைத்துக் கொடுத்தன. அதுபோல நம் நாட்டில் தமிழ்முரசு,

தமிழ்மலர், வானம்பாடி, உதயம் போன்ற ஏடுகள் புதுக்கவிதைக்குத் தளம் அமைத்துக் கொடுத்து, புதுக்கவிதை இலக்கியப் பயிர் செழித்து வளர வழிவகுத்தன.

## 1.5. புதுமை காண விழையும் போக்கு

பொதுவாக, வாழ்க்கையில் மாற்றமும், புதுமையும் ஏற்படும் போது எல்லா நிலைகளிலுமே புதுமை காண விழைவது இயல்பு. மிதமிஞ்சிய கட்டுப்பாடுகளும் வரையறைகளும் நம்மை அதிக மாகவே கட்டிப்போட்டு வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் தடையாக இருக்கின்றன என்னும் உணர்வு ஏற்படும்போது, கட்டுப் பாட்டையும் மீறும் வேகம் உண்டாவது இயல்பே. இக்கூற்றை ஆதரித்து இரா. தண்டாயுதம்

> "இலக்கண வேலி
> சிலர் கையில் சிறையாய்
> உருவெடுத்து வந்தவுடன்
> பிறந்திட்ட புதுக்குரல்
> புதுக்கவிதை"

என்கிறார்.

எனவே, மலேசியாவில் புதுக்கவிதை தோன்றியது ஓர் இயல்பான வளர்ச்சி நிலையே என்று கூறலாம்.

## 2. மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதை வளர்ச்சி – படிநிலைகள்

i. தொடக்க காலம் (வானம்பாடிக்கு முந்திய காலம் 1964 - 1976)
ii. வானம்பாடி காலம் (1977 - 1987)
iii. வானம்பாடிக்குப் பிந்திய காலம் (1988 - 1998)
iv. மறுமலர்ச்சி காலம் (1999 முதல் இன்று வரை)

## 2.1. தொடக்க காலம் (வானம்பாடிக்கு முந்திய காலம்)

மலேசிய இலக்கிய துறைகளான கவிதை, சிறுகதை, நாவல் போன்ற துறைகளின் வளர்ச்சிக்குத் தமிழ்ப் பத்திரிகைகள் பெரும் பங்காற்றியுள்ளன. அதேபோன்று புதிதாக அரும்பிய மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதையையும் அரவணைத்த பெருமை பத்திரிகை

களுக்கு உண்டு. 1935இல் தொடங்கப்பட்ட தமிழ்முரசு, 1964இல் தொடங்கப்பட்ட தமிழ் மலர் இதற்கு முன்னோடிகளாக இருந் துள்ளன. தமிழகத்தைப் போன்றே இந்நாட்டிலும் ஆரம்பக் கால கட்டத்தில், குறிப்பாக 60களில் வரவேற்பில்லாத நிலையில் மரபை மீறும் இலக்கிய வகை என்பதால் எதிர்ப்பு அதிகமாக இருந்ததை அறியமுடிகிறது. வளர்ச்சி வளம் பெறமுடியாத சூழ்நிலையில் இத்தகைய எதிர்ப்புகளுக்கிடையிலும் துணிவாகப் புதுக்கவிதை எழுதத் தொடங்கிய பெருமை சி. கமலநாதன் அவர்களையே சாரும்.

1960களின் பிற்பகுதியே மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதை களின் தொடக்க காலகட்டமாகக் கருதப்படுகிறது. அன்றைய பத்திரிகைகளில் அங்கும் இங்கும் உதிரிப்பூக்களாகச் சில புதுக் கவிதைகள் வெளிவந்துள்ளன. 21.05.1964ஆம் நாள் தமிழ் முரசில் சி. கமலநாதனின் கள்ளப்பார்ட்டுகள் என்னும் தலைப்பில் வெளி வந்த புதுக்கவிதையே மலேசியாவின் முதல் புதுக்கவிதையாகக் கொள்ளப்படுகிறது.

1975ஆம் ஆண்டு ஜூன் மாத தமிழ் மலர் நாளிதழில் மலேசியத் தமிழ்க் கவிதை தொடர்பான தொடர்கட்டுரையில் சி. கமலநாதன் அவர்கள் 50க்கும் மேற்பட்ட புதுக்கவிதைகளை எழுதியுள்ளதாக கவிஞர் டி. வி. ராகவன்பிள்ளை குறிப்பிடுகிறார். எனவே, மலேசியப் புதுக்கவிதை முன்னோடி என்று இவரைக் குறிப்பிடலாம். இவரோடு இணைந்து பைரோஜி நாராயணன், எம். துரைராஜ், இராஜகுமாரன், ஆதி. குமணன், அக்கினி, எம். ஏ. இளஞ்செல்வன் போன்றோர் புதுக்கவிதை படைத்த குறிப்பிடத் தக்க சிலராவர். எனவே, மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதையின் முதல் காலகட்டத்தை வானம்பாடிக்கு முந்திய காலம் எனலாம். இக்காலகட்டத்தில் படைப்பும், படைப்பாளிகளும், படைப்புக் குரிய காலமும் சிலவாகவே சிதறிக்கிடந்தன. எனவே, உதிரிக் கவிதைகளான இப்புதுக்கவிதைகள் நூல் வடிவம் பெறும் வாய்ப்பை இழந்துள்ளன எனலாம்.

மேலும், புதுக்கவிதை மரபு மீறிய கவிதையாக வர்ணிக்கப் பட்டு, இலக்கியத்திற்கு ஒவ்வாத வகையாகக் கருதி புறக்கணிக்கப் பட்டது. புதுக்கவிதைகளுக்கு எதிர்ப்பு அலைகள் வீசத் தொடங்கிய காலகட்டம் அது. இதனூடே புதுக்கவிதைக்கு எதிராக நேரும் எதிர்ப்பை எதிர்கொள்ளும் எதிர்வினைகளும் புதுக்கவிதை உருவிலேயே மேற்கொள்ளப்பட்டன.

"இவை
புதுப்பூக்கள்

காலம் இவற்றை
அடையாளங் காணும்
எதுகைகளும் மோனைகளும்
ஒதுங்கியிருந்தால் போதும்"

என்கிற மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதையின் காவலர் என்று போற்றப்படும் எம்.ஏ. இளஞ்செல்வனின் புதுக்கவிதை மரபுக் காரர்களுக்குக் கொடுக்கப்பட்ட எச்சரிக்கையாக அமைந்தது.

## 2.2. வானம்பாடி காலம் (1977 - 1987)

மலேசியத் தமிழ்ப் பத்திரிகை உலகின் புதிய வரவாக 1977ஆம் ஆண்டு வானம்பாடி வார இதழ் ஆதி. குமணனை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது. வானம்பாடியில் புதுக் கவிதை சகாப்தம் உருவாகக் காரணமாகவும் வழிகாட்டி யாகவும் இராஜகுமாரன் அவர்களும் அக்கினி என்கிற சுகுமார் அவர் களும் விளங்கியிருக்கின்றனர். இதன்பிறகே இந்நாட்டு இளைஞர் களின் இலக்கிய ஊற்றாகப் புதுக்கவிதை பரிணாமம் பெற்றது.

மலேசியப் புதுக்கவிதையின் திருப்புமுனை காலகட்டம் என்று இக்காலகட்டத்தைக் கூறலாம். புதுக்கவிதையின் எண்ணிக் கையும் படைப்பாளர்களின் எண்ணிக்கையும் கணிசமாக உயர ஆரம்பித்தது. இக்காலகட்டத்தில் குறிப்பிடத்தக்க வளர்ச்சியாக புதுக்கவிதை நூல்களும் வெளிவந்தன. அதுவரை எதிர்ப்பு காட்டி வந்த மற்ற பத்திரிகைகளும் புதுக்கவிதையை அங்கீகரிக்கத் தொடங்கின. வானம்பாடி தோன்றி சுமார் 10 ஆண்டுகள் வானம் பாடி காலம் என வரையறுக்கலாம்.

மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதையின் முதல் நூலான 'நெருப்புப் பூக்கள்' மே, 1979இல் வெளிவந்தது. இந்நூல் உருவாக் கத்தைத் தொடர்ந்து மொத்தம் 6 புதுக்கவிதை நூல்கள் வெளி வந்துள்ளன. (காண்க இணைப்பு 1)

1981ஆம் ஆண்டு மே மாதம் தமிழ்ஓசை தொடங்கப்பட்டு அதன் ஞாயிறு பதிப்பின் ஆசிரியராக இராஜகுமாரன் பொறுப் பேற்று இருந்த காலத்தில் வானம்பாடியில் வழங்கப்பட்டது போலவே தமிழ்ஓசையிலும் புதுக்கவிதைக்கு முன்னுரிமை வழங்கப் பட்டது.

இக்காலகட்டத்தில் மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைத் துறையில் புதுவேகமும் எழுச்சியும் ஏற்பட்டது மறுக்கமுடியாத உண்மையாகும். சமூக அவலங்களை, குறைகளை மிகக் கூர்மையான

பார்வையோடு நோக்கும் பாங்கும், அதனைத் தார்மீகக் கோபத்துடனும், எள்ளல் தன்மையுடனும், கண்டிக்கும் போக்கும் புதுக் கவிதையின் தரத்தைத் தூக்கி நிறுத்தியுள்ளன. மேலும் புதுக் கவிஞர்கள் எழுதிய புதுக்கவிதைகள் தெளிவான உள்ளடக்கத்தாலும் புதுவகை உத்திமுறைகளாலும் சிறந்து விளங்குவதைக் காணமுடிகின்றது. சமுதாயச் சிக்கல்களை உணர்ச்சி வேகத்துடன் உணர்த்தும் முறையாலும் தெளிவான மனஉறுதியும் தன்னம்பிக்கையும் கொண்டு கவிதை வடிக்கும் பாங்கினாலும் இக்கால புதுக்கவிதைகள் மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதை உலகின் விடிவெள்ளிகளாகப் போற்றப்படுகின்றன.

வானம்பாடி காலத்தில் நவீன இலக்கியச் சிந்தனை நடத்திய முதலாவது புதுக்கவிதைக் கருத்தரங்கு (1979) டத்தோ ஸ்ரீ சா. சாமிவேலு அவர்களின் பொன்விழாவையொட்டிய புதுக்கவிதைப் பரிசுப் போட்டி, மலாயாப் பல்கலைக்கழக தமிழ்ப்பேரவையின் 'புதுக்கவிதை அரங்கம்' (1987), ஆறாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டில் புதுக்கவிதை அரங்கம் (1987) ஆகிய முயற்சிகள் புதுக்கவிதை வளர்ச்சிக்கு வளமூட்டின.

## 2.3. வானம்பாடிக்குப் பிந்திய காலம் (1988 - 1998)

மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதையின் இந்தக் காலகட்டத்தை (1988 - 1998) வானம்பாடிக்குப் பிந்திய காலகட்டமாகக் கருதலாம்.

இக்காலகட்டத்தில் அனைத்து தின, வார, மாத இதழ்களும் புதுக்கவிதைக்குத் தளமாக அமைந்திருந்த காரணத்தினால் புற்றீசல் போல் புதுக்கவிதைகளும் புதுக்கவிஞர்களும் படையெடுத்திருந் தாலும் வானம்பாடி காலத்தின் வேகம், எழுச்சி, உத்வேகம் இக்காலகட்டத்தில் இல்லை என்றே கூறவேண்டும். வானம்பாடி காலத்தில் சிறந்த புதுக்கவிதைகளைப் படைத்த பலர் இக்கால கட்டத்தில் புதுக்கவிதைத் துறையில் இருந்து விலகி ஓய்வு பெற்று விட்டதைப் படைப்புக்களின் மூலம் அறிய முடிகிறது.

இக்காலப் பகுதியில் 29 புதுக்கவிதை நூல்கள் வெளி வந்துள்ளன. (காண்க இணைப்பு 2). உலகப் பார்வை உட்பட அனைத்துப் பாடுபொருள்களும் புதுமைப் போக்கில் சிறந்த உத்தி முறைகளுடன் படைக்கப்பட்டுள்ளன.

பத்திரிகைகளின் ஆதரவு, தனிநபர் முயற்சிகள் நீங்கலாகப் பார்த்தாலும், தமிழ்க் கவிதைக் கருத்தரங்கில் படைக்கப்பட்ட 'மலேசியாவில் புதுக்கவிதை' எனும் ஆய்வு (1988), நவீன இலக்கியச் சிந்தனை இயக்கத்தின் ஏற்பாட்டில் நடைபெற்ற இரண்டாவது

புதுக்கவிதைக் கருத்தரங்கம் (1988), மூன்றாவது புதுக்கவிதைக் கருத்தரங்கம் (1995), 'புது நோக்கில் புதுக்கவிதைகள்' எனும் கருப் பொருளில் புதுக்கவிதைக் கருத்தரங்கு (1996) போன்ற இலக்கிய முயற்சிகள் மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதை வளர்ச்சிக்குப் பயன் தரும் பங்களிப்பை ஆற்றியுள்ளன.

வானம்பாடிக்குப் பிந்திய காலகட்டத்தில் வெளிவந்த புதுக் கவிதையின் எண்ணிக்கை உயர்ந்த அளவிற்கு அதன் தரம் உயர்ந்து காணப்படாதது மூத்த புதுக்கவிதையாளர்களுக்குப் பெரும் ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் தந்தன. இக்காலப் பகுதியில் பல ஆய்வுகள், கவிதைக் கருத்தரங்குகள், புதுக்கவிதை நூல் வெளியீடுகள் போன்றவை மேற்கொள்ளப்பட்டிருந்தும், மலேசியாவில் வெளி யாகும் எல்லா நாள், வார, மாத இதழ்களும் புதுக்கவிதைப் பயிருக்கு நாற்றாங்கால்களாக விளங்கியபோதும் புதுக்கவிதைத் துறை வளர்பிறையாய் வளர்வதைவிட்டு தேய்பிறையாகத் தேய்வது வியப்புக்குரியது, வேதனைக்குரியது என்ற எண்ணம் உருவாகி விட்டிருந்தது. வானம்பாடி காலத்தின் வேகம், எழுச்சி இக்கால கட்டத்தில் இல்லை எனவும் மூத்த புதுக்கவிஞர்கள் இத்துறையில் ஓய்வுபெற்றுக்கொண்டு, படைப்புக்குத் தரம் வேண்டும் என்பதற்காக வழிகாட்டல் தன்மையை உருவாக்கக் கருதியதாலோ என்னவோ படைப்பில் ஒரு தேக்க நிலை புதுக்கவிதைத் துறைக்கு ஏற்பட் டுள்ளதாக ஆய்வாளர் சா. அன்பழகன் ஆதங்கப்படுகிறார்.

> "பூப்பெய்தாததற்கு முன்னே பிள்ளை
> பெற்றுக் கொள்ளத் துடிப்பவர்கள்"

என எம். ஏ. இளஞ்செல்வனின் சாடலும் புரியாத கிறுக்கல் களும் காப்பியடிப்புகளும் களையப்படுதல் வேண்டும் எனும் பைரோஜி நாராயணனின் எதிர்பார்ப்பும் இக்காலப் பகுதியில் வெளிவந்த புதுக்கவிதைகளின் போக்கினை விமர்சனப் பாணியில் கூறுவதாக அமைந்துள்ளது. புதுக்கவிதை வளர்ச்சியிலும் முதிர்ச்சி யிலும் முத்திரை பதித்துள்ளதா என்று பார்த்தால் அதில் சிறிது ஏமாற்றமே மிஞ்சுகிறது. 90களின் பிற்பகுதியில் புதுக்கவிதை தேக்க நிலையை அடைந்துள்ளது எனலாம்.

## 2.4. மறுமலர்ச்சி காலம் (1999 - இன்று வரை)

புதுக்கவிதையின் தொய்வு புதுக்கவிதை ஆர்வலர்களிடையே தார்மீக பயத்தையும் பாதிப்பையும் ஏற்படுத்தியது. புதுக்கவிதையை மீண்டும் தூக்கிப் பிடித்து, நிமிர்த்தி நிற்கவைக்க அதிரடி நடவடிக்

கைகள் தேவைப்பட்டன. அக்காலகட்டத்தில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஏற்பாட்டில் சங்கத்தின் செயலாளராகவும் பின்னர் தலைவராகவும் பொறுப்பேற்ற பெ. இராஜேந்திரன் அவர்கள் தலைமையில் புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு ஏற்பாட்டுக் குழு அமைக்கப் பெற்று புதுக்கவிதைக்கு புதிய ரத்தம் பாய்ச்சப்பட்டது.

முதல் புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு 1999இல் மலாயா பல்கலைக்கழக வளாகத்தில் தொடக்க விழா கண்டது. புதுக்கவிதைக்குப் புத்துயிரும் புது எழுச்சியும் ஊட்டும் வகையில் தமிழகத்தில் இருந்து புதுக்கவிதை ஜாம்பவான்கள் வரவழைக்கப் பட்டனர். இவர்கள் வழங்கிய ஆய்வு, சொற்பொழிவுகள் மலேசிய புதுக்கவிதையாளர்களிடையே உத்வேகத்தையும் ஆர்வத்தையும் அதிகரிக்கச் செய்திருந்தது எனலாம். புதுக்கவிதைகளின் பால் புதிய அலைகள் வீசத் தொடங்கின.

மூன்று மாதங்களுக்கு ஒருமுறை புதுக்கவிதைக் கருத்தரங்கு இலக்கிய விழாவாக இரண்டு நாள் நிகழ்வாகச் சிறப்பாக நடந் தேறியது. இதுவரை 14 கருத்தரங்குகள் நடத்தப்பட்டுள்ளன. குறிப் பிட்ட அந்த 3 அல்லது 4 மாதங்களில் தினசரி, மாத, வார இதழ் களில் வெளிவந்த புதுக்கவிதைகள் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆய்வாளர்களால் ஆய்வு செய்யப்பட்டன. ஒவ்வொரு கருத்தரங் கிலும் ஒவ்வோர் உத்தி முறையை அறிமுகப்படுத்தி கவிதைப் பட்டறைக்கான ஆயத்தங்களை முனைப்புடன் செய்து வந்தார் இணைப் பேராசிரியர் முனைவர் வே. சபாபதி.

இந்த இரண்டு நாள் நிகழ்வில் ஆய்வுக்கட்டுரை, தமிழகக் கவிதைப் பிரபலங்களுடனான கலந்துரையாடல், கருத்துப் பரி மாற்றம், சொற்பொழிவுகள், கவியரங்கு, பட்டிமன்றம், கவிதைப் பட்டறை, திடீர்க் கவிதைகள், படக்கவிதைகள், பேருந்துக் கவிதைகள் ஆகியன நடந்தேறின.

கண்காணிப்பு இருக்கும்போதுதான் கவனிப்பு அதிகமாகும். அதுபோல தங்களுடைய கவிதைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டு பரிசீலிக்கப்படுகின்றன என்ற நம்பிக்கை வேர் விடும்போது கண்டதைக் கிறுக்காமல், சமூகக் கட்டுப்பாடு கொண்டு கவிதைக்கு வளம் சேர்க்கும் விதத்தில் படைக்கவேண்டும் எனும் வேகம், வேட்கை கொப்பளிக்கின்றன. இதனை இந்தத் தொடர் கருத் தரங்குகள் ஏற்படுத்தித் தந்திருக்கின்றன என்றால் மிகையாகாது.

இக்கருத்தரங்குகள் வழி இளைய படைப்பாளிகள் முகங் காட்டத் தொடங்கினர். எழுச்சி மிக்க கவிதைகள் எழுத முனைந்து

வெற்றியும் அடைந்தனர் எனலாம். இதனூடே இளைய படைப் பாளிகளோடு மூத்த படைப்பாளிகளும் இணைந்து கவிதைத் தேர் இழுத்து, தங்கள் பங்களிப்பைச் செய்து வருவது மிகவும் போற்றத்தக்கதாகும்.

இக்கருத்தரங்குகளில் அரங்கேறும் எல்லா நிகழ்வுகளும், கவிதைகளும் காற்றில் கரைந்து காணாமல் போகாதவாறு நூல் வடிவில் பதிவு செய்துவைக்கப்பட்டுள்ளது பிற்கால சந்ததியினருக்கு மிகவும் பயனுள்ளதாகும். ஒவ்வொரு கருத்தரங்கின் போதும் வெளியீடு கண்ட நூல்கள் அந்தந்த காலகட்டங்களில் வெளிவந்த கவிதைகளின் சேமிப்பு வங்கியாக விளங்கி வருகின்றன.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் நடத்திய கருத்தரங்குகள் மூலமாகவும் தேசியப் பல்கலைக்கழக இந்தியப் பிரதிநிதித்துவ சபையின் வெளியீடுகள் மூலமாகவும் புதுக்கவிஞர்களின் சொந்த முயற்சியின் பலனாகவும் மொத்தம் 31 புதுக்கவிதை நூல்கள் மறு மலர்ச்சி காலகட்டத்தில் வெளிவந்துள்ளன. (காண்க இணைப்பு 3)

## 3. மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைகள்

## பத்தாண்டு கால பார்வை (1996 - 2006)

வானம்பாடிக்குப் பிந்திய காலத்தின் பிற்பகுதியும் மறுமலர்ச்சி காலப் பகுதியும் இந்தப் பத்தாண்டு காலப் புதுக்கவிதை ஆய்வில் அடங்கும்.

ஒவ்வொரு முறையும் புதுக்கவிதை தேக்க நிலையை அடையும் போது ஆங்காங்கே புதுக்கவிதையின்பால் பற்றுக்கொண்ட ஒரு சில இயக்கங்களும் அமைப்புகளும் அவ்வப்போது கருத்தரங்கு களை நிகழ்த்தி புதுக்கவிதையை மீட்டெடுக்கும் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தி வருகின்றன. இக்கால கட்டத்தில் மேற் கொள்ளப்பட்ட முயற்சிகள் விளக்கப்படுகின்றன.

## 3. மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைக் கருத்தரங்கு

தொண்ணூறுகளில் ஏற்பட்ட தொய்வின் காரணமாக, 15.09.1996இல் மலேசிய உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும் மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையும் இணைந்து நடத்திய 'புது நோக்கில் புதுக்கவிதைகள்' எனும் கருப்பொருளில் மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைக் கருத்தரங்கு ஒன்று மலாயாப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது. இக்கருத்தரங்கில் மலேசியத்

தமிழ்ப் புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும் எனும் தலைப்பில் சா. அன்பழகன் அவர்களும், மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதை களில் பெண்ணியச் சிந்தனைகள் எனும் தலைப்பில் முனைவர் வே. சபாபதி அவர்களும், மலேசியப் புதுக்கவிதையின் தரமும் திறமும் தொடர்பாக முனைவர் ரெ. கார்த்திகேசு அவர்களும் விளைபயன் மிக்க ஆய்வுக் கட்டுரைகளைப் படைத்தனர்.

இக்கருத்தரங்கில் புதுக்கவிதையாளர்களும் ஆர்வலர்களும் கணிசமான எண்ணிக்கையில் கலந்து பயனடைந்தனர். 1964ஆம் ஆண்டில் காலூன்றிய புதுக்கவிதை வேரூன்றிய வரலாற்றையும் எதிர்நோக்கிய எதிர்வினைகளையும் புதுக்கவிதையின் போக்கி னையும், தரமதிப்பீடுகளையும் ஒருசேர தொகுத்துத் தந்ததில், புதுக்கவிதையைப்பற்றி பங்கேற்பாளர்கள் முழுமையாக உள்வாங்கிக் கொள்ளமுடிந்தது எனலாம்.

## 3.2. புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

இந்த மண்ணில் புதுக்கவிதைப் பூ பூத்துக் குலுங்க மீண்டும் ஓர் அரிய முயற்சி 1999ஆம் ஆண்டில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தால் மேற்கொள்ளப்பட்டது. இச்சங்கத்தின் அன்றைய செயலாளரும் இன்றைய தலைவருமான பெ. இராஜேந்திரன் அவர்களின் தலைமையில் புதுக்கவிதை திறனாய்வுக் கருத்தரங்கு ஏற்பாட்டுக் குழு அமைக்கப்பட்டு, தொடக்கத்தில் மூன்று மாதங் களுக்கு ஒரு முறையும் பின்னர், நான்கு மாதங்களுக்கு ஒரு முறையும் திறனாய்வுக் கருத்தரங்குகளை இருநாள் நிகழ்வாக நாடு தழுவிய நிலையில் நடத்தி வந்தது. ஆய்வுக்குட்பட்ட காலம் வரை இதுவரை பதினான்கு திறனாய்வுக் கருத்தரங்குகளை தொடர்ச்சி யாக நடத்தியுள்ளது.

### 3.2.1. முதலாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு தொடக்க விழா

முதலாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு 1999ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையின் ஆதரவோடு தொடக்கவிழா கண்டது. புதுக் கவிதைத் துறைக்குப் புத்துயிர் ஊட்டும் வகையில் அமைய வேண்டும் என்ற நோக்கோடு தமிழகத்தின் சிறந்த புதுக்கவிதை யாள்ர்களாகிய கவிக்கோ அப்துல் ரஹ்மான், தமிழன்பன், சிற்பி ஆகியோர் வரவழைக்கப்பட்டனர். இவர்களின் ஆக்கவுரைகளும் கோ. முனியாண்டி அவர்களின் ஆய்வுரையும் வறண்டு போயிருந்த

*புதுக்கவிதை நிலத்தில் நீர்பாய்ச்சியதுபோல் அமைந்தது. புதுக் கவிதை பயணத்திற்கு இக்கருத்தரங்கு முன் நின்று ஆரத்தி எடுத்து, அடியெடுத்து கொடுத்தது.*

## 3.2.2. இரண்டாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

*11 - 12.03.2000இல் மோரிப், பந்திங் எனும் இடத்தில் இரண்டாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு இரண்டு நாள் நிகழ்ச்சியாகப் பரிணாம வளர்ச்சியைக் கண்டது. இதில் பயிற்சிப் பட்டறைகள் நடத்தப்பட்டன. அத்தகைய பட்டறைகள் மூத்த புதுக்கவிதையாளர்களைத் தலைவர்களாகக் கொண்டு இயங்கின. இப்பட்டறைகள் மூலம் புதுக்கவிஞர்கள் அடிப்படை பயிற்சியைப் பெற்றதோடு, மூத்த கவிஞர்களுடன் கருத்துகள் பரிமாறிக்கொள்ளும் வாய்ப்பையும் பெற்றனர்.*

*‘காதல்’ எனும் தலைப்பில் அமைந்த கவியரங்கை கவிஞர் கா. இளமணி வழிநடத்தினார். இதில் ஏ. தேவராஜன், கு. தேவேந்திரன், ஓவியன், வே. இராஜேஸ்வரி, பெ. சா. சூரியமூர்த்தி ஆகியோர் கவிதைகள் படைத்தனர். 1999ஆம் ஆண்டு நவம்பர், டிசம்பர் மற்றும் 2000ஆம் ஆண்டு ஜனவரி ஆகிய மூன்று மாதங் களில் பிரசுரமான புதுக்கவிதைகளை நா. பச்சைபாலன் ஆய்வு செய்து, ஆய்வுக்கட்டுரை படைத்தார்.*

*ஆய்வாளரின் கவனத்தை ஈர்த்த கவிதையின் சில வரிகள்:*

புள்ளிங்கள
நல்லா படிக்க வை
பொம்பளயும்
கண்ணு கலங்காம
காப்பாத்து

கடைசியா
ஒண்ணு சொல்ல
மறந்துட்டேன்யா
நீ
கொண்டாந்து
சேத்தியே
ஆஸ்ரமம்
அத வேற இடத்துக்கு
மாத்திட்டாங்க
அட்ரச
எழுதியிருக்கேன்
மறந்துடாம படி.

கவிஞரின் கடித பாணியில் அமைந்த இக்கவிதை, படிப்பவரின் மனதைப் பிழிவதாக இருக்கின்றது. இயல்பான பேச்சு நடையிலே தாயின் அன்பு ஆழமாக வெளிப்படுகின்றது. பரிசுக்குரிய கவிதைகளாக, அக்கினியின் 'வீரவணக்கத்துடன் ஒரு போர் வீரன்', சிவாவின் 'மழை', கணபதி கணேசனின் 'ஒரு யாழ்ப் பாணத்து மரணம்' ஆகிய கவிதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டு பரிசுகள் வழங்கப்பட்டன.

இக்கருத்தரங்கின் முக்கிய அம்சமாக இடம்பெற்றது பயிற்சிப் பட்டறையாகும். பட்டறையில் பங்கு பெற்ற அனைவரும் ஐந்து குழுக்களாகப் பிரிக்கப்பட்னர். மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையின் இணைப் பேராசிரியர் டாக்டர் வே. சபாபதி அவர்களின் மேற்பார்வையில் பட்டறை நடைபெற்றது. இப்பட்டறையின் வழி நல்ல தரமான கவிதைகள் அரங்கேறின. எம். ஏ. இளஞ்செல்வனின் 'புதுக்கவிதை: ஒரு பொதுப்பார்வை' எனும் ஆய்வுக்கட்டுரை மிகப் பயனுள்ளதாக அமைந்தது.

### 3.2.3. மூன்றாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்க ஏற்பாட்டில் 24-25.06.2000இல் லுமூட் கடற்கரையில் இரு நாள் புதுக்கவிதை திறனாய்வுக் கருத்தரங்கு அரங்கேறியது.

இந்நிகழ்வில் சுமார் 200 பேர் கலந்துகொண்டனர். முதல் அங்கமாக பெர்னாட்ஷா அவர்கள் 'திரைப்படப் பாடல்களில் புதுக்கவிதை' எனும் தலைப்பில் உரையாற்றினார். புதுக்கவிகளும் மூத்த கவிஞர்களும் இணைந்து நடத்திய கவிதைப் பட்டறையில் ஐந்து புதுக்கவிதைகள் புதிதாகப் பிறந்தன. அதனைத் தொடர்ந்து பேருந்து பயணத்தின்போது நடந்த திடீர் கவிதைப் போட்டியில் கலந்து கொண்டவர்களுள் நான்கு பேருக்கு பரிசுகள் வழங்கப் பட்டன. தொடர்ந்து கவியரங்கம் எம். ஏ. இளஞ்செல்வனின் தலைமையில் நடைபெற்றது. இக்கவியரங்கில், அருள்தாசன், மனஹரன், நடராசன், தேவராஜுலு, பிரான்சிஸ் ஆகியோர் 'அரசியல்' எனும் தலைப்பில் தத்தம் படைப்புகளைப் படைத்தனர்.

மறுநாள் டாக்டர் வே. சபாபதி அவர்களின், 'மூன்று மாதம் கவிதைகளின் தியனாய்வு' எனும் தலைப்பில் ஆய்வுக் கட்டுரையுடன் கவிதை கருத்தரங்கு தொடர்ந்தது. பிப்ரவரி, மார்ச், ஏப்ரல் ஆகிய மூன்று மாதங்களில் சுமார் 340 புதுக்கவிதைகள் ம.த. இதழ்களில் வெளிவந்துள்ளதாக ஆய்வாளர் குறிப்பிட்டி ருந்தார் எண்ணிக்கையிலும் தரத்திலும் இக்காலகட்டத்தில் புதுக்

கவிதைகள் உயர்ந்திருந்தாலும் அதிகமான புதுக்கவிதைகளில் வெறும் உரைநடைப் போக்கு மிகுந்தும் கவிச்சுவை குறைந்தும், வெறும் சொற்களை மட்டும் வைத்து வித்தைகாட்டும் போக்கும் காணப்படுவதைத் திறனாய்வாளர் சுட்டிக்காட்டியுள்ளார். பாடு பொருள்கள் அனைத்துலக நிலைக்கு விரிவடைந்துள்ளதாகவும் உள்நாட்டுப் பிரச்சினைகளை அலசி ஆராயும் போக்கு குறைந் துள்ளதாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

ஆய்வாளரின் பார்வையில் சிறப்புப் பெற்றதாய், 'பழைய பரமசிவனும் புதிய நூற்றாண்டும்', 'இந்தியா இருட்டுகிறது', 'நாய்கள்' ஆகியவை பரிசுக்குரியனவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு பரிசுகள் வழங்கப்பட்டன.

மேலும், 'மலேசியப் புதுக்கவிதைகளில் சமுதாய அக்கறை' என்ற தலைப்பில் பட்டிமன்றம் நடைபெற்றது. இக்கருத்தரங்கின் முக்கிய அங்கமாக 'கடலோரக் கருத்தரங்கம் கவிதைகள்' எனும் கருத்தரங்கு நூல் வெளியீடு கண்டது.

இந்நிகழ்வுக்கு மேலும் ஒரு சிறப்பு இலக்கிய உரையாக அமைந்தது தமிழகக் கவிஞர் அறிவுமதி அவர்களின் உரை. "நல்ல மொழிப் பயிற்சியே கவிநயத்தை மேம்படுத்தும். சிந்தனை மரபில் ஏற்படும் இடர்ப்பாடுகளைக் குறைக்க பண்டைய தமிழ்ச் சிந்தனை வேரூன்றி வளர வேண்டும். சமுதாய மறுமலர்ச்சியைக் கொண்டு வருவதாகவும் புதுக்கவிதைகள் அமையவேண்டும்" என்றும் புதுக் கவிகளுக்கு வழிகாட்டினார்.

## 3.2.4. நான்காவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

இக்கருத்தரங்கு தைப்பிங் நகரில் 14, 15.10.2000 ஆகிய இரு தினங்கள் இலக்கிய விழாவாக நடைபெற்றது. எம். ஏ. இளஞ் செல்வனின் மறைவையொட்டி கவிஞர்கள் கவிதைகளை மாலை களாகத் தொடுத்து அவருக்குச் சூட்டி அஞ்சலி செலுத்தினர்.

அந்நிகழ்வுக்குப் பிறகு மலாயாப் பல்கலைக்கழக இணைப் பேராசிரியர் முனைவர் வே. சபாபதி அவர்கள், 'புதுக்கவிதையின் படிநிலை உத்திகள்' எனும் தலைப்பில் புதுக்கவிதையின் சிறப்பு உத்திகளான உவமை, உருவகம், படிமம், குறியீடு ஆகியவற்றை எடுத்துரைத்தார். புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கின் தலைவர் இராஜேந்திரன், அதன் செயலாளர் வித்யாசாகர், முனைவர் வே. சபாபதி அவர்களின் மேற்பார்வையிலும் வழி காட்டலிலும் கவிதைப் பட்டறை நடைபெற்றது.

*அடுத்ததாக மே, ஜூன், ஜூலை (2000) மாதங்களின் இதழ்களில் வெளிவந்த புதுக்கவிதைகள் தொடர்பாக கணபதி கணேசன் அவர்கள் ஆய்வுக்கட்டுரை சமர்ப்பித்தார். இம்மாதிரி யான கருத்தரங்குகள் வழி, தங்கள் கவிதைகள் கவனிக்கப்படு கின்றன; கௌரவப்படுத்தப்படுகின்றன என்ற உந்துதலும் ஆர்வமும் எழுதுவோரிடம் மேலோங்கி வருகிறது என்பதற்கு 450 கவிதைகளே ஆதாரம் என ஆய்வாளர் குறிப்பிட்டார். அவற்றில் சில தரமான கவிதைகளைச் சுட்டிக்காட்டினார். அவற்றில் ஒன்று*

"ஈழத்து மண்ணில்
முளைத்திருக்கும்
ஒவ்வொரு புல்லின்
நுனியைக் கிள்ளிப்பார்
வீர ரத்தம் சொட்டும்"

*சிறந்த மூன்று புதுக்கவிதைகள் தேர்ந்தெடுக்கப்பட்டு பரிசுகள் வழங்கப்பட்டன. ஆய்வரங்கத்தைத் தொடர்ந்து 'மலேசியக் கவிதைகளில் பெண்ணியத்திற்கு முக்கியத்துவம் வழங்கப்பட்டி ருக்கிறதா? இல்லையா?' என்ற தலைப்பில் நடைபெற்ற பட்டி மன்றத்திற்கு முனைவர் ரெ. கார்த்திகேசு தலைமையேற்றார்.*

*பெ. ராஜேந்திரன் தலைமையில் 'லுமூட் கடலோரக் கவிதைகள்' எனும் நூல் வெளியீடு கண்டது. நம் நாட்டின் புதுக் கவிதைகள், அதன் வளர்ச்சிகள், கடல் கடந்து கால் பதித் துள்ளதையும், ஐம்பதாண்டுகளுக்கு மேலாக தமிழ்நாட்டில் இலக்கியம் வளர்த்து வரும் பிரபல மாத ஏடான 'கலைமகள்' நமது புதுக்கவிதை முயற்சியைப் பாராட்டி, அங்கீகாரம் வழங்கி யுள்ளதையும் மகிழ்வுடன் பகிர்ந்து கொண்டார்.*

## 3.2.5. ஐந்தாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

*மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் ஏற்பாட்டில் 16, 17.12.2000இல் ஐந்தாவது புதுக்கவிதை திறனாய்வுக் கருத்தரங்கு கேமரன் மலையில் நடைபெற்றது. இக்கருத்தரங்கை மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் ஆதி. குமணன் தொடக்கி வைத்தார்.*

*'உரைநடையை ஏற்றுக்கொள்ளாமல் செய்யுள் செய்யுளாக இருந்திருந்தால், கவிதை செத்துப் போயிருக்கும். அது வசனத்தைக் கவசமாக ஏற்றுக்கொண்டதால், கவிதை இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறது. விஞ்ஞான வளர்ச்சிக்கு ஏற்ப, கால மாற்றத்*

திற்கு ஏற்ப வாகனம் மாறும். ஆனால், இலக்கியம் வளர்ந்து கொண்டுதான் போகும்' என அவர் தம் உரையில் குறிப்பிட்டார்.

மேலும், இக்கருத்தரங்குகள் வழி புதியவர்களும் சிறப்பான முறையில் கவிதை படிப்பதைக் கையாண்டு வருகிறார்கள். தமிழ் உணர்வையும் இலக்கியத்தின் மீதான தாக்கத்தையும் இக்கருத் தரங்குகள் ஏற்படுத்தி வருகிறது என்றார். அதனையடுத்து 'தைப்பிங் மலையோரக் கவிதைகள்' எனும் புதுக்கவிதைத் தொகுப்பு நூல் வெளியீடு கண்டது. 'புதுக்கவிதையில் அங்கதம்' எனும் தலைப்பில் பிறரது குறைகளைச் சுட்டிக்காட்டித் திருத்தும் ஓர் உத்தியாக 'அங்கதம்' செயல்படுவதை பல எடுத்துக் காட்டுகளுடன் விளக்க மளித்தார் டாக்டர் வே. சபாபதி அவர்கள்.

வழக்கம்போல் கவிதைப் பயிற்சிப் பட்டறை தொடங்கியது. படைக்கப்பட்ட கவிதைகள் அரங்கேறின. அவற்றின்மீது விமர்சனங் களும் விவாதங்களும் எழுந்தன. ஆரோக்கியமான திறனாய்வுக்குப் பிறகு, சிறந்த கவிதைகள் உருவாகின.

பட்டறைக்குப் பிறகு, 'ஊமைச்சனங்கள்' தலைப்பில் கவியரங்கு நடைபெற்றது. இதனை சை. பீர்முகம்மது தம் தலைமைக் கவிதையை முன்னுரையாகக் கொண்டு இக்கவியரங்கை வழி நடத்திச் சென்றார். சந்துரு, கலைச்செல்வி, எஸ். தினகரன், மு. துரைராஜு, முனியன், ந. பச்சைபாலன் ஆகியோர் கவியரங்கில் பங்கேற்றனர். படக்கவிதைகளும் படைக்கப்பட்டன. மறுநாள் 2000ஆம் ஆண்டு ஆகஸ்டு, செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் உள்ளூர் இதழ்களில் வெளிவந்த புதுக்கவிதைகளைக் கவிஞர் கோ. புண்ணியவான் ஆய்வு செய்து, கட்டுரை சமர்ப் பித்தார். சிறந்த மூன்று கவிதைகளுக்குப் பரிசுகள் அளிக்கப் பட்டன.

### 3.2.6. ஆறாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

ஒவ்வொரு கருத்தரங்கிலும் படிப்படியான முன்னேற்றங் களைக் காண்கிறோம். புதுப்புது தேடல்களுக்கு வழியமைக்கிறோம். படைப்புகளின்மீது நடத்தப்படும் திறனாய்வுகளும், கருத்துப் பரிமாற்றங்களும் தரமான இலக்கியம், இலக்கியவாதிகள் உருவாக வழிவகுக்கும். அவற்றிற்குப் புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத் தரங்குகள் களமாக அமைந்து வருகின்றன எனக் கூறி 24, 25.03.2001இல் மலாக்காவில் நடைபெற்ற ஆறாவது புதுக்கவிதை திறனாய்வு கருத்தரங்கைத் தொடக்கிவைத்தார் ஏற்பாட்டுக் குழுத் தலைவர் பெ. இராஜேந்திரன்.

முதல் நிகழ்வாக, 'கேமரன் மலையோரக் கவிதை' எனும் புதுக்கவிதை தொகுப்பு நூல் வெளியிடப்பட்டது. அதனையடுத்து 'புதுக்கவிதையில் முரண் உத்தி' எனும் தலைப்பில் டாக்டர் வே. சபாபதி அவர்கள் கட்டுரை ஒன்றைப் படைத்தார்.

பின்னர், வழக்கம் போல் குழுக்கள் பிரிக்கப்பட்டு, 'முரண் அணியில்' கவிதை எழுதும்படி பணிக்கப்பட்டது. அதன் தொடர்பான விமர்சனங்களும் விறுவிறுப்பான விவாதங்களும் நடைபெற்றன. பட்டறையில் தீட்டிய புதுக்கவிதைகளில் ஒன்று இது.

"குடும்பக் கட்டுப்பாடு
பிரச்சாரக் கூட்டம்
தலைவருக்கு
அவசர அழைப்பு
மனைவிக்குப்
பத்தாவது பிரசவம்"

இரண்டாம் நாளின் முதல் அங்கமாக நவம்பர், டிசம்பர் (2000), ஜனவரி (2001) ஆகிய மாதங்களில் வெளிவந்த புதுக் கவிதைகளைப் 'புதுப்பார்வை' எனும் தலைப்பில் ஆய்வாளர் க. உதயகுமார் ஆய்வு செய்தார். சுமார் 650 கவிதைகள் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு, அலசி ஆராயப்பட்டன.

இதனைத் தொடர்ந்து, விவாத அரங்கம் அரங்கேறியது. 'புதுக்கவிதை சிக்கலும் சிணுங்கலுமாய் இருக்கவேண்டுமா அல்லது நேரே விஷயத்தை புரிய வைக்கவேண்டுமா' எனும் தலைப்பில் விவாதம் தொடங்கியது.

## 3.2.7. ஏழாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

கடந்த 2001ஆம் ஆண்டு செப்டம்பர் 8, 9 ஆகிய நாட்களில் குளுவாங் நகரில் சற்றே மாறுபட்டு தோட்டப்புறச் சூழலில் இக்கருத்தரங்கு நடைபெற்றது.

உலக அங்கீகாரத்தைப் புதுக்கவிதை பெற்றிருக்கிறது எனும் செய்தியை முன்னுரையாகக் கொண்டு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் ஆதி, குமணன் அவர்கள், ஏழாவது புதுக்கவிதை திறனாய்வுக் கருத்தரங்கைத் தொடக்கி வைத்து உரையாற்றினார்.

நம்மாலும் இங்கு தரமான படைப்புகளைப் படைக்க முடியும் என்ற நம்பிக்கையைக் கொள்ளுங்கள். அந்த நம்பிக்கை மட்டும் போதாது. ஆசை மட்டும் போதாது. அதற்கான உழைப்பும்

படிப்பும் சிந்தனையும் வேண்டும் என்று கூறினார். அவரைக் கவர்ந்த கடந்த கருத்தரங்கில் படைக்கப்பட்ட ஒரு கவிதையைச் சுட்டிக் காட்டினார்.

ஊரைச் சுற்றி
அறிவிப்புப் பலகைகள்
குப்பைகளைக் கண்ட
இடத்தில் வீசாதீர்கள்!

இனி குப்பைத் தொட்டியிலும்
வைக்க வேண்டும்
"தயவு செய்து
குழந்தைகளை இங்கே
வீசாதீர்கள்!"

பின்னர் 'மலாக்கா கடலோரக் கவிதைகள்' எனும் புதுக் கவிதை தொகுப்பு நூலை திரு ஆதி. குமணன் அவர்கள் வெளியீடு செய்தார்.

இதனையடுத்து 'புதுக்கவிதையில் தொன்மக் கூறுகள்' எனும் தலைப்பில் இணைப் பேராசிரியர் டாக்டர் வே. சபாபதி அவர்கள், புதுக்கவிதை இலக்கியத்தில் தொன்மக் கூறுகளின் பயன்பாட்டையும் தொன்மங்கள் கருத்துப் புலப்பாட்டு உத்தியாகப் பயன்படும் விதங்கள் பற்றியும் விளக்கமாக எடுத்துரைத்தார்.

அடுத்த அங்கமாக பயிற்சிப் பட்டறை ஆரம்பமானது. தொன்மக் கூறுகள் கொண்டு கவிதைகள் இயற்றப்பட்டன. அவற்றில் தெறித்த கவிதைகள் சில இங்கே தரப்பட்டுள்ளன.

"அய்யா முத்தப்பா
என்னை நம்பி
எட்டுச் சீவன்
உளிக்கு
ஓல வச்சி
பால தண்ணீராக்கி
சிவப்பு பொட்டுல
எங்க பொலப்ப
கண்ணீராக்கிடாதப்பா"

எனும் கவிதையில் 'முத்தப்பா என்பது தொன்மம்' என்றும் நம் முப்பாட்டன் வழியில் முத்தப்பனை வணங்கும் வழக்கம் இருந்ததாக விளக்கம் அளிக்கப்பட்டது.

அடுத்து கவிஞர் அறிவுமதி அவர்கள் இலக்கிய உரை யாற்றினார்.

"உலகத்தின் பரபரப்பான சூழலுக்குமிடையே மலேசிய மண்ணால் மட்டும் இலக்கிய வளர்ச்சிக்காகத் திட்டமிட்டு செயல்படுவது என்னை மெய்சிலிர்க்க வைக்கிறது" என்று கவிஞர் அறிவுமதி கூறினார். நம்முடைய இலக்கியப் பார்வைகள் கடந்த கால வரலாறுகளையும் நமது வேர்களையும் அறிந்துகொள்வதில் இளைய தலைமுறையினர் அதிக நாட்டம் கொள்ளவேண்டும் எனும் ஆலோசனையை முன் வைத்தார். இன்றைய இந்த முயற்சி நாளைய விளைச்சலுக்கு அடித்தளம் அமைக்கும் என்ற நம்பிக்கையை விதைத்தார்.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் துணைத் தலைவர் சை. பீர்முகம்மது அவர்கள் 2001ஆம் ஆண்டின் பிப்ரவரி, மார்ச், ஏப்ரல், மே ஆகிய நான்கு மாதக் கவிதைகளை ஆய்வு செய்தார். அவற்றில் பெரும்பான்மையான கவிதைகள் காதலைப் பாடு பொருளாகக் கொண்டிருக்கின்றன என்ற ஆதங்கத்தை வெளிப் படுத்தினார்.

## 3.2.8. எட்டாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் எட்டாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு 2002ஆம் ஆண்டு மார்ச் திங்கள் 2, 3ஆம் தேதிகளில் கோலாலம்பூரில் நடைபெற்றது. கருத்தரங்கின் தொடக்க விழா மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு. ஆதி. குமணன் அவர்களின் உரையோடு தொடங்கியது.

இந்நிகழ்வுக்கு தமிழகத்திலிருந்து வருகை புரிந்திருந்த கவிஞர் பழநிபாரதி அவர்களின் இலக்கியச் சொற்பொழிவு புதுக்கவிதைப் பிரியர்களுக்கு உற்சாகத்தையும் ஊக்கத்தையும் அளித்தது.

அடுத்த அங்கமாக புதுக்கவிதை முன்னோடிகளில் ஒருவராக விளங்கிய அமரர் எம். ஏ. இளஞ்செல்வன் அவர்களின் பெயரால் புதுக்கவிதைப் போட்டி நடத்தப்பட்டு இக்கருத்தரங்கில் பரிசளிப்பு விழாவும் நடைபெற்றது.

இந்நிகழ்வுக்குப் பின்னர் வழக்கம் போல் கவிதைப் பயிற்சிப் பட்டறை குழு முறையில் நடைபெற்றது. கவிஞர் பழநிபாரதி தலைமையிலும் மேற்பார்வையிலும் பட்டறை இயங்கியது. சிறந்த கவிதைகள் பல படைக்கப்பட்டன. மறுநாள் 2001ஆம் ஆண்டு

ஜூன், ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர் ஆகிய நான்கு மாதப் புதுக்கவிதைகள் திறனாய்வை இராஜம் இராஜேந்திரன் மேற் கொண்டார். 2001ஆம் ஆண்டு அக்டோபர், நவம்பர், டிசம்பர், ஜனவரி (2002) ஆகிய நான்கு மாதப் புதுக்கவிதைகளை டாக்டர் மா. சண்முகசிவா அவர்கள் ஆய்வுசெய்து ஆய்வுரையைச் சமர்ப்பித்தார்.

## 3.2.9. ஒன்பதாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

போர்ட்டிக்சன் கடற்கரையில் 2002ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 5,6ஆம் தேதிகளில் கருத்தரங்கு நடைபெற்றது. சங்கத் தலைவர் ஆதி. குமணன் அவர்களின் தலைமையில் நடைபெற்ற இக்கருத்தரங்கில் 'பெட்டாலிங் ஜெயா கருத்தரங்குக் கவிதைகள்' எனும் நூல் வெளியீடு கண்டது. பா. ராமு அவர்களின் 2000ஆம் ஆண்டு பிப்ரவரி, மார்ச், ஏப்ரல், மே மாத புதுக்கவிதைகளின் ஆய்வு, ம. கனகராஜன் அவர்களின் 2000ஆம் ஆண்டு ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாத புதுக்கவிதைகளின் ஆய்வு ஆகியவை சமகால கவிதைகளின் போக்குகளைத் துல்லிதமாகவும் கூர்மை யாகவும் படம்பிடித்துக் காட்டியுள்ளன.

ஆய்வாளரின் கவனத்தை ஈர்த்த பல கவிதைகளில் ஒரு கவிதை இது.

"என் நண்பனாகவே
நீ இன்று
வாழ்கிறாய்
உண்மையில்
இன்று வரையிலும்
நான்
உனக்குத் தோழியாகவே
நடித்துக் கொண்டிருக்கிறேன்
என் காதலை மறைத்து!"

## 3.2.10. பத்தாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

இக்கருத்தரங்கு 5.6.2005இல் பினாங்கு துங்கு பைனுன் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் நடைபெற்றது. இக்கருத்தரங்கில் புதுக்கவிதை பற்றாளர்கள் உட்பட அதிகமான பயிற்சி ஆசிரியர்கள் கலந்துகொண்டது நிறைவானதாகும்.

பட்டை தீட்டும் கவிதைப் பட்டறை, படக்கவிதைகள், திடீர்க் கவிதைகள், பேருந்துக் கவிதைகள் ஆகிய நிகழ்வுகளில் புதுக்கவிதை ஆர்வலர்கள் தங்களின் முழுமையான பங்களிப்பைச் செய்து பயனடைந்தனர். கோ. புண்ணியவானின் 2002ஆம் ஆண்டு அக்டோபர், நவம்பர், டிசம்பர், 2003ஆம் ஆண்டு ஜனவரி ஆகிய நான்கு மாதப் புதுக்கவிதைகளின் திறனாய்வுக் கட்டுரையில்,

**"பால்மரக் காடுகளில்**
**எழுதி வைத்த**
**எங்கள் முதுகெலும்புகளில்**
**முகவரி இன்னும் தெரியவில்லை"**

எனும் கவிதையும்

**"உயர்வான செய்தி**
**அனுதினம்**
**விளம்பரம் செய்யும்**
**செய்தித்தாள் வானம்"**

கவனத்தை ஈர்த்த கவிதைகளாக இடம்பெற்றுள்ளன.

இலக்கண ஆசிரியரும் இலக்கியவாதியுமான கவிஞர் சீனி நைனா முகமது அவர்கள் 'ஓசை' எனும் தலைப்பில் கவிதை களின் வேர்களை அணுகும் முறையை அனுபவபூர்வமாக எடுத் துரைத்தார். மேலும் தனது உரையில் படைப்பாளி எப்பொழுது தன் படைப்புகளுக்குள் காணாமல் போகின்றானோ அப்போது தான் அவனுக்கு அந்த ஓசையோடு, உணர்ச்சியோடு அது வரும். இலக்கணத்தையும் சரி கணிதத்தையும் சரி புரிந்துகொள்ள வேண்டும். மனப்பாடம் செய்யக்கூடாது. மனப்பாடம் செய்தால் மறந்துவிடும். ஆகவே, புரிந்துகொள்ளவேண்டும். புரிந்துகொண்டால் மறக்காது. ஆகவே, அந்தக் காட்சிப் படிமத்தோடு அதை உள் வாங்கிக் கொண்டீர்கள் என்றால் ஓசையை மிகவும் அழகாகவும் தெளிவாகவும் கையாள்வீர்கள் எனும் விளக்கத்தையும் ஆலோசனை யையும் முன்வைத்தார்.

### 3.2.11. பதினோராவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

தஞ்சோங் மாலிம் நகரின் ஸ்ரீ தண்டாயுதபாணி ஆலய மண்டபத்தில் இக்கருத்தரங்கு 14, 15 பிப்ரவரி 2004இல் நடை பெற்றது. 'புதுக்கவிதையில் உலகப் பார்வை' எனும் தலைப்பில் விளக்கவுரை ஆற்றினார் நா. பச்சைபாலன்.

*"தனிமனித உணர்வுகள், உறவு, சமூகம், நாடு, உலகம், பிரபஞ்சம் என விரியவேண்டும். ஆனால், கவிஞர்களிடையே உலகப் பார்வை என்பது மிகக் குறைவாகவே உள்ளது. நமக்குப் புதிய வாசிப்பு அனுபவம் வேண்டும், பாடுபொருள் பன்முகம் ஆகவேண்டும். சுதந்திரமாக எழுதும்போது படைப்பின் தரமும் உயர்வு காணும். உத்திகளோடு பாடுபொருள்களுக்கும் முக்கியத் துவம் கொடுக்கவேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். இதனை மையமாக வைத்து கவிதைப் பயிற்சிப் பட்டறை மேற்கொள்ளப் பட்டது. மேலும் பேருந்து கவிதைகள், படக்கவிதைகள், கவி ராத்திரி கவிதைகள் ஆகிய அங்கங்களும் கருத்தரங்கிற்கு மெருகூட்டின.*

*அடுத்து, கருத்தரங்கின் சிறப்பு அம்சங்களில் ஒன்றாக கவியரங்கம் நடைபெற்றது. பா. அ. சிவம் தலைமையில் பெண்ணியம் என்ற தலைப்பில் இந்தக் கவியரங்கம் அமைந்தது. 2003ஆம் ஆண்டின் செப்டம்பர், அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாதப் புதுக்கவிதைத் திறனாய்வு சீ. அருணாசலம் அவர்களால் மேற்கொள்ளப்படட்து. அந்த நான்கு திங்கள் கவிதைகளின் பாடு பொருள்களின் தளம் சற்று வேறுபட்டிருப்பதாகவும் போராட்ட உணர்வின் தாக்கம் சற்று தூக்கலாக இருப்பதாகவும் ஆய்வாளர் சுட்டிக்காட்டினார். அவர் மனதை வருடிய கவிதைகளில் சில இங்கே கொடுக்கப்பட்டுள்ளன.*

"விண்வெளி மீறினால்
அறிவியல் ஆராய்ச்சியாம்
வேலியை மீறினால்
மட்டும்
ஓடுகாலியாம்...!"

...............................................

"உன்னைக் கொடுமைப்படுத்திய
ஆண்மையைத் தண்டித்து
வன்முறைக் கடிதம்
எழுதி விடுகிறேன்
இனி வேண்டாம்
தாலி என்ற இரண்டெழுத்தில்
வன்முறை"

*"இந்நாட்டு புதுக்கவிதை வளர்ச்சியென்பது தனிப்பட்ட ஆளுமையாலோ அல்லது ஒரு குழுமத்தாலோ உருவாக்கப் பட்டதல்ல. இலக்கியத்தின் பால் ஈடுபாடு கொண்ட அனைவரின் கைகோர்த்தலால் இன்றைய வளர்ச்சியின்மீது நாம் ஊஞ்சலாடிக்*

கொண்டிருக்கிறோம். இக்கூற்றினை அறிந்து உள்வாங்கிக்கொண்டு, இன்றைய கவிஞர் பெருமக்கள் கவிதைகளைப் படைத்திடல் வேண்டும். கவிதையை எழுதும் முன் அதன் தொடர்பான செய்தி களை அறிந்திடல் சாலச் சிறந்ததாகும். வாசிக்கும் பழக்கத்திற்குள் நம்மை ஈடுபடுத்திக் கொண்டிட வேண்டும். பாடுபொருளின் மீதும் அதன் கருத்துருவாக்கத்தின் மீதும் தத்துவார்த்தமான மீள் பார்வை உணர்வு வேண்டும்" என சீ. அருணாசலம் அவர்கள் புதுக்கவிதை யாளர்களைக் கேட்டுக் கொண்டார்.

அடுத்த நிகழ்வாக பட்டிமன்றம் நடைபெற்றது. "இளைய சமுதாயத்தை அதிகம் கவர்வது சினிமாவா? இலக்கியமா?" என்ற தலைப்பில் பட்டிமன்றம் நடைபெற்றது.

இறுதியாக மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தால் நடத்தப்பட்ட எம். ஏ. இளஞ்செல்வன் மூன்றாமாண்டு நினைவு புதுக்கவிதைப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு பரிசுகள் வழங்கப்பட்டன.

## 3.2.12. பன்னிரண்டாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கம்

10, 11 ஜூலை 2004இல் மலாக்கா - ஆயர் குரோ எனுமிடத்தில் 12ஆவது கருத்தரங்கு நடைபெற்றது. 11ஆவது கருத்தரங்கின் தொகுப்பு நூலான 'தஞ்சோங் மாலிம் கருத்தரங்கு கவிதைகள்' எனும் நூல் சங்கத் தலைவர் பெ. இராஜேந்திரன் அவர்களால் வெளியீடு செய்யப்பட்டது. பின்னர் 'தண்ணீரில் போடட கோலமாய் கனவில் வரைந்த ஓவியமாய்' எனும் தலைப்பில் பேருந்து கவிதைகள் படைக்கப்பட்டு மூன்று சிறந்த கவிதைகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன.

தொடர்ந்து 2004இன் ஜனவரி, பிப்ரவரி, மார்ச், ஏப்ரல் மாதக் கவிதைத் திறனாய்வை கே. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் சமர்ப்பித்தார். அவர் தமது ஆய்வுரையில், "கவிஞர்களின் சிந்தனா சக்தியையும் அவர்கள் கையாண்ட உத்திகளையும் கண்டு நம் நாட்டிலும் எத்தனையோ படைப்பாளிகள் இலைமறைகாயாக இருப்பது கண்டு மனம் கொஞ்சம் நிம்மதி அடைந்தது. ஏனோ தானோ என்று எழுதிய காலம் இப்பொழுது சற்று மாறத் தொடங்கி இருக்கிறது. அதற்கு இந்த 4 மாதத்தில் உள்ளூர் இதழ் களிலும் பத்திரிகைகளிலும் வெளிவநத கவிதைகளில் என் கவனத்தை ஈர்த்திழுத்த இந்தக் கவிதைகள் சான்று" எனக் கூறினார்.

“காலம் மாறி
பருவம் மாறி
உருவம் மாறி போயி

நீ மகள் வீட்டுலேயும்
நான் மகன் வீட்டுலேயும்
இருக்கறப்ப மட்டும்

புரியவேயில்லை
பிள்ளைங்களுக்கு
நம்ம காதல்

காதலர் தினம்
காதலுக்குத்தானாம்
உலகமே சொல்லுது

நாம மட்டும்
ஒருத்தரை ஒருத்தர்
பார்க்க முடியாம...
..................................
ஒன்னா இருக்கலாம்
வா செல்லம்மா...
முதியோர் இல்லத்துக்கு!”

*பிள்ளைகளிடம் பெற்றவர்கள் சொல்லியழ முடியாத துயரத்தை, தவிப்பை கவிஞர் கவிதையாய் வடித்திருக்கிறார், நமது பண்பாட்டின் கண்ணாடிச் சுவர்களை உடைத்தெறியாமல்.*

“பெண்களைப்
பூக்களோடு ஒப்பிடாதீர்கள்
பூக்களெல்லாம்
இரத்தக் கண்ணீர்
வடிப்பதில்லை!
பெண்களை
நிலவுடன் ஒப்பிடாதீர்கள்
நிலவு பாலியல் கொடுமையால்
இம்சிக்கப்படுவதில்லை!”

*இக்கருத்தரங்கிற்குச் சிறப்பு வருகை புரிந்த தமிழகக் கவிஞர் சிநேகன் அவர்களின் இலக்கிய உரையில், “இங்கு கவிதையை வளர்க்க ஓர் இயக்கத்தையே நடத்திக் கொண்டிருக்கிறது மலேசியத்*

தமிழ் எழுத்தாளர் சங்கம். சத்தமில்லாது ஒரு கவிதை யுத்தம் இங்கு நடந்துகொண்டிருக்கிறது. 50 வயது கடந்தவர் களையும் இளைய தலைமுறையினரையும் ஒன்றாகச் சேர்த்து இலக்கியம் படித்துக் கொடுக்கும் புதுமையை நான் இங்கு பார்க்கிறேன்" என்று குறிப்பிட்டார். மேலும் அவருடனான கலந்துரையாடலின்போது கருத்துப் பரிமாற்றம், அனுபவப் பகிர்வு, வழிகாட்டல் முதலியன புதுக்கவிதை ஆர்வலர்களுக்கு உற்சாகத்தையும் உந்துதலையும் தந்தன.

## 3.2.13. பதின்மூன்றாவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

இக்கருத்தரங்கு 26, 27 பிப்ரவரி 2005இல் மலாயா பல்கலைக்கழகத்தில் நடந்தேறியது. வழக்கமான அங்கங்களுடன் பா. அ. சிவம் அவர்களின் 2004ஆம் ஆண்டின் மே, ஜூன், ஜூலை, ஆகஸ்டு மாதக் கவிதைத் திறனாய்வு, மா. நவீன் அவர் களின் 2004ஆம் ஆண்டின் செப்டம்பர், அக்டோபர், நவம்பர், டிசம்பர் மாத கவிதைத் திறனாய்வு ஆகியவை இடம்பெற்றன.

மேலும் 'கவிஞர் விசாரணை அரங்கம்' இக்கருத்தரங்கில் புதிய அங்கமாக இணைக்கப்பட்டிருந்தது. இதில் கவிஞர் ஏ. தேவ ராஜனின் படைப்புகள் சக கவிஞர்களால் விமர்சனம் செய்யப் பட்டன. பின்னர் அவரை விசாரணைக் கூண்டில் ஏற்றி வைத்து பல கேள்விக்கணைகள் தொடுக்கப்பட்டன. எந்த ஓர் மனச் சலனமும் தலைதூக்காமல் எல்லாக் கேள்விகளுக்கும் விரிவான விளக்கம் அளித்தார் கவிஞர். இத்தகைய நிகழ்வு ஆரோக்கியமான கவிதைச் சூழலை உருவாக்கி விட்டிருந்தது. பின்னர் 'மலாக்கா ஆயர் குரோ கருத்தரங்கு கவிதைகள்' எனும் நூல் சங்கத் தலைவர் பெ. இராஜேந்திரன் அவர்களின் தலைமையில் வெளியீடு கண்டது.

## 3.2.14. பதினான்காவது புதுக்கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்கு

இக்கருத்தரங்கு கோலசிலாங்கூர் எனுமிடத்தில் 7, 8 அக்டோபர் 2006இல் நடத்தப்பட்டது. 2006ஆம் ஆண்டின் ஜனவரி, பிப்ரவரி, மார்ச் ஆகிய மாதங்களில் வெளிவந்த கவிதைகளை பா. அ. சிவம் ஆய்வு செய்தார். தமது ஆய்வுரையில் "நமது நாட்டில் கவிதைகளின் போக்கும் நிலையும் இளம் தலைமுறையைச் சேர்ந்த படைப்பாளர்களால் நவீன கவிதைத்தளத்திற்குக் கொண்டு செல்லப்பட்டுள்ளன. இடைப்பட்ட ஒன்றரை ஆண்டில் இந்நிகழ்வு, இம்மாற்றம் பதிவு செய்யப்பட்டிருந்தாலும், இது முந்தைய அனுப

*வங்கள் மற்றும் வாசிப்பின் நீட்சியாகத்தான் இருக்கமுடியும். நவீன கவிதைகள் புதிய மொழிக்கான வெளிப்பாட்டை உணர்த்தி வரும் வேளையில், சொற்களுக்குள் கவிதையை முடக்கிவிடும் தன்மைகள் இங்கு மலிவாகவே கிடைக்கின்றன" எனக் குறிப்பிட்டார்.*

*ஆய்வாளரைப் பாதித்த கவிதைகளில் சில இங்கே தரப்பட்டுள்ளன.*

"நீ
திரையிலும்
சுவரொட்டிகளிலும்
பார்த்து இரசிக்கிறாயே
அந்தப் பெண்
நானல்ல...

ஆடைகளுக்காக
அம்மணமாகவும்
காலுறைகளுக்காக கால்களைக்
காட்டிக்
கொண்டும்
கண்களுக்காக
குருடாகவும்
நிற்கும்
அந்தப் பெண்
நானல்ல!"

..........................

"அப்பாவையாவது
யாரோ ஒரு
பொம்பளையோடு
அடிக்கடி
அந்த அறையில்
பார்க்க முடிந்திருக்கிறது...!

ஏனோ தெரியவில்லை,
அம்மாதான்
கடைசிவரை
முனுசாமியையோ
கருப்பையாவையோ
அங்கு
அழைத்து வந்ததேயில்லை...!"

## 4. கம்பன் விழா

### 4.1. புதுக்கவிதை மன்றம்

*மலேசிய கண்ணதாசன் அறவாரியமும் மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையும் இணைந்து நடத்திய 'கம்பன் விழா' மூன்று நாள் நிகழ்வாக 3,4,5 பிப்ரவரி 2006இல் மலாயாப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்றது. இரண்டாவது நாளன்று பச்சைபாலன் அவர்களின் தலைமையில், எட்டு பேர் கொண்ட குழு 'புதுக்கவிதை மன்றம்' எனும் நிகழ்வில் பங்கேற்றனர். கம்பன் கவியில் இராமன், இலக்குவன், சீதை, பரதன், குகன், அனுமன், சூர்ப்பணகை, இராவணன் ஆகிய பாத்திரப் படைப்புகள் புதுக்கவிதை பாணியில் புதுமையாக எடுத்தியம்பப்பட்டன. மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைக்கு அளிக்கப்பட்ட ஓர் உயரிய அங்கீகாரமாக இதனைப் போற்றலாம். மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்க ஏற்பாட்டில் நடைபெற்ற கவிதை கருத்தரங்குகளில் பட்டை தீட்டப்பட்டு, பக்குவப்பட்ட கவிஞர்களே மேற்கண்ட நிகழ்வில் பங்கெடுத்து சிறப்புச் செய்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.*

## 5. புதுக்கவிதைப் போட்டி

### 5.1. மலேசிய தேசியப் பல்கலைக்கழகப் புதுக்கவிதைப் போட்டி

*பல்கலைக்கழகங்களில், உயர்கல்விக்கூடங்களில், கல்லூரிகளில் பயிலும் மாணவர்களுக்கென பிரத்தியேகமாக இப்போட்டி 1997 முதல் 2007 வரை தங்கு தடையின்றி நடைபெற்று வருகிறது. தொடர்ந்தும் நடைபெறும். இப்பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறை இல்லாத சூழலிலும் இந்திய மாணவர்களின் அரிய முயற்சியால் புதுக்கவிதைப் போட்டி ஒவ்வோர் ஆண்டும் நடத்தப்பட்டு, சிறந்த கவிதைகளுக்குப் பரிசுகள் வழங்கப்படுகின்றன என்பது குறிப்பிடத்தக்கது.*

### 5.2. எம்.ஏ. இளஞ்செல்வன் புதுக்கவிதைப் போட்டி

*மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்க ஏற்பாட்டில் புதுக்கவிதை முன்னோடியான எம். ஏ. இளஞ்செல்வன் நினைவாக தொடர்ந்து 3 ஆண்டுகளாகக் கவிதைப் போட்டி நடத்தப்பட்டு வருகிறது. அப்போட்டியின் முதல் பரிசாக மூன்று பவுன் தங்கம் வழங்கப்பட்டு வருகிறது.*

இப்போட்டியின் முதலாமாண்டில் முதல் பரிசை நடவரசும் (2002), இரண்டாம் ஆண்டில் பெ. சா. சூரியமூர்த்தியும் (2003), மூன்றாம் ஆண்டில் மீண்டும் நடவரசும் (2004) பெற்றனர். இத்தகைய போட்டி புதுக்கவிதையாளர்களிடம் பெரும் வரவேற்பைப் பெற்றிருந்தது.

## 5.3. அஸ்ட்ரோ வானவில்லின் புதுக்கவிதைப் போட்டி

அஸ்ட்ரோ வானவில் ஒளிபரப்பு நிறுவனமாக இருப்பினும் இலக்கிய வளர்ச்சிக்குப் பங்காற்றி வருகிறது என்பது குறிப்பிடத் தக்கது. அஸ்ட்ரோ வானவில், எம்.ஜி.ஆர்., சிவாஜி கணேசன் ஆகியோர் நினைவாக நடத்திய கவிதைப் போட்டியில் புதுக்கவிதை போட்டியையும் இணைத்துக் கொண்டது. இதன்வழி புதுக்கவிதைக்கு வலுவான விளம்பரங்களும் ஆரோக்கியமான அங்கீகாரமும் கிடைத்தன. எம்.ஜி.ஆர். நினைவுப் போட்டியில் பாலகோபாலன் நம்பியார் அவர்களும் சிவாஜி கணேசன் நினைவுப் போட்டியில் கோ. புண்ணியவான் அவர்களும் முதல் பரிசைப் பெற்றனர்.

## 5.4. தேசிய நில நிதி கூட்டுறவுச் சங்கத்தின் புதுக்கவிதைப் போட்டி

தேசிய நில நிதி கூட்டுறவுச் சங்கம், அமரர் வீ. தி. சம்பந்தன் அவர்களின் நினைவாக கடந்த 18 ஆண்டுகளாக இலக்கியப் போட்டிகளை நடத்தி வருகின்றது. அண்மைய காலகட்டத்தில் புதுக்கவிதை அடைந்திருக்கும் வளர்ச்சியும் அதில் ஈடுபாடு காட்டுபவர்களின் எண்ணிக்கையும் கணிசமாக உயர்ந்து வருவதையும் கருத்தில் கொண்டு 2005ஆம் ஆண்டு போட்டியில் முதன் முறையாக புதுக்கவிதைப் போட்டி நடத்தி பரிசுகள் வழங்கப்பட்டன. தொடர்ந்து 2006ஆம் ஆண்டிலும் புதுக்கவிதைப் போட்டி நடத்தப்பட்டு பரிசுகள் வழங்கப்பட்டன.

## 6. புதுக்கவிதை நூல் முயற்சிகள்

பத்தாண்டு காலகட்டத்தில் (1996 - 2006) சுமார் 39 நூல்கள் வெளிவந்துள்ளன. தனிநபர் முயற்சியாக 20 நூல்களும் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்க முயற்சியில் 10 நூல்களும், மலேசிய தேசியப் பல்கலைக்கழக இந்து பிரதிநிதித்துவச் சபையின் ஏற்பாட்டில் இதுவரை 9 நூல்களும் வெளியீடு கண்டுள்ளன.

## 7. மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைகளின் நிலை

புதுக்கவிதை இந்நாட்டின் தமிழ் இலக்கியத்தில் வலுவான இடத்தைப் பிடித்திருக்கிறது என்பதில் ஐயமில்லை. இந்த இலக்கிய வடிவம் நாற்பத்து மூன்று வயதை அடைந்துள்ளது. எதிலும் எதிர்ப்பு இருந்தால்தான், நல்ல தரமான வளர்ச்சி இருக்கும். அதுபோல் கண்டனங்களையும் சர்ச்சைகளையும் வரவாக்கிக் கொண்டு புதுக்கவிதை மற்ற இலக்கிய வடிவங்களோடு சரியாசனம் போட்டு அமர்ந்து விட்டதால் அதனை யாரும் உதாசீனம் செய்ய இயலாது.

புதுக்கவிதைக்கு வரலாறும் நிரந்தரமான இடமும் இருப்பது மகிழ்ச்சியாக இருந்தாலும், இந்த இலக்கிய வடிவத்தில் ஒரு வளர்ச்சியும் முதிர்ச்சியும் அவ்வளவாகக் காணப்படவில்லை. எண்பதுகளிலும் தொண்ணூறுகளின் முற்பகுதியிலும் புதுக்கவிதை பெரிய தேக்கநிலையை அடைந்துள்ளது. மலேசியப் பத்திரிகைகள் புதுக்கவிதைக்கு விளைநிலமாக இருந்தபோதிலும் புதுக்கவிதையின் தரம், முதிர்ச்சி மகிழ்ச்சியளிக்கும் வகையில் இல்லை எனலாம். இத்தகைய தேக்க நிலைக்கும் வீழ்ச்சிக்கும் காரணங்கள் பல இருக்கின்றன.

### 7.1. போராட்டம் குறைவு

தமிழ்நாட்டின் வறுமை, இலங்கையில் கொளுந்து விட்டெரியும் இனக்கலவரம், இலங்கையிலிருந்து வெளியேறி இன்று தமிழ் நாட்டிலும் வெள்ளைக்காரர் நாடுகளிலும் ஏதிலிகளாய் அனுபவித்து வரும் வாழ்க்கைப் போராட்டங்கள் ஆகியவை அவர்களின் இலக்கியப் படையல்களின் உலைக்களன்களாக மாறியிருக்கின்றன. எந்தக் காலத்திலும் வறுமையும், கொடுமையும் துன்பமும்தான் இலக்கியவாதிகளின் கற்பனாதிறனுக்கு தீனியாக இருந்திருக்கின்றன. போராட்டம் இல்லாத வாழ்க்கையில் இலக்கியம் ஒரு பொழுது போக்குக் கருவி. ஆனால், அவசியம் நேரும்போது அதுவே போர்க் கருவியாக மாறி, வீச்சோடு வெளிப்படும். இத்தகைய போராட்டச் சூழலில் நமது தற்காலக் கவிஞர்கள் இல்லை. எனவே, பாடு பொருள்களில் திரட்சியான தெளிவான இலக்கு இல்லை. பரவலாக உணரும் விசயங்களே கருக்களாக அமைகின்றன. பெரும்பான்மை காதல் பிதற்றல்களாகவே அமைகின்றன எனும் குற்றச்சாட்டையும் புதுக்கவிதை எதிர்நோக்கியுள்ளது.

## 7.2. வானம்பாடி இயக்க முன்னோடிகள் ஓய்வு

இராஜகுமாரன், அக்கினி போன்ற முன்னோடிக் கவிஞர் குழு தன்னை ஒரு படி உயர்த்திக் கொண்டு வெவ்வேறு துறைகளில் சென்றதால், வழிகாட்டல் தன்மை குறைந்துவிட்டது. புதிதாக எழுதுவோர் தங்களுக்குத் தெரிந்ததை எழுதிவைத்தனர். இதனால் புதுக்கவிதையின் தரம் குறைந்தது. தரம் குறைந்த காரணத்தினால் முன்னோடிகள் பலர் வழிகாட்ட மறந்து, இத்துறையில் ஓய்வு பெறத் தொடங்கிவிட்டனர்.

## 7.3. தமிழறிவு

மலேசியாவில் ஆறு வருடம் மட்டுமே தமிழை முறையாகக் கற்க வாய்ப்புள்ளது. இடைநிலை, உயர்நிலைப் பள்ளிகளில் தமிழ் கற்க வாய்ப்புகள் குறைவு. அப்படியே தமிழ் கற்க வாய்ப்புக் கிடைத்தாலும், பழந்தமிழ் இலக்கியங்களையும் நம் முன்னோர்களின் இலக்கியங்களையும் சுவைக்க, ஆழ்ந்து அகன்று கற்க நேர ஒதுக்கீடு குறுக்கிடுகிறது. தமிழகத்தில் புதுக்கவிதையில் புகழ்பெற்றவர்கள் யாப்பிலக்கணம், ஆழ்ந்த, அகன்ற தமிழறிவு கொண்டவர்கள். மெத்தப் படித்தவர்களும் அதிகம். இங்கே இவ்விரண்டு சிறப்புகளுமே நம் கவிஞர்களிடம் குறைவு. இதற்கு அரசியல் போக்கும் கல்விக் கொள்கையும் காரணமாக உள்ளன.

## 7.4. நினைத்தவுடன் கவிதை – முறையான பயிற்சி இல்லாமை

எழுத வரும் முன், தொடர்ந்த வாசிப்பு, தீவிர இலக்கியப் பயிற்சி போன்ற முயற்சிகளால் கவிதைகளைச் செதுக்கி செப்பனிட வேண்டும். இவ்வாறு அல்லாமல், நினைத்த மாத்திரத்தில் உள்ளத்தில் தோன்றுவதை எழுதுவதால் கவிதையின் தரம் வீழ்ச்சியடைந்து வருகிறது.

## 7.5. சுய தேடல் குறைவு

வாசிக்கின்ற பழக்கம் அற்று வரும் இக்காலகட்டத்தில் கவிதை சார்ந்த சுய தேடல் கவிதையாளர்களிடம் மிக அபூர்வமாக உள்ளது. ஆகையால், இலக்கிய வளர்ச்சிக்கு ஏற்ப நாம் நம்மை வளர்த்துக்கொள்ள தேடல் மிக அவசியம். பொருளாதாரத் தேடலில் மூழ்கிப்போகும் இவர்களால் கவிதை பரிணாம வளர்ச்சியில் பயணிக்க முடிவதில்லை. இயந்திர வாழ்க்கையில் இலக்கிய நெகிழ்வில்லாமல் இறுகிவிட்டிருக்கிறது.

## 8. மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைகளின் இன்றைய நிலை

தொண்ணூறுகளின் பிற்பகுதியில் - அதாவது 1996இல் நடைபெற்ற 'புதுநோக்கில் புதுக்கவிதைகள்' எனும் கருத்தரங் கிற்குப் பிறகும், அடுத்து மறுமலர்ச்சி காலத்தில் நடத்தப்பட்ட தொடர் புதுக்கவிதை திறனாய்வு கருத்தரங்குகளுக்குப் பிறகும் மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைத் துறையில் மாபெரும் வளர்ச்சி காணப்பட்டுள்ளதாக அந்தந்த காலகட்ட புதுக்கவிதை ஆய்வா ளர்கள் சான்றுகளோடு குறிப்பிட்டுள்ளனர். உதாரணத்திற்கு, மலேசியத் தேசியப் பல்கலைக்கழக மாணவர்களின் 'மெல்லப் பேசும் மேகங்கள்' தலைப்பிலான தொகுப்பு நூலில் 'என் பார்வையில்' எனும் பகுதியில் பச்சைபாலன் அவர்கள், 'கடந்த ஆண்டு புதுக்கவிதைப் போட்டிக்கு 60 படைப்புகள் வந்தன. இந்த ஆண்டு அந்த எண்ணிக்கை 85 ஆக உயர்ந்திருப்பது மகிழ்வைத் தருகிறது. புதுக்கவிதைப் படைப்பில் இளையோரின் ஆர்வம் கூடி வருவதை இது மெய்ப்பிருக்கிறது. தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் திறனாய்வுக் கருத்தரங்குகளும் தமிழ் ஏடுகளும் வழங்கி வரும் வாய்ப்பும் புதுக்கவிதைத் துறை மீது வெளிச்சம் பாய்ச்சி பலரின் கவனத்தை ஈர்த்து வருவதை யாரும் மறுக்கவியலாது' எனக் குறிப்பிடுகின்றார்.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்க ஏற்பாட்டில் நடை பெற்று வரும் இத்தொடர் கவிதைத் திறனாய்வுக் கருத்தரங்குகள் மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைகளுக்கான பொற்காலம் என துணிந்து கூறலாம். இவை புதுக்கவிதை வளர்ச்சிக்காக மேற் கொள்ளப்படுகின்ற நடவடிக்கையாக மட்டுமல்லாமல் அந்தந்தக் காலகட்டத்தில் வெளிவருகின்ற கவிதைகளைப் பத்திரப்படுத்து கின்ற அரிய முயற்சியாகவும் சிறந்த ஆவணங்களாகவும் திகழ் கின்றன.

இன்றைய புதுக்கவிதைகளின் பாடுபொருள்கள் பன்முகங் களைக் கொண்டவையாகவும், குறிப்பாக இனம், தேசம் கடந்த உலகப் பார்வை விசாலமடைந்து வருவதாயும் புதுக்கவிதைகள் காட்டுகின்றன. மேலும், இனமானக் கவிதைகளும், சமூகப் பார்வை கொண்ட கவிதைகளும் புதுக்கவிதையின் தரத்தைத் தூக்கிப் பிடித்திருக்கின்றன எனலாம்.

படைப்பாளிகள் தங்களின் தேடல்களை விரிவுபடுத்திக் கொள்ளவும், தங்களின் படைப்புகளின் மீதான விமர்சனங்களை விசால மனத்துடன் உள்வாங்கிக் கொள்ளவும் தங்களின் பலம் — பலவீனம் ஆகியவற்றை அறிந்து தரமான கவிதைகளைப்

படைக்கவும் இத்திறனாய்வுக் கருத்தரங்குகள் வழிகாட்டியாக அமைந்துள்ளன. இன்றைய சூழலில் எழுச்சி மிக்க, தரமிக்க, வீரிய மிக்க புதுக்கவிதைகள் படைக்கப்பட்டு வருவது மலேசிய புதுக் கவிதையின் மீட்டுருவாக்கத்தில் நம்பிக்கையை ஏற்படுத்து கிறது. ஆனால், கடந்த ஓராண்டு காலமாக புதுக்கவிதைக்கு சிறு தேக்கம் ஏற்பட்டுள்ள சாயல் தெரிகின்ற போதிலும் புதுக்கவிதை வளர்ச்சிக்கு பெரும் பாதிப்பை விளைவிக்கவில்லை என்றே கூறத் தோன்றுகிறது.

2005ஆம் ஆண்டின் பிற்பகுதியில் கவிதையின் போக்கும், நிலையும் குறிப்பிட்ட இளம் தலைமுறையைச் சேர்ந்த படைப் பாளர்களால் நவீன கவிதைத் தளத்திற்கு நகர்த்தப்பட்டுள்ளதை உணரமுடிகின்றது. ஒரு வருட காலத்தோடு தன் ஆயுளை முடித்துக் கொண்ட 'காதல்' எனும் மாத இதழ் நவீன கவிதை களை ஏந்திவரும் களமாக அமைந்திருந்தது. பின்னர் காலாண்டு இதழான 'வல்லினம்' இவ்வாண்டு முதல் வெளிவருகிறது. இதில் பல்வேறு அம்சங்களுடன் நவீன கவிதைகளும் இடம்பெற்றுள்ளன.

ஜெயமோகன், மனுஷ்யபுத்திரன் போன்ற நவீன கவிதை யாளர்களின் வருகையும் அதன் தாக்கமும் இளம் புதுக்கவிதை யாளர்களை நவீன கவிதையின் பால் நாட்டம் கொள்ளச் செய்தி ருக்கிறது எனலாம். குறிப்பிட்ட சில படைப்பாளிகள் மட்டுமே நவீன கவிதைகளை எழுதி வருகின்றனர். இவ்விலக்கிய வட்டம் மிகச்சிறிய வட்டமாகும். இது பரவலான வாசகர்களுக்கும் ஏனைய படைப்பாளிகளுக்கும் முழுமையாகப் போய்ச் சேரவில்லை எனலாம்.

மேலும் இவ்வகை நவீன கவிதைகளில் தனிமனித அந்தரங்க உணர்வுகளுக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. சொந்த மனஅரிப்புகளைச் சொறிந்து விடக்கூடிய கவிதைகளாகவே இந்த நவீன கவிதைகள் உள்ளனவோ எனத் தோன்றும் அளவிற்கு இவ்வகைக் கவிதைகள் பெரும்பான்மை அகவயப்பட்டவையாக உள்ளன. இத்தகைய கவிதைகளில் சமூகப்பார்வை அவ்வளவாகக் காட்டப்படவில்லை எனலாம். நவீன கவிதை முற்றிலும் உரை யாடலை நோக்கி நகர்வதாகவும் கவித்துவம் அதில் குறைவாக உள்ளதாகவும் மூத்த புதுக்கவிதையாளர்களில் ஒருவரான கோ. முனியாண்டி அவர்கள் 'காதல்' இதழின் நேர்காணலின் போது தமது பார்வையில் பட்டதைப் பகிர்ந்து கொண்டுள்ளார். கவிதைத் துறையில் ஏற்படும் இத்தகைய பரிணாம வளர்ச்சியைப் புதிய இலக்கிய வரவாக எண்ணி ஏற்றுப் புதுக்கவிதைக்கு அ ஆ சேர்க்கலாம்.

## 9. மலேசியப் புதுக்கவிதையின் எதிர்காலம்

1964இல் தொடங்கப்பட்ட புதுக்கவிதை முயற்சி 70களின் பிற்பகுதியில் பலனளிக்கத் தொடங்கியது. வானம்பாடி இதழ் புதுக்கவிதையை 'ஓர் இயக்கமாகக்' கருதி, புதுக்கவிதைத் துறையை வளர்த்தது. 80களில் ஒரு தேக்கம் ஏற்பட்டது. ஆனால், 1988க்குப் பிறகு தமிழ் ஓசை, நயனம், உதயம் போன்ற இதழ்களின் ஆதரவால் புதுக்கவிதை புத்துயிர் பெற்றது. இதனால் புதுக்கவிதைக்கு பெரும் ஆதரவும் கவனிப்பும் கிடைத்தன. மரபில் சொல்ல முடியாததை புதுக்கவிதையில் சொல்லமுடியும் என்ற உணர்வு பழம் எழுத்தாளர் களுக்கு உதயமானது. அன்புச் செல்வன், சை. பீர்முகம்மது, மெ. அறிவானந்தன் போன்றவர்கள் புதுக்கவிதை உலகில் கால் பதித்தது, புதுக்கவிதைக்கு ஓர் அங்கீகாரமாகும்.

சமீப காலத்தில் ஹைக்கு மோகம், நவீன கவிதையில் நாட்டம் கவிஞர்களுக்கு ஏற்பட்டிருந்தாலும் புதுக்கவிதையை அது வெகுவாகப் பாதிக்கவில்லை என்றே கூறவேண்டும். மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் கருத்தரங்குகள், பல்கலைக்கழக இந்திய மாணவர்களின் புதுக்கவிதைப் போட்டி, கவிதைத் தொகுப்பு நூல் போன்றவை புதுக்கவிதை வளர்ச்சிக்கு வித்தாக அமைந்து வருகின்றன.

உண்மையில் புதுக்கவிதை வளர்ந்துகொண்டுதான் வருகிறது என்பதை டாக்டர் கா. திலகவதி அவர்களின் 'மொத்தத்தில் மலேசியாவில் புதுக்கவிதை திருப்தி அளிக்கும் வகையில், நம்பிக்கையூட்டும் முறையில் இருந்து வருகிறது' எனும் கூற்று மெய்ப்பிக்கிறது.

## 10. முடிவுரை

புதுக்கவிதை நம் நாட்டில் வேரூன்றத் தொடங்கிவிட்டது. ஆயினும் எல்லா தரப்பினரும் இவ்விலக்கியத் தேரை இழுத்துச் செல்லக் கடமைப்பட்டவர்கள். இது ஒரு தொடர் ஓட்டம். இடையில் இறுகி விடக்கூடாது. அப்புதுக்கவிதைத் தீப்பந்தத்தைக் கையில் ஏந்திக்கொள்ள புது வாரிசுகள் தங்கள் தகுதிகளை உயர்த்திக் கொள்ள தயார் செய்து கொள்ளவேண்டும்.

கருத்தரங்குகளின் கவிதைப் பட்டறையில் கலந்துகொண்டு தங்கள் திறமைகளைப் பட்டை தீட்டிக் கொள்ளவேண்டும். இடைநிலை, உயர்நிலைக் கல்விக்கூடங்களில் பயிலும் இளைய சமுதாயம் புதுக்கவிதை தொடர்பான இலக்கிய நிகழ்வுகளில்

கலந்துகொள்ள முன்வரவேண்டும். புதிய நோக்கோடு, புதுச் சுவையோடு பலதரப்பட்ட விரிவான பாடுபொருள்களோடு கூற வேண்டும் என்னும் சிந்தனையை மனதில் கொண்டு, நம் 'வலியை', நம் மண் ணின் மணத்தைச் சொல்லும் கவிதைகள் இங்கே படைக்கப்பட வேண்டும். இவ்வாறு நம் கவிஞர்கள் செயல் பட்டால், புதுக்கவிதை நம் நாட்டில் வளமுடன் வரலாறு படைக்கும் என்பது உறுதி.

இணைப்பு 1

## வானம்பாடி காலகட்டத்தில் வெளியான தமிழ்ப் புதுக்கவிதை நூல்கள் (1977 - 1987)

| எண் | நூல் | ஆசிரியர் | ஆண்டு |
|---|---|---|---|
| 1. | நெருப்புப் பூக்கள் | எம். ஏ. இளஞ்செல்வன் | மே.1979 |
| 2. | புள்ளிகளைப் புறக்கணிக்கும் புதுக்கோலங்கள் | எம். ஏ. இளஞ்செல்வன், சீ. முத்துசாமி. நீலவண்ணன் | ஆக. 1979 |
| 3. | கோலங்கள் | இரா. தண்டாயுதம் | அக். 1980 |
| 4. | கனா மகுடங்கள் | அக்கினி | ஜூன் 1984 |
| 5. | உணவும் உறவும் | ஏ.எஸ் பிரான்சிஸ் | 1985 |
| 6. | ஓரிரவு மலர்கள் | ஏ. எஸ். பிரான்சிஸ் | 1985 |
| 7. | கல்வெட்டுக்கள் காத்துக் கிடக்கின்றன | ஏ.எஸ். பிரான்சிஸ் | 1985 |

இணைப்பு 2

## வானம்பாடிக்குப் பிந்திய காலகட்டத்தில் வெளியான தமிழ்ப்புதுக்கவிதை நூல்கள் (1998 - 1998)

| எண் | நூல் | ஆசிரியர் | ஆண்டு |
|---|---|---|---|
| 1. | நிழலைச் சுமக்கும் வெளிச்சம் | ப. ராமு & சாரு முரளி | பிப்.1988 |
| 2. | சிறை மீட்கப்படாத சீதைகள் | ப. ராமு | ஜூன் 1988 |
| 3. | இமைக்காத சூரியன்கள் | எம். ஏ. இளஞ்செல்வன் (தொகுப்பாசிரியர்) | டிச.1988 |
| 4. | வெளிச்சம் விலை போகிறது | ஏ. எஸ். பிரான்சிஸ் | டிச. 1988 |
| 5. | சிறகு விரிக்கும் சின்னக் குயில்கள் | ஏ. எஸ். பிரான்சிஸ் (தொகுப்பாசிரியர்) | ஜன.1989 |
| 6. | பிச்சைப்பாத்திரங்கள் | மு. அன்புச்செல்வன் | ஜூன் 1990 |
| 7. | கூவத் துடிக்கும் குயில்கள் | ந. பச்சைபாலன் (தொகுப்பாசிரியர்) | செப். 1990 |
| 8. | மலேசிய இலக்கியம் 1988 | வீ. செல்வராஜ் (தொகுப்பாசிரியர்) | 1990 |
| 9. | புதிய சாசனங்கள் | ஜெ. தங்கதுரை (தொகுப்பாசிரியர்) | ஜூலை 1991 |
| 10. | கண்ணாடிச் சிதறல்கள் | சீ.. அருணாசலம் | மே. 1992 |
| 11. | ஒரு குளத்தின் அலைகள் | ப. ராமு | அக். 1992 |
| 12. | கடாரப் பூக்கள் | வட மலேசியப் பல்கலைக்கழகம் | 1992 |
| 13. | மலேசிய இலக்கியம் 1989 / 90 | வீ. செல்வராஜ் (தொகுப்பாசிரியர்) | 1992 |
| 14. | ஊசிப்போன உறவுகள் | ஏ.எஸ். பிரான்சிஸ் | ஜன. 1993 |
| 15. | சிகரங்களும் பள்ளத்தாக்குகளும் | ஏ.எஸ். பிரான்சிஸ் | ஜன. 1993 |
| 16. | ஒரு கவிதை காதலாகின்றது | சீ. அருணாசலம் | ஏப். 1993 |
| 17. | புதுவானம் புலர்ந்தது | ஏ.எஸ் பிரான்சிஸ் | ஆக.1993 |

| | | | |
|---|---|---|---|
| 18. | வானவில் | ஜெ. தங்கதுரை (தொகுப்பாசிரியர்) | அக்.1993 |
| 19. | நிலவொளி மலர்கள் | சி. சொக்கலிங்கம் | 1993 |
| 20. | மலேசியத் தமிழ் இலக்கியம் 1991 / 1992 | வீ செல்வராஜ் (தொகுப்பாசிரியர்) | 1993 |
| 21. | மலேசியத் தமிழ் இலக்கியம் 1993 / 1994 | வீ செல்வராஜ் (தொகுப்பாசிரியர்) | 1995 |
| 22. | பயணங்கள்! பாதைக்காக அல்ல! | சிமா. இளங்கோ | ஜன. 1996 |
| 23. | மலேசியத் தமிழ் இலக்கியம் 1995 / 1996 | வீ. செல்வராஜ் (தொகுப்பாசிரியர்) | 1997 |
| 24. | சிறை மீண்ட சிற்பங்கள் | இந்திய பிரதிநிதித்துவச் சபை ம. தே. ப. (ஆசிரியர் குழு) | 1997 |
| 25. | மரண இரவுகள் | சீ. அருணாசலம் | 1997 |
| 26. | பரிதிதாசன் கருவிதைகள் | பரிதிதாசன் | அக்.1997 |
| 27. | இரவின் நிறம் வெண்மை | ப. ராமு | மார்ச். 1998 |
| 28. | நிலாச் சோறு | ராசன் கோபால் & அருண் (தொகுப்பாசிரியர்) | நவ.1998 |
| 29. | மறுநடவு | சு.ந. மாயவன் | 1998 |

இணைப்பு 3

## புதுமலர்ச்சி காலகட்டத்தில் வெளியான புதுக்கவிதை நூல்கள் (1999 - இன்றுவரை)

| எண் | நூல் | ஆசிரியர் | ஆண்டு |
|---|---|---|---|
| 1. | சிறை | நாகமணியம் | டிச.1999 |
| 2. | மலேசியத் தமிழ் இலக்கியம் 1997 / 1998 | வீ. செல்வராஜ் (தொகுப்பாசிரியர்) | 1999 |

| | | | |
|---|---|---|---|
| 3. | உறவாடும் உணர்வுகள் | இந்தியப் பிரதிநிதித்துவ சபை ம. தே. ப 1998 / 1999 (ஆசிரியர் குழு) | 1999 |
| 4. | கடலோரக் கருத்தரங்கு கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் | ஜூன் 2000 |
| 5. | லுமுட் கடலோரக் கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் | அக். 2000 |
| 6. | தைப்பிங் மலையோரக் கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் | டிச. 2000 |
| 7. | விடியலை நோக்கும் விழுதுகள் | இந்தியப் பிரதிநிதித்துவ சபை ம. தே. ப. 1999 / 2000 (ஆசிரியர் குழு) | 2000 |
| 8. | கேமரன் மலையோரக் கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் | மார்ச் 2001 |
| 9. | மலாக்கா கடலோரக் கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் | செப்.2001 |
| 10. | கரைதேடும் அலைகள் விழுதுகள் | இந்தியப் பிரதிநிதித்துவ சபை ம. தே. ப. 2000 / 2001 (ஆசிரியர் குழு) | 2001 |
| 11. | குளுவாங் கருத்தரங்கு கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் | மார்ச். 2002 |
| 12. | பெட்டாலிங் ஜெயா கருத்தரங்கு கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் | அக். 2002 |
| 13. | மெல்லப் பேசும் மேகங்கள் | இந்திய பிரதிநிதித்துவ சபை ம.தே.ப. 2001 / 2002 | 2002 |
| 14. | விண்மீன்கள் | இந்திய பிரதிநிதித்துவச் | 2003 |

| | | | |
|---|---|---|---|
| | | சபை ம. தே. ப. | |
| 15. | நினைத்துப் பார்க்கிறேன் | எஸ். தினகரன் | ஜன. 2003 |
| 16. | உன்னில் உலகம் | ஏ.எஸ். பிரான்சிஸ் | மே. 2003 |
| 17. | முகவரி தேடும் முகில்கள் | இந்திய பிரதிநிதித்துவ சபை ம. தே. ப. | 2004 |
| 18. | போர்ட்டிக்சன் பினாங்கு கருத்தரங்கு கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் | பிப். 2004 |
| 19. | தஞ்சோங் மாலிம் கருத்தரங்கு கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியந் தமிழ் எழுத்தாளர் சங்கம் | ஜூலை 2004 |
| 20. | மலாக்கா ஆயர் குரோ கருத்தரங்கு கவிதைகள் | புதுக்கவிதை திற. குழு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் | பிப்.2005 |
| 21. | இலக்கிய வாநில் இளைய நிலாக்கள் | இந்திய பிரதிநிதித்துவச் சபை ம. தே. ப. | 2005 |
| 22. | உனக்கும் சேர்த்து வாசிக்கிறேன் | செந்தில்நாதன் | மார்ச் 2005 |
| 23. | கரை கடந்த கனவு | ஏ.எஸ். பிரான்சிஸ் | மே 2005 |
| 24. | படிமக் குறிப்புகள் | செ. குணாளன் | ஜூலை 2005 |
| 25. | இந்த மூங்கில்களில் | ம.தே.ப. | 2006 |
| 26. | விழி | ஏ.எஸ். பிரான்சிஸ் | ஜன.2006 |
| 27. | உன் பெயர் நான் | பா. அ. சிவம் | ஆக.2006 |
| 28. | நீரூற்றைத் தேடி | வெ. தேவராஜூலு | செப்.2006 |
| 29. | மீட்பு | அகிலன் லெட்சுமணன் | 2006 |
| 20. | சுடர் மின்னல் | பொன் நாவலன் | 2007 |
| 31. | தமிழே உன்னில் கண்டேன் | ரா. அந்தோணிசாமி | 2007 |

# தொண்ணூறுகளுக்குப்பின் மலேசியத் தமிழ் நாவல்கள் (1990 - 2007)

(இணைப் பேராசிரியர் முனைவர் வே. சபாபதி)

## 1. இக்கட்டுரையின் நோக்கம்:

இக்கட்டுரை பின்வரும் நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. அவை:

- தொண்ணூறுகளிலிருந்து இன்றுவரையில் மலேசியத் தமிழிலக்கியத்தில் நாவல்பற்றிய பொதுவான செய்திகளை விளக்குதல்,
- தொண்ணூறுகளுக்குப்பின் மலேசியத் தமிழ் நாவல் வளர்ச்சியில் காணப்படும் முக்கியத் திருப்பு முனைகள், கிரியாஊக்கிகள், நிகழ்வுகள் ஆகியவற்றை அறிந்து விளக்குதல்,
- தொண்ணூறுகளுக்குப்பின் மலேசியத் தமிழ் நாவல் வளர்ச்சிக்கு அதிகமான பங்களிப்பினைச் செய்துள்ள நாவலாசிரியர்களை அடையாளங்கண்டு குறிப்பிடுதல்,
- தொண்ணூறுகளுக்குப்பின் வெளிவந்த மலேசியத் தமிழ் நாவல்களின் எண்ணிக்கையில் காணப்படும் நாவல், குறுநாவல் பற்றி ஒருமைப்பாடு, வேறுபாடு ஆகியவற்றை விளக்குதல்,
- தொண்ணூறுகளுக்குப்பின், குறிப்பாக அண்மைய பத்தாண்டுகளில் (1997 — 2007) வெளிவந்த மலேசியத் தமிழ் நாவல்களின் உள்ளடக்கத்தின் முக்கியப் போக்குகளை அறிவதோடு, அவற்றின் தரமும் திறமும் பற்றி விளக்குதல்,

- தொண்ணூறுகளுக்குப்பின் வெளிவந்த மலேசியத் தமிழ் நாவல்களின் (1997—2007) உள்ளடக்கத்தில் காணப்படும் நிகழ்காலச் சமுதாயத்தின் சமகாலப் பிரச்சினைகளை அடையாளங்கண்டு விளக்குதல்,
- தொண்ணூறுகளுக்குப்பின் வெளிவந்த மலேசியத் தமிழ் நாவல்களின் (1997 — 2007) உள்ளடக்கத்தில் வெளிப்படும் மலேசிய மண்ணின் மணத்தையும் அடையாளத்தையும் மலேசியத் தன்மைகளையும் அடையாளங்கண்டு வெளிப்படுத்துதல் ஆகியன.

## 2. நாவல் இலக்கியம்

*சமுதாயத்தைச் சிறப்பாகவும் ஆழமாகவும் சித்திரிக்கின்ற, பிரதிபலிக்கின்ற தற்கால இலக்கிய வடிவங்களுள் நாவல் இலக்கியத்திற்கு எப்பொழுதுமே தனியிடம் உண்டு. ஒவ்வொரு காலப் பகுதியிலும் நிகழும் சமுதாய நிகழ்வுகளைப் பதிவுசெய்யும் முக்கிய ஆவணமாகத் திகழ்வது நாவல் இலக்கியமே. நிகழ்காலச் சமுதாயம் எப்படி இருக்கிறது என்பதனை எதார்த்தபூர்வமாகப் பிரதிபலித்துக் காட்டுவதோடு சமுதாயம் இப்படித்தான் இருக்கவேண்டும் என்ற எதிர்பார்ப்பை வெளிப்படுத்துவதாகவும் நாவல்கள் அமைகின்றன. மெத்தப்படித்தவர், ஓரளவு படித்தவர் என அனைவரையும் எளிதில் அது சென்றடைவதால் சமுதாயத்தில் இன்று நாவலுக்கென்று தனி மதிப்பும் மரியாதையும் ஏற்பட்டுவிட்டது. அதனால், பழஞ் சமூகத்தில் காவியம் பெற்றிருந்த இடத்தைத் தற்காலச் சமூகத்தில் நாவல் பெற்றிருப்பதில் வியப்பேதுமில்லை.*

*சமூகவாழ்வின் அனைத்துக் களங்களுக்குள்ளும் நுழைந்து வாழ்வின் அர்த்தங்களைத் தேடுவதும் அர்த்தங்கள் அழிந்துவிட்ட நிலையில் வாழ்வின் அவலத்தைச் சொல்வதும் எதிர்கால நோக்கில் வாழ்வின் நிறைவை எடுத்துக்காட்டுவதும் நாவலின் செயற்பாடு களாகக் கருதப்படுகின்றன. எனவே, இன்றைய நிலையில் சமூக வாழ்க்கையிலும் தனிமனித வாழ்க்கையிலும் காணப்படும் பிரச்சினை களையும் அவற்றுக்குத் தீர்வினையும் சிந்திப்பதற்குத் தகுந்த வாய்ப்பினை வாசகர்களுக்கு நாவல் இலக்கியம் ஏற்படுத்தித் தருகின்றது. இத்தகைய சிறப்பு வாய்ந்த நாவல் இலக்கியம் மேனாட்டில் தோன்றியது; இந்திய மண்ணிற்கு ஆங்கிலேயர் ஆட்சியில் இறக்குமதி செய்யப்பட்டது. தமிழிலும் தோன்றி, அது தொடர்ந்து வளர்க்கப்பட்டு வருகின்றது. தமிழகத்தின் தாக்கத் தினால் அது மலேசிய மண்ணிலும் தமிழில் காலூன்றித் தொடர்ந்து வளர்க்கப்பட்டு வருகின்றது.*

## 3. தமிழகத்தில் நாவல் இலக்கியம்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் (1879) தமிழில் நாவல் இலக்கியம் தோன்றி வளரத் தொடங்கியது. **மாயூரம் வேத நாயகம் பிள்ளை** (பிரதாப முதலியார் சரித்திரம்), **அ. மாதவையா** (பத்மாவதி சரித்திரம்), **ராஜம் ஐயர்** (கமலாம்பாள் சரித்திரம் அல்லது ஆபத்துக்கிடமான அபவாதம்), **தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை** (கமலாக்ஷி சரித்திரம், ஞானாம்பிகை), **பண்டித நடேச சாஸ்திரி** (தீனதயாளு, திக்கற்ற இரு குழந்தைகள்), **சு. வை. குரு சாமி சர்மா** (பிரேம கலாவத்யம்) போன்றோர் தொடக்க காலத்தில் நாவல் இலக்கியம் இன்னது என்று தமிழ் மக்களுக்கு உணர்த்தும் முயற்சியில் வெற்றி பெற்றனர். மேற்கத்திய நாகரிகத்தின் தாக்குதலால் தமிழ் மக்களின் வாழ்வில் ஏற்பட்ட சிதைவுகளை இவர்களின் நாவல்கள் வெளிப்படுத்தின. எனினும், இவர்களைத் தொடர்ந்து நாவல் எழுத வந்தவர்களிடம் காணப்பட்ட மேனாட்டுத் தாக்கத்தினால் இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் மர்மமும் துப்பறிதலும் தமிழ் நாவலின் முக்கியப் பண்புகளாக மாறின. இதனால் பெரும்பாலான தமிழ் நாவல்கள் தமிழர்களின் வாழ்வையோ அதில் ஏற்பட்ட நெருக்கடிகளையோ அல்லது பிரச்சினைகளையோ காட்டத் தவறின. இதனை "அக்கால எழுத்தாளர்கள் நாவல் எனும் புதிய இலக்கிய வடிவத்தை மோகித்து நின்றார்களேயன்றி அதன் பேராற்றலைப் புரிந்து கொண்டார்களில்லை" எனவரும் கூற்று உணர்த்துகின்றது.[1] எனவே, இக்காலப் பகுதியில் நாவல் இலக்கியத்தை எந்த அளவுக்கு வீழ்ச்சியுறச் செய்ய முடியுமோ அந்த அளவிற்கு வீழ்ச்சியுறச் செய்தனர்.

## 4. மலேசியாவில் தமிழில் நாவல் இலக்கியம்

தமிழகத்தில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ் நாவல் வளர்ச்சியில் ஏற்பட்ட வீழ்ச்சியின்போது தான் மலேசியாவில் தமிழில் நாவல் இலக்கியம் மெல்லத் தோன்றி வளரத் தொடங்கியது. மலேசியாவின் முதல் தமிழ் நாவல் இலக்கியம் **மீனாட்சி அல்லது மலாய்நாட்டு மங்கை** எனும் தலைப்பில் 312 பக்கங்களில் 1916ஆம் ஆண்டில் கா. கந்தையா பிள்ளை என்பவரால் கிள்ளானில் நூல் வடிவில் வெளியிடப்பட்டது.[2] 1916க்கும் 1938க்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் ஏறத்தாழ இருபத்தைந்து நாவல்கள் இங்கு நூல் வடிவில் வெளியாகியுள்ளன. இவற்றுள் மிகுதியானவை அப்போதைய மலாய்நாட்டுப் பத்திரிகைகளில் தொடர்கதைகளாக வெளிவந்தவை என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இவை தமிழகம், இலங்கை ஆகிய நாடுகளிலிருந்து வந்த குடியேறிகளால் எழுதப்

பட்டுள்ளன. எனவே, இந்நாவல்களின் கதை, கரு, களம், பின்னல் கதைமாந்தர், உரையாடல், மொழிநடை போன்றவற்றில் தமிழக, இலங்கைச் சார்புகளே மேலோங்கிக் காணப்படுகின்றன. இவற்றில் மலேசியச் சூழல்களோ கால, களப்பின்னணிகளோ மிகவும் அருகியே காணப்பட்டன. தமிழ்நாவலின் வீழ்ச்சிக் காலத்தில் தமிழகத்தில் காணப்பட்ட அத்தனைப் போக்குகளும் பண்புகளும் தொடக்க காலத்தில் எழுந்துள்ள மலேசியத் தமிழ் நாவல்களிலும் காணப் பட்டன. துப்பறியும் போக்கு, மர்மப் பண்பு, இரட்டைப் பெயரிடும் போக்கு, கதையோடு தொடர்பற்ற பகுதிகளை இணைத்தல், கதையின் இடையிடையே நாவலாசிரியர் குறுக்கிட்டுப் பேசுதல் போன்றவை அவற்றுள் சில.

விடுதலைக்குப் பின்னர் மலேசியத் தமிழ் நாவல்களுள் மிகுதியானவை மலேசியாவிலேயே பிறந்து வளர்ந்து தமிழ் கற்ற இளைய தலைமுறையினரால் எழுதப்பட்டுள்ளன. இவற்றுள் மலேசிய மண்ணின் மணம் முழுமையாகக் கமழ்வதனைக் காண முடிகின்றது. இவற்றுள் பல நாவல்களில் வயிற்றுப் பிழைப்புக்காக இந்நாட்டில் குடியேறிய இந்தியச் சமுதாயத்தின் உள்ளும் புறமும் அலசி ஆராய்வனபோல் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. விடுதலைக்குப் பின்னரிலிருந்து தொண்ணூறு வரை (1957 — 1990) ஒவ்வொரு காலகட்டத்திலும் மலேசிய இந்தியச் சமூகம் அடைந்த வளர்ச்சியும் தளர்ச்சியும் அடையாளங் காணப்பட்டு அவற்றுக்கான காரணகாரியங்களையும் பொருத்தமான தீர்வுகளையும் கூறும் வகையில் அமைந்துள்ள நாவல்களுள் **துயரப்பாதை (1958), செம்மண்ணும் நீலமலர்களும் (1969), இலட்சியப் பயணம் (1975), பசித்திருக்கும் இளங்கொசுக்கள் (1978), மரவள்ளிக்கிழங்கு (1979), வானத்து வேலிகள் (1982), பயணங்கள் முடிவதில்லை (1988)** ஆகியன குறிப்பிடத்தக்கன. இந்நாவல்களில் தோட்டப்புற மக்களின் துன்பவாழ்வியல், தோட்டத் துண்டாடல் பிரச்சினை, சமூகத்தில் காணப்படும் செல்லரித்த போக்குகள், இளைய தலைமுறையினரிடம் காணப்படும் கூடாப் பழக்கவழக்கங்கள், மேலோங்கிவரும் பொருளியல் சிந்தனைகள், தனிமனிதச் சிக்கல்களும் உணர்வு களும், அரசியல்வாதிகளின் முரண்பட்ட போக்குகள் போன்றவை காட்டப்பட்டுள்ளன.

## 5. தொண்ணூறுகளில் மலேசியத் தமிழ் நாவல் இலக்கியம்

தொண்ணூறுகளில் மலேசியத் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சி யானது தரத்திலும் எண்ணிக்கையிலும் ஏறுமுகம் கண்டதாக உள்ளது குறிப்பிடத்தக்கது. விடுதலைக்குப்பின் ஒவ்வொரு பத்தாண்டிலும் நாவல்களின் எண்ணிக்கை கூடியுள்ளதனைக்

காணமுடிகின்றது. அவ்வகையில் எண்பதுகளில் நூல் வடிவில் வெளிவந்துள்ள நாவல்களின் எண்ணிக்கை மொத்தம் 27 ஆகும். ஆனால், இந்த எண்ணிக்கையானது தொண்ணூறுகளில் (1990 - 1992) 43 ஆக உயர்ந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இவற்றுள் மிகுதி யானவை குறுநாவல்களாகவே அமைந்திருப்பது இங்கு குறிப்பிடத் தக்கது. குறைவான படைப்புகளே பக்கங்களால் நீண்டு நாவல்களாக அமைந்துள்ளன.

## 5.1. நாவல், குறுநாவல் ஆகியவற்றிற்கான விளக்கம்

பொதுவாக நாவல் (Novel) என்பது நெடுங்கதையாகக் கருதப் படுகின்றது. குறுநாவல் (Novellette) அதனினும் சிறியதாகக் கருதப் படுகின்றது. இவ்விரண்டுக்குமிடையே உள்ள வேறுபாட்டைத் தமிழில் எழுத்தாளர்களும் திறனாய்வாளர்களும் இன்னும் தெளிவாக உணரவில்லை என்ற கருத்து உண்டு.[3] நாவலைவிடச் சிறியதாய், சிறுகதையைவிடப் பெரியதாய் அமைந்திருப்பது குறுநாவல் என்று பொதுவாக விளக்கம் தரப்படுகின்றது. ஆனால், நாவல், குறுநாவல் இரண்டிற்குமிடையே காணப்படும் வேறு பாட்டை வெறும் பக்க அளவால் மட்டும் அளவிடக்கூடியதன்று. இதனைச் **"சிறுகதையிலும் பார்க்க நீளமானதாகவும் நாவல் களிலும் பார்க்கக் குறுகியதாகவும் உள்ள கதை அமைப்பே குறு நாவல் என விளங்கிக் கொள்ளுதல் பாமரத்தனமானது"**[4] என வரும் பகுதியால் அறியலாம். மேலும், **"நாவலின் குறுக்கமும் சிறுகதையின் நீட்சியும் குறுநாவலை உருவாக்கியிருக்குமோ என்ற ஐயம் எழுவது இயற்கை"**[5] எனவரும் பகுதியாலும் **"சிறுகதைக்கும் நாவலுக்கும் பிறந்த குழந்தையாகக் குறுநாவலைக் கருதலாம்"**[6] என வரும் பகுதியாலும் அறியலாம். மேலைநாடுகளில் குறு நாவலுக்கான விளக்கத்தையும் இலக்கணத்தையும் கண்டு தெளிந் துள்ளனர். ஆனால், தமிழில் இதற்கான விளக்கமும் இலக்கணமும் இன்னும் முறையாகவும் முழுமையாகவும் புரிந்துகொள்ளப்பட வில்லை. அதனால் தமிழ்ப்படைப்பாளர்கள் மத்தியில் அதுபற்றிய ஐயங்கள் தீர்க்கப்படாமல் உள்ளன.

குறுநாவல் நாவலின் இலக்கணங்களைப் பெற்று பக்க அளவில் சிறியதாக அமைந்திருந்தாலும் கதை நிகழ்ச்சிகளுக்கு முதன்மை கொடுத்துப் படைக்கப்பட்டிருக்கும் தன்மையைப் பெற்றது. குறுநாவலில் ஒரு கருத்தை முழுமையாக விளக்கப்படும் அளவுக்குக் கதை நிகழ்ச்சிகள் பலவாக அமைக்கப்பட்டிருக்கும். கதைமாந்தர்களின் பண்பில் பல கோணங்கள் விவரிக்கப்படாமல் குறிப்பிட்ட சில பண்புகள் மட்டுமே விளக்கப்பட்டிருக்கும். தேவையற்ற வருணனை, விளக்கம், செய்தி, கதைமாந்தர், உரை

யாடல், சொற்றொடர் போன்றவை அதிகளவு காட்டப்படாது. கிளைக்கதைகளை உருவாக்காது முதன்மைக்கதையிலேயே முழுக் கவனம் செலுத்தப்பட்டிருக்கும்.

தமிழில் குறுநாவல் என்ற பிரிவைத் தொடங்கிய எழுத்தாளர் யார் என்பது சரியாகத் தெரியவில்லை என்ற கருத்தும் ஏறத்தாழ 1960ஆம் ஆண்டளவில் ஏற்பட்டிருக்கலாம் என்று தோன்றுகின்றது என்ற கருத்தும் இங்கு கருதத்தக்கது.[7] தொடக்ககாலத்தில் தமிழில் **கலைமகள், அமுதசுரபி** போன்ற இதழ்கள் குறுநாவலை வளர்த் துள்ளன. காலப்போக்கில் **மங்கை, மங்கையர் மலர், மஞ்சரி, தீபம், தாமரை** போன்ற இதழ்களும் குறுநாவலை வளர்த்துள்ளன. குறுநாவலை மலேசியாவில் **மயில், இதயம், நயனம்** போன்ற வார, மாத இதழ்களும், வெளிவரும் எல்லா நாளிதழ்களும் வளர்த்துள்ளன. இன்றைய நிலையில் குறுநாவல்கள் வாசகர் களின் ஆர்வத்தையும் காலச்சூழலின் தேவையையும் கருதியே படைக்கப்படுகின்றன.

மலேசியத் தமிழ்ப் படைப்பாளர்கள் பலருக்குக் குறுநாவல் பற்றிய அறிவும் தெளிவும் இருப்பதாக இளம்பிறை எம். ஏ. ரஹ்மான் அவர்கள் **வானம் காணாத விமானங்கள்** (1999) எனும் நூலுக்கு எழுதியுள்ள முன்னுரையில் குறிப்பிட்டுள்ளதானது தொண்ணூறு களில் மலேசியத் தமிழ் நாவலாசிரியர்கள், மலேசியத் தமிழ் நாவல் இலக்கியம் பற்றிய நல்ல தகுதி மதிப்பீடாக அமைந்துள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது. தொண்ணூறுகளில் மலேசியாவில் மிகுதியான குறுநாவல்கள் வெளியீடு கண்டதற்கு அதில் ஏற்பட்டுள்ள பிடிப்பும் தெளிவும் ஒரு காரணம் எனலாம்.

## 5.2. தொண்ணூறுகளுக்கு முந்தியவை நூல்வடிவம் பெறுதல்

தொண்ணூறுகளில் பதிப்பிக்கப்பட்ட நாவல்களுள் சில ஏற்கெனவே எழுபதுகளிலும் எண்பதுகளிலும் இதழ்களில் தொட ராகவும் நூலாகவும் வெளிவந்தவை. அவ்வகையில் ந. சந்திரனின் இதயரோஜா (1991), மா. இராமையாவின் **அழகின் ஆராதனை** (1992), **சுவடுகள்** (1994), **சங்கமம்** (1995), நா. ஆ. செங்குட்டுவனின் **விடியலுக்காக** (1998), **விலங்கு** (1998), **நெருப்புக்கொடிகள்** (1998), எம். ஏ. இளஞ்செல்வனின் **மோகங்கள்** (1999), **பசித்திருக்கும் இளங்கொசுக்கள்** (1999), **கனகாம்பரமும் கிளிஞ்சல் மலர்களும்** (1999) ஆகியன இவ்வகையில் அமைகின்றன.

## 5.3. தொகுப்புகளாக வெளிவந்த மலேசியத் தமிழ் நாவல்கள்

தொண்ணூறுகளில் வெளிவந்துள்ள நாவல்களின் அமைப்பு முறையில் குறிப்பிடத்தக்க தன்மை காணப்படுகின்றது. நான்கு நூல்கள் குறுநாவல்களின் தொகுப்பாக வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள் ஒவ்வொன்றிலும் ஒன்றுக்கு மேற்பட்ட குறுநாவல்கள் கொண்டு தொகுக்கப்பட்டுள்ளன. அவை **வா! அருகில் வா!** *(1990)*, **விடியலுக்காக** *(1998)*, **கோடுகள் கோலங்களானால்** *(1998)*, **வானம் காணாத விமானங்கள்** *(1999)* ஆகியன. இவற்றுள் முதலாவதான **வா! அருகில் வா!** எனும் தொகுப்பில் **வா! அருகில் வா!, நெஞ்சுக்குத் தெரியும்** ஆகிய இரண்டு குறுநாவல் களும் விடியலுக்காக எனும் தொகுப்பில் **விடியலுக்காக, விலங்கு** ஆகிய இரண்டு குறுநாவல்களும் கோடுகள் கோலங்களானால் எனும் தொகுப்பில் **கோடுகள் கோலங்களானால், நொண்டிப் பறவை** ஆகிய இரண்டு குறுநாவல்களும் வானம் காணாத விமானங்கள் எனும் தலைப்பில் **வானம் காணாத விமானங்கள், மோகங்கள், பசித்திருக்கும் இளம் கொசுக்கள், கனகாம்பரமும் கிளிஞ்சல் மலர்களும்** ஆகிய நான்கு குறுநாவல்களும் தொகுக்கப் பட்டுள்ளன. தவிர பேராசிரியர் ரெ. கார்த்திகேசு அவர்கள் தம்முடைய இன்னொரு தடவை, ஊசி இலைமரம் ஆகிய இரு தொகுப்பு நூல்களில் சில குறுநாவல்களைத் தொகுத்துத் தந்துள்ளதும் இங்கு குறிப்பிடத்தக்கது. இன்னொரு தடவை என்னும் தொகுப்பு நூலில் **நல்லவராவதும் தீயவராவதும், ராக தேவதை** ஆகிய இரு குறுநாவல்களையும் ஊசி இலைமரம் என்னும் தொகுப்பில் **புழுத்துளைகள், தீக்காற்று** ஆகிய குறுநாவல்களையும் சேர்த்துள்ளார். படைப்பாளிகள் தங்கள் படைப்புகள் இதழ்களிலேயே மக்கி மடிந்து விடக்கூடாது; கண்டிப்பாக நூல் வடிவில் வரவேண்டும் என்ற நன்னோக்கத்தில் இவ்வாறு ஒரே நூலில் ஒன்றுக்கு மேற்பட்ட குறு நாவல்களைத் தொகுத்து வெளியிட்டுள்ளதனைக் காணமுடிகின்றது.

## 5.4. மலேசியத் தமிழ்ப் பெண் நாவலாசிரியர்கள்

தொண்ணூறுகளில் வழக்கம்போலவே பெண் நாவலா சிரியர்களின் பங்களிப்பு நாவல்துறையில் மிகக் குறைவாகவே உள்ளது. எனவே, பெண் நாவலாசிரியர்கள் எழுதியுள்ள படைப்புகள் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன. தொண்ணூறுகளில் இரு பெண் நாவலாசிரியர்களே நாவல் எழுதியுள்ளதனைக் காண முடிகின்றது. எழுத்தாளர் பாவையின் (புஷ்பலீலாவதி) **கோடுகள்**

***கோலங்களானால்*** *(1998)* என்ற இரண்டு குறுநாவல்கள் அடங்கிய நூலும் உம்மு சல்மாவின் **ஓடும் நதி** ஆகிய இருவரைத்தவிர வேறு எந்தப் பெண் நாவலாசிரியரையும் காணமுடியவில்லை. மலேசியத் தமிழ் நாவலில் காணப்படும் பலவீனமாகவே இதனைக் கருத வேண்டும்.

## 5.5. நாவல் வெளிவராத ஆண்டு 1996

தொண்ணூறுகளில் 1996இல் கட்டுரையாளர் அறிந்தவரை நூல்வடிவில் எந்தவொரு நாவலும் வெளிவந்ததாகத் தெரிய வில்லை. அவ்வாண்டில் பத்திரிகைகளில் தொடர்கதைகள் வெளி வந்துள்ளதனைக் காணமுடிகின்றது. ஆனால், அவை பத்திரிகை களில் வெளிவந்ததோடு, நூலுருவம் பெறாமல் அப்படியே பத்திரிகை களிலேயே தங்கிவிட்டன. அவ்வாண்டில் எந்தவொரு நாவலும் நூல்வடிவில் வெளிவராததற்குச் சரியான காரணம் என்னவென்று அறியமுடியவில்லை. படைப்பாளர்களின் மத்தியில் படைப்புகளை நூல்வடிவில் கொண்டு வராததற்குப் போதிய பணம் இல்லாமையும், சரியான வழிகாட்டுதல் படைப்பாளர்க்குக் கிடைக்காமையும் முதன்மைக் காரணங்களாகக் குறிப்பிடலாம். வாசகர்களின் மத்தியில், குறிப்பாக இளைஞர்களிடையே நாளுக்குநாள் நலிவடைந்துவரும் வாசிப்புப்பழக்கமும் நூல்வாங்கி ஆதரிக்கும் போக்கும் நாளுக்கு நாள் குறைந்து வருவதும், இணையம் போன்ற மின் ஊடகங்களில் தீவிரக் கவனம் செலுத்தி அதிலேயே மூழ்கி, சிக்கிக்கொள்ளும் போக்கும் இந்நிலை ஏற்படக் காரணங்களாக இருக்கலாம்.

## 5.6. மலேசியத் தமிழ் நாவல் வளர்ச்சிக்கு ஊக்கமளித்த நிகழ்வுகள்

தொண்ணூறுகளில் மலேசியத் தமிழ் நாவல் இலக்கியத் திற்கு ஊக்கமும் எழுச்சியும் தரும் வகையில் பல இலக்கிய முயற்சிகள் நடந்தேறியுள்ளன. இக்காலப்பகுதியில் நாவல்களின் எண்ணிக்கை உயர்வுக்கு இவ்விலக்கிய முயற்சிகளும் காரணங் களாக அமைந்திருந்தன எனில் மிகையில்லை. இனி, அவை ஒவ்வொன்றாக விளக்கப்படுகின்றன.

### 5.6.1. மலேசியத் தமிழ் நாவல் கருத்தரங்கு (1992)

மலேசியத் தமிழ் நாவல் வரலாற்றில் முதன்முறையாகத் தேசிய அளவில் இக்கருத்தரங்கு பிப்ரவரி, 1992இல் மலாயாப்

பல்கலைக்கழக, இந்திய ஆய்வியல் துறையினரின் பெருமுயற்சியின் விளைவாக ஏற்பாடு செய்யப்பட்டது. ஒருநாள் நிகழ்வாக நடந்தேறிய இக்கருத்தரங்கில் மலேசியத் தமிழ் நாவல் இலக்கியம் தொடக்கநாள் முதல் முழுமையாக ஆய்வுக்குட்படுத்தப்பட்டது. மலேசியத் தமிழ் நாவலின் தரம், திறம் ஆகியவற்றைக் கண்டறியும் நோக்கத்தில் நடத்தப்பட்டது. இக்கருத்தரங்கில் மலேசியத் தமிழ் நாவலையொட்டிய ஐந்து கட்டுரைகள் பல்வேறு தலைப்புகளில் ஆய்வாளர்களால் வாசிக்கப்பெற்று கருத்துப் பரிமாற்றமும் செய்யப்பட்டது.[8] பேராசிரியர் ரெ. கார்த்திகேசு, டாக்டர் வே. சபாபதி, டாக்டர் எம். கிருஷ்ணன், டாக்டர் லெட்சுமி மீனாட்சி சுந்தரம் ஆகியோர் இக்கட்டுரைகளைப் படைத்தனர். எழுத்தாளர் களும் இலக்கிய ஆர்வலர்களும் பொதுமக்களும் என நூற்றுக் கணக்கானோர் இக்கருத்தரங்கில் கலந்துகொண்டனர். இக்கருத்தரங்கு நாவல் எழுதிக்கொண்டிருந்தோர்க்கும் எழுத விரும்புவோர்க்கும் மிகுந்த பயனைத்தந்த நிகழ்வாக அமைந்திருந்தது. இந்நிகழ்வுக்குப் பிறகு வெளிவந்துள்ள நாவல்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ள தோடு அவற்றின் தரமும் கூடியுள்ளது. ஆக, மலேசியத் தமிழ் நாவல் கருத்தரங்கு மலேசியத் தமிழ் நாவல் வளர்ச்சியில் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு வரலாற்று நிகழ்வாகும்.

### 5.6.2. சிறுகதையாசிரியர்களும் நாவல் முயற்சிகளும்

தொண்ணூறுகளில் மலேசியத் தமிழ் நாவல்களின் எண்ணிக்கை கூடியதற்கு நாவல் இலக்கியத்தின்மீது மலேசியத் தமிழ் எழுத்தாளர்களுக்கு, குறிப்பாகச் சிறுகதையாசிரியர்களுக்கு ஏற்பட்ட ஈடுபாடும் ஆர்வமும் ஒரு காரணமாக அமைகின்றது. இதுநாள் வரையில் சிறுகதையின்மீது மிகுந்த ஈடுபாடு கொண்டு எழுதிக் கொண்டிருந்தவர்கள், ஒரு காலகட்டத்திற்குப் பிறகு எழுத்துத் துறையில் வளர்ச்சியும் முதிர்ச்சியும் பெற்றபின்னர் எழுத்துத்துறையில் தங்களின் ஆற்றலைக்காட்ட அடுத்த கட்ட நடவடிக்கையாக, ஒரு மாற்றமாக நாவலின் பக்கம் அவர்களின் கவனத்தைத் திருப்பியுள்ளதனைக் காணமுடிகின்றது. அவ்வகையில் கோலலங்காட் அ. ரெங்கசாமி, மு. அன்புச்செல்வன், ஆர் சண்முகம், சை. பீர்முகம்மது, பூ. அருணாசலம், பாவை, சரஸ்வதி அரி கிருஷ்ணன், நிர்மலா பெருமாள் போன்றோர் அவ்வாறு சிறுகதைத் துறையிலிருந்து நாவல்துறைக்கு வந்து சேர்ந்தனர். சிறுகதையா சிரியர்கள் நாவல் எழுதுவதில் புதுமையொன்றும் இல்லை. தமிழக, இலங்கை நாவல் இலக்கிய வரலாற்றைப் பார்க்கும்போது சிறுகதையாசிரியர்களாய் இருந்தவர்களே சிறந்த நாவலாசிரியர் களாகவும் இருந்து சிறந்த படைப்புகளைத் தந்துள்ளனர். அகிலன்,

வேலை பெர்மிட், வேலையில்லாத் திண்டாட்டம், குடியிருப்பு, பொதுவான சமுதாயச் சீர்கேடுகள், சுயநலம், பேராசை, தமிழ்ப் பள்ளிகள், அரசியல்வாதிகளின் பித்தலாட்டங்கள் ஆகியவற்றின் பாதிப்பை உணர்ந்த எழுத்தாளர்கள் அவற்றைத் தொட்டு எழுத ஆரம்பித்தனர்.[15] சிறுகதைகள் சமுதாயச் சீர்திருத்தத்தை அடிப் படையாகக் கொண்டிருக்க வேண்டும் என்னும் எண்ணமும் இக்காலகட்டத்தில் வலுவடைந்தது. உருவ அமைப்பு, உத்திமுறைகள் போன்றவற்றில் சிறுகதை மலேசிய வடிவத்தைக் கொள்ள ஆரம்பித்த காலகட்டமாகவும் இது திகழ்ந்தது.

எனினும், 1980ஆம் ஆண்டுக்குப் பின்னர் எழுதப்பட்ட சிறுகதைகள் மலேசியத் தமிழ்ச் சிறுகதைகள் அதற்கு முன்பு எழுதப்பட்ட சிறுகதைகளைவிட கருப்பொருள்களிலும் உத்திமுறை களிலும் ஒரு படி உயர்ந்திருந்தன எனக் கொள்ளலாம். இக்கால கட்டத்தில் சமகாலச் சிக்கல்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட கதைகள் அதிகமாக வெளிவந்தன. மலாயாப் பல்கலைக்கழகத்தின் பேரவைக் கதைகளும் தேசிய நிலநிதிக் கூட்டுறவுச் சங்கத்தின் பரிசு பெற்ற படைப்புகள் (இரண்டு தொகுதிகள்) ஆகியவற்றை இவற்றைக் காட்டும் கண்ணாடி களாகக் கருதலாம். கடந்த பன்னிரண்டு ஆண்டுக் காலத்தில் வந்த சிறுகதைத் தொகுப்புகளையும் இவற்றோடு இணைத்துக் கொள்ளலாமெனினும் அத்தொகுப்புகளுள் 1980ஆம் ஆண்டுக்கு முன்னர் எழுதி வெளியிடப்பட்ட சிறுகதைகளும் அடங்கியிருக் கின்றமையால் அவற்றை முழுமையாகத் தற்காலக் கதைகளுக்கு எடுத்துக்காட்டுகளாகக் கொள்வதில் சிக்கல் ஏற்படுகின்றது. எனினும், பேரவைக் கதைகளில் தோட்டப்புற மக்களின் அறியாமை, அதிகாரவர்க்கத்தின் அடாவடித்தனம், முதியோர் பிரச்சினைகள் (பொதுவாக, பெற்றோரைப் பேணாத குழந்தைகள்), பொருளாதார வீழ்ச்சி, வீட்டுமனை விற்பதில் ஏமாற்றப்படுதல், வன்முறைக் கலாசாரம், ஆணாதிக்கப் போக்கு, தாய்மையின் சிறப்பு, இடைநிலைப்பள்ளி மாணவர்களின் தவறான நடத்தைகள், கல்வி, சொந்தத் தொழில், அரசியல் போன்ற கருப்பொருள்கள் மிக அதிகமாகக் கையாளப்பட்டுள்ளன. இறுதியாக வெளிவந்த பேரவைக் கதைகள் 21இன் கதைகளிலும் சமுதாயப் பிரச்சினைகள் அல்லது நடப்பு விவகாரங்களே கதைக்கருக்களாக ஆக்கப் பட்டுள்ளன. கல்வி, பள்ளித் தேர்வுகள் உண்டாக்கும் அச்சம், தாய்மொழி வகுப்புக்களை தமிழ் மாணவர்களே புறக்கணித்தல், கோயில், தமிழ்ப்பள்ளிகளில் ஏற்படும் பிரச்சினைகள், பெற்றோரைத் தவிக்கவிடும் குழந்தைகள், கணவன் மனைவியரிடையே காணப் படும் புரிந்துணர்வின்மை, பிற இனத்தவரை மணப்பதால் ஏற்படும் சிக்கல், மண்ணையும் மரங்களையும் காப்பாற்றவேண்டும் என்ற

சிந்தனை, பொதுத்தொண்டு, ஆசிரியர் மாணவர் உறவு, போதைப் பித்தர்கள் திருந்தியும் அவர்களை ஏற்க மறுக்கும் சமுதாயம், அன்புற்குரியவர்களின் மரணத்தினால் ஏற்படும் பாதிப்பு, தவறு செய்யும் பிள்ளைகளைத் திருத்துவதற்கான முறை ஆகிய கருப் பொருள்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. தேசிய நிலநிதிக் கூட்டுறவுச் சங்கத்தின் பரிசு பெற்ற படைப்புகளின் இரு தொகுதி களிலும்கூட சமுதாயச் சிந்தனையைத் தூண்டும் கருப்பொருள்களே சிறுகதைகளில் மிகுதியாகக் கையாளப்பட்டன.

## சிறுகதைத் துறையின் வளர்ச்சிக்கான முயற்சிகள்

மலேசியச் சிறுகதைத்துறை வளர்ந்து கொண்டிருக்கின்றதா நலிவடைந்து கொண்டிருக்கின்றதா என்னும் கேள்விகள் மலேசியத் தமிழிலக்கியத்தின் தரம் குறித்த சிந்தனையுடையவர்களின் மனத்தில் அடிக்கடி எழுந்து கொண்டிருந்தாலும் சிறுகதைத் துறையின் வளர்ச்சிக்கான முயற்சிகள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றன. நாடளாவிய நிலையிலும் எழுத்தாளர் வாசகர் இயக்கங்களால் ஒரு குறிப்பிட்ட வட்டத்திற்குள்ளாகவும் நடத்தப்படுகின்ற திறனாய்வுக் கருத்தரங்குகளும், சிறுகதைப் போட்டிகளும், எழுதப்பட்ட / எழுதப்படுகின்ற நூல்களும் கட்டுரைகளும் அவற்றுள் மிக முக்கியமானவை.

## 1. மலேசியச் சிறுகதைத் திறனாய்வு நூல்களும் கட்டுரைகளும்

மலேசியச் சிறுகதைகளின் தொடக்ககாலம் தொட்டு இன்று வரையிலும்கூட சிறுகதைகளைப் பற்றிய தீவிரத் திறனாய்வு நூல்கள் அதிகமாக வெளிவரவில்லை என்பதே உண்மை நிலை. அவ்வப்போது வெளிவந்த திறனாய்வுக் கட்டுரைகளும் நடத்தப் பட்ட கருத்தரங்குகளும் வெளியிடப்பட்ட நூல்களும் இந்நாட்டுச் சிறுகதை இலக்கியத்தை முழுமையான ஓர் ஆய்வுக்குட்படுத்தி யிருக்கின்றன என்றும் கூறுவதற்கில்லை. மா. இராமையாவால் மலைமகளில் ஜூன் 1959 முதல் பிப்ரவரி 1960 வரையில் எழுதப் பட்ட தமிழ் நேசனின் கதை வகுப்பு, எழுத்தாளர் பேரவை, தமிழ் முரசின் இலக்கிய விமர்சனம் போன்றவற்றைப் பற்றிய கட்டுரைகள், முருகு சுப்பிரமணியத்தின் பல கட்டுரைகள், ஆ. முருகையனால் சிங்கப்பூர்க் கருத்தரங்கு ஒன்றில் 1962ல் வாசிக்கப்பட்ட **மலேசியாவில் தமிழ்ச் சிறுகதைகள்** என்னும் கட்டுரை, கவிஞர் டி.வி.ஆர். பார்வதி அவர்களால் தமிழ் மலர் நாளிதழில் 1968இல் எழுதப்பட்ட திறனாய்வுக் கட்டுரைகளே இத்துறையில் மேற் கொள்ளப்பட்ட தொடக்ககால முயற்சிகள் எனக் கொள்ளலாம்.

இவற்றைத் தவிர்த்து, சிறுகதைத் தொகுப்புகளுக்கு எழுதப்பட்ட முன்னுரைகளின்வழி மலேசியச் சிறுகதைத் திறனாய்வுத்துறைக்கு **டாக்டர் மு. வரதராசன், அகிலன், டாக்டர் இராம சுப்பையா, டாக்டர் இரா. தண்டாயுதம், முருகு சுப்பிரமணியம், சி. வீ. குப்புசாமி, மு. சேதுராமன், நா. பார்த்தசாரதி, கனக செந்தி நாதன், ரெ. கார்த்திகேசு** ஆகியோரும் பங்களிப்புச் செய்துள்ளனர். தவிர, **சை. பீர்முகம்மது, வி.ச. முத்தையா, ந. கோவிந்தன், ச. கமலநாதன், இரா. ந. வீரப்பன், காரைக்கிழார், டாக்டர் சண்முக சிவா** ஆகியோரும் தமது கட்டுரைகளின் மூலம் மலேசியச் சிறுகதைகளைப் பற்றிய தமது கருத்துகளை அவ்வப் போது எழுதியுள்ளனர். ஆனால், திறனாய்வு நூல் என்று பார்க்கும் பொழுது கவிஞர் டி.வி.ஆர். பார்வதி அவர்களால் 1971இல் வெளியிடப்பட்ட **'தமிழ்ச் சிறுகதைக்கு இலக்கணம் வேண்டுமா?'** என்னும் நூலே மலேசியத் தமிழ்ச் சிறுகதைத் திறனாய்வுத் துறையின் முன்னோடி நூல் என்று கருதலாம். உண்மையில் இந்நூல் கவிஞர் டி.வி.ஆர். பார்வதி அவர்களால் 1968இல் எழுதப் பட்ட கட்டுரைகளின் தொகுப்பே. எனினும், இந்நூலில் எட்டுச் சிறுகதைகளின் தரம், நயம் ஆகியன பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடப் பட்டிருந்தாலும் இஃது ஒரு முழுமையான திறனாய்வு நூலன்று. **"கதைகளின் திறனாய்வைக் காட்டிலும் இலக்கண வழுக்களை எடுத்துக் காட்டுவதிலேயே ஆசிரியர் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டுள்ளார்"**[16] என்று இந்நூலுக்கு மதிப்புரை எழுதியுள்ள சி. வீ. குப்புசாமி அவர்களின் கூற்று இந்நூலின் தன்மையை நன்கு எடுத்துக்காட்டும். இதைத் தொடர்ந்து 1972இல் தமிழ் நேசனில் வெளிவந்த **'மலேசியத் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தில் இருபத் தைந்து ஆண்டுக்கால வளர்ச்சி'** என்ற சி. வேலுசாமியின் கட்டுரையும் மலேசியத் தமிழ்ச் சிறுகதையின் தரம் பற்றிக் கோடி காட்டியது எனலாம். இருபத்தைந்து தொகுப்புகளைப் படித்த பின்னர் பதினைந்து சிறுகதைகள்கூட போதுமான தரத்தை அடையவில்லையென அவர் அக்கட்டுரையில் குறிப்பிட்டுள்ள தாகப் பாலபாஸ்கரன் தம்முடைய நூலில் குறிப்பிடுகிறார்.[17] அகிலனும், 1975இல் தமிழ் நேசனில் எழுதிய தமது **'மலேசியத் தமிழ்ச் சிறுகதைகள்'** என்னும் கட்டுரையில் மலேசிய எழுத்தா ளர்கள் எதை எழுத வேண்டுமென்பதை நன்கு அறிந்து வைத்தி ருக்கிறார் களென்றாலும் எப்படி எழுத வேண்டுமென்பதை இன்னும் சரியாக உணர்ந்து கொள்ளவில்லை என்று குறிப்பிட்டி ருந்தார் என்பது கவனிக்கத்தக்கது.[18] ஆயினும், இக்கருத்துகள் யாவும் மலேசியத் தமிழ்ச் சிறுகதையுலகில் அதுவரையிலும் சிறந்த சிறுகதைகளே வரவில்லை எனப் பொருள்படா. **தற்காலத் தமிழ் இலக்கியம்** (1973) என்னும் தமது நூலில், "எந்த மொழியிலும் மொழிபெயர்க்கத் தக்க சில நல்ல சிறுகதைகள் வெளிவந்துள்ளன"

என்றும் அவற்றில் "புதிய புதிய கருப்பொருள்களையும் சொல்லும் முறைகளையும் காணலாம்" என்றும் "மண்ணின் மணம் கமழும் வட்டாரச் சிறுகதைகள்" அவை என்றும் குறிப்பிடும் டாக்டர் இரா. தண்டாயுதம் அந்த நல்ல சிறுகதைகளுக்குச் சொந்தக்காரர் களாகச் சி. வடிவேலு, ரெ. கார்த்திகேசு, மு. அன்புச்செல்வன், எம். குமரன், சை. பீர் முகம்மது போன்றவர்களைக் குறிப்பிடுகிறார்.

இக்காலகட்டத்திற்குப் பின்னர் வெளிவந்த பாலபாஸ்கரனின் **'மலேசியத் தமிழ்ச் சிறுகதை'** *(1995)*, மா. இராமையாவின் **'மலேசியத் தமிழ் வரலாற்றுக் களஞ்சியம்'** *(1996)*, ரெ. கார்த்தி கேசுவின் **'விமர்சன முகம்'** *(2004)*, பாலபாஸ்கரனின் The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study (2006) ஆகியவையும் திறனாய்வுப் பார்வையில் சிறுகதைகளைப் பார்த்திருக்கின்றன. எனினும், இவற்றுள் பாலபாஸ்கரனின் **'மலேசியத் தமிழ்ச் சிறுகதை'யும்,** The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study (2006) என்னும் இரண்டு நூல்களும் மட்டுமே முழுக்க முழுக்கச் சிறுகதைகளைப் பற்றியே பேசுகின்றன. மற்ற இரு நூல்களும் சிறுகதைகளைப் பற்றியனவல்ல என்பதற்கு அவற்றின் பெயர்களே சான்று பகரும். எனினும், அவற்றின் பெயர்களுக்கேற்ப ஆங்காங்கே மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளின் உள்ளடக்கம், தரம் போன்ற வற்றைப் பற்றிய சில குறிப்புகளையும் கருத்துகளையும் அவை கொண்டுள்ளன என்பதில் ஐயமில்லை.

"மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளைப் பற்றிப் பேசுகிறபோது அவற்றைப் பற்றிப் பெருமைப்படவும் அதற்கு எதிர்மாறாக வருத்தப்படவும் காரணங்கள் உண்டு. பெருமைப்படுவதற்கான முதல் காரணம் அவற்றின் உள்ளடக்கத்தில் அசல் தன்மை... இப்போது ஆரம்ப எழுத்தாளர்கள் எழுதுகின்ற எழுத்தில்கூட இந்த நாட்டின் வாழ்க்கைதான் கருப்பொருளாகிறது"[19] என ரெ. கார்த்திகேசு தமது 'விமர்சன முகத்தில்' குறிப்பிடுவார்.

## 2. சிறுகதைத் திறனாய்வுக் கருத்தரங்குகள்

இந்தக் காலகட்டத்தில்தான் மலாயாப் பல்கலைக்கழக இந்தியல் ஆய்வியல் துறை 1978ஆம் ஆண்டு ஏப்ரல் 8, 9 ஆம் தேதிகளில் மலாயாப் பல்கலைக்கழகத்தில் சிறுகதைக் கருத்தரங்கு ஒன்றை நடத்தியது. இந்த இரண்டு நாள் கருத்தரங்கைச் சிறுகதைத் துறையின் வரலாற்றில் ஒரு முக்கிய நிகழ்ச்சி என்றும் கூறலாம். மலேசியாவில் தேசிய அளவில் நடத்தப்பட்ட முதல் சிறுகதைக் கருத்தரங்கமாக இது அமைந்திருந்தது. அதுவரையிலும் தேசிய அளவில் மலேசியத் தமிழ்ச் சிறுகதைக்கு ஒரு கருத்தரங்கு நடத்தப்

பட்டதில்லை. மலேசியச் சிறுகதைகளின் வளர்ச்சி, அமைப்பு, கரு, சமுதாயப் பின்னணி, மலேசியச் சமுதாயம், மலாய், தமிழ்ச் சிறுகதைகளின் ஒப்பீடு என்பன பற்றிய ஏழு கட்டுரைகள் இக்கருத்தரங்கில் படைக்கப்பட்டன. 'மெர்டேக்காவிற்குமுன் மலேசியத் தமிழ்ச் சிறுகதை வளர்ச்சி', 'மெர்டேக்காவிற்குப்பின் மலேசியத் தமிழ்ச் சிறுகதை வளர்ச்சி', 'மலேசியத் தமிழ்ச் சிறுகதை அமைப்பு', 'மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளில் சமுதாயப் பின்னணி', 'மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளில் கருப்பொருள்கள்' என்னும் தலைப்புகளில் தமிழில் ஐந்து கட்டுரைகளும் மலாய் மொழியில் இரண்டு கட்டுரைகளும் படைக்கப்பட்டன. மலாய் மொழியில் படைக்கப்பட்ட கட்டுரைகளில் **'மலேசியாவில் மலாய், தமிழ்ச் சிறுகதைகளின் வளர்ச்சி - ஓர் ஒப்பீடு'** என்னும் தலைப்பில் படைக்கப்பட்ட கட்டுரையை ரெ. கார்த்திகேசுவும், **'மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளில் மலேசியச் சமுதாயம்'** என்னும் கட்டுரையை ந. சுப்பிரமணியமும் (பாலபாஸ்கரன்) படைத்தனர். தமிழில் படைக்கப்பட்ட கட்டுரைகளை முறையே சி. வடிவேலு, பாலபாஸ்கரன், டாக்டர் இரா. தண்டாயுதம், வி. பூபாலன், இராம வீரசிங்கம் ஆகியோர் படைத்தனர்.[20] முதன்முதலாக மலேசியச் சிறுகதைகளைப் பற்றிய ஒரு விரிவான ஆராய்ச்சியாக இக்கருத்தரங்கு அமைந்திருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

தேசிய அளவில் நடத்தப்பெற்ற மற்றொரு சிறுகதைக் கருத்தரங்காக **'மலேசியத் தமிழ்ச் சிறுகதையின் அடுத்த கட்ட வளர்ச்சி'** என்னும் கருப்பொருளில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் 2003இல் ஆகஸ்ட் 30, 31 ஆம் தேதிகளில் கோலாலம் பூரிலுள்ள கிராண்ட் பசிபிக் ஹோட்டலில் நடத்திய சிறுகதைப் பயிற்சிப் பட்டறையைக் குறிப்பிடலாம். தமிழ்நாட்டின் தலைசிறந்த சிறுகதை எழுத்தாளர்களுள் ஒருவரான **திலீப்குமார்** இப்பயிற்சிப் பட்டறையில் கலந்துகொண்டு சிறுகதையின் போக்குகள் குறித்தும் அதன் இலக்கணம் குறித்தும் தமது கருத்துகளை மலேசியத் தமிழ் எழுத்தாளர்களுடன் பகிர்ந்து கொண்டார். இந்தக் கருத்தரங்கின் போது 'விரகம் விகாரமல்ல' 'அனாக் பீசி பூரோக்' எனும் இரண்டு சிறுகதைகள் படிக்கப்பட்டு அவற்றைப் பற்றிய திறனாய்வும் மேற்கொள்ளப்பட்டது.

இதற்குப் பின்னர், தேசிய அளவில் சிறுகதைக்குக் கருத்தரங்கு ஒன்று நடத்தப்பட்டதாகத் தெரியவில்லை.

எனினும், சிறுகதையை வளர்ப்பதற்காகப் பல்வேறு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன; இன்றும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. சிறுகதைத்துறையை மேம்படுத்த மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் எடுத்து வந்த ஆக்கபூர்வமான நடவடிக்கை

களுள் மாதாந்திரச் சிறுகதைத் திறனாய்வுக் கருத்தரங்கு மிக முக்கியமானது. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சிறுகதை வளர்ச்சிக்கான ஒரு முக்கியத் திட்டமாகவும் இதைக் குறிப்பிடலாம் ஆதி குமணன் அவர்கள் மலேசிய நண்பன் நாளேட்டின் ஆசிரிய ராகவும் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராகவும் இருந்தபோது முதன்முதலாக இக்கருத்தரங்கு 1994ஆம் ஆண்டு தொடங்கப் பட்டது. மலேசியாவில் அக்காலகட்டத்தில் வெளிவந்த எல்லாத் தமிழ் ஏடுகளிலும் ஒவ்வொரு மாதமும் வெளியிடப்பட்ட சிறுகதை களையெல்லாம் திரட்டி அவற்றைத் திறனாய்வாளர் ஒருவரிடம் கொடுத்துச் சிறந்த சிறுகதை ஒன்றைத் தேர்ந்தெடுத்துப் பவுன் பரிசு வழங்கிச் சிறப்புச் செய்யும் திட்டம் இது. ஏறத்தாழ பத்தாண்டுகள் நடைபெற்ற இச்சிறுகதைக் கருத்தரங்குகள் நல்ல சிறுகதைகள் உருவாக எழுத்தாளர்களுக்கு ஊக்கத்தை அளித்து வந்துள்ளன. இவற்றிற்கான பவுன் பரிசுகளை பத்து பகாட் நகைக் கடை, பிறை மீனாட்சி நகைக்கடை ஆகியவற்றின் உரிமையாளர்கள் கொடுத்துதவினர். கிடைக்கப்பெற்ற குறிப்புகள் இதனுடைய 36வது சிறுகதைக் கருத்தரங்கு 20.07.1997 இல் கிள்ளானிலுள்ள குணா கிளினிக் மண்டபத்தில் நடைபெற்றுள்ளதையும், 07.05.2002இல் மீண்டும் ஒருமுறை கிள்ளானிலுள்ள பாரதமாதா உணவக மண்டபத்தில் நடைபெற்றுள்ளதையும் இதன் 98வது கருத்தரங்கு 02.03.2003இல் மலேசிய நண்பன் அலுவலகத்தில் நடைபெற்றுள்ள தையும் காட்டுகின்றன. இக்கருத்தரங்குகள் தொடர்ந்து 2004ஆம் ஆண்டு வரையில் நடைபெற்றுள்ளன. இக்கருத்தரங்குகளில் பரிசு பெற்ற சிறுகதைகள் நம் நாட்டுச் சிறுகதையின் வளர்ச்சியைப் பற்றிய தகவல்களை மறைமுகமாகத் தெரிவிக்கின்றன எனலாம். ஜூலை, 2003 முதல் பிப்ரவரி, 2004 வரை நடைபெற்ற சிறுகதைக் கருத்தரங்குகளில் டாக்டர் ரெ. கார்த்திகேசு, துளசி அண்ணா மலை, டாக்டர் சண்முக சிவா, கல்யாணி மணியம், பி. சுபத்திரா தேவி, மா. இராமையா, ஏ. தேவராஜன், ந. மகேஸ்வரி ஆகியோர் பவுன் பரிசைப் பெற்றிருக்கின்றனர். இக்கருத்தரங்குகளில் அதிக மான மூத்த எழுத்தாளர்களின் கதைகளே பரிசுகளைப் பெற்றிருக் கின்றன என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. இளைய தலைமுறை எழுத்தாளர்களின் கதைகள் மூத்த எழுத்தாளர்களின் கதை களோடு போட்டி போடும் அளவுக்கு இன்னும் வளர்ச்சி பெற வில்லையென்பதையும் இது ஓரளவுக்குக் கோடி காட்டுகின்றது என்று கூறுவது தவறாகாது.

எனினும், இக்கருத்தரங்கை ஆண்டுக்கொரு முறை இரண்டு நாள் மாநாடாக நடத்துவதென சங்கம் முடிவெடுத்ததால் 2004க்குப் பிறகு இச்சிறுகதைக் கருத்தரங்குகள் தொடர்ந்து நடத்தப்பட வில்லை. இதற்குச் சரியான காரணம் தெரியவில்லையாயினும்

மாதம் ஒருமுறை நடைபெறும் இந்தத் திறனாய்வுக் கருத்தரங்கு களுக்குச் சிறுகதை எழுத்தாளர்கள் அதிகமாகக் கலந்துகொள்ளாமற் போனதே முக்கியக் காரணம் எனலாம். சில சமயங்களில் சிறுகதை களைத் திறனாய்வு செய்து கட்டுரை படைப்பவரைத் தவிர்த்து மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தைச் சேர்ந்த சிலர் மட்டுமே இக்கருத்தரங்குகளில் கலந்து கொண்ட நிலைமையும் உண்டு.

பொதுவாக, தொடக்கத்தில் இந்தத் திறனாய்வுக் கூட்டங்கள் நல்ல வரவேற்பபைப் பெற்றனவாயினும் பின்னர் எழுத்தாளர்களை அதிகமாக ஈர்க்கவில்லை. சிறுகதைகளைத் திறனாய்வு செய்வதை விடப் பரிசுக்குரியனவாகப் பரிந்துரைக்கப்பட்ட இரண்டு சிறுகதைகளுள் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதற்கான ஒரு நிகழ்ச்சியாக அது திசை மாறிவிட்டதே காரணம் எனலாம். அது மட்டுமன்று. தொடக்கத்தில் திறனாய்வுக் கூட்டங்களின்போது வாசிக்கப்பட்ட கட்டுரைகள் மலேசிய நண்பனில் வெளியிடப்பட்டன. மலேசியாவில் உள்ள எழுத்தாளர்கள் அவற்றை வாசிப்பதன்வழி சிறுகதைகளைப் பற்றிய திறனாய்வாளரின் கருத்துகளை அறிந்துகொள்ளவும் சிறுகதைகளைப் பற்றிய சில நுணுக்கங்களைத் தெரிந்து கொள்ளவும் வாய்ப்புகள் இருந்தன. ஆனால், பின்னர் அக்கட்டுரைகள் எதுவுமே பத்திரிகைகளில் வெளியிடப்படவில்லை. இதற்கான காரணம் சரியாகத் தெரியாவிட்டாலும் இதனால் ஏற்பட்ட இழப்பு அதிகமே. மலேசியச் சிறுகதைத்துறை மட்டுமல்லாது திறனாய்வுத்துறையும் இதனால் வளர்ச்சியடைய முடியாமல் போய்விட்டது.

மலேசிய நண்பன் நாளேடு இன்று இத்தகைய முயற்சி ஒன்றை மேற்கொண்டே வருகின்றது. ஆனால், சற்று மாற்றத்துடன் இத்திறனாய்வுக் கருத்தரங்குகளை அது தற்பொழுது நடத்தி வருகின்றது. மலேசிய நண்பனில் வெளிவந்த சிறுகதைகளை மட்டுமே ஆய்வுக்கு எடுத்துக்கொண்டு மூன்று மாதங்களுக்கொரு முறை நாட்டின் வெவ்வேறு இடங்களில் இச்சிறுகதைக் கருத்தரங்குகளை நடத்தி மூன்று மாதங்களில் வெளிவந்த கதை களிலிருந்து மூன்றைத் தேர்ந்தெடுத்து முதல் பரிசாக 300 ரிங்கிட்டும் இரண்டாம் பரிசாக 200 ரிங்கிட்டும் மூன்றாம் பரிசாக 100 ரிங்கிட்டும் அளித்துவருகின்றது. சிறுகதைக் கருத்தரங்குகளில் வாசிக்கப்பட்ட கட்டுரையைப் பத்திரிகையிலும் வெளியிட்டு வருகின்றது. திறனாய்வுக் கட்டுரைகளில் சுட்டிக்காட்டப்படும் நிறைகளும் குறைகளும் எழுத்தாளர்களுக்குச் சிறந்த சிறுகதை என்பது எப்படி இருக்க வேண்டுமென்பதை ஓரளவுக்கேனும் அடையாளம் காட்டுகின்றன என்பதில் ஐயமில்லை.

மலேசியாவின் மூத்த நாளேடான தமிழ்நேசனும் தன் பங்குக்கு அவ்வப்போது சிறுகதைக் கருத்தரங்குகளை நடத்தியுள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது.

மலேசிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தனது முதலாவது மலேசியத் தமிழ் இலக்கிய மாநாட்டை 2005, பிப்ரவரி 19, 20இல் நடத்தியபோது மலேசியத் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தைப் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளும் இதில் படைக்கப்பட்டன. 'அண்மைய கால மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளின் வளர்ச்சியும் போக்கும்' என்னும் தலைப்பில் ந. மகேஸ்வரியும், 'மலேசியத் தமிழ்ச் சிறுகதை தொடக்கம் முதல் தொண்ணூறு வரை' என்னும் தலைப்பில் சோ. சுப்பிரமணியும் கட்டுரைகள் படைத்தனர்.[21] மலேசியச் சிறுகதையின் வரலாறு, மலேசியச் சிறுகதைகளின் தரம், மலேசியச் சிறுகதைகளில் காணப்படும் குறைபாடுகள், மலேசியச் சிறுகதை வளர்ச்சிக்கு அடுத்த கட்ட நடவடிக்கை போன்ற கருத்துகளை இக்கட்டுரைகள் கொண்டிருந்தன. சிறுகதைத் திறனாய்வுக் கருத்தரங்குகள் வெறும் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும் நிகழ்ச்சியாக அமையாமல் சிறுகதைகளின் நுணுக்கங்களை இளம் எழுத்தாளர்கள் கற்றுக்கொள்ளும் ஒரு களமாக அமைய வேண்டும் என்னும் கருத்துகளும் இக்கட்டுரைகளில் முன்வைக்கப்பட்டுள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது.

## 3. சிறுகதைப் போட்டிகள்

மலேசியத் தமிழ்ச் சிறுகதை இலக்கியத்தின் வளர்ச்சிக்குச் சிறுகதைப் போட்டிகளின் பங்களிப்பைக் குறைத்து மதிப்பிட்டு விட முடியாது. பன்னெடுங்காலமாக எழுதி எழுதிக் களைத்துப் போன மிக நல்ல எழுத்தாளர்கள் இன்றும் சிறுகதையைப் படைக்கத் தூண்டுகோலாக இருப்பவை சிறுகதைப் போட்டிகளே என்பதில் ஐயமில்லை.

எனினும், சிறுகதைப் போட்டிகளுக்கும் ஒரு நீண்ட வரலாறு உண்டு. முதல் சிறுகதைப்போட்டியை அறிமுகப்படுத்திய பெருமை பாரதமித்திரன் என்னும் வாரப் பத்திரிகையையே சாரும். 1934இல் (20.07.1934) தோற்றம் கண்ட வார இதழான பாரதமித்திரன் அவ்வாண்டின் செப்டம்பர் மாதத்திலேயே (14.09.1934) சிறுகதைப் போட்டிக்கான அறிவிப்பை வெளியிட்டது. பாரதமித்திரன் சந்தா தாரர்களுக்கான சிறுகதைப்போட்டியாக இது நடத்தப்பட்டாலும் போட்டிக்கான நிபந்தனைகளுள் ஒன்று உன்னிப்பாகக் கவனிக்கத் தக்கது. **"கதைகள் இன்றைய சமூக நிலையை விளக்கத்தக்கன வாகயிருக்க வேண்டும்"**[22] என்பதே அது. மலேசியாவிலிருந்து இது

வெளிவந்ததால் மலேசிய இந்தியர்களின் சமூக நிலையை அல்லது குறிப்பாகத் தமிழ்ச் சமுதாயத்தின் நிலையைக் கதைகள் விளக்க வேண்டும் என்று அந்த நிபந்தனையைப்பற்றி எண்ணங் கொள்ள இடம் இருக்கின்றதெனினும் பாரதமித்திரனின் நோக்கம் அதுவன்று என்பதை போட்டியில் பரிசு ($5.00) பெற்ற சிங்கப்பூர் ந. பழனி வேலின் 'கிராமக்காட்சி' என்னும் கதை உறுதி செய்கின்றது. முழுக்க முழுக்கத் தமிழ்நாட்டுச் சூழலிலேயே படைக்கப்பட்ட சிறுகதை இது.[23]

ஜனவர்த்தமானியும் அதன் பின்னர் 15.11.1933இல் மாணவ மாணவிகளுக்கான சிறுகதைப் பரிசுப்போட்டி ஒன்றை அறிவித்தது. ஆனால், இப்பரிசுப் போட்டியின்கீழ் வெளியிடப்பட்ட கதை களைச் சிறிய கதைகள் என்னும் வட்டத்துக்குள் அடக்க முடியுமே யன்றி சிறுகதை என்ற இலக்கியத்தின்கீழ் கொண்டு வருதல் இயலாது. ஏறத்தாழ இரண்டாண்டுகள் இவ்வகைக் கதைகளை (ஒரே பத்திக் கதைகள்) இவ்வேடு வெளியிட்டது.

தமிழ்ச்சுடர் என்ற ஏடும் சிறுகதைப் போட்டியொன்றினை 1948இல் நடத்தியது. பரிசுத்தொகையாக RM 25.00 அளிக்கப் பட்டது.[24] அதைத் தொடர்ந்து தமிழ்முரசும் 1950லிருந்து சிறுகதைப் போட்டியை நடத்திச் சிறந்த கதை ஒன்றுக்குப் 10.00 ரிங்கிட் பரிசளித்தது.[25]

மலேசியா (மலாயா) சுதந்திரம் அடைந்ததற்குப் பிறகு சிறுகதைக்கான போட்டிகள் அதிகமாகவே நடத்தப்பட்டன. தமிழ் நேசன் 1959இல் போட்டி ஒன்றை நடத்தி பரிசளிப்பு விழாவையும் வெகு விமரிசையாகக் கொண்டாடியது. தமிழ் முரசும் 1965இல் எட்டு முறை தங்க நாணயப் பரிசுப் போட்டியை நடத்தியது. அதைத் தொடர்ந்து மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் 1967லும் 1968லும் போட்டிகள் நடத்தியது. தமிழ் இளைஞர் மணி மன்றமும் தனது பங்களிப்பாக 1966இல் சிறுகதைப்போட்டி ஒன்றை நடத்தியது.

மலேசியச் சிறுகதைத்துறை வளர்ச்சியில் தமிழ் நேசனின் பங்களிப்புக்குச் சிறப்பிடம் உண்டு. முன்பே அது சிறுகதைப் போட்டியை நடத்தியிருந்தாலும் சிறுகதைத்துறையை வளர்க்க அது நடத்திய **பவுன் பரிசுப் போட்டி** வரலாற்றுச் சிறப்பு மிக்கது. ஜுன் 1972 முதல் ஜுன் 1976 வரை நடத்தப்பட்ட இப்போட்டி நான்கு கட்டங்களாக நடத்தப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. இருபது மாதங்கள் நடைபெற்ற முதல் கட்டப் போட்டியில் தமிழ் நேசன் ஞாயிறு பதிப்பில் ஒவ்வொரு மாதமும் வெளிவந்த சிறுகதைகளை 5 பேர் கொண்ட நீதிபதிகள் குழுவொன்று ஆய்வு

செய்து ஒரு சிறந்த கதை ஒன்றை எழுதிய எழுத்தாளருக்கு 8 கிராம் தங்க நாணயம் அளித்துச் சிறப்புச் செய்தது.[26] இக்கதை களுள் 12 சிறுகதைகள் பின்னர் தொகுக்கப்பெற்று **பவுன் பரிசுக் கதைகள்** என்னும் பெயரில் 1974இல் வெளியிடப்பட்டன. அதன் பின்னர், பெப்ரவரி 1974 முதல் செப்டம்பர் 1974 வரை நடை பெற்ற இரண்டாம் கட்டப் போட்டியில் இரண்டு மாதங்களுக் கொரு முறை சிறந்த சிறுகதை ஒன்றுக்கு ஒரு பவுன் பரிசளித்தது. அதன்பின்னர் நடைபெற்ற மூன்றாம் கட்டப் போட்டிக்கும் நான்காம் கட்டப் போட்டிக்கும் வெற்றி பெற்ற எழுத்தாளர் களுக்கு பரிசைப் பணமாகத் தந்து அவர்களின் மனத்தை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் தமிழ்நேசனின் அடியொட்டி நவம்பர் 1972இல் சிறுகதைப் போட்டி ஒன்றைத் தொடங்கியது. 1972 நவம்பர்த் திங்கள் முதல் 1973 டிசம்பர்த் திங்கள் வரை பல்வேறு ஏடுகளில் வெளிவந்த கதைகளிலிருந்து திங்கள் தோறும் நடத்தப்பட்ட திறனாய்வுக் கருத்தரங்குகளில் திங்களுக்கு ஒரு சிறுகதையெனத் தேர்ந்தெடுத்து அவற்றை எழுதிய எழுத்தாளர் ஒவ்வொருவருக்கும் RM 50.00 ரிங்கிட் பரிசளித்துச் சிறப்புச் செய்தது. இக்கதைகள் யாவும் பின்னர் தொகுக்கப்பெற்று **'பரிசு'** என்னும் தலைப்பில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் 1974இல் வெளியிட்டது.[27] இத்தொகுப்பில் பதினான்கு சிறந்த சிறுகதைகள் அடங்கியுள்ளன. மீனா நடராஜா, ரெ. கார்த்திகேசு, ஆ. சாரதா, சாமி மூர்த்தி, சுமதி தங்கராஜ், த. ப. இலட்சுமணன், சக்கரவர்த்தி சுப்பிரமணியன், ஐ. இளவழகு, சி. வடிவேல், மா. சுப்பிரமணியம், மா. இராமையா, இரா. ச. இளமுருகு, துளசி, நாடோடி ஆகியோர் அவற்றை எழுதியிருந்தனர். அதன் பின்னர் 1978இல் பரிசு பெற்ற சிறுகதைகளைக் கொண்ட **'புதையல்'** என்னும் மற்றொரு தொகுப்பையும் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் வெளியிட்டது. அதைத் தொடர்ந்து, மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் அதனுடைய வெள்ளி விழாவை முன்னிட்டு இலக்கியப் போட்டி ஒன்றினையும் 1988இல் நடத்தியது. சிறுகதைக்காக நடத்தப்பட்ட போட்டியில் ப. அ. அப்துல் ரசீது, வே. இராஜேஸ்வரி, மைதீ. சுல்தான் ஆகியோர் முறையே முதலாம் இரண்டாம் மூன்றாம் பரிசுகளைப் பெற்றனர். பின்னர், பாரதிதாசன் நூற்றாண்டு விழாவை முன்னிட்டுச் சிறுகதைப் போட்டி ஒன்றையும் 1990இல் நடத்திப் பரிசு பெற்ற சிறுகதை களைத் தொகுத்துக் **கலைகின்ற கருமேகங்கள்** என்ற தலைப்பில் 1993இல் வெளியிட்டது.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் இப்பணி அதற்குப் பின்னரும் தொடர்ந்தது. **சமுதாயக் கதைகள்** என்னும் தலைப்பில் மலேசிய நண்பனில் வெளிவந்த கடிகாரக் கதைகளின் தொகுப்பை 1999இல் வெளியிட்டது. எனினும், இது போட்டியாக நடத்தப் படவில்லை. மலேசிய நாட்டின் சிறந்த சிறுகதை எழுத்தாளர்கள் எனப் பெயர் பெற்ற எம். ஏ. இளஞ்செல்வன், மு. அன்புச் செல்வன், சை. பீர்முகம்மது. கோ. புண்ணியவான், ஆர். சண்முகம், பாவை, ரெ. கார்த்திகேசு, மெ. அறிவானந்தன், நிர்மலா இராகவன், டாக்டர் மா. சண்முகசிவா, மா. இராமையா, ப. சந்திரகாந்தம், ஆதிலட்சுமி என்னும் 13 எழுத்தாளர் களிடமிருந்து பெறப்பட்ட சிறுகதைகளை ஒவ்வொரு வாரமும் அதனுடைய ஞாயிறு பதிப்பில் வெளியிட்டுப் பின்னர் அவற்றைச் சமுதாயக் கதைகள் என்னும் பெயரில் தொகுப்பாக வெளியிட்டது.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் மட்டுமல்லாது, மாநில / வட்டார எழுத்தாளர் வாசகர் அமைப்புகளும் தம் பங்குக்கு அவ்வப்போது சிறுகதைப் போட்டிகளை நடத்தியுள்ளன. வேறு சில அமைப்புகளும் சிறுகதை வளர்ச்சிக்கான கருத்தரங்குகள், சிறுகதைத் .தொகுப்பு வெளியீடுகள் போன்ற நடவடிக்கைகளில் ஈடுபாடு காட்டி வருகின்றன. கோலாலம்பூர் தமிழ் இளைஞர் மணிமன்றம், பத்து கேவ்ஸ் வாசகர் வட்டம், கெடா மாநில எழுத்தாளர் சங்கம், கிள்ளான் மாவட்ட வாசகர் இயக்கம், மலேசியத் தமிழ் இலக்கியப் படைப்பாளர் சங்கம், தைப்பிங் தமிழ் எழுத்தாளர் வாசகர் இயக்கம், செபராங் பிறை தமிழ் எழுத்தாளர் வாசகர் இயக்கம், பூச்சோங் வாசகர் வட்டம், உமா பதிப்பகம், செம்பருத்தி பப்ளிகேஷன் போன்றவை அவற்றுள் சில. கெடா மாநில எழுத்தாளர் சங்கம் வ. முனியன் அதன் தலைவராக இருந்தபோது சிறுகதைப் போட்டி ஒன்றை நடத்தி 1980இல் **ஊமைக்காயங்கள்** என்னும் சிறுகதைத் தொகுப்பொன்றை வெளி யிட்டது. எனினும், அதற்கு எட்டு ஆண்டுகளுக்கு முன்னரே 1972இல் கெடா மாநில எழுத்தாளர் வாசகர் இயக்கம் **பட்டினிக் குருவி** என்னும் சிறுகதைத் தொகுப்பொன்றை எம். ஏ. இளஞ் செல்வன் தலைவராகவும், எ.மு. சகா செயலாளராகவும் பொறுப் பெற்றிருந்த காலத்தில் வெளியிட்டது என்பதும் குறிப்பிடத்தக்கது. இதை அடுத்து, ஒரு பெரிய இடைவெளிக்குப் பின்னர் கோ. புண்ணியவான் இவ்வியக்கத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றிருந்தபொழுது **நிறங்கள்** (2001) என்னும் சிறுகதைத் தொகுப்பு ஒன்றும் வெளியீடு கண்டுள்ளது.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கங்களின் பேரவையும் மாநிலங்கள் தோறும் நடத்தப்பட்ட சிறுகதைப் போட்டிகளின்

வழி தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகதைகளைத் தொகுத்து **எழுத்தாளர் பேரவைக் கதைகள்** என்னும் தலைப்பில் அதனுடைய ஆறாவது தேசிய மாநாட்டில் (11.09.1994) வெளியிட்டது. அ. ரெங்கசாமி, சரஸ்வதி அரிகிருஷ்ணன், பி. கோவிந்தசாமி, ஆரியமாலா குணசுந்தரம், சுங்கை ஜாவி சுப்பிரமணியம், எம். ஜெயலட்சுமி, செல்வராணி இராமநாதன், என். துளசி, சத்தியா, பாவை, பத்மா தேவி, வே. செல்லையா, மா. இராமையா, வீ. கோவி. மணாளன், பத்மா, நாணல், நாகராணி செல்லையா, ஜனகா சுந்தரம், ந. அனந்தராஜ், ஜீரா, கா. மாரியப்பன், அமுத இளம்பரிதி, சீமா. இளங்கோ ஆகியோர் அத்தொகுப்பிலுள்ள கதைகளை எழுதி யிருந்தனர்.

மலேசியச் சிறுகதைத்துறைக்குப் பங்களிப்புச் செய்துள்ள மற்றோர் இயக்கம் டத்தின்ஸ்ரீ இந்திராணி சாமிவேலு அவர்களின் தலைமையில் இயங்கி வரும் மலேசியப் பாரதிதாசன் இயக்க மாகும். அது 1993ஆம் ஆண்டிலிருந்து ஆண்டுதோறும் தமிழ் எழுத்தாளர் தினவிழாவுக்காகக் கதை, கவிதை, கட்டுரைப் போட்டிகளை நடத்தி வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசளித்துச் சிறப்புச் செய்துள்ளது. தவிர, சிறந்த படைப்பிலக்கியமாகத் தேர்ந் தெடுக்கப்படுகின்ற நூல் ஒன்றுக்கு ம.இ.கா. தேசியத் தலைவர் டத்தோஸ்ரீ ச. சாமிவேலுவின் பெற்றோர்களான சங்கிலிமுத்து - அங்கம்மா இலக்கிய விருதையும் (5000.00 ரிங்கிட்) வழங்கி எழுத்தாளர்களைப் பெருமைப்படுத்தி வருகிறது.

சிறுகதைப் போட்டிகளின் மூலம் சிறுகதைத்துறைக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் ஒரு நிறுவனம் **தேசிய நில நிதிக் கூட்டுறவுச் சங்கம்** என்பதில் யாருக்கும் கருத்து வேற்றுமைகள் இருக்கமுடியாது. தேசிய நிலநிதிக் கூட்டுறவுச் சங்கம் ஓர் இலக்கிய அமைப்பன்று. எனினும், இலக்கியத்துக்கு அது ஆற்றிவரும் பங்கும் அளப்பரியது. 1994ஆம் ஆண்டு தொடங்கி இன்று வரை சிறுகதைப் போட்டிகளை நடத்திப் பரிசளித்து எழுத்தாளர்களை ஊக்கு விப்பதுடன் பரிசு பெற்ற படைப்புகளைத் தொகுத்து இதுவரை யிலும் இரண்டு தொகுப்புகளை வெளியிட்டு அவற்றை இலவச மாகவே எல்லாருக்கும் கொடுத்துள்ளது. இந்நிறுவனம் நடத்திய சிறுகதைப் போட்டிகளில் 1994இல் மு. அன்புச்செல்வன், ஆதி லட்சுமி, ஆர். சண்முகம் ஆகியோரும், 1995இல் காசிதாசன், எம். இராமகிருஷ்ணன், நாணல் ஆகியோரும், 1996இல் கண்மணி கிருஷ்ணன், வே. தங்கமணி, வேலன் செல்லையா ஆகியோரும், 1997இல் மு. அன்புச்செல்வன், மா. இராமகிருஷ்ணன் ஆகியோரும், 1998இல் கா. இளமணி, சை. பீர்முகம்மது, கோ. புண்ணியவான ஆகியோரும், 1999இல் எ. அன்பழகன், சு. கமலா, K. பன்னீர்செல்வம்

ஆகியோரும், 2000இல் A. புஷ்பவள்ளி (பாவை), மு. மணிமாலா, கி. சுப்பிரமணியம் ஆகியோரும், 2001இல் மு. கருணாகரன், கா. ஆறுமுகம், சு. பார்வதி ஆகியோரும் 2002இல் வ. முனியன், ப. முகுந்தன், சந்திரா அர்ஜுனன் ஆகியோரும் பரிசுகள் பெற்றுள்ளனர்.

இந்நிறுவனம் பெரியவர்களுக்கு மட்டுமல்லாது மாணவர் களுக்காகவும் சிறுகதைப் போட்டிகளை நடத்திப் பரிசுகள் அளித்து வருகின்றது. மாணவர்களுக்கான அப்போட்டி 2000ஆம் ஆண்டில் தொடங்கியது. அவ்வாண்டிலிருந்து 2002ஆம் ஆண்டு வரையிலும் சு. பொன்னழகி, திருமாமணி சுந்தரராஜ், மு. முனியம்மாள், ஹமிதா பிந்தி அப்துல் காதர், ஆ. குணநாதன், மு. பக்ருதின், சு. பாலு, கோ. திலகவதி ஆகியோர் பரிசுகள் பெற்றுள்ளனர்.[28]

ஒவ்வோராண்டும் சிறுகதைக்கான போட்டிகள் மட்டு மல்லாது கவிதை, கட்டுரைகளுக்கான போட்டிகளையும் நடத்தித் தொகுப்புகள் வெளியிட்டு வரும் மற்றோர் இயக்கம் மலேசியத் தேசியப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த **இந்தியப் பிரதிநிதித்துவ சபையாகும்.** உயர்கல்விக்கூடங்களில் பயிலும் மாணவர்களுக்காக 1997 முதல் நடத்தப்பட்டு வரும் இப்போட்டியில் வெற்றிபெறும் கவிதைகள், சிறுகதைகள், கட்டுரைகள் ஆகியவை தொடர்ந்து இவ்வியக்கத்தின் தொகுப்புகளாக வெளியிடப்பட்டு வருகின்றன. இப்போட்டிகளில் பங்கு பெறும் மாணவர்களுள் எத்தனை பேர் தொடர்ந்து எழுதிச் சிறுகதைத்துறைக்கு வளம் சேர்ப்பர் என்பதற்கு இப்பொழுது பதிலளிப்பது கடினமே. எனினும், எதற்கும் ஒரு தொடக்கம் இருக்கவேண்டும். அத்தொடக்கத்தை இந்தப் போட்டிகள் கொடுத்து வருகின்றன என்பதில் ஐயமில்லை.

மலேசியத் தமிழ்ச் சிறுகதையைப் பற்றிய வரலாற்றில் **மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவை நடத்தி வரும் சிறுகதைப் போட்டியைக்** குறிப்பிடாவிட்டால் வரலாறு முழுமை பெறாது என்று உறுதியாகக் கூறலாம். இந்நாட்டில் சிறுகதை எழுத்தாளர்கள் யார் என்பதை அடையாளம் காட்டுவதற்காக நடத்தப்படும் மூன்று இயக்கங்களின் போட்டிகளுள் இதுவே காலத்தால் மூத்தது. 1985இல் இப்போட்டி தொடங்கினாலும் பேரவைக் கதைகள் ஒன்று என்னும் பெயரில் அதற்கு அடுத்த ஆண்டில்தான் இப்போட்டி பெயர் பெற்றது. நாட்டிலுள்ள பழைய, புதிய எழுத்தாளர்கள் அனைவரும் சிறுகதைகளைப் படைப்பதில் தங்களுடைய திறமைகளைக் காட்டும் ஒரு களமாகவும் இப்போட்டி நடைபெற்று வருகின்றது எனக் கூறினும் தவறாகாது. **பரிசுபெற்ற படைப்புகளின் தொகுப்பாக இதுவரையிலும் 21 தொகுப்புகள் வெளிவந்துவிட்டன.** இந்த நாட்டுள் சிறுகதை

எழுத்தாளர்களின் திறமைகளைக் காட்டும் ஒரு கண்ணாடியாகவும் இத்தொகுப்புகளை நினைத்துப் பார்க்கமுடியும். மலேசியாவில் சிறுகதைத்துறையோடு இணைத்துப் பேசப்படுவதற்குப் பொருத்தமான ஏறத்தாழ எல்லா எழுத்தாளர்களுமே இப்போட்டிகளில் பரிசு பெற்றுள்ளனர் என்று கூறலாம். தேசிய நிலநிதிக் கூட்டுறவுச் சங்கத்தைப் போன்று இதுவும் சில காலமாக மாணவர்களுக்கான போட்டிகளையும் நடத்திப் பரிசளித்து வருகின்றது. இறுதியாக, 2006ஆம் ஆண்டு நடைபெற்ற 21ஆம் பேரவைக் கதைகள் போட்டியில் இளம்பூரணன், வ. முனியன், கு. கிருஷ்ணன் ஆகியோர் முறையே முதல் மூன்று பரிசுகளைப் பெற்றனர். நிலாவண்ணன், எஸ். ஜீவனமணி, எஸ். அருணாசலம், ஆ. நாகப்பன், சாமி மூர்த்தி, ப. அடைக்கலம், எம். ஜெயபாலன், ப. முகுந்தன், உதயகுமார் ஆகியோர் ஆறுதல் பரிசுகள் அளிக்கப் பெற்றனர். மாணவர் பிரிவுக்கான போட்டியில் கே. பாலமுருகன் முதல் பரிசையும், மு. சுந்தரேஸ்வரன் இரண்டாம் பரிசையும், ந. மகேந்திரன் மூன்றாம் பரிசையும், சு. மாரிமுத்து, மு. மல்லிகா, மு. தினகரன், செ. யுகமலர், கு. மனீஸ்வரன், இரா. பாலமுரளி, ப. செந்தாமரை ஆகியோர் ஆறுதல் பரிசுகளையும் வென்றனர்.[29]

## 4. மொழிபெயர்ப்புச் சிறுகதைகள்

மலேசியா பல இனங்களையும் பல மொழிகளைப் பேசுவோரையும் கொண்ட நாடு. குறிப்பாக இந்நாட்டு மக்கள் மலாய் மொழி, சீனமொழி, தமிழ்மொழி ஆகியவற்றோடு ஆங்கிலத்தையும் மிக அதிகமாகத் தங்களுடைய பேச்சிலும் எழுத்திலும் பயன்படுத்தி வருகின்றனர். இந்த மொழிகளில் இலக்கியங்களும் படைக்கப்பட்டு வருகின்றன. ஆயினும், மொழிபெயர்ப்பு இலக்கியங்கள் அதிகமாகப் படைக்கப்படுகின்றனவா என்பதைப் பற்றி அறிந்து கொள்ளமுடியவில்லை. எனினும், தமிழில் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன என்பதற்குச் சில சான்றுகள் உண்டு.

மலாயாப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த முனைவர் கிருஷ்ணன் மணியம் அவர்கள் 1989ஆம் ஆண்டில் டேவான் பகாசா டான் புஸ்தகா (மொழி வளர்ப்பு நிறுவனம்) திட்டத்தின் கீழ்ச் சில மலாய்க் கதைகளைத் தமிழில் மொழி பெயர்த்திருக்கிறார். அன்வார் ரிட்சுவானின் (Anwar Ridhwan) 'சாசாரான்' (Sasaran), 'சகாபாட்' (Sahabat) என்னும் இரு கதைகளையும், ரசாக் மாமாட்டின் (Razak Mamat) 'டி லுவார் கூரோங்ஙான்' (Di Luar Kurungan) என்னும் கதையையும், சுரினா ஹசானின் (Zurinah Hassan) 'நேனேக்' (Nenek) என்னும் கதையையும், அஸிஸி

அப்துல்லாவின் (Azizi Abdullah) 'திருச்செல்வம்' (Thiruchelvam) என்னும் கதையையும் மொழி பெயர்த்திருக்கிறார். இக்கதைகளுள் 'சாசாரான்' 'குறி' என்னும் தலைப்பிலும், 'டி லுவார் கூரோங் ஙான்' 'கூண்டுக்கு வெளியே' என்னும் தலைப்பிலும் 'திருச் செல்வம்' அதே தலைப்பிலும் தமிழ் நேசனில் வெளியிடப்பட்டன. மற்ற இரு கதைகளுள் 'சகாபாட், 'நண்பன்' என்னும் தலைப்பில் மயில் இதழிலும், 'நேனேக்' |'பாட்டி' என்னும் தலைப்பில் தினமணியிலும் பிரசுரிக்கப்பட்டன.

இவை தவிர, தேசியமொழிச் சிறுகதைத் தொகுப்பான 'சிந்தா ஜமுனா' (Cinta Jamuna)[30] என்னும் சிறுகதைத் தொகுப்பு ஒன்று **'யமுனையின் காதல்'** என்னும் தலைப்பில் தமிழில் வெளியீடு கண்டுள்ளது. தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட எட்டு மலாய்ச் சிறுகதைகள் இதில் அடங்கியுள்ளன. 'நான் ஹீரோவா? சொன்னவர் யார்?', 'மாயை', 'காக்கை', 'யமுனையின் காதல்', 'அழிப்பு', 'சக்கர நாற்காலிப் பெண்', 'ஏக்கம்', 'பனி நேரக் கனவு' என்னும் தலைப்புகளில் அவை மொழிபெயர்க்கப்பட்டு நூலாக்கம் கண்டுள்ளன. இத்தொகுப்பைக் 'கோலாலம்பூர் - சிலாங்கூர் இந்திய வர்த்தகத் தொழிலியல் சங்கம்' வெளியிட்டிருக்கின்றது. இத்தொகுப்பிலுள்ள சிறுகதைகளுக்குச் சொந்தக் காரரான அமிடா @ ஹமிடா ஹாஜி அப்டுல் ஹமிட் (அனிஸ்) என்பவரின் முன்னுரை தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு அதன் அடிப்பகுதியில் 25 ஜனவரி 2000 என்று குறிப்பிடப்பட்டிருப்பதால் இத்தொகுப்பு நிச்சயமாக அதற்குப் பின்னரே வெளியிடப்பட்டிருக்கின்றது என்று முடிவெடுப்பதில் தவறொன்றுமில்லை. முகவுரை / நன்றியுரை, முன்னுரை, பொருளடக்கம் நீங்கலாக 83 பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ள இச்சிறுகதைத் தொகுப்பைத் தமிழில் மொழிபெயர்த்தவர் வ. முனியன் ஆவார். (கட்டுரை ஆசிரியரின் சொந்தத் தகவல். நூலில் மொழி பெயர்ப்பாளர் பெயர் குறிப்பிடப்படவில்லை.)

இதைத் தவிர்த்து மலாயாப் பல்கலைக் கழகத்தில் தற்காலத் தமிழிலக்கியம் கற்பித்து வந்த இரா. தண்டாயுதம் அவர்களின் முயற்சியால் 1984ஆம் ஆண்டில் 'டேவான் சாஸ்த்ரா'[31] என்னும் மலாய்மொழி இதழில் ஒவ்வொரு மாதமும் மலேசியத் தமிழ் ஏடுகளில் வெளிவந்த கவிதை, கட்டுரை, சிறுகதை, நாடகம் போன்றவற்றைப் பற்றி மலாய்மொழிக் கட்டுரைகள் வெளியிடப் பட்டன. டாக்டர் இரா. தண்டாயுதம் இவற்றைத் தமிழில் எழுதி யிருந்தார். மலாயாப் பல்கலைக்கழகத்தில் விரிவுரையாளராகப் பணியாற்றிய திரு ப. பழனியப்பனும் இந்தியப் பகுதியின் தலைவராக இருந்த டாக்டர் ச. சிங்காரவேலுவும் இவற்றை

மலாய்மொழியில் மொழிபெயர்த்திருந்தனர். இக்கட்டுரைகள் ஒவ்வொரு மாதமும் தமிழ் நாளேடுகளில் வெளிவந்த சிறுகதை களின் கருப்பொருள்கள் பற்றியே அதிகமாகப் பேசின. பொதுவாக, அக்காலகட்டத்தில் தமிழ்ச் சமுதாயத்தில் காணப்பட்ட சிக்கல் களான சிவப்பு அடையாள அட்டை, கல்வி, தமிழ்ப்பள்ளி ஆசிரி யர்கள், தலைமை யாசிரியர்கள், குடும்பம், தமிழர்களிடையே காணப்படும் ஒற்றுமையின்மை, சம்சு என்னும் அரக்கனால் ஏற்பட்ட சீரழிவு, தோட்டப்புறச் சமுதாயம் போன்ற சமகாலப் பிரச்சினைகளையே அவை கருப்பொருள்களாகக் கொண்டிருந்தன. எனினும், இக்கட்டுரைகளில் சிறுகதைகளின் தரம், உத்திகள் போன்றவற்றைப் பற்றி அதிகமாகக் காணமுடியவில்லை. எனவே, தேசியமொழி இலக்கியப் படைப்பாளர்களுக்கு தமிழிலக்கியம் என்ற ஒன்று இந்நாட்டில் படைக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றது என்பதைக் காட்டும் ஒரு முயற்சியாகவே இதை நாம் எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

மொழிபெயர்ப்புத்துறையில், தமிழிலிருந்து தேசியமொழிக்கு மாற்றம் செய்யப்பட்ட சிறுகதைகளும் அதிகம் இல்லையென்றே கூறவேண்டும். த. மு. அன்னமேரியின் சிறுகதைத் தொகுப்பொன்று 'வனித்தா மாலாங்' (Wanita Malang) என்னும் தலைப்பில் ஜி. சூசை அவர்களால் தமிழிலிருந்து தேசியமொழிக்கு மொழி பெயர்க்கப் பட்டுள்ளது. தவிர, சி. வடிவேலு தம்முடைய **'புதிய வாரிசு'** என்னும் சிறுகதைத் தொகுப்பில் ஆ. நாகப்பன் தேசிய மொழியில் மொழிபெயர்த்த தம்முடைய மூன்று சிறுகதைகளை இணைத் துள்ளார். மலாயாப் பல்கலைக் கழகம் வெளியிட்ட 'Koleksi Cerpen - Cerpen Malaysia' என்னும் தொகுப்பிலும் தமிழிலிருந்து தேசிய மொழிக்கு மொழிபெயர்க்கப்பட்ட நான்கு சிறுகதைகள் அடங்கி யுள்ளன. தேவகி மணாளனின் 'நேர் கோடுகள்', மு. அன்புச் செல்வனின் 'அட்டைகள்', ரெ. கார்த்திகேசுவின் 'டத்தோ கண்ணப்பன்', சி. வடிவேலுவின் 'முத்துசாமிக் கிழவன்' ஆகிய வையே அவை. இவற்றை ப. பழனியப்பன் 'Garisan Selari', 'Lintah Darat', 'Dato Kannappan', 'Orang Tua Muthusamy' என்னும் தலைப்புகளில் மொழிபெயர்த்திருந்தார்.[32]

தமிழிலிருந்து ஆங்கிலத்துக்கு மொழிபெயர்க்கப்பட்ட மலேசியச் சிறுகதைகளும் அதிகம் இல்லை எனலாம். 1964இல் கா. பெருமாளின் காலக் கணக்கு, 'Destiny' என்னும் தலைப்பிலும், தி. சு. சண்முகத்தின் தளிர் 'Sprouting Young Leaf' என்னும் தலைப் பிலும், ரெ. கார்த்திகேசுவின் வாழைமரம், 'The Plaintain Tree' என்னும் தலைப்பிலும், டி. விக்னேஸ்வரன் தொகுத்த 'Bunga Emas: An Anthology of Contemporary Malaysia Literature' என்னும் தொகுப்புக்

காக ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. இவற்றை S. இராமச்சந்திர ஐயர் என்பவர் மொழிபெயர்த்திருந்தார்.[33] எனினும், 2004ஆம் ஆண்டு ஒரு தொகுப்பு வெளியீடு கண்டுள்ளது. 'Selected Short Stories of Malaysia Tamil Writers'[34] என்னும் தலைப்பில் வெளியிடப்பட்டுள்ள இத்தொகுப்பில் மா. இராமையா, சை. பீர். முகம்மது, டாக்டர் சி. சொக்கலிங்கம், காசிதாசன், பி. கோவிந்த சாமி, சித. நாராயணன், மு. அன்புச்செல்வன், கோ. புண்ணிய வான், வீ. செல்வராஜ், ரெ. சண்முகம், மனஹறன், எம். இராச இளவழகன், ஈப்போ அரவிந்தன், காரைக்கிழார், ப. கோ. சண்முகம், ந. மகேஸ்வரி, கோ. முனியாண்டி, ரெ. கார்த்திகேசு என்னும் நாட்டின் பழம்பெரும் எழுத்தாளர்கள் பதினெட்டுப் பேரின் சிறுகதைகள் இடம்பெற்றுள்ளன. வி. எம். எஸ். வெங்கடாசலம் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்ட இச்சிறுகதைத் தொகுப்பு தமிழகத்திலும் வெளிநாடுகளிலும் நன்கு அறிமுகமான மாத்தளை சோமு என்பவரின் அரிய முயற்சியால் வெளிவந்துள்ளது.

சுருங்கக் கூறுவதானால், மலேசியத் தமிழ்ச் சிறுகதை உலகில் தமிழிலிருந்து தேசியமொழிக்கோ ஆங்கிலத்துக்கோ மொழி பெயர்க்கப்பட்ட சிறுகதைகளோ தேசியமொழி, ஆங்கிலம் ஆகிய மொழிகளிலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்ட சிறுகதை களோ அதிகம் இல்லை எனலாம். எனினும், தற்காலத்தில் மலாய்மொழி யிலும் தமிழிலும் தெளிவாக எழுதக்கூடிய இளைய தலைமுறை எழுத்தாளர்கள் இருப்பதால் இந்தத் துறையில் அதிகமான முயற்சிகள் வருங்காலத்தில் மேற்கொள்ளப்படலாம்; மேற்கொள்ளப் படவும் வேண்டும். குறிப்பாக, தமிழ்ச் சிறுகதைகள் தேசிய மொழிக்கு மொழிபெயர்க்கப்படும் பணியில் அதிகமான கவனம் செலுத்தப்பட வேண்டும். ஏனெனில், மலேசியாவில் சீன, தமிழ் மொழிகளில் படைக்கப்படும் இலக்கியங்கள் தேசிய இலக்கியங் களாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்னும் போராட்டத்திற்கு இன்னும் வெற்றி கிட்டவில்லை. எனவே, தேசிய நிலையில் தமிழ்ச் சிறுகதைகளை அடையாளம் காட்டத் தேசியமொழியில் அவற்றை மொழிபெயர்ப்பதைத் தவிர வேறு வழி இல்லை.

## 5. மலேசியாவுக்கு வெளியே மலேசியத் தமிழ்ச் சிறுகதை எழுத்தாளர்கள் ஏற்படுத்திய உறவுப்பாலம்

மலேசியத் தமிழ்ச் சிறுகதை எழுத்தாளர்களுள் பெரும் பாலோர் மலேசியாவுக்கு வெளியே அறிமுகமில்லாதவர்களாகவே இருக்கின்றனர். உள்நாட்டு ஏடுகளில் எழுதுவதோடு திருப்தி அடைந்து விடுபவர்களாகவும் இவர்கள் காணப் படுகிறார்கள்.

வெளிநாட்டு இதழ்களிலும் இணைய ஏடுகளிலும் எழுதுவதைப் பற்றி அதிகமாகச் சிந்திக்காததும், எழுதினால் பிரசுரமாகுமோ என்ற ஐயமும் ஒருவேளை இதற்குக் காரணங்களாக இருக்கக் கூடும் என எண்ணத் தோன்றுகிறது. எனினும், தன்னம்பிக்கை யுடன் தமிழ்நாட்டு இதழ்களில் எழுதியவர்கள் பலருண்டு. பைரோஜி நாராயணன், பெ. மு. இளம்வழுதி, சி. வேலுசாமி, ச. கமலநாதன், எம். குமரன், மு. அன்புச்செல்வன், சா. ஆ. அன்பானந்தன், ஐ. இளவழகு, ரெ. கார்த்திகேசு, ஆ. நாகப்பன், த. சத்தியசீலன் முதலியோர் இதில் முன்னோடிகளாக இருந் துள்ளனர். இவர்களுடைய படைப்புக்கள் கலைமன்றம், காஞ்சி, தீபம் முதலிய இதழ்களில் வெளிவந்துள்ளன. இவர்களைத் தவிர்த்து மா. இராமையா, ஆர். சண்முகம், ந. மகேஸ்வரி, பி. எஸ். பரிதி தாசன் முதலியோரும் வெளிநாட்டு இதழ்களில் சிறுகதைகள் படைத்துள்ளனர். குமுதம் இதழ் நடத்திய சிறுகதைப் போட்டியில் சீ. முத்துசாமியின் 'இரைகள்' என்னும் சிறுகதையும் ஆனந்த விகடன் நடத்திய போட்டியில் சங்கு சண்முகம் எழுதிய 'இரை தேடும் பறவைகள்' என்னும் சிறுகதையும் முதல் பரிசுகள் பெற்று மலேசிய எழுத்துகளுக்குப் பெருமையும் அங்கீகாரமும் தேடித் தந்துள்ளன. சீ. மு.வின் "இரைகள்" இலக்கியச் சிந்தனை அமைப்பின் மாதாந்திச் சிறுகதைத் தேர்வில் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளது. ஆனாலும், எண்ணிக்கை அளவில் இவை யாவும் கடலில் கரைந்த பெருங்காயமே.

இந்நிலையிலும், தமிழக ஏடுகளில் மிக அதிகமாக எழுதிப் பெயர் பெற்ற மலேசியராக முத்தமிழ்ச் செல்வர் நா. ஆ. செங்குட்டுவனைக் குறிப்பிடலாம். கலைமகளில் மிக அதிகமாக இவருடைய படைப்புகள் வெளிவந்திருக்கின்றன. தவிர, குமுதத்திலும் எழுதியிருக்கின்றார். இப்படைப்புகளையெல்லாம் தொகுத்துத் 'தமிழகத்தில் தவழ்ந்தவை' (சிறுகதை, குறுநாவல், நாவல்) என்னும் தலைப்பில் தொகுப்பு ஒன்றும் 2005இல் வெளி யிட்டிருக்கிறார். இவருடைய 'அரை நூற்றாண்டுச் சிறகதைகள்' தொகுப்புக்காக 2002ஆம் ஆண்டில் சென்னை தமிழ்நாடு வாகீச கலாநிதி கி. வா. ஜ. அறக்கட்டளையின் சிறந்த நூலுக்கான முதல் பரிசையும் இவர் பெற்றிருக்கிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவரைத் தவிர்த்து, தமிழகத்தில் மட்டுமல்லாது உலகளாவிய நிலையிலும் அறிமுகமாகியுள்ள மலேசிய எழுத்தாளர்களுள் மிக முக்கியமானவர் டாக்டர் ரெ. கார்த்திகேசு. தமிழ்நாட்டு ஏடு களில் மட்டுமல்லாது இணைய ஏடுகளிலும் எழுதியுள்ளார். கல்கி இதழின் வைரவிழாச் சிறுகதைப் போட்டியில் தம்முடைய 'ஊசி இலை மரம்' என்னும் சிறுகதைக்கு 10,000 ரூபாய் பரிசைப்

பெற்றார். இதைத்தொடர்ந்து இவருடைய 'எந்தச் சாமி?' என்னும் சிறுகதை தீராநதி இதழில் 12.03.2002இல் பிரசுரமாகியது. இக்கதை பின்னர் தமிழக 'இலக்கியச் சிந்தனை' என்னும் இதழின் டிசம்பர் மாதச் சிறுகதையாகத் தேர்வு பெற்று 2003ஆம் ஆண்டுக்கான 'இலக்கியச் சிந்தனை'யின் தொகுப்பிலும் இடம்பெற்றது.

மலேசியாவில் அறிவியல் புனைகதை எழுதுவதிலும் இவர் முன்னோடியாக இருந்துள்ளார் எனக் கூறலாம். இவருடைய **'சூரியனைக் கொன்றுவிட்டார்கள்'** என்னும் அறிவியல் புனைகதை ஒன்று 20.02.2003இல் மக்கள் ஓசையில் பிரசுரமானது. இதைத் தொடர்ந்து **'புழுத்துளைகள்'** என்னும் இவருடைய அறிவியல் புனைகதை ஒன்றும் தொடராகத் திண்ணை இணைய இதழில் வெளிவந்தது. இவற்றுக்கெல்லாம் முத்தாய்ப்பாகத் திண்ணை இணைய இதழும் மரத்தடி இணையக் குழுமமும் இணைந்து நடத்திய அறிவியல் புனைகதைப் போட்டியில் **'எதிர்காலம் என்று ஒன்று'** என்னும் இவருடைய அறிவியல் புனைகதை இரண்டாம் பரிசைப் பெற்று வரலாறு படைத்தது. தொடர்ந்து கோபால் ராசாராம் தொகுத்த அறிவியல் புனைகதைத் தொகுப்பில் இவருடைய இக்கதையும் இடம் பெற்றிருப்பதோடு தொகுப்பும் அதையே தலைப்பாகவும் தாங்கி வெளிவந்துள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது.

## கடந்த பன்னிரண்டு ஆண்டுகளில் (1995 - 2007) மலேசியத் தமிழ்ச் சிறுகதை இலக்கியம்

### அ. சிறுகதைத் தொகுப்புகள் வெளியீடு

மலேசியச் சிறுகதை இலக்கியத்தின் கடந்த பன்னிரண்டு ஆண்டுக்காலத்தின் நிலைமையைப் பற்றிய கேள்வி இப்பொழுது எழுத்தாளர்களிடையே, குறிப்பாக மலேசியாவின் முன்னணி எழுத்தாளர்களாக விளங்கிக் கொண்டிருக்கின்றவர்களிடையே தோன்றியிருக்கின்றது என்பது உண்மையே, இலக்கியத் திறனாய்வுக் கட்டுரைகள், சிறுகதைகளுக்கு எழுதப்படும் முன்னுரைகள், அணிந்துரைகள், வாழ்த்துரைகள் போன்றவற்றில் சிற்சில இடங்களில் இக்கேள்வி கேட்கப்பட்டு விடையும் கொடுக்கப் பட்டுக் கொண்டிருக்கிறது.

முதலாவதாக சிறுகதைத்துறையின் வளர்ச்சி படிக்கும் சமுதாயத்தைப் பொறுத்தே அமைந்திருக்கின்றது எனக் கூறலாம். ஆனால், மலேசியாவில் சிறுகதையைப் படிக்கும் சமுதாயம்

பெரியதாக இருக்கும் என்று தோன்றவில்லை. அப்படியே படித்தாலும் இந்தச் சமுதாயம் படிப்பதெல்லாம் நாளேடுகளின் ஞாயிற்றுப் பதிப்புகளில் வெளிவரும் சிறுகதைகளை மட்டுமே. இவ்வாறு கூறப்படுவதற்கு நல்ல காரணம் உண்டு. மலேசியாவில் சிறுகதைத் தொகுப்பாக இருக்கட்டும், வேறு இலக்கியப் படைப்புகளாக இருக்கட்டும் தமிழ்ப் புத்தகக் கடைகளில் வைத்து விற்க முடியாத நிலை தொன்றுதொட்டே இருந்து வருகின்றது. எனவே, எழுத்தாளர்கள், தங்களுடைய படைப்புகளை நூலாக வெளியிடுவதற்குத் தயக்கம் காட்டுகின்றனர். நூல் வெளியீடுகள் மூலம், இச்சிக்கலுக்குத் தீர்வு காணச் சில எழுத்தாளர்கள் துணிவுடன் முயற்சி செய்கின்றார்களெனினும் நூல் வெளியீடுகளுக்கு வருவோரின் எண்ணிக்கை அந்த முயற்சிக்கு ஊக்கம் தருவதாக இல்லை. பெரும்பாலும் நண்பர்கள், குடும்ப உறவினர்கள், தெரிந்தவர் என்ற நிலையிலேயே நூல் வெளியீடுகளுக்குக் கூட்டம் சேர்கின்றது. சில எழுத்தாளர்களின் நூல் வெளியீடுகளுக்கு அதிகமானோர் வருகின்றனர் என்பது உண்மையாயினும் இவற்றை விதிவிலக்குகள் என்றே நாம் கொள்ளவேண்டும். ஏனெனில், நூல் வெளியீடு செய்ய வரும் பிரமுகரைப் பொறுத்தே இக்கூட்டத்தினரின் எண்ணிக்கையும் அமையும். எவ்வாறெனினும் ஏதோ ஒரு காரணத்திற்காக நூல் வெளியீட்டிற்கு வருகின்றனரேயன்றி நூல்களைப் பெற்றுச் சென்று அவற்றை முழுமையாகப் படித்துப் பார்ப்பதற்காக வருவோர் மிகக் குறைவானோரே. சிறுகதைப் படைப்பாளர்களிடமும் இத்தகைய போக்கு உண்டு என்பதை மறுப்பதற்கில்லை. இந்த அப்பட்டமான உண்மையைச் செவ்விசைச் சித்தர் ரெ. சண்முகம் அவர்களின் கதை ஒன்று தெளிவாகவே காட்டும்.

*“என்னப்பா இது! அரசியல்வாதிங்களாலதானே இன்னைக்குப் புத்தக வெளியீடு — கேஸட் வெளியீடெல்லாம் பிரமாதமா இருக்கு. எழுத்தாளர்களும் கலைஞர்களும் நல்லா சம்பாரிக்கிறாங்களே!” என்றேன்.*

*“ஆமா... சந்தேகமேயில்ல. எப்படி? தலைவர் வர்ராரு. அவருக்காக இவுங்கள்ளாம் வர்ராங்க. வாங்குறாங்க. ஆனா, படிக்கிறாங்களா?... தலைவர கூப்பிடாம நீ ஒரு புத்தக வெளியீட செய்யி! போட்ட பணமே வருமாங்கிறது சந்தேகந்தான்.”*[35]

நாளேடுகள், வார, திங்கள் இதழ்கள் ஆகியவற்றில் வருகின்ற சிறுகதைகளையும் எத்தனை விழுக்காட்டினர் படிக்கின்றனர் என்பது தெளிவாகத் தெரியவில்லை. ‘இந்தக் கதை நன்றாக இருந்தது, அந்தக் கதை நன்றாக இருந்தது’, என்று மறு வாரம் பத்திரிகைகளில் எழுதுவோர் இருக்கின்றனரெனினும் இவ்வாறு

எழுதுபவர்களின் எண்ணிக்கையும் மிகக் குறைவே. அப்படியே எழுதினாலும் ஏடுகள் அவற்றையெல்லாம் வெளியிடுகின்றனவா என்பதும் கேள்விக்குறியே. இந்த நிலைமையில்தான் இன்றைய மலேசியச் சிறுகதை உலகம் இயங்கிக் கொண்டிருக்கின்றது.

பொதுவாக, மலேசியச் சிறுகதையின் வளர்ச்சியையோ தளர்ச்சியையோ ஆய்வு செய்வதற்குக் கிடைக்கின்ற ஆவணங்கள் சிறுகதைத் தொகுப்புகள் மட்டுமே. திரு. பாலபாஸ்கரன் தமது ஆய்வுக்குப் பயன்படுத்திக் கொண்ட 64 தொகுப்புகளுடன்[36] (காண்க பின்னிணைப்பு) 1980க்குப் பின்னர் வெளியிடப்பட்ட தொகுப்புகளையும் ஏடுகளில் வெளிவந்த சிறுகதைகளையும் இணைத்துக் கொள்ளலாமெனினும் இவை எல்லாவற்றையும் திரட்டிப் படிப்பதற்கு நீண்ட காலம் தேவைப்படும். எனவே, குறுகிய காலத்தில் இவற்றை ஆய்வுசெய்து ஒரு கருத்தைக் கூறுவதும் இயலாத ஒன்றே. ஆகவே, கிடைக்கப்பெற்ற சிறுகதைத் தொகுப்புகள், முன்பே குறிப்பிட்டதுபோல தொகுப்புகளுக்கு எழுதப்பட்ட முன்னுரைகள், அணிந்துரைகள், வாழ்த்துரைகள், ஆய்வுரைகள், இடையிடையே கருத்தரங்குகளில் படைக்கப்படுகின்ற ஆய்வுக் கட்டுரைகள் ஆகியனவற்றையே சிறுகதைத்துறையைப் பற்றிய ஒரு கருத்தைக் கூறுவதற்கு பெரிதும் நம்பியிருக்க வேண்டியிருக்கின்றது.

கடந்த 1995 தொடங்கி 2007 வரையிலுள்ள பன்னிரண்டு ஆண்டுக்காலத்தில் வெளிவந்த தொகுப்புகளைப்பற்றி துல்லிதமான புள்ளிவிவரங்களும் கிடைத்தில. நாட்டின் பல பகுதிகளிலும் இத்தகைய நூல் வெளியீட்டு விழாக்கள் நடைபெறுவதனாலும் வெளியிடப்படுகின்ற எல்லாத் தொகுப்புகளையும் திரட்டி வைப்பதற்கான நிறுவனமோ இயக்கமோ செயற்படாததனாலும் ஏற்பட்டுள்ள கவலைக்குரிய நிலை இது. எனினும், குறைந்தது எழுபது சிறுகதைத் தொகுப்புக்களாவது இக்காலகட்டத்தில் வெளியீடு கண்டுள்ளன என்பதில் ஐயமில்லை.

சை. பீர்முகம்மதுவின் ‘வெண்மணல்’ (1995), இரா. இராம ராவின் ‘ஒரு தாயின் மனது’ (1995), நிர்மலா பெருமாளின் ‘வரலாற்றுக்குள் ஒரு வரி’ (1996), எம்.எஸ். விஜயராஜின் ‘பூவிழிகள்’ (1996), ப. சந்திரகாந்ததின் ‘அங்கும் இங்கும்’ (1997), எம். பாலசந்திரனின் (தொகுப்பு) ‘இள மனதின் வேர்கள்’ (1997), கவிக்கூத்தன் மா. இராமகிருஷ்ணனின் ‘ஞானம்’ (1997), மு. அன்புச்செல்வனின் ‘மு. அன்புச்செல்வன் சிறுகதைகள்’ (1998), மெ. அறிவானந்தனின் ‘மெ. அறிவானந்தன் சிறுகதைகள்’ (1998), மா. சண்முகசிவாவின் ‘வீடும் விழுதுகளும்’ (முதற் பதிப்பு 1998), தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கத்தின் ‘பரிசு பெற்ற படைப்புகள்’ (1998), இலக்கியக் குரிசில் மா. இராமையாவின் ‘திசை மாறிய

பறவைகள்' (1998), பி. கோவிந்தசாமியின் 'ஒரு விடியல்' (1999), பி. எஸ். பரிதிதாசனின் 'பரிதிதாசன் சிறுகதைகள்' (1998), கோ. புண்ணியவானின் 'நிஜம்' (1999), வீ. செல்வராஜின் 'பிரதமர் ஆடினால்' (1999), மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் 'சமுதாயக் கதைகள்' (1999), சை. பீர். முகம்மதுவின் 'வேரும் வாழ்வும் முதல் தொகுப்பு' (1999), மா. இராமையாவின் 'தேடலில் தொலைந்த நம்பிக்கை' (1999), கோமகளின் 'புதுமைப்பெண்' (1999), எஸ். ரேவதி நாதனின் 'சமுதாய அலைகள்' (1999), மா. சண்முகசிவாவின் 'வீடும் விழுதுகளும்' (இரண்டாம் பதிப்பு 1999), செங்கதிரோனின் 'நியாயங்கள்' (1999), டாக்டர் மா. இராமையாவின் 'அமாவாசை நிலவு' (2000), பூச்சோங் எம். சேகரின் 'நீ என் நிலா' (2000), கவிக்கூத்தன் மா. இராம கிருஷ்ணனின் 'தானம்' (2000), ஸ்கூடாய் சி. வடிவேலுவின் 'சி. வடிவேலுவின் சிறுகதைகள்' (2000), சாமி மூர்த்தியின் 'சாமி மூர்த்தி சிறுகதைகள்' (2001), கெடா மாநில எழுத்தாளர் இயக்கத்தின் 'நிறங்கள்' (2001), மு. அன்புச்செல்வனின் 'விழித் திருக்கும் ஈயக்குட்டைகள்' (2001), ரெ. கார்த்திகேசுவின் 'இன்னொரு தடவை' (2001), சின்னருணா அ. பழனியாண்டியின் 'நிலவுக்கு எட்டாத வானம்!' (2001), நா. வேலாயுதத்தின் 'சத்தியத்தின் இலட்சியம்' (2001), ந. வரதராசனின் 'வாழ்வில் வசந்தம்' (2001), செ. கோபாலனின் 'இனிப்பு மஞ்சள்' (2001), சை. பீர் முகம்மதுவின் 'வேரும் வாழ்வும் 2, 3' (2001), நிர்மலா பெருமாளின் 'தண்ணீரை ஈர்க்காத தாமரைகள்' (2002), ப. சந்திரகாந்தத்தின் 'வலை' (2002), பூ அருணாசலத்தின் 'பூவோ பூ' (2002), தொகுப்பாசிரியர் கீழாம்பூரின் 'மலேசியச் சிறுகதைகள்' (2003), ரெ. கார்த்திகேசுவின் 'ஊசி இலை மரம்' (2003), 'ந. மகேஸ்வரியின் சிறுகதைகள்' (2003), பழ. எட்டிக்கண் அன்பழகனின் 'தீயின் எச்சங்கள்' (2003), தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கத்தின் 'பரிசு பெற்ற படைப்புகள்' (2003), செ. கோபாலனின் 'அத்தரும் புகைவாசமும்' (2003), வ. முனியனின் 'விழிக்க மறுக்கும் இமைகள்' (2004), ரெ. சண்முகத்தின் 'ரெ. சண்முகம் கதைகள்' (2004), எஸ்.பி. பாமாவின் 'அது அவளுக்குப் பிடிக்கல...!' (2004), கௌரி சர்வேசனின் 'தீர்மானங்கள்' (2004), கோ. புண்ணியவானின் 'சிறை' (2004), சாரதா கண்ணனின் 'சாரதா கண்ணன் சிறுகதைகள்' (2005), நா. ஆ. செங்குட்டுவனின் 'தமிழகத்தில் தவழ்ந்தவை' (2005), கவிஞர் வீ. கோவிமணாளனின் 'பூவுக்கும் பொட்டுக்கும் விடுதலை கிடையாது' (2005), நிலா வண்ணனின் 'அங்கீகாரம்' (2005), ஆ. நாகப்பனின் 'கம்பி மேல் நடக்கிறார்கள்' (2006), கா. இளமணியின் 'இளமணியின் சிறு கதைகள்' (2006), நிர்மலா ராகவனின் 'ஏணி' (2006), வீ. ருக்குமணி லோகாவின் 'தந்தையின் தாய்மை' (2007), நிர்மலா பெருமாளின் 'விலங்குகள்' (2007), கே. எம். முருகேசனின் 'வானம் என்ன

நிறம்?' (2007) கு. கிருஷ்ணன், ஆ. நாகப்பன், எல். முத்து ஆகியோரின் 'தேடல்' (2007) ஆகியனவே அவை. அவற்றோடு 1995 முதல் 2006ஆம் அண்டு வரையிலும் வெளிவந்த பேரவைக் கதைகள் தொகுப்புகளையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

இந்தப் பட்டியல் இன்னும் சற்று நீளமாகக்கூட இருக்கலாம். சிலருடைய பெயர்களும் நூல்தொகுப்புகளின் பெயர்களும்கூட விடுபட்டுப் போயிருக்கலாம். ஆனால், அதற்குக் கட்டுரையாளரின் ஆய்வுக் கண்களுக்கு அவை சிக்காமை காரணமேயன்றி வேறு காரணம் ஏதுமில்லை. ஒரு சிறுகதைத் தொகுப்புக்குச் சராசரி பதினைந்து கதைகள் என்று வைத்துக்கொண்டால்கூட ஏறத்தாழ ஆயிரம் சிறுகதைகளே இந்தப் பன்னிரண்டு ஆண்டுக் காலத்தில் நூலாக்கம் கண்டிருக்கின்றன என்று கூறுவது தவறாகாது. சில சிறுகதைகள் ஒன்றுக்கு மேற்பட்ட தொகுப்புகளில் இடம் பெறுவதும் தவிர்க்க முடியாததாகையால் இந்த எண்ணிக்கையும் மேலும் குறையலாம். எவ்வாறெனினும், ஓராண்டுக்கு ஏறத்தாழ 100 சிறுகதைகளே நூலாகத் தொகுக்கப்பெற்றுள்ளன என்பது பெருமைக்குரிய ஒரு நிலைமையன்று. தவிர, தொகுக்கப் பெற்று விட்ட அத்தனை சிறுகதைகளுமே மலேசியச் சிறுகதைத் துறைக்கு அழகு சேர்ப்பனவா என்னும் கேள்விக்கு விடையளிப்பதும் கடினமே. அத்தனைத் தொகுப்புகளிலுமுள்ள சிறுகதைகளையும் படிக்காத நிலையில் அவற்றின் தரம் பற்றிக் கருத்துக் கூறுவதும் முறையாக இருக்காது என்பதால் தொகுப்புகளிலுள்ள சிறுகதை களின் தரம் பற்றிக் கருத்துக் கூறுவது இங்கு தவிர்க்கப்படுகின்றது. பொதுவாக, ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் என்னும் பழமொழி சிறுகதைத் தொகுப்புகளுக்குப் பொருந்தும் என்று தோன்றவில்லை. எழுத்தாளர்களில் பெரும்பாலோர் தாங்கள் எழுதிய அத்தனை சிறுகதைகளையும் எப்படியாவது தொகுத்து வெளியிட்டு விட வேண்டுமென்னும் வேட்கைக்கே அதிக முக்கியத்துவம் கொடுப்பதால் இது சாத்தியப்படாமல் போகின்றது. எனினும், மா. இராமையா, நா. ஆ. செங்குட்டுவன், ரெ. கார்த்தி கேசு, மு. அன்புச்செல்வன் சை. பீர் முகம்மது, டாக்டர் மா. சண்முக சிவா, சாமி மூர்த்தி, ப. சந்திரகாந்தம், ந. மகேஸ்வரி, கோ. புண்ணியவான், பி. கோவிந்தசாமி, மா. இராமகிருஷ்ணன், நிலாவண்ணன், ஆ. நாகப்பன், பி.எஸ். பரிதிதாசன், செ. கோபாலன், நிர்மலா ராகவன், கா. இளமணி, நிர்மலா பெருமாள், மெ. அறிவானந்தன், வீ. செல்வராஜ் முதலியோரின் தொகுப்புகளை இக்கருத்துக்கு விதிவிலக்காகக் கொள்ளலாம்.

இத்தொகுப்புகளின் ஆசிரியர்களின் பெயர்கள் ஒன்றைத் தெளிவாகவே காட்டுகின்றன என்பதில் ஐயமில்லை. பெரும்

பாலான தொகுப்புகள் பத்துப் பதினைந்து ஆண்டுகளாகச் சிறுகதைத் துறையில் ஈடுபாடு காட்டி வருபவர்களின் தொகுப்புகளாகவே இருக்கின்றன. அவற்றுள் பல பெயர்கள் மலேசியச் சிறுகதைத் துறையோடு அடிக்கடி தொடர்புபடுத்திப் பேசப்பட்டு வரும் பெயர்களே. ஆக, ஒட்டுமொத்தமாகக் கூறுவதென்றால், தொகுப்புகள் வெளியிடுவதில் இளையோரின் ஈடுபாடு இன்னும் போதுமான அளவு இல்லை என்பது வெள்ளிடைமலை.

## ஆ. மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளின் தரம்

மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளின் தரம், அமைப்பு, கதைக் கருக்கள், கதைத்திட்டம், கதைப்பின்னல், உத்திகள் ஆகியவற்றைப் பற்றி பாலபாஸ்கரன் தமது இரண்டு நூல்களிலும் (மலேசியத் தமிழ்ச் சிறுகதைகள், The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study) மிகவும் ஆழமாகவும் விரிவாகவும் ஆய்வு செய்திருக் கின்றார் என்பதில் ஐயமில்லை. ஆயினும், அவருடைய திறனாய்வு 1980ஆம் ஆண்டு வரையிலுள்ள காலகட்டத்தை எல்லையாகக் கொண்டுள்ளது என்பதை அடிப்படையாக வைத்தே அவருடைய கருத்துகளைக் கண்ணோட்டமிடல் வேண்டும். பொதுவாக, மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளைப்பற்றி பாலபாஸ்கரனின் பார்வை சற்று வித்தியாசமானது. சிறுகதைப் பண்புகளின் அடிப்படையில் தொடக்ககாலச் சிறுகதைகளைக் காணும்போது அவை சிறுகதைகளே அல்லவென்று ஆணித்தரமாகக் கூறும் அவர் அதன் பின்னர் 1979ஆம் ஆண்டு வரையிலும் வந்த பெரும்பாலான சிறுகதை களிலும் உள்ள குறைபாடுகளை தமது நூல்களில், குறிப்பாக அவருடைய ஆங்கில நூலில், சுட்டிக் காட்டுகின்றார். அது மட்டு மன்று. சிறந்த கதைகளாகவும் பரிசுக்குரியனவாகவும் வியந்து பாராட்டப்பெற்ற சில சிறுகதைகளும்கூட சரியான கவனம் செலுத்திப் படைக்கப் படவில்லையென்பதாகவும் அவருடைய கண்ணோட்டம் அமைந்துள்ளது.

"மலேசியத் தமிழ்ச் சிறுகதை எழுத்தாளர்கள் கையாண்டுள்ள பல்வகைக் கதைத் திட்டங்களை ஆய்வு செய்யும்போது பெரும் பாலான சிறுகதைகள் மிகச் சாதாரணக் கதைத்திட்டங்களையே கொண்டிருக்கின்றன என ஒருவர் மிக எளிதாகக் கூறிவிட முடியும். 1950களில் வெளிவந்த ரத்ததானம், நினைவின் நிழல், மனித தெய்வம், கதைக்கொத்து, சபலம் ஆகிய தொகுப்புகளில் காதல் திருமணம், விதவை மணம், சமுதாய மாற்றம் ஆகியவை எழுத்தாளர்களின் பிரச்சார நோக்கத்தை வலியுறுத்துவதற்கான ஒரு கருவியாகவே கதைத்திட்டம் பயன் படுகிறது. கருப்பொருள் இன்னதுதான் என்பதைத் தெளிவாகக் காட்டாத நிலை,

சாதாரணச் சிக்கல்கள், நம்பகத்தன்மையற்ற நிகழ்ச்சிகள், கதைக் கருவுக்கும் கதைப் பொருளுக்குமிடையே காணப்படும் குழப்பம், தொடர்பில்லாத தேவையற்ற நிகழ்ச்சிகள் ஆகியவை கதைத் திட்டங்களைப் பாதிப்பதில் அதிகப் பங்களிப்புச் செய்திருக் கின்றன"[37] என்று காட்டும் அவருடைய திறனாய்வுப் பார்வை மலேசியச் சிறுகதை எழுத்தாளர்களுக்கு ஒரு வழிகாட்டியாக அமைந்திருக்கின்றது என்பதில் ஐயமில்லை.

எனினும், 1970ஆம் ஆண்டுகளில் வெளிவந்த கதைகளைப் பற்றிய அவருடைய ஆய்வு எழுத்தாளர்களிடையே சிறுகதை இலக்கியத்தைப் பற்றிய எண்ணத்தில் சற்றுத் தெளிவு காணப் படுவதாகவும் சிக்கல்களைக் காட்டுவதில் இறுக்கம், முரண் பாடுகள் ஆகியவை சற்று வளர்ச்சியடைந்திருப்பதாகவும் காட்டு கிறது. ஆனாலும், பல நல்ல எழுத்தாளர்களும் கதைத் திட்டத் திற்குப் போதுமான கவனம் செலுத்தவில்லை என்றும், செறிவான நடை, கதைப்பொருள் ஆகியவற்றினாலேயே அவர்களின் சிறுகதைகள் வெற்றி பெற்றிருக்கின்றன என்பதாகவும் அவருடைய ஆய்வு அமைந்திருக்கின்றது.

இவற்றைத் தவிர்த்து, நம்பகத்தன்மையின்மை, கதாசிரியரின் தலையீடு, பிரச்சாரம், கட்டுரைபோல் எழுதுதல், ஒருமையின்மை, காலக்கிரமப்படி கதையைச் சொல்லிச் செல்லுதல் போன்ற குறை பாடுகளையும் பெரும்பாலான சிறுகதைகள் கொண்டுள்ளன என்றும் பாலபாஸ்கரன் காட்டுகின்றார். மேலும், பரிசு பெற்ற படைப்புகளான 'ஏணிக்கோடு', 'சிவப்பு விளக்கு', 'பயணம் முடிவதில்லை', 'நடுத்தெருவில்', 'கண்ணன் ரிமூவ் வகுப்பில் படிக்கிறான்', 'ஒரு தொண்டன் தலைவனாகிறான்', 'கோத்தோங் ரோயோங்' போன்ற படைப்புகளில் காணப்படும் சிறுகதைப் பண்புகளின் தொய்வையும் அவர் சுட்டிக் காட்டுகிறார் என்பதும் குறிப்பிடத்தக்கது.

கருப்பொருள்களைப் பொறுத்தவரையிலும் பல சிறுகதை களில் காலத்திற்கேற்ற கருப்பொருள்கள் காணப் படுகின்றன என்பதை மறுத்தல் முடியாது. 1970ஆம் ஆண்டுகளில் திராவிட இயக்கக் கருத்துகள் மலேசியாவில் தீவிரமாகப் பரப்பப்பட்ட போது சிறுகதையாசிரியர்களும் அவற்றைத் தமது சிறுகதைகளில் பயன்படுத்தத் தவறவில்லை தோட்டத் துண்டாடல், சிவப்பு அடையாளக்கார்டு, சேலை பெர்மிட் போன்ற பிரச்சினைகளும் அப்பிரச்சினைகள் தலைதூக்கிய காலகட்டத்தில் அதிகமான சிறுகதைகளில் இடம்பிடித்துக் கொண்டன. நாட்டுப்பற்று, இனங்களுக்கிடையிலான ஒற்றுமை போன்ற கருப்பொருள்களும் சிறுகதைகளில் காட்டப்பட்டனவெனினும் இவை சிறுகதை

களில் காட்டப்பட்ட அளவுக்கு வாழ்க்கையில் இனங்களுக் கிடையே இருந்தது என்று கூறுவதற்கில்லை. எனினும், சில கருப் பொருள்கள் மலேசியச் சிறுகதைகளில் நிரந்தரமான இடத்தைப் பிடித்துக் கொண்டிருக்கின்றன என்பதில் ஐயமில்லை. காதல், பாசம், உறவுகள், கல்வி, குழந்தை இல்லாமை, கற்பு, அரசியல் போன்றவை அவற்றுள் சில.

பொதுவாக, மலேசியச் சிறுகதை வளர்ச்சியில் மூத்த எழுத்தாளர்கள் மனநிறைவு கொண்டிருக்கின்றார்கள் என்று கூற முடியவில்லை. இளைய தலைமுறை எழுத்தாளர்கள் அதிகமாகச் சிறுகதைகள் படைக்கவில்லை என்ற ஆதங்கத்தோடு படைக்கப் படுகின்றவையும் சரியான திசையில் போகவில்லை என்பதே இவர்களுடைய எண்ணமாக இருக்கின்றது.

"மலேசியத் தமிழ்ச் சிறுகதை வளர்ச்சியை நாம் திரும்பிப் பார்க்கும்போது நமக்குப் பிரமிப்பு ஏற்படவில்லை. மாறாக அதிர்ச்சிதான் ஏற்படுகிறது."[38] ஏறத்தாழ முப்பத்து மூன்று ஆண்டு களுக்கு முன்பு சிறுகதைக் கருத்தரங்கு ஒன்றில் படைக்கப்பட்ட தமது கட்டுரையின்வழி இலக்கியக் குரிசில் மா. இராமையா காட்டும் காட்சி இது.

கடந்த காலங்களில் நாளேடுகளில் வெளியிடப்பட்ட திறனாய்வுக் கட்டுரைகளும் மலேசியச் சிறுகதைகளின் வளர்ச்சியைப் பற்றிக் கூறியதை விடவும் தளர்ச்சியைப் பற்றியே அதிகம் கூறின எனக் கொள்வதிலும் தவறில்லை. இன்றும்கூட இக்கருத்து தொடர்கிறது.

"செப்டம்பர் மாதத்தில் வெளிவந்துள்ள கதைகளைப் படித்து அதிலிருந்து ஏழு கதைகளைத் தேர்வு செய்து திறனாய்வு செய்திருக்கிறேன். இந்த 7 கதைகளில் குறிப்பிட்ட சில கதைகள் மட்டுமே சமுதாயத்தைப் பற்றிய கதைகளாக உள்ளன. மற்றவை ஏதோ சிறுகதை எழுதுகிறோம் - அவை பத்திரிகைகளில் வந்தால் சரி என்ற எண்ணத்தில் எழுதப்பட்டவை போன்ற எண்ணத் தையே தோற்றுவிக்கின்றன...."[39] எனச் செப்டம்பர் மாதச் சிறுகதைகளை ஆய்வுசெய்த திரு கு. தேவேந்திரன் அவர்கள் கூறுகிறார். ஏதோ சில சிறுகதைகளைப் படித்துவிட்டுச் சொல்லப் பட்ட கருத்தாக இதை எண்ணிப் பார்க்க முடியுமெனினும் பேரவைக் கதைகளைப் பற்றிய ஆய்வுரைகளிலும் இந்தக் கருத்து தொடர்ந்து பிரதிபலிக்கப்படுவதைக் காணமுடியும்.

பேரவைக் கதைகளைத் தொடர்ந்து ஆய்வு செய்துவரும் டாக்டர் வே. சபாபதி அவர்களும், "கடந்த சில ஆண்டுகளாகவே

போட்டிக்கு வரும் கதைகள் தரத்திலும் திறத்திலும் நயத்திலும் சரிவுகண்டு வருகின்றன. இக்கதைகளைக் காணும்போது நம் படைப்பாளர்களுக்கு இன்னும் கூடுதலாகச் சமுதாய அரசியல் பிரக்ஞை கூர்மையாக இருக்கவேண்டும் என்றே தோன்றுகிறது. .... பல கதைகளில் மண்ணின் மணம் கமழவில்லை... சில கதைகளில் பிரச்சாரப் போக்கும் காணப்படுகின்றது. கதை கூறுவதற்குப் பயன்படுத்தும் நோக்குநிலையிலும் குழப்பமான போக்கு காணப் படுகிறது... தவிர வடிவத்திலும் கதை கூறும் முறையிலும், உத்தி களின் பயன்பாட்டிலும் கதைமாந்தர் படைப்பிலும் புதுமையையோ சோதனை முயற்சிகளையோ காணமுடியவில்லை"[40] என எழுதுகிறார்.

ஆகக் கடைசியாக வெளிவந்துள்ள பேரவைக் கதைகள் 21இன் ஆய்வுரையும் ஏறக்குறைய மேலே கொடுக்கப்பட்டுள்ள கருத்துகளைக் காட்டுவதாகவே அமைந்துள்ளதும் குறிப்பிடத் தக்கது.

மலேசிய நண்பனின் அண்மைக்கால சிறுகதைகளைப் பற்றிய திறனாய்வுகளும் மலேசியத் தமிழ்ச் சிறுகதையின் போக்கைப் பற்றி ஓரளவுக்குக் கோடி காட்டுவனவாக உள்ளன எனக் கூறலாம். 2007ஆம் ஆண்டு ஜனவரி, பெப்ரவரி, மார்ச் மாதங்களில் மலேசிய நண்பனில் வெளிவந்த 22 சிறுகதைகளை ஈப்போ திரு சித. நாராயணனும் 2007 ஏப்ரல், மே, ஜூன் மாதங்களில் வெளிவந்த 23 சிறுகதைகளை சிங்கப்பூர் எழுத்தாளர் சங்கத்தின் தலைவர் ந. ஆண்டியப்பனும் ஆய்வு செய்திருந்தனர்.

இவர்கள் இருவருள் திரு. சித. நாராயணன் தாம் ஆய்வுக்கு எடுத்துக்கொண்ட 22 சிறுகதைகளிலிருந்து "ஓரளவு உயிர்ப்புள்ள, கலைவடிவம் கொண்ட ஏழு சிறுகதைகளை மட்டுமே இறுதிச் சுற்று ஆய்வுக்கு எடுத்துக் கொண்டேன்" எனத் தம்முடைய கட்டுரையில் குறிப்பிடுகின்றார்.[41] மற்ற கதைகளைப் பற்றிய எந்தக் குறிப்பும் அவருடைய கட்டுரையில் இடம் பெறாததால் அந்தக் கதைகளின் தரத்தைப் பற்றிய மதிப்பீட்டை அவர் சொல்லாமல் சொல்லி உணர்த்துகின்றார் என்பதில் ஐயமில்லை.

திரு ந. ஆண்டியப்பனின் திறனாய்வுக் கட்டுரையும் சித. நாராயணன் அவர்களின் கருத்துக்கு மாறுபட்ட கருத்தைக் கொண்டிருப்பதாகக் கூறமுடியாது. பரிசுக்குரியனவாக அவர் தேர்ந்தெடுத்த மூன்று கதைகளுள் ஏப்ரல் மாதம் வெளிவந்த ஏழு கதைகளுள் எதுவுமே அடங்கவில்லை. மே மாதத்தில் வெளிவந்த சிறுகதைகளுள் ஒன்று மட்டுமே இறுதிச்சுற்று வரை சென்று பரிசு பெற்றிருக்கின்றது. ஜூன் மாதக் கதைகளுள் இரண்டு பரிசுக்

குரியனவாகப் பரிந்துரைக்கப்பட்டிருக்கின்றன. மூன்று பரிசுகள் என்னும்பொழுது மூன்று சிறுகதைகள் மட்டுமே தேர்ந்தெடுக்கப் பட முடியும் என்பது உண்மையாயினும்கூட பெரும்பாலான சிறுகதைகளைப் பரிசுக்குரியனவல்ல என்று நீக்கிவிடுவதில் திறனாய்வாளர் எந்தவிதமான சிரமத்தையும் எதிர் நோக்கவில்லை என்பது அவருடைய திறனாய்வுக் கட்டுரையிலிருந்து தெளிவாகத் தெரிகிறது. திறனாய்வாளர் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந் தெடுப்பதில் கதைக்கரு, கதை அமைப்பு, நடை, உத்தி, முடிவு ஆகிய கூறுகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளார். ஆனாலும், அவருடைய கூற்றுப்படி பல சிறுகதைகளின் கருப்பொருள்களில் புதுமை எதையுமே காண முடியவில்லை. சிறப்பான கரு என்ற அடைமொழி ஒரே ஒரு சிறுகதைக்கு மட்டுமே கொடுக்கப் பட்டுள்ளது. இரண்டு மூன்று கதைகளுக்கு நல்ல கரு, கரு நன்று, வித்தியாசமான கரு என்ற சொற்றொடர்கள் பயன்படுத்தப் பட்டுள்ளன. இவற்றை விட்டுவிட்டால் கருவால் சிறந்த கதை என எதையுமே அவர் அந்த மூன்றுமாதக் கதைகளில் அடையாளம் காட்டவில்லையென்பது தெரிகிறது. உத்தி, நடை, முடிவு ஆகியவை பற்றியும் அவர் தமது திறனாய்வில் எந்தக் கதையையுமே சிறந்து விளங்குகின்றது என உதாரணம் காட்டிச் சொல்லவில்லை என்பதும் குறிப்பிட்டுச் சொல்லவேண்டிய ஒரு கருத்தே.[42]

இது ஒரே ஒரு நாளேட்டில் வெளிவந்த சிறுகதைகளைப் பற்றிய ஆய்வாளர்களின் கருத்துகளாக இருந்தாலும் மற்ற ஏடு களின் கதைகளிலும் இத்தகைய ஒரு நிலைமையையே காண முடி கின்றது.

சிறுகதைகளின் உத்தி, நடை போன்றவற்றைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது டாக்டர் ரெ. கார்த்திகேசு அவர்கள் தமது 'விமர்சன முகத்தில்' காட்டும் கருத்தையும் இங்கு எண்ணிப் பார்த்தல் வேண்டும்.

*"கடந்த இருபத்தைந்து ஆண்டுகளில் தமிழ்நாட்டில் சிறுகதை அடைந்திருக்கும் உருவப்பொலிவையும் உத்திச் செழிப்பையும் மலேசியச் சிறுகதைகள் அடையவில்லை. உள்ளடக்கத்தை மட்டுமே முதன்மையாகக் கருதி அதைச் சொல்வதில் ஓர் எளிமையைப் பின்பற்றி அதோடு திருப்தி காண்பனவாகவே எங்கள் சிறுகதை உலகம் அமைந்து விட்டது."*[43] என்று ரெ. கார்த்திகேசு அவர்கள் கவலைப்படுகிறார்.

சிறுகதைத் துறையில் புதியவர்களின் வருகை கூடிக் கொண்டிருக்கின்றது. என்பது உண்மையே. தமிழ் நேசன், மலேசிய நண்பன், மக்கள் ஓசை போன்ற நாளேடுகளின் ஞாயிற்றுப்

பதிப்புகளைக் கண்ணோட்டமிட்டாலே இந்த உண்மை தெற்றென விளங்கும். ஆனாலும், இவர்களுள் எத்தனை பேர் சிறுகதை இலக்கணத்தை ஓரளவுக்காவது உள்வாங்கிக்கொண்டு தமது படைப்புகளைப் படைக்கின்றனர் என்பது கேள்விக்குறியாகவே இருக்கின்றது. இந்த இளைஞர்களுள் பெரும்பாலானோர், ஏடுகளில் அவர்களுடைய சிறுகதைகளுள் ஒன்றிரண்டு வந்துவிட்டாலே இமயத்தை எட்டிவிட்டதாக எண்ணிக்கொண்டு அதே பாணியில் தொடர்ந்து எழுத ஆரம்பித்து விடுகின்றனர். இதுவே, இவர்களுடைய எழுத்து வளர்ச்சியை முடமாக்கி விடுகின்றது.

*"இளைய தலைமுறை எழுத்தாளர்கள் சிலரின் படைப்புகளில் ஒரு புதுமை தெரிகிறது. ஆனால், அவர்கள் எழுத்து வடிவம் எப்படிப்பட்டது என்பதை அடையாளப்படுத்தும் அளவுக்கு அவர்கள் தொடர்ந்து எழுதுவது இல்லை. ஏதோ இந்தப் படைப் புலகில் தொட்டும் தொடாமலும்தான் அவர்கள் இருந்து வருகிறார்கள். இளைய தலைமுறை எழுத்துகள் தொடர்ந்து வந்தால் மட்டுமே அவர்கள் இருக்கிறார்கள் என்பதை மற்றவர்கள் கண்டுகொள்ள முடியும்."*[44] இளைய தலைமுறை எழுத்தாளர்களைப் பற்றிய டாக்டர் ரெ. கார்த்திகேசுவின் கருத்து இது.

திரு கோ. புண்ணியவானின் கருத்தும் ஏறத்தாழ டாக்டர் ரெ. கார்த்திகேசுவின் கருத்தை ஒட்டியதாகவே காணப்படுகின்றது. தற்போது இலக்கியத்துறையில் ஒரு தொய்வு நிலை ஏற்பட்டிருந்தாலும் சில நம்பிக்கை தரக்கூடிய இளம் தலைமுறை எழுத்தாளர்கள் இருப்பதாகக் கூறி யுவராஜன், பா.அ. சிவம், சிவா பெரியண்ணன் போன்றோரை சிறுகதைத்துறையில் மின்னும் நட்சத்திரங்களாக அவர் குறிப்பிடுகின்றார்.[45]

திரு. சீ. முத்துசாமியும் இப்பொழுது சிறைய இளைஞர்கள் தேடலுடன் இலக்கியத்தில் நுழைகின்றனர் என்று கூறுகின்றார். ஆயினும், தற்போது இலக்கியத் துறையில் இருக்கும் இளைஞர்களுக்கு நிறைய உழைப்பும் தியாக உணர்வும் தேவை என அவர் கருதுகிறார்.[46]

இதற்குப் பல காரணங்கள் உண்டு. தரமான சிறுகதைகளை மலேசிய எழுத்தாளர்களுள் பெரும்பாலோர் படிப்பதில்லை என்பது அவற்றுள் ஒன்று. முதன்முதலாக எழுதத் தொடங்குகின்ற எழுத்தாளர்கள் மட்டுமல்லாது பல காலமாக எழுதிக் கொண்டிருக்கின்ற எழுத்தாளர்களும் இந்த வட்டத்திற்குள் அடங்குவர். நல்ல சிறுகதைகளைப் பணம் கொடுத்து வாங்கிப் படிப்பதற்கான பொருளாதார வசதியின்மை மட்டும் இதற்குக் காரணமென்று கூறமுடியாது. படிக்கும் வழக்கம் பொதுவாகக்

குறைந்து போய்விட்டது. பொருளாதாரச் சிந்தனை படிப்புச் சிந்தனையைப் பின்தள்ளிவிட்டது.

மற்றொரு காரணம் இந்நாட்டின் தமிழ்க்கல்வியின் நிலை எனலாம். ஆறாம் ஆண்டு வரை மட்டுமே ஒருவர் தமிழ் மொழியில் தமிழ்ப்பள்ளியில் கற்கமுடியும். ஆனால், தமிழ்ப்பள்ளியிலும் தற்போது தமிழ்மொழியில் கற்பிப்பதற்கான பாடங்கள் குறைந்து போய்விட்டன. தமிழ்ப்பள்ளியெனப் பெயரைக் கொண்டிருந் தாலும் பாடநேரத்தில் மிக அதிகமான பாடங்களை மாணவர்கள் பிறமொழியிலேயே கற்கின்றனர். அந்த மொழிகளில் மாணவர் களின் அறிவு வளர்ச்சியடைந்தாலும் அதுவே தமிழ்மொழியில் அவர்களுடைய ஆற்றல் மேம்படாததற்கு ஒரு காரணமாக அமைந்து விட்டது. எனவே, தமிழ்மொழியில் அதிக ஆற்றல் இல்லாதவர் களாகவே பின்னர் இவர்கள் வெளிவருகின்றனர். இந்த நிலையில் ஆர்வத்தின் காரணமாகச் சிறுகதை படைக்கத் துணிகின்றார்களே யன்றி நல்ல தரமான படைப்புகளைப் படைக்கும் நிலையில் பெரும்பாலோர் இல்லை எனக் கூறலாம்.

ஆனாலும், இதற்காக மலேசியச் சிறுகதைத்துறை சரி வடைந்து கொண்டிருக்கின்றது என்று கூறுவதும் பொருந்தாது. புதியவர்களோடு பழையவர்களும் தொடர்ந்து எழுதிக் கொண்டி ருக்கின்றனர். ஆனால், பழையவர்களுள் பலர் இப்பொழு தெல்லாம் போட்டிகளுக்கு மட்டுமே எழுதிக் கொண்டிருப்பதைப் போன்ற ஒரு தோற்றம் ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றது. ஆனாலும், இப்போட்டிகள் இன்று சிறுகதைத்துறையை வளர்ப்பதில் முக்கியப் பங்காற்றுகின்றன என்று கூறமுடியும். சிறந்த படைப்புகள் இப்போட்டிகளின் மூலம் வெளிப்பட்டுக் கொண்டிருக்கின்றன என்பதிலும் ஐயமில்லை. ஆனாலும், இவற்றின் எண்ணிக்கை நிச்சயம் மனநிறைவளிப்பதாக இல்லை எனலாம். மேலும், மலேசிய நாட்டின் சிறந்த சிறுகதைகள் எல்லாமே தொகுப்புகளாக வெளி யிடப்படுவதுமில்லை. சிறந்த சிறுகதைகளை எழுதியவர்கள் தாங்களே தொகுப்புக்கள் வெளியிடும்பொழுது அச்சிறுகதைகள் நூலில் இடம்பெறும் வாய்ப்புகள் உண்டு. மற்றபடி சிறந்த சிறுகதை களைத் தொகுப்புகளாக வெளியிடும் பணியை யார் செய்வது என்னும் கேள்விக்குச் சரியான பதிலைக் காண முடியவில்லை. திரு சை. பீர் முகம்மது அவர்கள் இத்தகைய முயற்சியைச் சில ஆண்டுகளுக்கு முன் மேற்கொண்டார். மலேசியச் சிறுகதை எழுத்தாளர்கள் பலரின் கதைகளைச் சேகரித்து 'வேரும் வாழ்வும்' என்னும் தலைப்பில் மூன்று தொகுப்புகளை அவர் வெளியிட்டார். அவருடைய வேரும் வாழ்வும் முதல் தொகுப்பு 1999ஆம் ஆண்டு வெளிவந்தது. அதில் 43 சிறுகதைகள் இடம்பெற்றிருந்தன.

இரண்டாவது, மூன்றாவது தொகுப்புகள் ஐம்பது முதிர்ந்த எழுத்தாளர்களின் சிறுகதைகளை உள்ளடக்கி டிசம்பர், 2001இல் வெளிவந்தது. "இம்முயற்சிகள் தொடர வேண்டும்" என்பது சை. பீர்முகம்மது அவர்களின் அவா. நல்ல சிறுகதைகள் தொகுக்கப் படாமையால் வெளிநாட்டினர் மலேசியச் சிறுகதையைப் பற்றிச் சரியாக அறிந்துகொள்ள முடியவில்லை என்பது ஒருபுறமிருக்க, இந்த நிலைமை மலேசியச் சிறுகதைத்துறைக்கு ஏற்படுகின்ற ஒரு பேரிழப்பாகவும் இருந்துவருகிறது.

சை. பீர்முகம்மதுவின் 'வேரும் வாழ்வும்' தொகுப்புகள் பற்றி இங்கு குறிப்பிட்டுச் சொல்லவேண்டும். மலேசியச் சிறுகதைத் துறைக்குக் கிடைத்துள்ள முக்கிய ஆவணங்களாக இவற்றைக் கருதலாம். சிறுகதைத்துறையின் வளர்ச்சிக்கு ஓர் ஐம்பது ஆண்டுக் காலம் பங்களிப்புச் செய்த ஏறத்தாழ எல்லா எழுத்தாளர் களையும் அடையாளம் காட்டும் ஆவணங்களாக இவை விளங்கு கின்றன என்பது மட்டும் இதற்குக் காரணமன்று. பங்களிப்புச் செய்துள்ள எழுத்தாளர்கள் கையாண்ட கதைக்கருக்கள், நடை, உத்தி, அமைப்பு போன்ற சிறுகதைகளின் பல்வேறு கூறுகளையும், மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளின் தரத்தையும் காட்டும் ஒரு கண்ணாடியாகவும் இவை விளங்குகின்றன என்பதும் இதற்குக் காரணமாகும்.

## இ. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பங்களிப்பு

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் மலேசியத் தமிழ் இலக்கித்திற்கு அளித்துள்ள பங்களிப்பு அதிகம் என்பதில் ஐயமில்லை. பங்சார் தமிழ்ப்பள்ளியில் 5.7.1958இல் நடைபெற்ற அமைப்புக்கூட்டத்தில் உருவெடுத்த இது 2.2.1959இல் 'மலாயா தமிழ் எழுத்தாளர்' சங்கம் எனப் பதிவுபெற்று 1963இல் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் எனப் பெயர் மாற்றங்கண்டு இன்று ஆல் போல் தழைத்து அருகுபோல் வேரூன்றி நிற்கிறது. இதன் முதல் தலைவராக இருந்தவர் திரு. சி. வீ. குப்புசாமி (1958 - 1960) ஆவார். அவருக்குப் பின்னர், திரு. கனகரத்தினம் (1960 - 1961), முத்தமிழ் வித்தகர் முருகு சுப்பிரமணியம் (1962 - 1974), திரு. சி. வடிவேலு (1974 - 1980), திரு. எம். துரைராஜ் (1974 - 1987), ஆதி. குமணன் (1987 - 2002) ஆகியோர் இச்சங்கத்தினைக் கண் ணெனப் போற்றி வளர்த்துள்ளனர். ஆதி குமணன் அவர்கள் தாமே பதவியை விட்டு விலகிக்கொள்ள, தற்பொழுது சங்கத்தின் தலை வராக இருக்கும் பெ. இராஜேந்திரன் அவர்கள் 2002 முதல் தலைமைப்பொறுப்பில் இருந்து சங்கத்தின் வளர்ச்சிக்கு அரும் பாடுபட்டு வருகிறார்.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தொடங்கப்பட்டதிலிருந்து இன்றுவரை உள்ள இந்த நீண்ட காலகட்டத்தில் எழுத்தாளர்களுக்காகவும் படைப்பிலக்கியத்திற்காகவும் ஆற்றியுள்ள பணிகள் பல. அவற்றை ஒவ்வொன்றாக விவரிக்கின் பெருகுமாதலால் சிறுகதை இலக்கியம் சார்ந்த அதனுடைய சில முக்கியப் பங்களிப்புகள் மட்டுமே இங்கு குறிப்பிடப்படுகின்றன.

## 1. சிறுகதைத் திறனாய்வுகள்

சிறுகதைத் துறையை மேம்படுத்த மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் எடுத்து வந்த ஆக்கபூர்வமான நடவடிக்கைகளில் மாதாந்திரச் சிறுகதைத் திறனாய்வுக் கருத்தரங்கு மிக முக்கியமானது. இதைப்பற்றி மேலே விளக்கப்பட்டுள்ளது. சங்கத்தின் புதிய செயலவை இத்திட்டத்திற்குப் புத்துயிர் அளிப்பதென முடிவெடுத்து அதற்கான நடவடிக்கைகளில் தற்பொழுது கவனம் செலுத்தி வருவது மகிழ்ச்சியளிக்கின்றது.

## 2. டான் ஸ்ரீ மாணிக்கவாசகம் புத்தகப் பரிசளிப்பு

மலேசியத் தமிழ் எழுத்தாளர்களால் எழுதப்பெற்று இப்போட்டிக்கு அனுப்பப்படுகின்ற நூல்களுள் சிறந்தவையென நீதிபதிகள் குழுவினரால் தேர்ந்தெடுக்கப்படுகின்ற நூலுக்கு / நூல்களுக்கு அமரர் டான்ஸ்ரீ மாணிக்கவாசகம் அவர்களின் நினைவாக அளிக்கப்படுகின்ற பரிசு இது. டான்ஸ்ரீ மாணிக்கவாசகம் அவர்கள் மலேசிய இந்தியர் காங்கிரஸ் கட்சியின் தலைவராகவும் மலேசிய அரசில் அமைச்சராகவும் பணியாற்றியவராவார். கடந்த எட்டு ஆண்டுகளாக நடைபெற்றுவரும் இப்புத்தகப் பரிசளிப்புக்கான தொகையை டான்ஸ்ரீ மாணிக்கவாசகம் அவர்களின் குடும்பத்தினர் (குறிப்பாக டான்ஸ்ரீ மாணிக்கவாசகம் அவர்களின் இளவல் டத்தோ வி.எல். காந்தன் அவர்கள்) அளித்து வருகின்றனர். தொடக்கத்தில் ஒரு குறிப்பிட்ட ஆண்டில் வெளிவந்த எல்லா இலக்கியப் படைப்புகளிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு நூலுக்கே இப்பரிசு (5000.00 ரிங்கிட்) அளிக்கப்பட்டு வந்தது. ஆனால், தற்பொழுது இதில் சில மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. ஒவ்வொர் ஆண்டும் ஒரு குறிப்பிட்ட இலக்கியத்திற்கான (கட்டுரை, சிறுகதை, கவிதை, நாவல்) பரிசளிப்பாக இது தற்பொழுது மாற்றியமைக்கப்பட்டுள்ளது. இந்த முறையில் நான்கு ஆண்டுகளுக்கொரு முறை ஓர் இலக்கியத்தைச் சார்ந்த நூல்கள் மட்டும் பரிசீலிக்கப்பட்டு அவற்றிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் நூலுக்குப்

பரிசு வழக்கப்படுகின்றது. இம்முறை 2005ஆம் ஆண்டிலிருந்து பின்பற்றப்படுகின்றது. பரிசுத்தொகையும் 7000.00 ரிங்கிட்டாக இப்பொழுது அதிகரிக்கப்பட்டுள்ளது.

இப்பரிசளிப்புத் திட்டத்தின்கீழ் 4.10.2001இல் நான்காவது ஆண்டாக நடைபெற்ற பரிசளிப்புவிழாவில் மா. இராமையாவின் 'அமாவாசை நிலவு' என்னும் நூலும், 12.10.2002இல் நடைபெற்ற பரிசளிப்புவிழாவில் ஆர். சண்முகத்தின் 'ஆர். சண்முகம் கதை களும்' ஐயாயிரம் ரிங்கிட் பரிசு பெற்றன. தொடர்ந்து, 2004ஆம் ஆண்டில் 'செய்கு சனான் காப்பியம்' என்னும் நூலுக்காகப் புலவர் ப. மு. அன்வரும், 2005ஆம் ஆண்டில் 'ஊசி இலை மரம்' என்னும் சிறுகதைத் தொகுப்புக்காக ரெ. கார்த்திகேசுவும், 2006ஆம் ஆண்டில் 'அமுதசுரபிகள்' என்னும் நாவலுக்காகப் ப. சந்திரகாந்தமும் பரிசுகள் பெற்றுள்ளனர்.

## 3. டான்ஸ்ரீ ஆதிநாகப்பன் இலக்கியப் பரிசளிப்பு விழா

இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை வழங்கப்படும் டான்ஸ்ரீ ஆதிநாகப்பன் இலக்கியப் பரிசளிப்புத் திட்டம் முதன் முதலாக 1983இல் தொடங்கப்பட்டது டான்ஸ்ரீ ஆதிநாகப்பன் மலேசிய அரசியல் துணையமைச்சராக இருந்தவர். இலக்கியத்தில் ஈடுபாடு கொண்டவர். தமிழ்நேசன் ஆசிரியராகவும் பணியாற்றியவர். அவருடைய நினைவாக நடத்தப்படுகின்ற பரிசளிப்புத் திட்டம் இது.

தொடக்கத்தில் இவ்விலக்கியப் பரிசளிப்பு சிறுகதை, கட்டுரை, கவிதை, மேடை நாடகம் என்னும் துறைகளுக்காக வழங்கப்பட்டது. ஒவ்வொரு துறையைச் சார்ந்தவர்களில் வளர்ந்த எழுத்தாளர், வளரும் எழுத்தாளர் என இருவர் அடையாளம் காணப்பட்டு வளர்ந்த எழுத்தாளருக்கு 300.00 ரிங்கிட்டும் வளர்ந்து வரும் எழுத்தாளருக்கு 100.00 ரிங்கிட்டும் பரிசளிக்கப்பட்டது. முதல் ஆண்டில் சிறுகதைக்காக மு. அன்புச்செல்வன், நா. சுப்பு லட்சுமி ஆகிய இருவரும், கட்டுரைக்காக அ. மணிசேகரன், இரா. இராமராவ் இருவரும், கவிதைக்காக டி. எஸ். பொன்னு சாமி, வே. தேசகுரு ஆகிய இருவரும் இவ்விலக்கியப் பரிசினைப் பெற்றனர். தவிர, மேடை நாடக ஆசிரியருக்கான பரிசை நா. ஆ. செங்குட்டுவனும், நூலாசிரியர், இலக்கியப் பணியாளர் எனப்படும் துறைகளுக்கான பரிசுகளை முறையே பாதாசன், மெ. அறிவா னந்தன் ஆகியோரும் பெற்றனர். ஆயினும், 1986ஆம் ஆண்டு நடைபெற்ற இரண்டாவது பரிசளிப்பில் நாவல் துறையும் இணைத்துக் கொள்ளப்பட்டு முதன்முறையாக அத்துறைக்கான

பரிசுகள் ப. சந்திரகாந்தத்துக்கும் (300.00) நா. சந்திரனுக்கும் (100.00) வழங்கப்பட்டன. மற்ற துறைகளுக்கான பரிசுகளை சாரதா கண்ணன், எஸ். கமலா (சிறுகதை), வி. விவேகானந்தன். மு. கணேசன் (கட்டுரை), வி. பூபாலன், ஏ. எஸ். பிரான்சிஸ் (கவிதை), கா. ப. சாமி (நூலாசிரியர்), எஸ். பாலு (நாடக ஆசிரியர்), பைரோஜி நாராயணன் (இலக்கியப் பணியாளர்) ஆகியோர் பெற்றனர்.[47] பின்னர், இப்பரிசளிப்புக்கான தொகை படிப்படியாக உயர்த்தப்பட்டு 2005ஆம் ஆண்டிலிருந்து கவிதை, கட்டுரை, நாடகம், சிறுகதை ஆகிய நான்கு துறைகளில் ஒவ்வொரு துறை யிலிருந்தும் எழுத்தாளர் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டு 1500.00 ரிங்கிட் பரிசளிக்கப்பட்டு சிறப்புச் செய்யப்படுகின்றனர். தவிர, இளைய தலைமுறை எழுத்தாளர்களாக அடையாளம் காணப் படுபவர்களும் 500.00 ரிங்கிட் பரிசளித்துச் சிறப்பிக்கப் படுகின்றனர்.

ஆகக் கடைசியாக 2007ஆம் ஆண்டு நடந்த இப்பரிசளிப்பு விழாவில் கவிதைக்காகச் சி. அன்பானந்தமும், சிறுகதைக்காகச் சை. பீர்முகம்மதுவும், கட்டுரைக்காக முனைவர் முரசு நெடு மாறனும் நாடகத்திற்காகச் சுகன் பஞ்சாட்சரமும் பரிசளிக்கப் பட்டுச் சிறப்புச் செய்யப்பட்டனர். இவர்களைத் தவிர்த்து இளைய தலைமுறை எழுத்தாளர்களாக அடையாளம் காணப்பட்ட இராம சரஸ்வதி (கவிதை), கி. இ. உதயகுமாரி (சிறுகதை), சி. அருண் (கட்டுரை), ஜெயசுதா (நாடகம்) ஆகியோரும் பரிசுகள் அளிக்கப்பட்டு ஊக்குவிக்கப்பட்டனர்.

இப்பரிசளிப்பு விழா டான்ஸ்ரீ ஆதிநாகப்பன் அவர்களின் குடும்பத்தின் ஆதரவுடன் நடைபெற்று வருகின்றது என்பது குறிப்பிடத்தக்கது.

## 4. தமிழ்ச் சான்றோர் நினைவாகத் தங்க விருதுகள்

தமிழ்ச் சான்றோர்களான தமிழவேள் கோ. சாரங்கபாணி, செந்தமிழ்ச்செல்வர் சீ. வி. குப்புசாமி, தவத்திரு தனிநாயக அடிகளார், முத்தமிழ் வித்தகர் முருகு சுப்பிரமணியம், சமூகக் கலைமாமணி சா. ஆ. அன்பானந்தன் ஆகியோர் பெயர்களில் தமிழ் எழுத்தாளர்களுக்குத் தங்க விருதுகளை வழங்கிச் சிறப்புச் செய்யும் திட்டத்தையும் ஒவ்வோர் ஆண்டுப் பொதுக்கூட்டத்தன்று மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தொடர்ந்து செயற்படுத்தி வருகின்றது. இது சிறுகதைத்துறைக்கு மட்டுமே உரிய விருதளிப் பன்று. எனினும், சிறுகதைத்துறைக்குப் பங்களிப்புச் செய்தவர் களும் இவ்விருதளிக்கப்பட்டுச் சிறப்புச் செய்யப்படுகின்றனர்.

பொதுப்பணித்துறை அமைச்சர் டத்தோஸ்ரீ ச. சாமிவேலு அவர்களின் ஆதரவோடும் மலேசிய இந்தியர் காங்கிரஸ், தேசிய நிலநிதி கூட்டுறவுச் சங்கம், தேசிய தோட்டத் தொழிலாளர் சங்கம் ஆகிய இயக்கங்கள் அளித்த நிதியுதவியுடனும்[48] தொடங்கப் பட்ட அறநிதியிலிருந்து கிடைக்கின்ற வட்டிப் பணம் இவ்விரு தளிப்பு நிகழ்ச்சிக்குப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. இத்தங்க விருது 1983ஆம் ஆண்டு முதல் 1985 வரையில் மூன்று எழுத்தாளர்களுக்கும், 1986 முதல் 1994 வரை நான்கு எழுத்தாளர் களுக்கும், 1995ஆம் ஆண்டு முதல் ஐந்து எழுத்தாளர்களுக்கும் அளிக்கப்பட்டு வருகின்றது. இதுவரையிலும் நூற்றுக்கு மேற்பட்ட எழுத்தாளர்கள் இவ்விருதளிக்கப்பட்டுச் சிறப்புச் செய்யப் பட்டுள்ளனர். மேலும், நாட்டிலுள்ள மூத்த எழுத்தாளர்களுள் ஏறத்தாழ அனைவருமே இவ்விருதளிக்கப்பட்டுள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது. 2007ஆம் ஆண்டில் கவிஞர் முத்துப்பாண்டி (தமிழவேள் கோ. சாரங்கபாணி விருது), கவிஞர் ஜோசப் செல்வம் (தவத்திரு தனிநாயக அடிகளார் விருது), கவிஞர் எ. அண்ணா மலை (முத்தமிழ் வித்தகர் முருகு சுப்பிரமணியன் விருது), திரு. க. பூபாலன் (செந்தமிழ்செல்வர் சீ. வி. குப்புசாமி விருது), திருமதி நிர்மலா பெருமாள் (சமூகக் கலைமாமணி சா. ஆ. அன்பானந்தன் விருது) ஆகியோர் இவ்விருதுகளைப் பெற்றுள்ளனர்.[49]

## 5. சிறுகதைத்துறைக்கு மலேசியத் தமிழ்: ஏடுகளின் பங்களிப்பு

மலேசியத் தமிழ் இலக்கித்திற்குத் தொடக்க காலம் தொட்டு இன்றுவரை தமிழ் ஏடுகளே உயிர்நாடியாக இருந்து வருகின்றன. தமிழ் ஏடுகளின் பங்களிப்பின்றி இந்நாட்டில் எந்த இலக்கிய வடிவமும் தோன்றி வளர்ச்சி பெற்றிருக்க முடியுமா என்பதும் ஐயத்துக்குரியதே. எனவே, மலேசியத் தமிழ் இலக்கியத்தையும் தமிழ்ஏடுகளையும் பிரித்துப் பார்க்கமுடியும் என்று தோன்ற வில்லை.

மலேசியத் தமிழ்ச் சிறுகதை இலக்கியமும் இந்நாட்டில் விதைக்கப்பட்டு வேரூன்றி வளரத் தமிழ் ஏடுகள் ஆற்றிய பணி குறிப்பிடத்தக்கது. தொடக்க காலத்தில் சுதந்திரோதயம், பாரத மித்திரன், யுவபாரதம், ஜயபாரதம், புதுயுகம், தமிழ்க்கொடி, புதுஉலகம், ஜனவர்த்தமானி, உதய சூரியன், கலியுக நண்பன், பாரத நேசன், தமிழ் நேசன், மலாய் மணி, சமுதாய ஊழியன், சமரசன், தேசாபிமானி, தமிழ்ச்செல்வன், இன்ப நிலையம், திராவிட கேசரி முதலிய ஏடுகளில் சிறுகதைகள் வெளியிடப் பட்டன. இவற்றுள் சில கிழமை ஏடுகளாகவும், திங்கள் ஏடு

களாகவும் மலர்ந்துள்ளன. சில குறுகிய காலமே வாழ்ந்தாலும் சிறுகதை இந்நாட்டில் வேரூன்ற அவையும் அடித்தளமாக இருந் திருக்கின்றன என்பதில் ஐயமில்லை.

இரண்டாவது உலகப் போர் ஏற்பட்டு ஜப்பானியர் ஆட்சி இந்நாட்டில் சில காலம் நடந்தபோதும் ஏடுகள் சிறுகதை வளர்ச்சிக்கு ஆற்றிய பணி தடைப்பட்டுப் போகவில்லை. மாறாக அதற்கு அக்காலகட்டத்திலும் நீரூற்றி வளர்த்தவை தமிழ் ஏடுகளே. மேலே குறிப்பிடப்பட்ட சுதந்திரோதயம், யுவபாரதம், தமிழ் நேசன், புது உலகம், உதய சூரியன் போன்ற ஏடுகளோடு பாலபாரதம், சுதந்திர இந்தியா, ஜெயமணி, ஐயபாரதம், இடிமுழக்கம், இளங் கதிர், இளம்பிறை, இஸ்லாமிய இளைஞன் என்னும் ஏடுகளும் ஜப்பானியர்கள் காலத்தில் வெளிவந்து சிறுகதைத்துறையை வளர்த்தன.

ஜப்பானியர் காலத்துக்குப் பிறகு இன்று வரையிலும்கூட ஏடுகளே சிறுகதையை வளர்க்கப் பெரும் பங்காற்றிக் கொண்டி ருக்கின்றன. இவற்றுள் பல இன்று இல்லை; 'வெளிவந்தன' என்னும் சொல்லுக்கு உரியனவாகிவிட்டன. இருப்பினும், சிறுகதைத் துறைக்கு அவற்றின் பங்களிப்பும் நிறையவே உண்டு. மலைமகள், தினமணி, தமிழ் மலர், தினமுரசு, தலைவன், தமிழ் ஓசை, புதிய சமுதாயம், தூதன், அரும்பு, மயில், சூரியன், இதயம், உதயம், முத்தமிழ், தாமரை, காவலன், பொன்னி, முல்லை ஆகியவை அவற்றுள் குறிப்பிட்டுச் சொல்லக்கூடியவை. இவற்றின் பங்களிப்பு தொடர்ந்து கிடைக்காமற் போயினும்கூட இவை விட்டுச் சென்ற இடத்தைப் புதிய புதிய ஏடுகள் நிரப்பிக்கொண்டே இருப்பதால் சிறுகதைத்துறை தொடர்ந்து வளர்ச்சி கண்டுகொண்டே இருக்கிறது.

இன்று வெளிவருகின்ற பல ஏடுகளில் (தமிழ் நேசன், மலேசிய நண்பன், மக்கள் ஓசை, விடியல், வணக்கம் மலேசியா, செம்பருத்தி, மன்னன், இந்தியன் மூவி நியூஸ், உங்கள் குரல்) சிறுகதைகள் இடம்பெறுகின்றன. எனினும், வார மாத இதழ்களை விட 1924இல் தொடங்கப்பட்டு 80 ஆண்டுகளுக்கும் மேலாகச் சிறுகதைத்துறைக்கு உரமிட்டு வளர்த்துக் கொண்டிருக்கும் தமிழ் நேசன், ஆதி குமணனை ஆசிரியராகக்கொண்டு மலர்ந்து இன்றும் பீடுநடை போட்டுக் கொண்டிருக்கும் மலேசிய நண்பன், ஆரம்பத்தில் வார ஏடாக மலர்ந்து சில காலமாக நாளேடாக வலம் வந்துகொண்டிருக்கின்ற மக்கள் ஓசை என்னும் மூன்று முக்கிய நாளேடுகளின் பங்களிப்பு மலேசியச் சிறுகதைத்துறையில் குறிப்பிடத்தக்கவையாகும்.

## I. தமிழ் நேசன்

மலேசியாவில் தற்போது வெளிவந்து கொண்டிருக்கும் நாளேடுகளில் காலத்தால் மூத்தது தமிழ் நேசன் மட்டுமே. இது தோன்றிய காலகட்டத்தில் தோன்றிய எல்லாத் தமிழ் ஏடுகளும் இன்று வரலாற்றில் மட்டுமே இடம்பிடித்துக் கொண்டிருக்கின்றன. ஆனால், தமிழ்நேசன் மட்டும் தனக்கு ஏற்பட்ட தடைக்கற்களை யெல்லாம் படிக்கட்டுகளாக எண்ணி வளர்ந்து இன்று மலேசியத் தமிழ்ப் பத்திரிகை உலகில் மூத்த நாளேடு என்னும் பெருமை யுடன் விளங்கி வருகிறது.

தொடங்கிய காலம் முதற்கொண்டே தமிழ்நேசன் சிறுகதைக்கு முக்கியத்துவம் அளித்து வந்துள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு வாரமும் ஞாயிறுமலரில் குறைந்தது ஒரு சிறுகதையை யாவது வெளியிட்டு வருவதோடு அவ்வப்போது சிறுகதைப் போட்டி களையும் நடத்திவருகின்றது. அந்த வகையில் அது நேசன் தங்கப் பதக்கச் சிறுகதைப்போட்டி ஒன்றினை 2004ஆம் ஆண்டில் மீண்டும் நடத்தியது.

“மலேசிய இலக்கிய உலகில் அற்புதமான சிறுகதைகள் உருவாகவேண்டும் எனும் நோக்கத்தோடும் பல தரமான எழுத்தாளர்களை உருவாக்கும் திட்டத்தோடும் 2004 ஜனவரி மாதம் முதல்[50] டிசம்பர் வரையில் நடத்தப்பட்ட ஒரு போட்டியே நேசன் தங்கப்பதக்கச் சிறுகதைப் போட்டியாகும். இப்போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு 3 பவுன் பதக்கம் அளித்துச் சிறப்புச் செய்யப்பட்டது. இப்போட்டியில் சீ. முத்துசாமி (ஜனவரி), சை. பீர்முகம்மது (பிப்ரவரி), வ. முனியன் (மார்ச்) ஆகியோர் முதல் மூன்று மாதங்களுக்கான பரிசுகளைப் பெற்றனர். இதற்கான பரிசளிப்பு விழா தமிழ் நேசன் இயக்குநர் வாரியத் தலைவர் மகளிர் மாமணி டத்தின் ஸ்ரீ இந்திராணி சாமிவேலு தலைமையில் கோலாலம்பூர் கிராண்ட் பசிபிக் ஓட்டலில் நடைபெற்றது. மற்ற மாதங்களில் வெற்றிபெற்றவர்களுக்கு ஈப்போ, ஸ்கூடாய், பினாங்கு ஆகிய இடங்களில் சிறுகதைக்கருத்தரங்குகளோடு பரிசளிப்பு விழாக்களும் பின்னர் நடத்தப்பெற்றன.

தொடர்ந்து 2005லும் தமிழ் நேசன் முத்திரைக் கதைகள் என்னும் பெயரில் சிறுகதைகளை வெளியிட்டு அவற்றைப் படைத்தவர்கள் அனைவருக்கும் ஒருவருக்கு நூறு ரிங்கிட் வழங்கிச் சிறப்புச் செய்தது. இந்த முத்திரைக் கதைகளை சிங்கப்பூர் மு. தங்கராசன் (திறவு கோல்கள்), பெ. மு. இளம்வழுதி (இப்படியும் ஒருத்தி), வ. முனியன் (ஈரம் கசியும் இதயங்கள்), ஆ. நாகப்பன் (உடைப்பு), ஆர். சண்முகம் (மற்றொரு பிரவாகம்), ரெ. கார்த்தி

கேசு (சொல்லாத காரணம்), பூ அருணாசலம் (மனவலி), சீ. முத்துசாமி (நிழலுருவங்கள்), பாவை (விரதம்), கோ. புண்ணிய வான் (எதிர்வினைகள்), மா. இராமையா (அவள் ஒரு தாய்தான்), சி. வேலுசுவாமி (சரவணனும் மல்லிகைப்பூவும்), ந. வரதராசன் (வாழ்வெல்லாம் வசந்தம்), டாக்டர் மா. சண்முகசிவா (அற்றது மற்றெனில்), க. பாக்கியம் (ஆன்மீகப் பிரதேசத்தின் அத்து மீறல்கள்), சி. வடிவேலு (மந்திர வாசகங்கள்), திருமதி நேசமணி (அலைபாயுதே கண்ணா), நிர்மலா ராகவன் (நல்ல பிள்ளை), இரா. ச. இளமுருகு (ஈரமான ஒரு ரோஜா), பி. கே. சரோஜா மணியம் (தாடிக்குள் சிக்கிக்கொண்ட ஆத்மா), ஏ. பி. மருதழகன் (ஊஞ்சலாடும் உறவுகள்), மைதீ. சுல்தான் (சக்கர நாற்காலி), இரா. இராமராவ் (அந்த ஒரு நாள்), கே. ஐ. நாராயணன் (எதிர் பாராதது), சிங்கப்பூர் பொன் சுந்தரராசு (துமாசில்), பழ. அடைக் கலம் (வரனுக்கு ஒரு வரம்), தா. ஆரியமாலா (புதிதாய் பிறந்தோம்), கு. கிருஷ்ணன் (விசுவரூபம்), சி. மு. ஆரியமாலா குணசுந்தரம் (செடியை வீழ்த்தும் மலர்கள்), இ. தெய்வானை (வீடு), சிங்கப்பூர் கா. சங்கையா (சிட்டுக் குருவிகள் ராஜ்யத்திலே), சிங்கப்பூர் எம். கே. நாராயணன் (பலியானாள்), நா. கல்யாணி மணியம் (அம்மாவுக்காக), செ. கோபாலன் (ஜில்சூபாவும் துணையில்லை), கலைச்சிற்பியன் (நல்லாசி), எம்.கே. ஞான சேகரன் (மண்ணின் நிறமும் மழைத்துளிகளும்), நிலாவண்ணன் (திறக்கப்படும் கதவுகள்), சிங்கை தமிழ்ச் செல்வன் (சிதைந்த கனவு), டாக்டர் சி. சொக்கலிங்கம் (குற்றம் பார்க்கின்) ஆகியோர் படைத்திருந்தனர்.[51] இந்த நாட்டின் முன்னணி எழுத்தாளர் களாக மதிக்கப்படுகின்ற எழுத்தாளர்களுள் பெரும்பாலான வர்கள் இந்த முத்திரைக் கதைகளைப் படைத்திருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.

மலேசியச் சுதந்திர தினத்தை முன்னிட்டு சுதந்திர தினச் சிறுகதைப் போட்டியையும் 2005, 2006ஆம் ஆண்டுகளில் தமிழ் நேசன் நடத்தியது. இப்போட்டி நடத்தப்பட்டதற்கான காரணத்தைத் தமிழ்நேசன் துல்லிதமாகவே குறிப்பிட்டது. "மலேசிய எழுத்தாளர் களுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிக்கவும் தரமான சிறுகதைகள் மலேசிய மண்ணில் உருவாகத் துணைபுரியவும்" இந்தச் சிறுகதைப் போட்டியை நடத்தியது. பின்னர், இதன் பரிசளிப்பு 17 டிசம்பர் 2006 மாலை கிராண்ட் பசிபிக் ஹோட்டலில் நடைபெறும் என அறிவித்தது மட்டுமல்லாது அத்தினத்தில் பரிசளிப்பு விழாவையும் நடத்தியது.

மேலும், இவ்வாண்டுக்கு (2007) மாநில ரீதியிலான சிறுகதை, கட்டுரைப் போட்டிகளை நடத்துவதற்கான ஓர் அறிவிப்பையும்

அண்மையில் இது வெளியிட்டுள்ளது. தொடக்கமாக சிலாங்கூர் கூட்டரசுப் பிரதேசத்திற்கான போட்டியாக நடைபெறுகின்ற இப்போட்டியின் பரிசளிப்பு விழாவை ஒரு கருத்தரங்கமாகவே நடத்துவதற்கும் இந்நாளேடு திட்டமிட்டுள்ளது என்பதும் குறிப்பிடத்தக்கது.[52]

## II. மலேசிய நண்பன்

தமிழ்நேசன் அளவுக்கு நீண்ட வரலாறு மலேசிய நண்பனுக்கு இல்லாவிட்டாலும் சிறுகதைகளை வளர்ப்பதில் இதன் பங்களிப்பும் முக்கியமானது. நாட்டில் முன்னணி எழுத்தாளர்கள் என்று கருதப்படுகின்ற அனைவரும் இந்நாளேட்டில் சிறுகதைகளை எழுதியுள்ளனர் எனலாம். "மலேசியத் தமிழ் எழுத்துலகில், குறிப்பாக சிறுகதைத்துறையில் ஒரு தொய்வு ஏற்பட்டது போன்ற தோற்றம் தென்பட்டபோது, ஓய்வு பெற்ற அல்லது ஒதுங்கி நின்ற மூத்த, புடம் போட்ட 13 எழுத்தாளர்களைக் கையைப் பிடித்து இழுத்து வந்து கடிகாரம் கட்டி எழுதவைத்த"[53] சிறப்புக்கும் உரிய ஏடு மலேசிய நண்பன் என்பதும் குறிப்பிடத்தக்கது. இவ்வேட்டில் 13 வாரங்களுக்குத் தொடர்ந்து வெளிவந்த இக்கடிகாரக் கதை களின் தொகுப்பையே மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் 1999ஆம் ஆண்டில் 'சமுதாயக் கதைகள்' என்னும் பெயரில் வெளியிட்டது. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக இருந்த ஆதி குமணன் அவர்களின் மறைவு வரை யிலும் எழுத்தாளர் சங்கத்தின் குரலாக ஒலித்தது மட்டுமன்றி அதன் செயற்திட்டங்களுக்கும் முக்கியக் கருவியாக இவ்வேடு விளங்கியது என்பதில் ஐயமில்லை. எனினும், இவ்வேட்டின் பணி ஆதி குமணன் அவர்களின் மறைவோடு முடங்கி விடவில்லை. இன்றும், சிறுகதைகளை ஒவ்வொரு வாரமும் தன்னுடைய ஞாயிற்றுப் பதிப்புகளில் வெளியிட்டு வருவது மட்டுமன்றி மூன்று மாதங்களுக்கொரு முறை நாட்டின் வெவ்வேறு இடங்களில் சிறுகதைத் திறனாய்வுக் கருத்தரங்குகளையும் நடத்தி, தேர்ந் தெடுக்கப்பட்ட நல்ல சிறுகதைகளுக்கு பரிசும் அளித்து வருகின்றது.

## III. மக்கள் ஓசை

மக்கள் ஓசை 1992இல் பிறந்தது. பல ஆண்டுகள் வார ஏடாக மலர்ந்து கொண்டிருந்த இவ்வேடு அண்மைக் காலத்தில் நாளேடாக உருவெடுத்துள்ளது. வார ஏடாக உலாவந்த காலத்தி லிருந்து இன்று வரை இது சிறுகதைகளை வெளியிடும் பணியினைச் சிறப்பாகவே செய்துகொண்டிருக்கிறது. ஈராயிரத்து இரண்டாம்

ஆண்டில் **முத்திரைக் கதைகள்** என்னும் பெயரில் வாரம் ஒரு கதையைத் தேர்ந்தெடுத்து 50.00 ரிங்கிட் பரிசளித்துச் சிறப்புச் செய்த இவ்வேடு சிறுகதைத்துறையை வளர்க்க வேண்டுமென்னும் நோக்கத்தில் 2003 - 2004இல் ஒவ்வொரு மாதமும் மக்கள் ஓசையில் வெளிவந்த சிறுகதைகளைத் திறனாய்வு செய்து அவற்றுக்குப் புள்ளிகள் வழங்கும் ஒரு திட்டத்தையும் மேற்கொண்டது. திரு. ராஜூ சின்னப்பன், திரு. பெர்னாட்சா, திரு. கு. தேவேந்திரன், திரு. மு. அன்புச்செல்வன் ஆகியோர் இந்தத் திறனாய்வு முயற்சிகளை மேற்கொண்டனர். எழுத்தாளர்கள் தங்களுடைய சிறுகதைகளின் தரத்தை அறிந்து கொள்ள இந்த முறை பெரிதும் உதவியது.

மோதிரக்கதைப் போட்டி ஒன்றையும் ஜனவரி 2007 முதல் ஜூன் 2007 வரை இவ்வேடு நடத்தியுள்ளது. ஒவ்வொரு மாதமும் வெளிவந்த சிறுகதைகளுள் சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு சிறுகதைக்கு ஒரு பவுன் எடையுள்ள மோதிரம் பரிசு அளிக்கப்படும் போட்டி இது. இப்போட்டியில் வெற்றி பெற்ற சிறுகதைகளைத் தேர்ந்தெடுக்கும் பணியில் நடுவர்கள் தற்பொழுது ஈடுபட்டுள்ளனர்.

## உ. மலாயப் பல்கலைக்கழக மாணவர்களின் பங்களிப்பு

மலேசியச் சிறுகதைத்துறைக்கு மலாயாப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரவையைத் தவிர்த்து அப்பல்கலைக்கழகத்தில் தமிழ் மொழியை ஒரு பாடமாக எடுத்துப் படித்துவரும் மாணவர்களும் ஒரு வகையில் பங்களிப்புச் செய்துவருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களுள் சிலர் தமது பட்டப்படிப்பின் ஒரு பகுதியாக மலேசிய நாட்டில் பல காலமாகச் சிறுகதைகள் எழுதி வருகின்ற நல்ல எழுத்தாளர்களின் படைப்புகள், ஏடுகளில் வெளி வந்த சிறுகதைகள் ஆகியவற்றை ஆய்வுசெய்து கட்டுரைகள் படைத்துள்ளனர். அந்த வகையில், இதுவரையிலும் '1998ஆம் ஆண்டு தமிழ் நேசன் சிறுகதைகள்: ஓர் ஆய்வு' (வேலுமணி சதாசிவம்), 'பேரவைக் கதைகளில் சமகால நிகழ்வுகள்: ஒரு பார்வை' (தனபாக்கியம் இராஜகோபால்), '2002ஆம் ஆண்டு மலேசிய நண்பன் சிறுகதைகளில் சமுதாயச் சிக்கல்கள்' (விமலாதேவி மாணிக்கம்), 'கோ. புண்ணியவான் படைப்புகள்: ஓர் ஆய்வு' (குமரகுரு குப்புசாமி), 'சீ. முத்துசாமியின் படைப்புகள்: ஓர் ஆய்வு' (ரேணுகா குருசாமி), 'சாமி மூர்த்தியின் சிறுகதைகள்: ஓர் ஆய்வு' (சந்திரசேகரன் சின்னப்பன்), 'மலேசியப் பெண் எழுத்தாளர்களின் படைப்புகளில் பெண்ணியம்' (விவேகாநந்தன் சுப்பிரமணியன்), 'பி. கோவிந்தசாமியின் சிறுகதைகள்: ஓர் ஆய்வு' (அண்ணாதுரை முருகையா), 'ரெ. கார்த்திகேசுவின் சிறுகதைகள்:

ஓர் ஆய்வு' (முகிலன் வீரபுத்ரன்), 'மலேசியத் தமிழ்ச் சிறுகதை களில் பெண்ணியச் சிந்தனைகள் (1991 - 2000)' (நீலமலர் தங்க கிருஷ்ணன்), 'மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளில் குடும்ப உறவுச் சிக்கல்கள்' (ரேவதி முனியாண்டி @ ரெங்கநாதன்), 'மலேசியத் தமிழ்ப் படைப்பாளிகளின் பார்வையில் பெண்ணியம்' (அஜுந்தா குப்பன்), 'மா. சண்முகசிவாவின் வீடும் விழுதுகளும்: ஓர் ஆய்வு' (புஷ்பா சுப்பையா), 'மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளில் கல்விப் பிரச்சினைகள்' (சாந்தி காளியப்பன்), 'மலேசியத் தமிழ்ச் சிறுகதை களில் முதியோர் பிரச்சினைகள்' (வாணிஸ்ரீ இராமகிருஷ்ணன்) என்னும் தலைப்புகளில் கட்டுரைகள் படைக்கப்பட்டுள்ளன. இவை யாவும் முழுமையான ஆய்வுகள் என்று கூறுவதற்கில்லை. எனினும், ஒட்டுமொத்தமாக இக்கட்டுரைகள் யாவும் மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளின் போக்குகள் பற்றிய நல்ல தகவல்களை வழங்குகின்றன. இவை யாவும் நூல் வடிவம் பெறும் என நம்பிக்கை கொள்ள முடியவில்லை. நூல் வடிவம் பெற்றால் மலேசியத் தமிழ்ச் சிறுகதைகளின் வளர்ச்சி, தரம், கருப்பொருள்கள் முதலியன வற்றைப் பற்றி அறிய உதவும் நல்ல ஆவணங்களாக இவை மிளிரும். எனினும், மலேசியச் சிறுகதைகளை மேலும் ஆழமாகவும் விரிவாகவும் ஆய்வுகள் செய்வதற்குரிய அடிப்படையை இக்கட்டு ரைகள் அளித்துள்ளன என்பதில் ஐயமில்லை.

## ஊ. மகளிரின் பங்களிப்பு

மலேசியத் தமிழ் இலக்கியத் துறையில் மகளிரின் பங்களிப் பைப் பற்றி நிறையவே எழுத முடியும். கவிதை, சிறுகதை, நாவல், நாடகம் எனப் பல துறைகளிலும் இவர்களுள் பலர் முத்திரை பதித்துள்ளனர். சிறுகதையைப் பொறுத்தமட்டிலும் 1960ஆம் ஆண்டுகளிலிருந்து பல காலம் தொடர்ந்து எழுதியவர்களும் இன்றும் எழுதிக் கொண்டிருப்பவர்களும் உண்டு.

பாவை, க. பாக்கியம், துளசி, இராஜம் கிருஷ்ணன், வில்வ மலர், ஜனகா சுந்தரம், ப. பத்மா தேவி, நிர்மலா இராகவன், நிர்மலா பெருமாள், சாரதா கண்ணன், சு. கமலா, ஆதிலட்சுமி, எம். ஜெயலட்சுமி, மல்லிகா சின்னப்பன், வீ தீனரட்சகி, நா.மு.தேவி, கண்மணி கிருஷ்ணன், நேசமணி, வே. இராஜேஸ்வரி, கமலாட்சி ஆறுமுகம், தா. ஆரியமாலா, இ. தெய்வானை, பத்மினி ராஜமாணிக்கம், கோமகள், எஸ்.பி. பாமா, ஆரியமாலா குண சுந்தரம், ச. சுந்தராம்பாள் ஆகியோர் அவர்களுள் குறிப்பிடத்தக்க வர்கள். இவர்களுள் சிலர் சிறுகதைத் தொகுப்புகளும் வெளியிட் டிருக்கின்றனர். திருமதி ப. பத்மாதேவி அவர்கள் குறிஞ்சிப் பூக்கள் (1993) என்னும் சிறுகதைத் தொகுப்பை வெளியிட்

டுள்ளார். ந. மகேஸ்வரியின் முதல் சிறுகதைத் தொகுப்பான 'தாய்மைக்கு ஒரு தவம்' 1985லும் 'மகேஸ்வரியின் கதைகள்' 2003லும் வெளிவந்தன. பாவையின் சிறுகதைத் தொகுப்புகளாக 'ஞானப்பூக்கள்', 'கோடுகள் கோலங்களானால்' என்னும் இரண்டு தொகுப்புகளும், க. பாக்கியத்தின் தொகுப்பாக 'முரண்பாடுகள்' என்னும் தொகுப்பும், தா. ஆரியமாலாவின் தொகுப்பாகப் 'பூச்சரம்' என்னும் தொகுப்பும், எஸ். பி. பாமாவின் தொகுப்பாக 'அது அவளுக்குப் பிடிக்கல' (2004) என்னும் தொகுப்பும், கமலச் செல்வி எனப்படுகின்ற கமலாட்சி ஆறுமுகத்தின் தொகுப்புகளாக 'சிந்தனை மலர்கள்', 'தியாகங்கள்' என்னும் இரு சிறுகதைத் தொகுப்புகளும் வெளிவந்திருக்கின்றன. மற்றவர்களுள் 1984 முதல் எழுதி வரும் கோமகள் இதுவரையிலும் 'புதுமைப்பெண்' (1999) என்னும் தம்முடைய சிறுகதைகளைக் கொண்ட ஒரு தொகுப் பையும் பெண் எழுத்தாளர்கள் பலரின் சிறுகதைகளைக் கொண்ட 'கயல்விழி' என்னும் சிறுகதைத் தொகுப்பு ஒன்றையும் வெளியிட் டுள்ளார். மகளிருள் மிக அதிகமான சிறுகதைத் தொகுப்புகளை வெளியிட்டவராக ஒருவரைச் சொல்வதானால் நிர்மலா பெருமாள் அவர்களுக்கே அப்பெருமையைத் தர வேண்டும். இதுவரையிலும் 'நெருப்பு நிலவு' (1988), 'மலரட்டும் மனித நேயங்கள்' (1991) 'வரலாற்றுக்குள் ஒரு வரி' (1996), 'தண்ணீரை ஈர்க்காத தாமரை' (2002), 'விலங்குகள்' (2007) என்னும் ஐந்து சிறுகதைத் தொகுப்பு களை இவர் வெளியிட்டுள்ளார். இவருடைய எழுத்துப் பணி இன்னமும் தொடர்ந்து கொண்டிருக்கின்றது என்பதும் குறிப்பிடத் தக்கது.

## எ. இடைநிலைப் பள்ளிகளில் சிறுகதைப் பயிலரங்கம்

பள்ளிச் சோதனைக் கேள்விகளில், குறிப்பாக பி. எம். ஆர், எஸ்.பி.எம். ஆகிய சோதனைகளில் கடந்த சில ஆண்டுகளாகச் சிறுகதை எழுதும் கேள்வி ஒன்றும் அளிக்கப்படுவதால் இடை நிலைப் பள்ளிகளில் சிறுகதை எழுதுவதற்கும் ஆசிரியர்கள் முக்கியத்துவம் அளித்து வருகின்றனர். இதற்காக, இயக்கங்களும், எழுத்தாளர் வாசகர் வட்டங்களும்கூட சிறுகதை எழுதுவதற்கான பயிற்சிகளைச் சோதனைகள் நெருங்கும் காலகட்டங்களில் இடை நிலைப்பள்ளி மாணவர்களுக்கு அளித்து வருகின்றன. அண்மையில் நெகிரிசெம்பிலான் ரந்தாவ் இடைநிலைப்பள்ளியில் சிறுகதைப் பயிலரங்கம் ஒன்று நடத்தப்பட்டுள்ளது. பாவலர் ஐ. இளவழகு அவர்கள் இதனை நடத்தியுள்ளார்.[54] ஐம்பதுக்கும் மேற்பட்ட மாணவர்கள் இப்பயிலரங்கில் கலந்து பயன்பெற்றுள்ளனர். 'செமினி தமிழ் வாசகர் இயக்கமும்' இத்தகைய பயிலரங்கம்

ஒன்றை நடத்துவதற்கான அறிவிப்பைச் செய்துள்ளது. இந்த முயற்சிகள் வரவேற்கத்தக்கன. சிறுகதை எழுதுவதற்கான அடித் தளத்தை இடைநிலைப்பள்ளி நிலையிலேயே அமைப்பது சிறுகதைத் துறையை வளர்ப்பதற்கு உறுதுணையாக இருக்கும். எனினும், இச்சோதனைகளுக்கு அமரும் மாணவர்களுள் எத்தனை பேர் சோதனைகள் முடிந்த பின்னர் தொடர்ந்து சிறுகதை படைப்பதில் நாட்டம் செலுத்துவர் என்னும் கேள்விக்குப் பதில் கூறமுடியும் என்று தோன்றவில்லை.

## மலேசியச் சிறுகதை வளர்ச்சிக்கு அடுத்த கட்ட நடவடிக்கை

மலேசியாவில் இலக்கியத்திற்கெனத் தனி இதழ் எதுவும் தற்சமயம் வெளிவருவதாகத் தெரியவில்லை. அண்மையில் வெளியீடு கண்ட 'வல்லின'த்தில் அதற்கான முயற்சிகள் இருப்பது தெரிகிறது. எனினும், அதனுடைய இலக்கியப் பணியைப் பற்றிக் கருத்துக் கூற இன்னும் காலம் கனியவில்லை.

## I. ஏடுகளின் பணி – நடவடிக்கை

பெரும்பாலான நாள், வார, மாத இதழ்கள் இன்று பொருளை நாட்டமாகக் கொண்டே நடத்தப்படுகின்றன என்பதில் ஐயமில்லை. ஆக, விற்பனையை அதிகரிக்க வாசகர்கள் விரும்பும் விஷயங்களுக்கே இவை யாவும் அதிக முக்கியத்துவம் கொடுத்துப் பிரசுரிக்கப்படுகின்றன. அதனால், இலக்கிய வளர்ச்சிக்கான முயற்சி என்பது அவற்றிற்கு ஒரு சிறு பங்களிப்பாகவே இருந்து வருகின்றது என்பதே உண்மை. ஆனாலும், மலேசிய நாட்டில் வெளியிடப் படும் பெரும்பாலான நாள், வார மாத இதழ்களும் இல்லாது போகுமானால் இலக்கியத்தைப் பற்றியோ அதன் வளர்ச்சியைப் பற்றியோ எண்ணிப்பார்க்க முடியுமா என்பதும் தெரியவில்லை. மலேசியாவில் இலக்கியம் வேரூன்றத் தொடங்கிய காலத்திலிருந்தே இந்த நிலைமைதான் நிலவிவருகின்றது. ஆனாலும், நல்ல சிறுகதை களை மட்டுமே தேர்ந்தெடுத்து வெளியிடுதல், சிறுகதைகளைத் திருத்தி வெளியிடுதல், வெளியிடப்படும் எல்லாச் சிறுகதை களுக்கும் ரொக்கப் பரிசளித்தல் போன்ற சில நடவடிக்கை களைத் தொடர்ந்து மேற்கொள்வதன்வழி மலேசியத் தமிழ் ஏடுகள், தமிழ் இலக்கியத்தை, குறிப்பாகச் சிறுகதை இலக்கியத்தின் தரத்தை மேம்படுத்த முடியும்.

## II. இயக்கங்களின் பணி / நடவடிக்கை

### திறனாய்வுக் கருத்தரங்குகள் நடத்துதல் / கட்டுரைகளைத் தொகுத்தல்

மலேசியாவில் சிறுகதைத்துறை சரியான முறையில் வளர்ச்சி பெறாமல் இன்றும் தளர்நடை போடும் குழந்தையாகவே இருப்பதற்குச் சிறுகதைத் திறனாய்வுகள் போதுமான அளவும் சீரிய முறையிலும் மேற்கொள்ளப்படாததும் ஒரு காரணமாக விளங்குகின்றது. சிறுகதைப் போட்டிகள் சிறுகதைகள் படைப்ப தற்கான ஊக்குவிப்பை அளிக்கின்றனவெனினும் இவை மட்டுமே சிறுகதைத்துறையை வளர்க்கப் போதுமானவையன்று என்பதை சிறுகதையின் இன்றைய நிலைமை தெளிவாகவே காட்டுகின்றது. பெரும்பாலான போட்டிகளில் சிறந்தவையெனத் தேர்ந்தெடுக்கப் படும் சிறுகதைகள் அந்நேரத்திற்குச் சிறந்தவையெனத் தேர்ந்தெடுக்கப் பட்ட பெருமைக்குரியனவாக மட்டுமே விளங்குகின்றன. பல போட்டிகளில் அச்சிறுகதைகள்கூட விரிவான திறனாய்வுப் பார்வைக்கு உட்படுத்தப்படுவதில்லை. இந்த நிலைமையில் மாற்றம் ஏற்பட வேண்டுமானால் நாடு முழுவதும் ஆங்காங்கே அமைக்கப் பட்டுள்ள எழுத்தாளர், வாசகர் இயக்கங்கள் பரிசுபெற்ற சிறுகதை களைத் திறனாய்வு செய்யும் பணியினை விடாது செய்தல் வேண்டும். தவிர, கருத்தரங்குகளில் படைக்கப்பட்ட கட்டுரைகளுள் சிறந்த கட்டுரைகளைத் தொகுத்து நூலாக வெளியிடும் முயற்சியையும் அவை மேற்கொள்ள வேண்டும். மேலும், நல்ல சிறுகதைகளைப் படைப்பதற்கு எழுத்தாளனிடம் மொழித்திறமையும் வேண்டும் என்பதில் ஐயமில்லை. ஏடுகளில் வெளிவரும் பல சிறுகதை களைக் காணும்பொழுது சிறுகதை எழுத்தாளர்களிடம் மொழித் திறமையையும் வளர்க்க வேண்டியதன் அவசியம் இருப்பதையும் உணரமுடிகின்றது. ஆகவே, சிறுகதைக்காக நடத்தப்படும் கருத்த ரங்குகள் சிறுகதைகளில் வந்துள்ள இலக்கணப் பிழைகளையும் சுட்டிக் காட்டி வழிகாட்டுவனவாகவும் அமைய வேண்டும்.

### சிறுகதைத் தொகுப்புகளை வெளியிடுதல்

மலேசியாவில் ஏடுகளும் இயக்கங்களும் அவ்வப்போது சிறுகதைப் போட்டிகளை நடத்திப் பரிசுகள் அளித்து வருகின்றன வெனினும் சில இயக்கங்களே பரிசுபெற்ற படைப்புகளை நூலாக வெளியிடும் முயற்சியில் இறங்குகின்றன. இதனால், பரிசு பெற்ற பல நல்ல படைப்புகள் நூல்களில் இடம் பெறாமலே காணாமல் போய்விட்டன. இந்த நிலைமையும் மலேசியச் சிறுகதைத்துறைக்கு உகந்ததல்ல. எனவே, போட்டிகளை நடத்தும் இயக்கங்கள்

யாவுமே பரிசுபெற்ற படைப்புகளை நூலாக வெளியிட வேண்டும். அப்பொழுதுதான் தரமான சிறுகதைகளை மலேசிய எழுத்துலகமும் பிறநாட்டு எழுத்துலகமும் அறிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்படும்.

## எதிர்காலம்

*"மலேசியச் சிறுகதை உலகிலே சி. வடிவேலு, ரெ. கார்த்தி கேசு, மு. அன்புச்செல்வன், எம். குமரன், சை. பீர்முகம்மது முதலியோர் இன்று மிகச்சிறந்த சிறுகதைகளை எழுதி வருகின்றனர். இவர்கள் எழுதும் கதைகளிலே புதிய புதிய கருப்பொருள் களையும் சொல்லும் முறைகளையும் காணலாம். இவர்களுடைய கதைகளில் பல மண்ணின் மணங்கமழும் வட்டாரச் சிறுகதை களாகவே விளங்குவது குறிப்பிடத்தக்கது"* என ஏறத்தாழ முப்பத் தைந்து ஆண்டுகளுக்கு முன் டாக்டர் இரா. தண்டாயுதம் எழுதினார்.[55]

ஆனால், இவர்களுள் இன்று சி. வடிவேலு இல்லை. எம். குமரன் சிறுகதைகள் எழுதுவதாகத் தெரியவில்லை. மற்றவர் களின் சிறுகதைகள் அதிகமாக வெளிவராவிடினும் அவ்வப்போது எழுதிக் கொண்டிருக்கின்றனர். இதுதான் அவர்களின் இன்றைய நிலை.

எனினும், இவர்களோடு மலேசியத் தமிழ்ச் சிறுகதைத்துறை வளர்ச்சியடையாமல் நின்று விடவில்லை. இலக்கியக் குரிசில் மா. இராமையாவும் மா.செ. மாயதேவனும் தோன்றினர். எம். ஏ. இளஞ்செல்வன் வந்தார். முத்தமிழ்ச் செல்வர் நா. ஆ. செங்குட்டுவன், ஆர். சண்முகம், டாக்டர் மா. சண்முக சிவா, அரு. சு. ஜீவானந்தன், சாமி மூர்த்தி, டாக்டர் சொக்கலிங்கம், மைதீ. சுல்தான், ப. சந்திரகாந்தம், பாரி, ஐ. இளவழகு, பி. எஸ். பரிதிதாசன், பெ. மு. இளம்வழுதி முதலியோரும் சிறுகதைத் துறையில் இடம்பிடித்தனர். இவர்களைத் தவிர்த்துக் கால ஓட்டத்தில் மலேசியச் சிறுகதைத்துறையோடு இணைத்துப் பேசக்கூடிய அளவுக்குச் சிறுகதைத்துறையில் இடம் பிடித்தவர்களும் தடம் பதித்தவர்களும் ஏராளமானோர் உள்ளனர். சீ. முத்துசாமி, கோ. புண்ணியவான். எ.மு. சகா, ஆ. நாகப்பன், சோலை முனியன், நாடோடி, பி. கோவிந்தசாமி, மா. இராமகிருஷ்ணன், நிலாவண்ணன், கு. கிருஷ்ணன், ப. அடைக்கலம், எல். முத்து, பழ எட்டிக்கண் அன்பழகன், எம்.கே. ஞானசேகரன், கல்யாணி மணியம், வே.ம. அருச்சுனன், ஜனகா சுந்தரம், சரஸ்வதி அரி கிருஷ்ணன், பச்சைபாலன், ஏ.பி. மருதழகன், நாணல், ஜி.பி. லாசரஸ். நிர்மலா இராகவன், காசிதாசன், ரெ. சண்முகம்,

டாக்டர் ஜி. ஜான்சன், கே. ஐ. நாராயணன், பத்மினி இராஜ மாணிக்கம், பொ. சந்தியாகு, எஸ். கமலா சங்கர், கா. இளமணி, செ. கோபாலன், கு.சா. கண்ணன், ந. வரதராசன், வேலன் செல்லையா, அ. ரெங்கசாமி, பி.கே. சரோஜா மணியம், ஸ்கூடாய் சி. வடிவேலு, பூ. அருணாசலம், க. கிருஷ்ணசாமி, வீ. செல்வராஜ், பாவை, ந. மகேஸ்வரி, நிர்மலா பெருமாள், சு. கமலா, க. பாக்கியம், ச. சுந்தராம்பாள், ப. பத்மா தேவி, எஸ். பி. பாமா, கமலாட்சி ஆறுமுகம், வே. இராஜேஸ்வரி, தா. ஆரியமாலா, புலவர் கோமகள், என். துளசி, ஆதிலட்சுமி ஆகியோர் அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்களோடும் தமிழ்ச் சிறுகதைத்துறை முடங்கி விடவில்லை. ஏறத்தாழ எண்பது ஆண்டுகளாகியும் அது தொடர்ந்து கொண்டிருப்பது ஒன்றே அது வளர்ச்சி கண்டு கொண்டிருக் கின்றது என்பதற்குப் போதுமான சான்றாகும்.

எனவே, இன்று மலேசியத் தமிழ்ச் சிறுகதைத்துறை தளர்ச்சி யடைந்திருப்பதைப் போன்ற தோற்றத்தைக் கொண்டிருந்தாலும் இதுவே அதன் வளர்ச்சியைப் பாதித்துவிடும் என்று எண்ணத் தேவையில்லை. இந்நிலைமை மாறும். வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவதைப் போன்று சிறுகதைத் துறைக்கு இது ஒரு சோதனையான காலகட்டம். அவ்வளவே. இளைய தலைமுறை எழுத்தாளர்கள் நிச்சயம் இதன் தோற்றத்தை மாற்றி யமைப்பர். இவர்களுள் பலர் இன்று அடையாளம் தெரியாதவர் களாக இருக்கலாம். ஆனால், சுடச் சுடப் பொன் ஒளிரும் என்பதற் கொப்ப எழுத எழுத நாளை இவர்களும் பிரகாசிப்பர். மஹாத்மன், ம. நவீன், பா. அ. சிவம், சிவா பெரியண்ணன், ஏ. தேவராஜன், திருமாமணி சுந்தரராஜ், ஆ. குணநாதன், யுவராஜன், ஜூனியர் கோமகள், செல்வம் அர்ஜுனன் முதலியோரின் படைப்புகளில் இதற்கான அறிகுறி தெரிகிறது. காலம் வேறு பலரையும் தொடர்ந்து அடையாளம் காட்டும். இவர்கள் அனைவரும் நாளைய மலேசியத் தமிழ்ச் சிறுகதை உலகை ஆள்வதோடு அதை வாழவும் வைப்பர் என நம்பலாம்.

## பின்னிணைப்பு

## பாலபாஸ்கரன் தம்முடைய ஆய்வுக்குப் பயன்படுத்திய சிறுகதைத் தொகுப்புகள்

மு. அப்துல் லத்தீப்பின், 'மனித தெய்வம்' (1959), 'அக்கரை இலக்கியம்: இலங்கை, மலேசிய இலக்கியத் தொகுப்பு' (1968), எம். அமிர்தலிங்கத்தின் 'நெஞ்சில் நிறைந்தவள்' (1963), சா. ஆ. அன்பானந்தனின் 'காலத்தின் விளக்கு' (1979), மு. அன்புச்செல்வனின் 'தவத்தின் வலிமை' (1971), த. மு. அன்னமேரியின் 'சிறுகதைத் தொகுப்பு' (1969), த. மு. அன்னமேரியின் 'பூவும் பொட்டும்' (1971), 'அன்பு இதயம்: மலேசியச் சிறுகதைகள்' (1968), அனுபூதிக் கடியனின் (A.M.M. இப்ராஹீம்) 'மறக்க மடியாத நான்கு கதைகள்' (1947), பூ. அருணாசலத்தின் 'போர் வீரன்' (1965), 'சபலம்' (தொகுப்பு) 1972, ந. சந்திரனின் 'ந. ச. வின் சிறுகதைகள்' (1972), வீ. கு. சந்திரசேகரனின் 'புதிய தலைமுறை' (1978), பி. கே. தனபாலனின் (தொகுப்பு) 'சிதைந்த ஓவியம்' (1971), எம். துரைசாமியின் 'அன்பு அன்னை' (1963), செ. குணசேக்ரின் 'நினைவின் நிழல்' (1955), மு. சு. குருசாமியின் 'வாடாத மலர்' (1966), A.M.M. இப்ராஹீமின் 'கடைச்சிப்பந்திகளின் கண்ணீர்' (1946), மருத இலக்குமணனின் 'காதலைத் துறந்த கன்னி' (1963), இர. சா. இளமுருகுவின் (தொகுப்பு) 'மலர் மங்கை' (1962), பெ. மு. இளம்வழுதியின் 'அடிவானம்: சிறுகதைத் தொகுப்பு' (1971), எம். ஏ. இளஞ்செல்வனின் 'முச்சந்தி மலர்கள்' (1978), எம். ஏ. இளஞ்செல்வனின் 'தெருப்புழுதி' (1977), காரைக்கிழாரின் 'நவ மலர்கள்' (1978), ரெ. கார்த்திகேசுவின் 'புதிய தொடக்கங்கள்' (1974), 'கதைக் கொத்து' (தொகுப்பு) (1960), கு. கிருஷ்ணனின் 'புதினமான உலகங்கள்' (1973), கு. கிருஷ்ணனின் (தொகுப்பு) 'வழிகாட்டி' (1973), பேரா மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் 'குழந்தை உள்ளம்' (தொகுப்பு) (1976), எம். குமரனின் 'சீனக்கிழவன்' (1970), ப. மலைமாறனின் (தொகுப்பு) 'வாரிசு' (1968), ப. மலைமாறன் & மா. இராமகிருஷ்ணனின் (தொகுப்பு) 'பூங்கொத்து' (1970), கோலாலம்பூர் தமிழ் இளைஞர் மணி மன்றத்தின் (தொகுப்பு) 'மணிக் கதைகள்' (1968), ச. மணிவண்ணனின் 'ஒரே நீதி' (1971), 'மறவேன் உன்னை' (தொகுப்பு) (1963), மா.செ. மாயதேவன்&மா. இராமையாவின்

'ரத்த தானம்' (1953), ஆ. இ. இப்ராஹிமின் (திருகிம்) 'எண்ணங்கள் சோதிக்கப்படுகின்றன' (1979), ஆ. இ. இப்ராஹிமின் (திருகிம்) 'இறைவன் இவர்களை மன்னிப்பானா: சிறுகதைத் தொகுப்பு' (1973) முல்லை, பூ. அருணாசலம் & முல்லைச்செல்வனின் (தொகுப்பு) 'பெண் மனம்' (1961), முல்லை, பூ அருணாசலம் & முல்லைச்செல்வனின் (தொகுப்பு) 'திருவிளக்கு' (1962), எம். முருகையனின் 'முருகையன் சிறுகதைகள்' (1974), எல். முத்துவின் 'விரதங்கள்' (1978), சீ. முத்துசாமியின் இரைகள் (1978), ஆ. நாகப்பனின் 'கோணல் ஆறு' (1979) 'நறுமணம்' (தொகுப்பு) (1974) க. பாக்கியம் முத்துவின் 'முரண்பாடுகள்' (1979), மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் (தொகுப்பு) 'பரிசு' (1974), கெடா மாநில எழுத்தாளர் இயக்கத்தின் 'பட்டினிக் குருவி' (1972), முத்தமிழ்த் தொகுப்பான 'பாவையின் பசி' (1970), தமிழ் நேசனின் (தொகுப்பு) 'பவுன் பரிசுக் கதைகள்' (1974) R. பெருமாளின் 'தமிழ்மலர் சிறுகதைகள்' (1973), மா. இராமகிருஷ்ணன் & P.K. மலைமாறனின் (தொகுப்பு) 'ஓவியப் பாவை' (1970) P.K. ராமுலு & தினகரனின் (தொகுப்பு) 'நெஞ்சின் வேதனை' (1962), சாமி மூர்த்தியின் 'நேர் கோடுகள்' (1975), P.K. சண்முகத்தின் 'அமுதக் கலசம்' (1969), P.K. சண்முகத்தின் 'பட்டதாரி' (1969), P.K. சண்முகத்தின் 'தண்டனை' (1972), வே. சின்னையாவின் 'நவரச கதா மஞ்சரி: இவை இனிய கற்பிதக் கதைகள்' (1930), சோலை இருசனின் (தொகுப்பு) 'தாமரைக் குளம்' (1976), சோலை முனியனின் 'மலர் வளையம்' (1977), மா. பூ. சோழனின் 'நின்று சிரித்தாள்' (1967), பி.கே. சரோஜாமணியத்தின் 'மறக்குமோ நெஞ்சம்' (1969), பி.கே. சரோஜாமணியத்தின் 'விமர்சனத்திற்கப் பால்' (1978), பொ. மு. தமிழ்மணியின் 'அவர்களுக்கென்று ஒரு வாழ்க்கை' (1976), பொ. மு. தமிழ்மணியின் 'கீறல் விழுந்த இசைத் தட்டு' (1976), சி. வடிவேலுவின் 'இருண்ட உலகம்' (1970), சி. வடிவேலுவின் 'வள்ளுவரின் காதலி' (1964), கரு. வேலுசாமியின் (தொகுப்பு) 'கற்பூர ஒளி: கடாரச் சிறுகதைகள்' (1972)

# துணை நூல்களும் ஏடுகளும்

1. வானம்பாடி, 2 ஜூன் 1979 முதல் 28 ஜூலை 1979 வரை.

2. ந. பாஸ்கரன், மலேசியத் தமிழ்ச் சிறுகதை, புதுச்சேரி: அரசி பதிப்பகம், 1995, ப. 21

3. மேலது, ப. 2 (இக்காலகட்டங்களை ஐந்தாக்கி அவற்றிற்கு Period of Acquaintance 1930 - 1941, Period of Diversion 1942 - 1945, Period of Apprenticeship 1946 - 1957, Period of Stabilishing Identity 1958 - 1969, Period of Social Preoccupation 1970 - 1979 எனத் தமது The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study, Singapore: 2006 p 22 - 23 என்னும் நூலில் பாலபாஸ்கரன் குறிப்பிடுகிறார்.)

4. ந. பாஸ்கரன், மலேசியத் தமிழ்ச் சிறுகதை, புதுச்சேரி: அரசி பதிப்பகம், 1995, ப. 3.

5. வானம்பாடி, 21 ஜூலை 1979.

6. ந. பாஸ்கரன், மலேசியத் தமிழ்ச் சிறுகதை, புதுச்சேரி: அரசி பதிப்பகம், 1995, ப. 4.

7. இரா. தண்டாயுதம், தற்காலத் தமிழ் இலக்கியம், சென்னை: தமிழ்ப் புத்தகாலயம், 1979, ப. 112.

8. ந. பாஸ்கரன், மலேசியத் தமிழ்ச் சிறுகதை, புதுச்சேரி: அரசி பதிப்பகம், 1995, ப. 7.

9. மேலது, ப. 23

10. மேலது, ப. 25

11. மேலது, ப. 67

12. மேலது, ப. 85

13. Bala Baskaran, The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study, Singapore:2006 p 48 - 49

14. Ibid, p. 53

15. Ibid, p. 63

16. டி. வி. ஆர். பார்வதி, தமிழ்ச் சிறுகதைக்கு இலக்கணம் வேண்டுமா? கோலாலம்பூர்: முத்தமிழ். 1971.

17. Bala Baskaran/ The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study, Singapore : 2006 p 7.

18. Ibid. p. 9

19. ரெ. கார்த்திகேசு, விமர்சன முகம், சென்னை: மித்ர ஆர்ட்ஸ் & கிரியேஷன்ஸ், 2004, ப. 23.

20. Bala Baskaran, The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study, Singapore : 2006 p 19.

21. சோ. சுப்பிரமணி, முதலாவது மலேசியத் தமிழ் இலக்கிய மாநாட்டு மலர், கோலாலம்பூர்: மலேசிய உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், 2005

22. ந. பாஸ்கரன், மலேசியத் தமிழ்ச் சிறுகதை, புதுச்சேரி: அரசி பதிப்பகம், 1995, ப. 35

23. மேலது, ப. 36

24. மேலது, ப. 3

25. வானம்பாடி, 16 ஜூன் 1979.

26. Bala Baskaran, The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study, Singapore : 2006 p 65 - 66

27. Ibid, p. 68

28. பரிசு பெற்ற படைப்புகள் இரண்டாம் தொகுப்பு, தேசிய நிலநிதிக் கூட்டுறவு சங்கம், 2003.

29. மலாயாப் பல்கலைத் தமிழ்ப் பேரவை, பேரவைக் கதைகள் 21, கோலாலம்பூர்: 2006.

30. Anis, Cinta Jamuna, Kajang: Impianis Enterprise, 2000.

31. R.Dhandayudham, Dewan Sastera, Mac, April 1984.

32. Bala Baskaran, The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study, Singapore : 2006 p 21.

33. Bala Baskaran, The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study, Singapore : 2006 p 21.

34. Mathtalai Somu, Selected Short Stories of Malaysian Tamil Writers Book 1, Seven Hills: Wintas Book Publishers, 2004.

35. ரெ. சண்முகம், ரெ. சண்முகம் கதைகள், சென்னை: மித்ர ஆர்ட்ஸ் & கிரியேஷன்ஸ், 2004, ப. 182 - 183

36. Bala Baskaran, The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study, Singapore : 2006 p 13.

37. Bala Baskaran, The Malaysian Tamil Short Stories 1930 - 1980 A Critical Study, Singapore : 2006 p 145.

38. டாக்டர் மா. இராமையா, மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம், சேலம்: புரட்சிப்பண்ணை, 1996, ப. 35.

39. கு. தேவேந்திரன், மலேசிய நண்பன், 23.1.2000
40. மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவை, பேரவைக் கதைகள் 18 ஆய்வுரை, கோலாலம்பூர்: 2003.
41. சித. நாராயணன், மலேசிய நண்பன், 29.4.2007.
42. நா. ஆண்டியப்பன், மலேசிய நண்பன், 29. 7. 2007.
43. ரெ. கார்த்திகேசு, விமர்சன முகம், சென்னை: மித்ர ஆர்ட்ஸ் & சிரியேஷன்ஸ், 2004, ப. 23
44. ரெ. கார்த்திகேசு, வல்லினம், ஜூன், பக்கம் 8.
45. குமரகுரு குப்புசாமி, கோ. புண்ணியவான் படைப்புகள்: ஓர் ஆய்வு 2004 / 2005.
46. ரேணுகா குருசாமி, சீ. முத்துசாமியின் படைப்புகள்: ஓர் ஆய்வு 2004 / 2005 பக்கம் 12 - 13.
47. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், வெள்ளி விழா மலர், 18.12.1988
48. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், வெள்ளி விழா மலர், 18.12.1988
49. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், 45ஆம் ஆண்டு ஆண்டறிக்கை, 24.6.2007.
50. தமிழ் நேசன், 4 ஏப்ரல் 2004.
51. தமிழ் நேசன், 3 டிசம்பர் 2006.
52. தமிழ் நேசன், 19 ஆகஸ்ட் 2007.
53. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், சமுதாயக் கதைகள், கோலாலம்பூர்: 1999
54. அகரம், ஜனவரி - பிப்ரவரி 2007.
55. இரா. தண்டாயுதம், தற்காலத் தமிழ் இலக்கியம், சென்னை: தமிழ்ப் புத்தகாலயம், 1979, ப. 117 - 118

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் 2005ஆம் ஆண்டில் மலேசிய, சிங்கப்பூர் தமிழ் இலக்கிய மாநாடு ஒன்றினை நடத்திற்று. அதில் மலேசிய, சிங்கப்பூர் ஆய்வாளர்களும் இலக்கியவாதிகளும் அரிய கட்டுரைகளைப் படைத்தார்கள். இந்தக் கட்டுரைகளின் முழுத் தொகுப்பு மலேசிய, சிங்கப்பூர் தமிழ் இலக்கியம் (2005) என்ற தலைப்பில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தால் நூலாகவும் பதிப்பிக்கப்பட்டுள்ளது. (தமிழ்நாட்டுப் பதிப்பு மித்ரவினால் பதிப்பிக்கப்பட்டது; 2007) அதில் உள்ள மலேசிய இலக்கியம் பற்றிய சில கட்டுரைகள் பயன் கருதி இங்கு எடுத்தாளப் படுகின்றன.

# மலேசியாவில் பன்மொழி இலக்கியங்களினூடே தமிழ் இலக்கியத்தின் நிலை

இணைப்பேராசிரியர் டாக்டர். வே. சபாபதி தலைவர்,
இந்திய ஆய்வியல் துறை, மலாயாப் பல்கலைக்கழகம் கோலாலம்பூர்.

## கட்டுரையின் சாரம்

### இக்கட்டுரையின் நோக்கும் போக்கும் :

*இக்கட்டுரையில் மேற்கு மலேசியாவில் பெரும்பான்மை யோராக இருக்கும் முக்கிய மூன்று இனங்களான மலாயர், சீனர், இந்தியர் ஆகியோரின் இலக்கிய வளர்ச்சி குறித்த தகவல்கள் மட்டுமே விளக்கப்படுகின்றன. இக்கட்டுரையின் நோக்கங்களாவன:-*

*1.1 மலேசியாவில் மலாய், சீன, தமிழ் இலக்கிய வரலாற்றைப் பொதுநிலையில் அறிதல்.*

*1.2 எழுபதுகளுக்குப் பின்னர் மலாய், சீன இலக்கியங்களின் போக்குகளைப் பொதுநிலையிலும் மலேசியத் தமிழ் இலக்கியத்தின் போக்குகளைச் சிறப்புநிலையிலும் காணுதல்.*

*1.3 மலேசியாவின் பிறமொழி இலக்கியங்களோடு ஒப்பிட்டு மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சியை அறிதல்.*

1.4 மலாய், சீன, தமிழ் இலக்கியங்களுக்கு மத்தியில் காணப்படுகிற ஒருமைப்பாட்டு, வேறுபாட்டு கூறுகளை அறிதல்.

1.5 மலேசியத் தமிழ் இலக்கியத்தில் வெளிப்படும் மண்ணின் மணத்தை அடையாளங் காணுதல்.

1.6 தேசிய இலக்கியம் எனும் நீரோட்டத்தில் மலேசியத் தமிழ் இலக்கியத்தின் நிலையும் இடமும் யாது என்பதனை அறிதல்.

## 2. மலேசிய இலக்கியம் – தோற்றமும் வளர்ச்சியும்

மலேசியா தனித்தன்மை வாய்ந்த ஒரு நாடு. மலேசியாவின் பல்வேறு தனித்தன்மைகளுள் ஒன்று பன்மொழியும் அம்மொழிகளில் அமைந்துள்ள இலக்கியங்களும் ஆகும். மலாயர், சீனர், இந்தியர் முதலான மூன்று முக்கிய இனங்கள் மலேசியாவில் தங்களின் மொழி, கலை, பண்பாடு, நாகரிகம், இலக்கியம் எனச் சுயஅடையாளங்களோடு வேற்றுமையில் ஒருமைப்பாடு கண்டு இன்றளவும் வாழ்ந்து வருகின்றனர். இவர்களுள் சீனரும் இந்தியரும் ஐரோப்பியர் தென்கிழக்காசியாவில் கோலோச்சிய வேளையில் இங்கு புதுவாழ்வு தேடிக் குடிபெயர்ந்தவர்கள் ஆவர். குடியேறிய காலம் தொட்டு இதுநாள்வரை அவர்கள் தங்களின் மொழி, பண்பாடு, கலை ஆகியவற்றைத் தனிப்பெரு அடையாளங்களாகக் கொண்டு இந்நாட்டில் பேணிக்காத்து வருகின்றனர். தொடக்கக் காலம் முதலே படைப்பிலக்கியங்களையும் படைத்தும் காத்தும் வருகின்றனர்.

### 2.1. மலாய் இலக்கியம்

மலேசியாவில் தோன்றி வளர்ந்த இலக்கியங்களுள் மலாய் மொழி இலக்கியமே காலத்தால் மூத்ததும் தொன்மை வாய்ந்ததும் ஆகும். எழுத்துவடிவம் தோன்றுமுன்னரே மலாய் மொழியில் வாய்மொழி இலக்கியங்கள் இருந்ததற்கான சான்றுகள் உள்ள தெனவும் எழுத்தில் அமைந்த இலக்கியங்கள் கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து காணப்படுவதாகவும் ஆய்வாளர் கூறுவர். இஸ்லாமிய சமயம் இங்கு வேரூன்று முன்னர் மலாய் இலக்கியத்தில் இந்திய இலக்கியங்களின் தாக்கம் பரவலாகக் காணப்படுகின்றது. தவிர, இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் மத்தியக் கிழக்கு, இந்தோனேசியா ஆகிய நாடுகளின் தாக்கம் மலாய் இலக்கியத்தில் காணப்பட்டது. தழுவல் படைப்புகளும் மொழி பெயர்ப்பு

களும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மலாய் மொழியில் அதிகம் வெளிவந்தன. மலாய் மொழியில் வெளிவந்த முதல் நாவலான "ஹிக்காயாட் ஃபாரிடா அனும்" (1925) இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டு. மலாய் மொழியில் நாவல் இலக்கியம் தோன்றி வளர்வதற்குரிய முன்னோடி முயற்சியாக இது இன்று கருதப்படு கின்றது. அதேபோன்று கவிதை இலக்கியத்தில் (Puisi) இந்தோனே சியாவின் தாக்கம் பரவலாகக் காணப்படுகின்றது.

மலாய் இலக்கியத்தில் மண்ணின் மணமும் தனித்தன்மை களும் இரண்டாம் உலகப் போருக்குப் பின்னரே காணப்படு கின்றன. குறிப்பாக, ஐம்பதுகளில் தோற்றம் கண்ட "இலக்கிய வாதிகளின் அணி 50" (ASAS 50) இதற்கு முக்கியப் பங்காற்றி யுள்ளது. உஸ்மான் அவாங், சமாட் சைட், மசூரி எஸ். என், கெரிஸ் மாஸ், மொக்தார் யாசின், ஏ. எஸ். அமீன் போன்றோர் இவ்வணியின் முக்கியக் கவிஞர்களாகவும் படைப்பாளர்களாகவும் விளங்கினர். இவர்களுள் பலர் சுதந்திர எழுச்சிக் கவிதைகளைத் ஏற்றமுடன் தந்துள்ளனர். அடிமை வாழ்வு பற்றியும் சுதந்திரம் தரும் ஏற்றத்தையும் பின்வருமாறு உஸ்மான் அவாங் பாடுகின்றார்.

"Berpusing roda beralihlah masa,
berbagai neka hidup di bumi,
selagi hidup berjiwa hamba,
pasti tetap terjajah abadi.
Kalau hidup ingin merdeka,
tiada tercapai hanya berkata,
ke muka maju sekata, maju kita,
melemparkan jauh jiwa hamba!"

(Utusan Zaman, 27 Mac 1949)

இக்காலப்பகுதியில் மலாய்ப் படைப்பாளர் மத்தியில் இரு விதக் கோஷங்கள் எழுந்தன. முதலாவது, கலை கலைக்காக என்பதும் இரண்டாவது, கலை வாழ்க்கைக்காக என்பதும் ஆகும். ஐம்பதுகளில் ஏறத்தாழ 192 மலாய் நாவல்கள் வெளிவந்தன. இவற்றுள் மிகுதியானவை சமூக நாவல்கள் ஆகும். இவற்றுள் 1951 இல் வெளிவந்த "அவ்வீடு என் உலகம்" (Rumah Itu Dunia Aku) மிகவும் புகழ்பெற்ற நாவலாகும். இது ஹம்ஸா என்பவரின் படைப்பாகும். இதே காலப்பகுதியில் அமாட் லுட்பி (Ahmad Lutfi), ருமாஜா மலாயா (Rumaja Malaya) போன்றோரும் புகழ்பெற்ற நாவலாசிரியர் களாவர்.

ஐம்பதுகளுக்கு முன் பள்ளி ஆசிரியர்கள், பத்திரிகையாளர்கள் மட்டுமே எழுத்தாளர்களாக இருந்த நிலை மலாய் இலக்கிய

உலகில் மாறியது. ஐம்பதுகளில் சமுதாயத்தில் பலதரப்பட்டவரும் எழுத்தாளர்கள் ஆயினர். இதனால் மலாய்ப் புனைகதைகளின் களமும் அதன் தளமும் விரிவடையத் தொடங்கின. குறிப்பாக, மலாய்ச் சிறுகதைகளின் கதைப்பொருள்கள் பன்முகம் கொள்ளத் தொடங்கின.

அறுபதுகளில் மலாய்க் கவிதை உலகில் இருண்மைக் (பண்பு) கவிதைகளும் (Sajak Kabur) சோதனைக் கவிதைகளும் அதிகமாக வெளிவரத் தொடங்கின. இதற்கு இந்தோனேசிய நாட்டின் தாக்கமே காரணம் எனலாம். அமைதி, காதல், ஆன்மீகம், போர் எதிர்ப்பு, தனிமனிதச் சிக்கல்கள் முதலானவை இக்காலப்பகுதி கவிதைகளில் முக்கியப் பாடுபொருளாயிருந்தன. அறுபதுகளில் மலாய்ச் சிறுகதைகளில் வடிவ மாற்றம் ஏற்பட்டதனைக் காண முடிகின்றது. கதைகள் அங்கதப் போக்கிலும் குறியீட்டு முறையிலும் அமைந்தன. ஒன்றை நேரடியாகக் கூறாமல் மறைமுகநிலையில் அணுகுகின்ற முறை இக்கதைகளில் காணப்பட்டது. குறிப்பாக நிகழ்கால அரசியலை விமர்சிக்க இம்முறை பயன்பட்டது. புதிய இளைஞரணி ஒன்று சிறுகதைத்துறையில் ஈடுபட்டது. இவர்களை நிறைய இதழ்கள் எழுதத் தூண்டின. அறுபதுகளில் வஹாப் அலி, அலியாஸ் அலி, அஸ்மராண்டா, அவாங் ஹட் சாலே, நோர்ஸா, மானா சிக்கானா போன்றோர் சிறுகதைத்துறையில் அதிக ஈடுபாடு காட்டியவர்கள் ஆவர்.

அறுபதுகள் தொடங்கி மலாய்ப் பத்திரிகைகளும் தேவான் பகாசா தான் புஸ்தாகா (DBP), தேசிய எழுத்தாளர் அமைப்பு (Pena) போன்றவை நிறையப் போட்டிகளை நடத்தி எழுத்தை ஊக்குவித்தன. எழுபதுகளில் இவ்வமைப்புகளோடு மேலும் பல புதிய அமைப்புகளும் (Gapena, Lembaga Perpaduan Negara, Jabatan Perdana Menteri போன்றவையும்) போட்டிகளோடு கருத்தரங்குகளையும் பட்டறைகளையும் இலக்கியத்திற்காக நடத்தியுள்ளது குறிப்பிடத்தக்கது. மேலும், பல புதிய பல்கலைக்கழகங்கள் தொடங்கப்பட்டு அதில் மலாய் ஆய்வியல் துறைகள் உருவாக்கப்பட்டன. இத்துறைகள் திறனாய்வு நெறியை அறிமுகப்படுத்தின. இதனால் மலாய் இலக்கியங்களின்மீது பரவலாக ஆய்வுகள் நடத்தப்பட்டு அவற்றின் நிறைகுறை காணப்பட்டன. மலாய் இலக்கிய சீரிய வளர்ச்சிக்கு இது மிகவும் உதவிற்று. இதனால் எழுபதுகளின் இறுதியிலும் எண்பதுகளிலும் சோதனை முயற்சிகள் சிறுகதையின் உத்திகளில், கதையமைப்பில் மேற்கொள்ளப்பட்டன. எனினும், அம்முயற்சிகள் போதிய வெற்றியை அளிக்கவில்லை. தவிர, இம்முயற்சியில் சிறிய வட்டத்தினரே ஈடுபட்டனர். ஒஸ்மான் பூத்தே, அன்வார் ரிட்வான், மானா சிக்கானா போன்றோர் இச்சோதனை முயற்சியில் ஈடுபட்டவர்கள் ஆவர். ஆனால், அதிகமானோர் அதில் ஈடுபடவில்லை.

அதனால், தொண்ணூறுகளிலும் தற்பொழுதும் பழைய பாணியி லேயே சிறுகதை எழுதுகின்றனர். கருத்துப்புலப்பாடு, படைப்பு உத்திகளில்தான் புதுமைகளை மேற்கொள்கின்றனர்.

எழுபதுகளுக்குப்பின் இலக்கியக் கருத்தரங்குகள் (Hari Sastera), தரமான இலக்கிய இதழ்கள் (Dewan Sastera) போன்றவை எழுத்தாளர் களைத் தெளிவுள்ளவர்களாக்கியது. இக்காலப் பகுதியிலிருந்து முழுக்க முழுக்கப் புதுக்கவிதைகளே (Sajak Moden) மலாய் கவிதை உலகை ஆளத் தொடங்கின. சோதனைக் கவிதை, சமயக் கவிதை, பெண்கள் கவிதை எனக் கவிதை உலகம் பரந்து விரிந்தது. உஸ்மான் அவாங் தொடர்ந்து கவிதை இயற்றிப் பெரும்புகழ் பெற்றார். தற்பொழுது சிறப்பு நாள்கள், நிகழ்வுகள் போன்றவற்றில் கவிதைகள் வாசிக்கப்படுகின்றன. மெர்டேகா போன்ற சிறப்பு நாள்களில் நாட்டின் பிரதமர் உட்பட பலரும் கவிதை வாசித்தலைக் காணமுடிகின்றது. கவிதையில் மரபுக்குட்பட்டு 'pantun' என்ற வடிவம் இன்றும் போற்றப்படுகின்றது.

பல்கலைக்கழகங்களில் மலாய் ஆய்வுத்துறைகள் உள்ளதால் மலாய் இலக்கியத்தின்மீது ஆய்வுகள் பரவலாக நடத்தப்படுகின்றன. இதனால் மலாய் எழுத்தும் எழுத்தாளர்களும் தொடர்ந்து வளர்ந்து வருகின்றார்கள்.

சிறந்து விளங்கும் படைப்பாளருக்கு அரசு ஆதரவோடு "தேசிய இலக்கியவாதி" (Sasterawaan Negara) எனும் விருது வழங்கப் படுகிறது. இவ்விருது கிடைப்போருக்குக் கணிசமான பணத் தொகை (RM 30,000), நூல் வெளியீடு உள்ளிட்ட சிறப்புச் சலுகைகள் வழங்கப்படுகின்றன. ஒரு கவிஞரான முகமது ஹாஜி சாலே என்பாருக்கு இவ்விருது கொடுக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

அறுபதுகளில் 238 நாவல்களும் எழுபதுகளில் 189 நாவல் களும் வந்தன. எனினும், மலாய் நாவல் வளர்ச்சியில் எழுபது களின் இறுதியில் திருப்புமுனை ஏற்பட்டது. 1976-இல் தேசிய எழுத்தாளர் பேரவையும் (Gapena), யாயாசான் சபாவும் இணைந்து நடத்திய நாவல் போட்டியில் "சாகா" (Saga) எனும் தலைப்புடைய நாவல் முதற்பரிசு பெற்றது. இதனை எழுதியவர் தாலிப் ஹஸான் (A Talib B. Hassan) ஆவார். எண்பதுகளில் நாவல் வளர்ச்சியில் தேவான் பகாசாவின் பங்களிப்பும் தொண்ணூறுகளில் தனியார் பங்களிப்பும் சிறப்பாகக் காணப்படுகின்றன. பெருகிவரும் பெண் வாசகர்களின் தேவையைக் கருத்திற்கொண்டு தனியார் நிறுவனங்கள் (Kreatif Enterprise போன்றவை) மேனாட்டுப் பாணியில் நாவல்களை நூற்றுக்கணக்கில் வெளியிடும் நிலை இன்று மலாய் இலக்கிய உலகில் காணப்படுகின்றது.

இன்று மலாய் இலக்கிய உலகில் நூல் விற்பனை பிரச்சினைக் குரியதாக உள்ளது. தரமான இலக்கிய இதழுக்கு வரவேற்பும் குறுகிய வட்டத்துக்குள்ளேயே உள்ளது. வணிக இதழ்களே பெரு வாரியாக வரவேற்கப்படுகின்றன. இவற்றில்தான் பரவலாக இலக்கியப் படைப்புகள் வெளிவரும் நிலை காணப்படுகின்றது.

## 2.2. மலேசியச் சீன, தமிழ் இலக்கியங்கள்

மலேசியாவில் சீன, தமிழ் இலக்கியங்கள் கி.பி. பத்தொன்ப தாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில்தான் தோற்றம் கண்டன. அன்றைய மலாயாவிற்கும் இந்திய, சீன நாடுகளுக்கும் இடையி லான அரசியல், வணிகத் தொடர்புகள் கிறிஸ்துவுக்கு முன்னரி லிருந்தே காணப்பட்டாலும் இனமும் மொழியும் இலக்கியமும் வலுவாகக் காலூன்றத் தொடங்கியது கி.பி. பத்தொன்பதாம் நூற்றாண்டு ஆகும். சீன, தமிழ்க்கல்வி, பத்திரிகை வளர்ச்சியே இங்கு சீன, தமிழ் இலக்கியங்கள் தோன்றி வளரத்தக்கக் காரணி களாக அமைந்தன. தொடக்கத்தில் குடியேறிகளே இங்கு சீனத் திலும் தமிழிலும் இலக்கியங்கள் படைத்தனர். இதனால், தொடக்க காலச் சீன, தமிழ் இலக்கியங்களில் சீனநாட்டுத் தாக்கம், தமிழக, இலங்கைச் சார்புகள் பரவலாகக் காணப்பட்டன. இதற்குக் காரணம் தொடக்ககாலப் படைப்பாளர்கள் சீன, இந்திய, இலங்கை ஆகிய நாடுகளில் அங்கேயே கல்வி கற்றபின் பணி, வணிகம் ஆகியவற்றின் காரணமாக இங்கு குடியேறி எழுதியுள்ளதனைச் சுட்டலாம். தவிர, தொடக்ககாலத்தில் சீன, தமிழ்ப் படைப்பாளிகள் இங்கு தோன்றி வளர்ந்துவரும் இலக்கியங்களைச் சீன, இந்தியத் தமிழ் இலக்கியங்களின் ஒரு பகுதியாக, பிரிவாக, கிளையாகக் கருதினர். நாட்டு விடுதலைக்குப் பின்னரே அவ்வுணர்வு நீங்கி, இங்குள்ள இலக்கியமாகவும், அவை தனித்தன்மையும் மண்ணின் மணமும் கொண்டுள்ளதனையும் உணர்ந்து போற்றவும் மதிக்கவும் செய்தனர். மேலும், விடுதலைக்குப் பின்னரே, இந்நாட்டிலேயே பிறந்து, வளர்ந்து, கல்விகற்ற ஓர் இளைய தலைமுறையினர் படைப்புலகினுள் மெல்லப் புகுந்தனர். அதன்பின்னரே, இந்நாட்டில் சீன, தமிழ் இலக்கியங்களில் முழுமையாக மண்ணின் மணம் கமழத் தொடங்கியது.

எனினும், கி.பி. இருபதாம் நூற்றாண்டின் எழுபதுகளுக்குப் பின்னர், சீன, தமிழ் இலக்கியங்களின் வளர்ச்சி கூர்மையடைந்தது. அரசியல் ரீதியாக, புதிய பொருளாதாரக் கொள்கை நாட்டில் அமல்படுத்தப்பட்டது. இனங்களுக்கிடையிலான ஏழ்மையையும் வறுமையையும் போக்கி, சமநிலையிலான ஒரு சமுதாயத்தை

உருவாக்கும் எண்ணத்தோடு அப்போதைய பிரதமர் துன் அப்துல் ரசாக் அவர்கள் இத்திட்டத்தை அறிமுகப்படுத்தினார். நாட்டின் பூமிபுத்ராக்கள் என்ற முறையில் மலாய்க்காரர்களுக்குச் சிறப்புச் சலுகைகள் ஏற்படுத்தித் தரப்பட்டன. பின்னாளில் இதன் தாக்கம் இலக்கிய வளர்ச்சியையும் ஓரளவு தாக்கச் செய்தது.

## 3. மலேசிய இலக்கியங்களின் ஒருமைப்பாட்டுத் தன்மைகள்

மலேசியாவில் மலாய், சீன, தமிழ் இலக்கிய வளர்ச்சியில் காணப்படும் ஒத்த தன்மைகளும் போக்குகளும் சில உள்ளன.

### 3.1. பத்திரிகைகளே இலக்கியங்களை வாழவைத்தல்

முதலாவதாக, பத்தொன்பதாம் நூற்றாண்டு முதல் இன்று வரை பத்திரிகைகளே மலேசிய இலக்கியங்களை வளர்ப்பதில் முன்னணியில் இருப்பதனைச் சுட்டலாம். படைப்பாளன் ஒரு படைப்பின் உண்மைத் தாயாக இருந்து ஈன்று புறந்தரினும், பத்திரிகைகளே அப்படைப்புகளை வளர்த்த செவிலித்தாய் எனில் மிகையில்லை. படைப்பாளர் தன் படைப்புக் குழந்தைகளை வெளி யுலகிற்குக் காட்டவும் வாசகர்களின் மத்தியில் அறிமுகப் படுத்தவும் பத்திரிகைகளின் துணையையே பெரிதும் நாடினர். எனவே, பத்திரிகைகளே இந்நாட்டில் மலாய், சீன, தமிழ் இலக்கி யங்களை வளர்த்தும் வாழவைத்தும் கொண்டிருக்கின்றன.

### 3.2. தேசிய இலக்கியம் எனும் அங்கீகாரம்

அடுத்ததாக, மலேசிய இலக்கியங்களை வாழவைப்பதில் இயக்கங்கள் அல்லது அமைப்புகள் முக்கியப் பங்காற்றியுள்ளன. இந்த அமைப்புகளை அரசு சார், அரசு சாரா என இரண்டு பெரும்பிரிவுகளில் காணலாம். மலேசியாவைப் பொறுத்தவரையில் அரசின் ஆதரவு, ஒத்துழைப்பு, ஊக்குவிப்பு என எல்லாமே மலாய் மொழி இலக்கியங்களுக்கு மட்டுமே உண்டு. மலாய் மொழி நாட்டின் தேசிய மொழியாக இருப்பதால், அம்மொழியில் எழுதப் படும் இலக்கியமே தேசிய இலக்கியம் என்ற நிலை காணப்படு கின்றது. சீன, தமிழ் இலக்கியங்கள் எவ்வளவுதான் மலேசியச் சூழல், மலேசியக் களம், மலேசிய மாந்தர், மலேசியாவுக்கே உரிய சிக்கல், மண்ணின் மணம் ஆகியன கொண்டு எழுதப்பட்டாலும் அவை "தேசிய இலக்கியங்கள்" என்ற அங்கீகாரத்தைப் பெற முடியாமல் வருத்தத்தில் உள்ளன. எனவே, மலேசியத் தமிழ், சீன இலக்கியங்களுக்குத் தேசிய அங்கீகாரம் வேண்டும் என்ற படைப்

பாளர்களின் அறைகூவலும் ஏக்கமும் இந்நாட்டில் அவ்வப்போது பத்திரிகைகளிலும், மேடைகளிலும் பிற ஊடகங்களிலும் கேட்கவே முடிகின்றது. எனவே, உள்நாட்டிலேயே அரசால் அங்கீகாரம் பெற முடியாத சீன, தமிழ் இலக்கியங்கள் "ஆசியான் விருது" பற்றி நினைத்துக் கூடப் பார்க்கமுடியாத நிலையில் உள்ளன.

மலாய் இலக்கியத்திற்கு அரசின் ஆதரவில் இயங்கும் "தேவான் பகாசா தான் புஸ்தாகா" எனும் மொழி, இலக்கியம் சார்ந்த அமைப்பு ஆற்றியுள்ள பங்கு அளப்பரியது. "தேவான் பகாசா தான் புஸ்தாகா"வின் பிறமொழி இலக்கியங்களுக்கான ஊக்குவிப்பு போதிய அளவிலும் மனநிறைவு கொள்ளும் அளவிலும் இல்லை. உஸ்மான் அவாங், கெரிஸ் மாஸ் போன்ற மலாய்ப் படைப்பாளர்கள் தேவான் பகாசாவில் இருந்தபொழுது தங்களின் தனிப்பட்ட விருப்பத்தின் அடிப்படையில் பிறமொழி இலக்கியங்களின் நிகழ்ச்சியில் கலந்தும் தேவான் பகாசாவில் நடத்தியும் வந்துள்ளனர். தவிர, அவ்வப்போது கவிதை இரவுகளும் நடந்துள்ளன.

2000-ஆம் ஆண்டில் நடைபெற்ற முதலாவது உலகத்தமிழ்க் கவிதை மாநாடு தேவான் பகாசாவில் நடைபெற்றது இங்கு குறிப்பிடத்தக்கது. இவ்வகையான முயற்சிகள் தேசிய இலக்கியம் என்கிற அங்கீகாரத்தைப் பெறுவதற்கோ தேசிய நீரோட்டத்தில் சீன, தமிழ் இலக்கியங்கள் கலப்பதற்கோ மிகக் குறைந்த அளவே பங்காற்றமுடியும். தவிர, "தேவான் பகாசா தான் புஸ்தாகா" மலாய் மொழியில் எழுதும் சீன, தமிழ் எழுத்தாளர்களுக்குப் பயிற்சிப் பட்டறைகளும் போட்டிகளும் நடத்துகின்றது. இவ்வகை முயற்சிகள் மலாய் இலக்கியத்தை வளப்படுத்தும், வலுப்படுத்தும் நடவடிக்கைகளாக இருப்பதோடு மட்டுமல்லாமல், மலாய் இலக்கியமே அரசால் அங்கீகரிக்கப்படுகிற, ஊக்குவிக்கப்படுகிற இலக்கியம் என்ற சிந்தனையை மறைமுக நிலையில் சீன, தமிழ் எழுத்தாளர்களின் மத்தியில் விதைப்பதைத் தடுக்க இயலாது. அத்துடன் சீன, தமிழ் இலக்கியங்களின்மீது இளைய தலைமுறையினருக்கு நம்பிக்கையும் பிடிப்பும் அக்கறையும் அற்ற ஒரு நிலையை ஏற்படுத்தும் என்பதே உண்மை. "தேவான் பகாசா" மலாய்மொழியில் எழுதும் பிற இன எழுத்தாளர்களை ஊக்குவிப்பது ஒருபுறத்தில் மகிழ்வைத் தந்தாலும், மறுபுறத்தில் இது சீன, தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு மறைமுக நிலையில் ஏறபட்டுள்ள ஒரு சவாலாகப் படுகின்றது.

மலாய் எழுத்தாளர் சங்கமும் (கபேனா) மலாய் இலக்கிய வளர்ச்சிக்குப் பல அரிய திட்டங்களை மேற்கொண்டது குறிப்பிடத்தக்கது. இச்சங்கத்திற்கு அரசின் வற்றாத ஆதரவும் ஊக்குவிப்பும் கிடைத்து வருகின்றது.

இந்நிலையில் அரசின் ஆதரவையும் ஊக்குவிப்பையும் பெற முடியாத சீன, தமிழ் இலக்கியங்களுக்கு அரசு சாரா அமைப்புகளே பெரிதும் உதவியுள்ளன. சீன இலக்கியத்திற்கு மலேசியச் சீன எழுத்தாளர் சங்கமும் தமிழ் இலக்கியத்திற்கு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் தாய்க்கழகங்களாக இருந்து இலக்கிய வளர்ச்சிக்குப் பங்காற்றியுள்ளன. எழுத்தாளர்களுக்குத் தேவையான பட்டறைகள், கருத்தரங்குகள் போன்றவற்றை நடத்துவதில் அவை அதிக ஈடுபாடு காட்டி வருவதோடு எழுத்தாளனையும் எழுத்தையும் ஊக்கப்படுத்தப் பல்வேறு போட்டிகளையும் நடத்துகின்றன. சீன, தமிழ் எழுத்தாளர் சங்கத்தினர் தங்களுக்கிருக்கும் ஆள்பல. பணபல அடிப்படையில் பல்வேறு முயற்சிகளைச் சுயமாக மேற்கொண்டு இலக்கியத்தை வளர்த்து வருகின்றனர்.

## 3.3. இணையாத நேர்க்கோட்டுத்தன்மை

இவ்வாறு, ஒரே நாட்டில் வாழும் மூன்று முக்கிய இனத்தின் இலக்கியங்கள் தேசிய இலக்கியம் என்ற ஒரு கோட்டில் இணைக்கப் படாத மூன்று தனித்தனி நேர்க்கோடுகளாகத் தொடர்ந்து தனித் தனியாகவே வளர்ச்சி கண்டு வருகின்றன. சீன, தமிழ்ப் படைப்புகள் தனித்தனியாக வளர்ந்து சென்றாலும், அவை மலேசியப் பின்னணியில் தான் படைக்கப்படுகின்றன. குறிப்பாக, புதிய பொருளாதாரக் கொள்கைக்குப்பின் மலேசியர் வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள திருப்பங்களும் மாற்றங்களும் குறிப்பிடத்தக்கது. எண்பதுகளுக்குப் பின் ஏற்பட்டுள்ள அபரிமிதமான பொருளாதார வளர்ச்சிகளும் "மெகா" மேம்பாட்டுத் திட்டங்களும் மலேசிய இனங்களின் நோக் கையும் போக்கையும் மாற்றிப் புதுத்தோற்றத்தை ஏற்படுத்தி யுள்ளன. இவை அவ்வக் காலக்கட்டங்களில் எல்லா மொழி இலக்கியங்களிலும் தவறாமல் பதிவு செய்யப்பட்டுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கது. தொண்ணூறுகளிலும் புதிய ஈராயிரத்தாம் ஆண்டுகளிலும் உலகமயமாதல், அனைத்துலக அரசியல் நெருக் கடிகள் ஆகியவற்றோடு நாட்டுநடப்புகளான மேலோங்கி வரும் பொருளியல் சிந்தனைகளும் மலேசிய இனங்களைத் தாக்கவே செய்கின்றன. அவற்றுக்கு மத்தியிலும் மண்ணின் மணத்தோடு கூடிய இலக்கியத்தை மூன்று இன எழுத்தாளர்களும் தொடர்ந்து தனியாகவே வளர்த்து வருகின்றனர்.

மலேசிய இலக்கியங்களான மலாய், சீனம், தமிழ் ஆகியன இணையாத நேர்கோட்டுத் தன்மையில் செல்வது மட்டுமல்லாமல், இவ்விலக்கியப் படைப்புகளில் பிற இனத்தின் வாழ்வியல் கூறுகளோ, அடையாளங்களோ, எதிர்நோக்கும் சிக்கல்களோ, கதைமாந்தர் களோ மிக அரிதாகவே காணப்படுகின்றன. ஏறத்தாழ மூன்று

மொழிப் படைப்பாளர்களும் தத்தம் படைப்புகளில் வலிந்தே ஓரினம் கொண்ட சமுதாயத்தைக் காட்டும் போக்கே மிகப் பரவலாகக் காணப்படுகின்றது. பல்லினம் வாழும் சூழல் கொண்ட மலேசியச் சூழலில் படைப்புகளில் காணும் இந்நிலை படைப்புகளின் நம்பகத் தன்மையை ஓரளவிற்குக் குறைக்கவே செய்கின்றது. தமிழில் மூத்த எழுத்தாளர்களான மா. இராமையா, மறைந்த எம்.ஏ. இளஞ்செல்வன் போன்றோர் பிற இனச்சிக்கல்களைக் காட்டும் முயற்சியில் ஈடுபட்டனர். மா. இராமையாவின் "பறி", எம்.ஏ. இளஞ்செல்வனின் "நொண்டிவாத்து" போன்றவை மலாய்ச் சமூகத்தின் வாழ்வியல் கூறுகளையும் பழக்கவழக்கங்களையும் முதன்நிலையில் வைத்துக் காட்டியுள்ளன. ஆர். சண்முகத்தின் பலகதைகளில் மூன்று இனமக்களே கதைமாந்தர்களாகவும் அவர்களின் வாழ்வியலே கதைப்பொருளாகவும் உள்ளன. ஆனால், இம்முயற்சிகள் யாவும் மிகச் சிறியதே ஆகும்.

## 3.4. பிறமொழி இலக்கியங்களைத் தெரிந்துகொள்ள வாய்ப்பற்ற நிலை

மலேசியர்கள் உள்நாட்டிலேயே இருக்கின்ற பிற இலக்கியங்களைப் பற்றித் தெரிந்துகொள்ள முடியாத போக்கு பலவலாக உள்ள நடைமுறைச் சிக்கலும் காணப்படுகின்றது. குறிப்பாக, இந்தியர்கள் மலாய் இலக்கியத்தின் நோக்கையும் போக்கையும் ஓரளவிற்காவது தெரிந்துகொள்ளுகிற அளவிற்குக்கூட, மலேசிய, சீன இலக்கியத்தைப்பற்றி அறிந்துகொள்ள முடியவில்லை. அதற்கான முயற்சிகளோ நடவடிக்கைகளோ எந்தத் தரப்பாலும் மேற்கொள்ளப் படவில்லை. அரசின் கொள்கைகளும் நடவடிக்கைகளும் நாட்டில் கல்வித்திட்டமும் மலாய் இலக்கியத்தைத் தெரிந்துகொள்ள வாய்ப்பும் வசதியும் ஏற்படுத்தித் தந்துள்ளன. இந்நிலையில் பிற இலக்கியத்தின்மூலம் இனங்களைப் புரிந்துகொள்ளுகிற பரஸ்பரத் தன்மையும் சமூகங்களுக்கிடையிலான இணக்கப்போக்கும் உருவாக அவ்வளவாக வாய்ப்பில்லாமல் போகிறது.

## 4. மலேசியத் தமிழ் இலக்கியம்

இத்தகைய சூழல்களுக்கும் சவால்களுக்கும் மத்தியில்தான் மலேசியத் தமிழ் இலக்கியம் கருக்கொண்டு, உயிர்கொண்டு, உருக்கொண்டு தொடர்ந்து வளர்ந்துவருகின்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் முகிழ்த்த மலேசியத் தமிழ் இலக்கியம், ஒரு நூற்றாண்டைக் கடந்து இரண்டாவது நூற்றாண்டில் அதன் பயணத்தைச் செவ்வனே மேற்கொண்டிருக்கிறது. தொடக்க

காலத்திலிருந்து இன்றுவரையுள்ள அதன் வளர்ச்சிப்பாதையில் எழுச்சிகளும் தளர்ச்சிகளும் காணப்படுகின்றன. அரசின் ஆதரவும் அங்கீகாரமும் இல்லாத நிலையிலும் மலேசியத் தமிழ் இலக்கியம் பல்வேறு சவால்களுக்கு மத்தியில் தொடர்ந்து வளர்ந்துவருகின்றது.

முதலில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கவிதை இலக்கியமும் பின்னர், உரைநடையில் நாவலும் சிறுகதையும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றி வளரத் தொடங்கின. தொடக்கத்தில் சமயத்தைப் பாடிக்கொண்டிருந்த மலேசியத் தமிழ்க்கவிதை பின்னர் முப்பதுகளில் சமுதாயத்தைப் பாடத் தொடங்கிற்று. ஜப்பானியர் ஆட்சியிலும் கவிதை இலக்கியமும் சிறுகதை இலக்கியமும் தொடர்ந்து வளர்ந்தன. முதல் உலகப் போருக்கு முன்னர் புதுவாழ்வு தேடி இந்நாட்டிற்குப் புலம் பெயர்ந்த தமிழக, இலங்கைக் குடியேறிகளே இலக்கியம் படைக்கும் முயற்சிகளில் ஈடுபட்டனர். கவிதை, நாவல், சிறுகதை முதலான வற்றைத் தாங்கள் அறிந்த சூழலான தமிழக, இலங்கைப் பின்னணி யிலேயே படைத்துள்ளனர். இதனால், தொடக்ககால மலேசியத் தமிழ்ப் படைப்புகளில் மலேசிய இந்தியச் சமுதாயமோ அவர் களின் வாழ்வியல் கூறுகளோ மிகக்குறைவாகவே பதிவு செய்யப் பட்டுள்ளன. குறிப்பாக, இந்தியர்கள் பெரும்பான்மையாக வாழ்ந்த தோட்டப்புறங்களோ அங்குள்ள வாழ்க்கை அமைப்போ காட்டப் படவில்லை.

இரண்டாம் உலகப்போருக்குப்பின் அரசியல் விடியல் நடந்து கொண்டிருந்த வேளையில் இலக்கியத்திற்கான விடியலும் நடந்தது. மண்மணம் சுமந்த படைப்புகள் பலவலாக வெளிவரத் தொடங்கின. தமிழ்ச்சுடரின் சிறுகதை வழிகாட்டலும் தமிழ் நேசனின் கதை வகுப்பும் இலக்கிய வட்டக் கூட்டமும் தமிழ்முரசின் எழுத்தாளர் பேரவையும் ரசனை வகுப்பும் இங்கு எழுத்துக்கு உரமாக அமைந்தன. இந்த நாளிதழ்களின் இலக்கியப் பணி, வழிகாட்டல் ஆகியவற்றி னால் இந்நாட்டில் தமிழ் எழுத்தாளர் பரம்பரையும் இலக்கியப் பாரம்பரியமும் நிரந்தரமாக ஏற்பட்டன. தவிர, ஐம்பதுகளில் இங்கேயே பிறந்து வளர்ந்த இளைஞர் அணி ஒன்று இலக்கியம் படைக்கப் புறப்பட்டது. கவிதை, நாவல், சிறுகதை என எல்லாத் துறைகளிலும் இவர்கள் ஈடுபட்டனர்.

அறுபதுகளிலும் எழுபதுகளிலும் நாளிதழ்களும் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் பல்வேறு முயற்சிகளில் இறங்கி இலக் கியத்தை வளர்த்துள்ளன. 1966இல் கோலாலும்பூரில் நடைபெற்ற முதலாவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாடு மொழியுணர்வும் இலக்கிய ஆர்வமும் ஏற்பட வழி வகுத்துத் தந்தது. தமிழ்நேசனின் பவுன் பரிசுத் திட்டத்தில் கவிதையும் சிறுகதையும் புடம்போடப்

பட்டு, தரத்தில் உச்சத்தைத் தொட்டன. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் குறுநாவல் எழுதும் போட்டிகளை நடத்தியுள்ளன. எழுபதுகளின் இறுதியில் மலையகத்தின் தமிழ் இயக்கம் என வருணிக்கப்படுகின்ற வகையில் கவிதையில் ஆவேசப்போக்கும் எழுச்சியும் காணப்படுகின்றன. காவியங்களின் எழுச்சியும் இக்காலப் பகுதியில் பரவலாகக் காணப்படுகின்றது.

எண்பதுகளில் வானம்பாடி வார இதழின் மாதம் ஒரு நாவல் எனும் திட்டம், புதுக்கவிதையின் எழுச்சியும், போட்டிகளும், மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேரவையின் பேரவைக் கதைகள் திட்டம், இதழ்களின் பெருவாரியான தோற்றம், எழுத்தாளர்களின் நூல் வெளியிடும் முயற்சிகள், நூல் வெளியீட்டு விழாக்கள் ஆகியன காணப்பட்டு இலக்கியத்தை வளர்த்துள்ளன. 1987இல் எட்டாவது உலகத் தமிழாராய்ச்சி மாநாடும் எழுத்தை ஊக்குவிக்கும் ஒரு நிகழ்வாக அமைந்தது.

தொண்ணூறுகளிலும் புதிய ஈராயிரத்தாம் ஆண்டுகளிலும் பல்வேறு முயற்சிகளும் இலக்கிய நிகழ்வுகளும் தமிழ் இலக்கியத்தை இம்மண்ணில் தழைக்கச் செய்துள்ளன. எப்போதும் இல்லாத அளவிற்குப் பரிசுகளும் அங்கீகாரமும் தமிழ் எழுத்தாளர்களுக்குக் கொடுக்கப்படுகின்றன. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் வேறு பல அமைப்புகளும் பல இலக்கியப் போட்டிகளையும் கருத்தரங்குகளையும் பயிற்சிப் பட்டறைகளையும் தொடர்ந்து நடத்தி எழுத்தை வளர்த்து வருகின்றனர். அண்மையில் (30.9.2005) மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பெருமுயற்சியில் அஸ்ட்ரோ வானவில் ஒளிபரப்பு நிலையமும் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கமும் இணைந்து நடத்திய நாவல் பரிசளிப்புப் போட்டியின் இறுதி நிகழ்வு மிகவும் சிறப்பாகப் பிரபல ஹோட்டலில் நடந்தேறியது இங்கு குறிப்பிடத்தக்கது. சிறப்புப் பரிசு பெற்ற நாவலுக்கு ரிங்கிட் மலேசியா 10,000 அளிக்கப்பட்டது. மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் இது ஒரு முக்கிய இடத்தைப் பெறு கின்றது. இந்நிகழ்வு பிரபல ஹோட்டலில் நடந்ததானது மலேசியத் தமிழ் இலக்கியம் பெற்றுள்ள சிறப்பையும் அந்தஸ்தையும் உணர்த்துவ தாயுள்ளது. தவிர, மலேசியத் தமிழ் இலக்கியத்திற்கும் எழுத்தாளர் களுக்கும் உரிய கௌரவத்தைத் தருவதற்கு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், தன் அனைத்து இலக்கிய நிகழ்வுகளையும் மதிப்பான, கௌரவமான இடத்தில் நடத்திவருவதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

மலேசியத் தமிழ் இலக்கிய முயற்சியில் தவறாமல் குறிப்பி டப்பட வேண்டியவை திறனாய்வு முயற்சிகளும் படைப்புகளின் தொகுப்பும் ஆகும். அவ்வகையில் மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறை, அது தொடங்கிய காலந்தொட்டே திறனாய்வு

நெறிகளை மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தியும் கற்பித்தும் வந்துள்ளது. உள்ளூர் இலக்கியத்தில் ஆய்வுகளை மேற்கொண்டும் கருத்தரங்குகளை நடத்தியும் வந்துள்ளது. மலேசியத் தமிழ் சிறுகதைக் கருத்தரங்கு (1978), மலேசியத் தமிழ்க் கவிதைக் கருத்தரங்கு (1988), மலேசியத் தமிழ் நாவல் கருத்தரங்கு (1992) போன்றவற்றைத் தனியாக நடத்தியுள்ளது. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தோடும் வாசக இயக்கங்களோடும் அவ்வப்போது கருத்தரங்குகளையும் மேற்கொள்ள ஆய்வு மாணவர்களைத் தூண்டியும் ஊக்குவித்தும் வருகின்றது.

மலேசியத் தமிழ் இலக்கியத்தில் தவறாது குறிப்பிடவேண்டிய ஓர் அம்சம் தொகுப்பு முயற்சிகள் ஆகும். இதில் தலையாய முயற்சியாக முனைவர் முரசு நெடுமாறன் அவர்களின் ஒரு நூற்றாண்டுகால மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியத்தைக் குறிப்பிடலாம். இதனையடுத்து, மூத்த எழுத்தாளர் சை. பீர் முகம்மது அவர்களின் மலேசியத் தமிழ்ச் சிறுகதைத் தொகுப்பு முயற்சி ஆகும். இவரின் பெருமுயற்சியால் தொடக்ககாலத்தி லிருந்து இன்றுவரையிலான மலேசியச் சிறுகதைகளைக் காட்டும் முகமாக "வேரும் வாழ்வும்" எனும் தலைப்பில் மூன்று பாகங்கள் வெளிவந்துள்ளவை குறிப்பிடத்தக்கது. இவர்களின் முயற்சியின் விளைவாக மலேசியத் தமிழ் இலக்கியத்தின் ஆழ, அகலங்கள் அறியப்பட்டுள்ளன. மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றுச் சுவடுகள் பிடித்தும் காத்தும் போற்றியும் வைக்கப்பட்டுள்ளன.

தற்பொழுது மலேசியத் தமிழ் இலக்கியத்தை உலகப் பார்வைக்குக் கொண்டு செல்லும் முயற்சியில் மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமும் இலக்கிய ஆர்வலரும் தூரநோக்குச் சிந்தனை யுடைய எழுத்தாளரும் முயன்று வருகின்றனர். மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் நடப்புத் தலைவர் பெ. இராஜேந்திரன் தலைமையில் மலேசியத் தமிழ் இலக்கியத்தை உலகப் பார்வைக்குக் கொண்டு செல்லும் முயற்சிகள் கட்டம் கட்டமாக நடந்தேறி வருகின்றன. தொடக்கமாக, கடந்தஆண்டின் இறுதியில் (டிசம்பர், 2004) தமிழகத்திற்குச் சங்க உறுப்பினர்களுடன் தலைவர் சென்று அங்கு பல ஊர்களில் மலேசியத் தமிழ் இலக்கியம், எழுத்தா ளர்கள் பற்றிய நூல் வெளியீடுகள் போன்றவற்றை மேற்கொண்டது குறிப்பிடத்தக்கது. அதன் உச்ச நிகழ்வாக பொள்ளாச்சியில் ஒரு கல்லூரியில் மலேசியத் தமிழ் இலக்கியத்துறையைத் தொடக்கி வைத்ததனையும், மலேசியத் தமிழ் நூல்கள் அன்பளிப்புச் செய்துள்ள தனையும் குறிப்பிடலாம். தற்பொழுது அக்கல்லூரியில் சுமார் 800 மாணவர்கள் மலேசியத் தமிழ் இலக்கியத்தை ஒரு பாடமாகப் பயின்று வருவது இங்கு குறிப்பிடத்தக்கது.

தூரநோக்குச் சிந்தனையும் இலக்கிய அக்கறையும் கொண்ட மூத்த எழுத்தாளர் அவர்களின் பெருமுயற்சியால் மலேசியத் தமிழ்

இலக்கியப் படைப்புகள் இணையத்தளத்தில் உலாவரத் தொடங்கி விட்டது. இஃது அறிவியல் வளர்ச்சிக்கேற்ப மலேசியத் தமிழ் இலக்கியம் அதனையும் விட்டுவிடாமலும் பின்தங்கி விடாமலும் பயன்படுத்திக் கொள்ள முயன்று வருவது குறிப்பிடத்தக்கது. பல எழுத்தாளர்களும், குறிப்பாக, இளைய எழுத்தாளர் இன்று இணையத் தளத்தை நன்கு பயன்படுத்தி, எழுத்துத்துறையில் முன்னேறி வருவது கண்கூடு. இவர்களின் இம்முயற்சிக்குச் சகோதரி சுபாஷினி அவர்களும் (காலஞ்சென்ற எழுத்தாளர் ஜனகாசுந்தரத்தின் அருந் தவப் புதல்வி) இன்று ஜெர்மனியில் வாழ்ந்தாலும் மலேசியத் தமிழ் இலக்கியப் படைப்புகள் இணையத்தளத்தில் உலாவருவதற்கு முக்கியப் பங்காற்றி வருகின்றார். மூத்த எழுத்தாளரும் இலக்கிய ஆர்வலருமான சை. பீர்முகம்மது அவர்களின் முயற்சியால் மலேசியத் தமிழ் இலக்கியம் கடல்கடந்த நாடுகளான இலங்கை, தமிழகம் முதலான நாடுகளிலும் பரவியுள்ளது. இவரின் பெரு முயற்சியால் புதியபார்வை இதழ் "மலேசியச் சிறப்பிதழ்" (பிப்ரவரி, 2000) ஒன்றை வெளியிட்டது. தற்பொழுது அவரின் முயற்சியால் காலச்சுவடு இதழ் "மலேசியச் சிறப்பிதழ்" வெளியிட உள்ளதும் இங்கு குறிப்பிடத்தக்கது. மருத்துவ டாக்டரான சண்முக சிவா அவர்களின் முயற்சியால் மலேசிய வாசகர்களுக்கும் எழுத்தாளர் களுக்கும் தரமான எழுத்துகளும் திறனாய்வுப் போக்குகளும் அறிமுகம் பெற்று வருவதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

எந்த ஓர் இலக்கியத்திற்கும் அது வளர்ந்த வரலாறு மிக முக்கியம். உள்நாட்டில் ஆய்வாளர்களாலும் எழுத்தாளர்களாலும் இலக்கிய ஆர்வாளர்களாலும் மலேசியத் தமிழ் இலக்கியத்தில் பல பகுதிகள் ஆராயப்பட்டும் எழுதப்பட்டும் உள்ளன. எனினும், சென்னை தரமணியில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தாரின் முயற்சியால் வெளிவர இருக்கும் உலகத் தமிழ் இலக்கிய வரலாறு எனும் நூலில் மலேசியத் தமிழ் இலக்கியம் குறித்த செய்திகள் வெளிவர இருக்கின்றன. இதனை மலாயாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வியல் துறையினர் மேற்கொண்டுள்ளனர்.

## 5. மலேசியத் தமிழ் இலக்கியத்தின் நிலை

5.1 தொடக்ககாலத்திலிருந்தே அரசின் ஆதரவற்ற நிலையிலும் பிறமொழிகளின் இலக்கியத்திற்கு ஈடாக மலேசியத் தமிழ் இலக்கியம் வளர்ந்து வருகிறது.

5.2 எனினும், மலேசியாவில் தமிழ் இலக்கியப் பாரம்பரியமும் எழுத்தாளர் பரம்பரை ஒன்றும் இருப்பதனை அரசு அறிந்துள்ளது.

5.3 பத்திரிகைகளும் இயக்கங்களும் தமிழுணர்வாளர்களும் தொடர்ந்து மலேசியத் தமிழ் இலக்கியத்தை வளர்த்து வருகின்றனர்.

5.4 மலேசியத் தமிழ் எழுத்தாளரின் பங்கு இலக்கிய வளர்ச்சி யிலும் எழுத்தாளரை ஊக்குவிப்பதிலும் உள்நாட்டிலும் அயலகத்திலும் தொடர்ந்து வருகின்றது.

5.5 பிறமொழி இலக்கியங்களைப் போலவே மலேசியச் சூழலின் இனம் சார்ந்த பாடுபொருளும் கருப் பொருளும் படைப்புகளில் இடம் பெற்றுள்ளன.

5.6 சமகாலப் பிரச்சினைகளை மலேசியத் தமிழ் இலக்கியம் தொடக்கத்திலிருந்து வெளிப்படுத்திக் காட்டியே வந்துள்ளது. இஃது விடுதலைக்குமுன் குறைந்தும் விடுதலைக்குப்பின் மலிந்தும் காணப்படுகின்றது. அவ்வகையில் விடுதலைக்குமுன் பொருளாதார வீழ்ச்சியும் மந்தப்போக்கும் இடம்பெற்றுள்ளன. விடுதலைக்குப் பின் ஜப்பானியர் ஆட்சி, தோட்டத் துண்டாடல், அடையாளக்கார்டுச் சிக்கல், வன்முறைப் போக்கு போன்றவை இடம்பெற்று வருகின்றன.

## 6. பரிந்துரை

6.1 மலாய் இலக்கியத்திற்குக் கிடைத்துள்ளது போன்ற தேசிய இலக்கிய அங்கீகாரம் மலேசியத் தமிழ் இலக் கியத்திற்கு வேண்டும்.

6.2 மொழி பாராமல் ஒவ்வொருவரும் தன் மொழி இலக்கியத்தோடு மலேசியாவின் மொழி இலக்கியங் களை அறிந்துகொள்ள வாய்ப்பு வசதிகளை ஏற்படுத்தித் தருதல் வேண்டும்.

6.3 எல்லா மொழி இலக்கியத்தையும் உள்ளிட்ட விழாக்கள், கருத்தரங்குகள், பயிற்சிப் பட்டறைகளை ஏற்பாடு செய்தல் வேண்டும்.

6.4 ஒரு மொழியின் சிறந்த படைப்புகள் மலேசியாவின் எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்கப்படுதல் வேண்டும்.

6.5 தனித்தன்மை வாய்ந்த மலேசிய அனைத்து மொழி இலக்கியங்களை மொழி, இனம் பாராது உலகப் பார் வைக்கும் அரங்குக்கும் கொண்டு செல்லவேண்டும்.

6.6 இவற்றை மேற்கொண்டு மலேசிய அனைத்து மொழி இலக்கியங்களுக்கு அரசு ஒரு நிறுவனத்தை ஏற்படுத்தித் தருதல் வேண்டும்.

# மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் இயக்கங்களின் பங்களிப்பு

## (முனைவர் முரசு. நெடுமாறன்)

மலேசியாவின் தமிழிலக்கிய வளர்ச்சியில் இயக்கங்களின் பங்களிப்பு என்ற தலைப்புக்கொண்ட இவ்வாய்வு, படைப்பிலக்கிய வளர்ச்சியை முதன்மை நோக்கமாகக் கொண்டு இயங்கிய, இயங்கும் இயக்கங்களை முதல் நிலையில் வைத்தும், வேறு நோக்கங்களைக் கொண்டிருந்தாலும் படைப்பிலக்கிய வளர்ச்சியையும் ஒரு கூறாகக் கொண்டிருந்த இயக்கங்களை இரண்டாம் நிலையில் வைத்தும், இலக்கிய வளர்ச்சியை நோக்கமாகக் கொள்ளாவிட்டாலும் அதன் வளர்ச்சிக்கு ஆதரவு தந்துவரும் இயக்கங்களை மூன்றாம் நிலையில் வைத்தும் நிகழ்த்தப் பெறுகிறது.

இலக்கிய வளர்ச்சி என்னும்போது அது கவிதை, கட்டுரை, கதை, நாடகம், திறனாய்வு என்பதைப் போன்ற அனைத்து வடிவங்களையும் உள்ளடக்கியதாகும்.

மலேசிய இலக்கிய முயற்சிகளுக்குத் தொடக்கத்தில் கை கொடுத்தவை இதழ்களே. இரண்டாம் போர்க்காலம் வரையில் இதனில் எந்த மாற்றமும் நிகழவில்லை. காலங்கடந்தே வானொலி, தொலைக்காட்சி, கணினி போன்றவை விரிவு கண்டன.

இங்கு இலக்கிய வளர்ச்சி என்பது தொடக்கக்காலத்தில் தனி மாந்த முயற்சியாகவே இருந்து வந்தது. எழுத்தார்வம் கொண்டே படைப்புகளை இதழ்கள் வெளியிட்டனவேயன்றிப் பணம் கொடுத்து ஊக்கப்படுத்தவில்லை. எழுத்தாளர் தம் படைப்புகளை வெளியிடப் பதிப்பகங்களோ ஆர்வமூட்ட அமைப்புகளோ இல்லை. நீர் வளமற்ற நிலப்பகுதியில், அரிசியாக்க வைத்திருந்த நெல்லில்

கொஞ்சம் அள்ளித் தூவி விளைத்த பயிராகவே மலேசியத் தமிழிலக்கியம் விளங்கிற்று.

## கவிதாமண்டலம்

இந்தச் சூழலில் இலக்கிய வளர்ச்சியையும் படைப்பாளர்க்கு ஊக்க மூட்டுவதனையும் நோக்கங்களாய்க் கொண்ட ஓரியக்கம் அமைந்ததென்றால், அஃது 1943ஆம் ஆண்டு பத்துப் பாகாட்டில் அமைந்த கவிதாமண்டலமாகும். கிடைத்துள்ள குறிப்புகளைக் கொண்டு நோக்கும்போது இதுவே இந்நாட்டில் இலக்கிய வளர்ச்சியை நோக்கமாய்க் கொண்டமைந்த முதல் இயக்கமாகும். இயக்கத்தின் பெயர் கவிதாமண்டலமெனினும் கதை, கட்டுரை, நாடகம் ஆகிய வடிவங்களுக்கும் இடம் தந்தது, அவற்றின் வளர்ச்சிக்கு ஊக்கமூட்டியது; பயிற்சிகளும் அளித்தது. கவிதா மண்டலம் என்ற பெயரில் ஒரு கவிதை மலரையும் வெளியிட்டது. பலரின் கவிதைகள் அடங்கிய முதல் தொகுப்பாய் விளங்கியது.

## செந்தமிழ்க் கலாநிலையம்

கவிதாமண்டலத்தையடுத்து இங்கு ஒரு பேரியக்கம் உருவாயிற்று. தமிழில் பெரும் புலமையும் பல கலைகளில் தேர்ச்சியும் கொண்ட சுவாமி இராமதாசர், செந்தமிழ்க் கலாநிலையத்தைப் பினாங்கில் தோற்றுவித்தார். 1939ஆம் ஆண்டிலிருந்தே செந்தமிழ்ப் பாடசாலையைத் தொடங்கி அங்குத் தமிழ்ப்பாடம் நடத்தி வந்தார் (செந்தமிழ்க் கலாநிலையம் சுவாமி இராமதாசர் மணி விழா மலர், 1977:167). 1943இல் அதனை இளந்தமிழ்ப் பாடசாலை, என்றும் செந்தமிழ்க் கலாநிலையமென்றும் இரண்டாகப் பிரித்தார். 1945இல் செந்தமிழ்க் கலாநிலையத்தின் நளவெண்பா, இனியவை நாற்பது, திணைமொழி ஐம்பது, நன்னூல் என்பன போன்ற இலக்கிய, இலக்கணப் பாடங்களைக் கற்பிக்கத் தொடங்கினார். (முதுதமிழ்ப் பெரும்புலவர் சுவாமி இராமதாசர் அவர்களுக்குப் பொன்னாடை போர்த்தும் விழா சிறப்பு மலர், 1974: 34,35) நீண்ட நெடுங்காலம் இடைவிடாமல் செயல்பட்ட அச் செந்தமிழ்க்கலா நிலையம், ஒரு சிறந்த புலவர் கல்லூரி போலவே செயல்பட்டது. முறையாகப் பாடம் கற்பித்தும் பட்டமளித்தும் பலரைச் செந்தமிழ் புலவர்மணி ஆக்கியது. சுவாமி இராமதாசரிடம் கற்றோர் புலமை மிக்கவர்களாயினர்; பாவலர்களாகவும், நல்ல எழுத்தாளர் களாகவும், பேச்சாளர்களாகவும் தகுதி பெற்றனர். மலேசியாவில் தமிழ் எழுத்துத்துறை வளர்ச்சிக்கு — குறிப்பாகக் கவிதைத்துறை வளர்ச்சிக்குச் செந்தமிழ் கலாநிலையம் மிகப்பெரும் பங்களிப்புச்

செய்துள்ளது. மரபுவழிநின்று புலமை மிக்கவர்களை உருவாக்கியதில், செந்தமிழ்க் கலாநிலையத்திற்கு இணையாக வேறு எந்த இயக்கமும் செயல்பட்டதில் என்பது குறிப்பிடத்தக்கதாகும். வீ.கே. சுப்ரமணியம், இரா. பாண்டியன், நாச்சி குளத்தார் போன்ற மிகப் பல பாவலர்கள் அந்நிலையத்தில் உருவாயினர்.

## தமிழ்ப்பண்ணை

இந்நாட்டில் தமிழ் இலக்கிய உணர்வைத் தூண்டி, வளர்ச்சிக்குத் துணைபுரிந்த இயக்கங்களுள் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய மற்றொன்று தமிழ்ப்பண்ணை. அது மலாக்காவில் 1950இல் அமைந்தது. 1956 வரை செயல்பட்டது. இவ்வியக்கம் உறுப்பினர்கள் தமிழ்ப்புலமைப் பெற வழிவகுத்தது. மதுரைத் தமிழ்ச்சங்க வகுப்பினை இங்கு நடத்தித் தேர்வெழுத வைத்துப் புலமை பெறச் செய்தது. சிறுகதைத் துறையில் சிறந்து விளங்கிய எழுத்தாளர் சி. வடிவேலு அவ்வகுப்பில் பயின்றவர்களுள் ஒருவர். தகுதிமிக்க அவ்வியக்கத்தை நடத்தியவர்களுள் உ.அரு. அருணாசலம் செட்டியார், எஸ்.ஓ.கே உபைதுல்லா, கா. அண்ணாமலை போன்றோர் குறிப்பிடத்தக்கவராவர்.

## மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்

இந்நாட்டில் தமிழ் இலக்கிய உணர்வைத் தூண்டி வளர்ச்சிக்குத் துணைபுரிந்த இயக்கங்களுள் பெரிதும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய அமைப்பு மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கமாகும். 1962இல் பதிவு பெற்ற இவ்வமைப்பு, பல அருஞ்செயல்களைப் புரிந்துள்ளது. அஃது அன்றுமுதல் இன்றுவரை இடைவிடாது தக்கன செய்துவருகிறது. 1964இல் அது நடத்திய ஒண்பான் சுவைக் கவியரங்கத்தைத் தொடர்ந்து பல ஊர்களிலும் வானொலி, தொலைக்காட்சிகளிலும் கவியரங்குகள் நடத்திக் கவிதைத்துறைக்கு ஊக்கமளித்ததை சிறப்பித்துக் கூறவேண்டும். அக்கவிதைகளை அது “அரங்கேறிய கவிதைகள்” என்ற தலைப்பில் நூலாகவும் வெளியிட்டது. 1977இல் இவ்வியக்கம் நடத்திய சிறுகதைக் கருத்தரங்குகளும் எழுத்தாளர்களுக்குப் பேரூக்கம் நல்கின. அச்செயல் தொடர்ந்து மாதந்தோறும் நடந்து வருவதும் சிறுகதை எழுத்தாளர்களுக்குப் பயிற்சியளிக்க அவ்வப்போது பயிலரங்குகள் நடத்துவதும் பாராட்டத்தக்கப் பயனுடைய நடவடிக்கைகள் ஆகும்.

இலக்கியத்தின் எல்லா வடிவங்களின் வளர்ச்சியிலும் கருத்துச் செலுத்தும் சங்கம், புதின (நாவல்) வளர்ச்சியிலும் கருத்துச் செலுத்தி வருவதைக் குறிப்பிடவேண்டும். இவ்வாண்டில் தேசியத்

தோட்டத் தொழிலாளர் சங்கத்துடனும், அஸ்ட்ரோ வானவில் தொலைக்காட்சி நிறுவனத்துடனும் இணைந்து அது நடத்திய புதினப் போட்டி மிகப் பெரும் விளம்பரத்தோடு எல்லாரையும் ஈர்க்கும் வண்ணம் நடந்தது. முதல் பரிசுக்குத் தேர்ந்தெடுக்கப் பெற்ற புதினத்திற்கு 10,000 வெள்ளிப் பரிசளிக்கப் பெற்றது.

ம.த.எ.ச. கடந்த சில ஆண்டுகளாகப் புதிய இலக்கிய வடிவ மான புதுக்கவிதை வளர்ச்சிக்கு மிகப் பெரும் முயற்சிகளை மேற் கொண்டு வருகிறது. அடிக்கடி கருத்தரங்குகளும், பயிலரங்குகளும் நடத்தி வருகிறது. தமிழகத்தின் இத்துறையில் மிகச் சிறந்து விளங்கும் அப்துல் ரகுமான், மேத்தா, ஈரோடு தமிழன்பன், அறிவுமதி, வைரமுத்து போன்றவர்களை வரவழைத்து நிகழ்ச்சிகள் நடத்தி உள்ளூர் ஆர்வலர்களுக்கு வழிகாட்டி வருகிறது.

மரபு சார்ந்து எழுதும் பாவலர் வளர்ச்சிக்கும் சங்கம் தகுந்த நடவடிக்கை மேற்கொள்ள வேண்டுமென்று இலக்கிய நெஞ்சர் எதிர்பார்க்கின்றனர். அம்முயற்சியிலும் சங்கம் கருத்துச் செலுத்தி வருகிறது.

## எழுத்தாளர்களுக்குத் தங்கப்பதக்கம்

ம.த.எ.ச. 1980களிலிருந்து எழுத்துத்துறையின் பல்வகைப் படைப்பாளருக்கும் தங்கப் பதக்கங்கள் வழங்கி ஊக்குவித்து வருகிறது. மலேசிய எழுத்துத்துறையின் முன்னோடிகள் பெயர் களால் அப்பதக்கங்கள் வழங்கப்பெற்று வருகின்றன. (தமிழவேள்) கோ. சாரங்கபாணி, முருகு சுப்பிரமணியன், சி.வீ. குப்புசாமி, தனிநாயக அடிகள், சா. ஆ. அன்பானந்தன் ஆகியோர் பெயர் களால் அப்பதக்கங்கள் வழங்கப் பெற்று வருகின்றன.

## டான் ஸ்ரீ ஆதிநாகப்பன் இலக்கியப்பரிசு

மேலே கண்டவாறு வழங்கப்பெறும் தங்கப்பதக்கப் .பரிசு களுடன், டான்ஸ்ரீ ஆதிநாகப்பன் இலக்கியப்பரிசுகளும் ஈராண்டிற் கொருமுறை ம.த.எ.சவால் வழங்கப்பெற்று வருகின்றன. முன்னாள் நாடாளுமன்ற உறுப்பினர் டத்தோ வி. கோவிந்தராஜ் சிலாங்கூர் மாநில ம.இ.கா தலைவராய் இருந்தபோது ஏற்படுத்திய இப்பரிசுத் திட்டத்தை, ம.த.எ.ச வழி வழங்கச் செய்தார். இதற்குத் தொடக் கத்தில் ம.இ.கா தேசியத் தலைவரும், பொதுப்பணி அமைச்சரு மான டத்தோ ஸ்ரீ சா. சாமிவேலு பொருட்கொடை வழங்கினார். பின்னர் ஆதிநாகப்பன் மகன் ஈஸ்வர் நாகப்பன் கொடையளித்து வருகிறார்.

## டான்ஸ்ரீ வெ. மாணிக்க வாசகம் புத்தகப் பரிசு

சங்கத்தின் மிகப் பெரிய மற்றொரு திட்டமும் செயல்பட்டு வருகிறது. 1998ஆம் ஆண்டு முதல் ஆண்டுதோறும் சிறந்தநூல் எனத் தேர்ந்தெடுக்கப்படும் ஒன்றுக்குப் பரிசு வழங்குவதே இத்திட்டமாகும். தொடக்கத்தில் 5,000.00 வெள்ளியாக இருந்த இத்தொகை இவ்வாண்டு 7,000.00 வெள்ளியாக உயர்வுப் பெற்றுள்ளது. சில ஆண்டுகளில் இரண்டாம் தகுதி பெறும் நூலுக்கு பரிசுத் தொகை வழங்கப் பெறுகிறது. நூல் வெளியீட்டுத்துறைக்கு — தகுதியான நூல்கள் வெளிவருவதற்கு இஃது ஓர் உந்துதலாகும். இத்திட்டத் திற்கு ஆண்டுதோறும் டான் ஸ்ரீ மாணிக்கவாசகம் அறநிலையத்தின் வழி கொடையளித்து வருபவர் டான் ஸ்ரீ அவர்களின் தம்பி டத்தோ வி.எல். காந்தன்.

## சங்கத்தின் வேறு நடவடிக்கைகள்

எழுத்துத் துறை வளர்ச்சி, எழுத்தாளர் மேம்பாடு ஆகிய வற்றில் கருத்துச் செலுத்திவரும் ம.த.எ.ச. அயலகங்களில் மலேசியத் தமிழ் இலக்கியப் பரவலுக்கும் சில நடவடிக்கைகளை மேற் கொண்டு வருகிறது. இதற்கு 2004இல் சங்கம் தமிழகத்திற்கு மேற் கொண்ட சுற்றுலா ஒரு முன்னோட்ட முயற்சியாகும். சென்னையில் கவிஞர் வைரமுத்து தலைமையில் இயங்கும் வெற்றித் தமிழ்ப் பேரவையின் ஆதரவுடன் மலேசியத் தமிழிலக்கிய அறிமுகக் கருத் தரங்கம் நடந்தது. அதனில் மலேசியத் தமிழ் எழுத்து வடிவங்கள் அனைத்தும் அறிமுகப்படுத்தப் பெற்றன. கட்டுரைகள் அடங்கிய நூலும் வெளியிடப்பெற்றது. மலேசிய எழுத்தாளர் குழு தமிழகத்தின் பல பாகங்களுக்கும் சென்று அங்குள்ளவர்களுடன் கருத்துப் பரி மாற்றம் செய்துகொண்டது, புதுவையிலும் பெங்களூரிலும்கூட கருத்துப் பரிமாற்றக் கூட்டங்கள் நடந்தன. இஃது ஒரு தொடக்க முயற்சியாக அமைந்தது.

மலேசிய இலக்கியங்களைத் தமிழகத்திலும் இலங்கை முதலான நாடுகளிலும் அறிமுகப்படுத்தத் தமிழ் இலக்கியக் கழகம் மேற் கொண்ட 3 நடவடிக்கைகளும் இங்கு நினைவு கூரத் தக்கன. அது 1977இல் மாணவர் மன்றத்தின் ஆதரவோடு சென்னையில் தமிழிலக்கியக் கருத்தரங்கை நடத்தியது. கருத்தரங்கில் அனைத்து வடிவங்கள் பற்றியும் அறிமுகம் நிகழ்ந்தது. மலேசிய நூல்களைக் கொண்ட கண்காட்சியொன்றும் நடந்தது.

மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் தக்கன செய்த ம.த.எ.சவின் நறுஞ் செயல்களுக்கு முன்னோடிகளாய் இருந்தோர்

முருகு சுப்பிரமணியன், சி.வீ. குப்புசாமி, சி. வடிவேலு, எம். துரை ராஜ் போன்றோர் ஆவர். சங்கத்திற்கு ஆதிகுமணன் தலைமை யேற்றிருந்த காலத்தில், சங்கத்திற்குச் சொந்த கட்டடம் (கடனில் லாமல்) வாங்கப்பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது. இப்போது தலைமையேற்றுச் சங்கத்தை வழிநடத்துபவர் பெ. இராஜேந்திரன்.

## மாநில எழுத்தாளர் சங்கங்கள்

தமிழ் இலக்கிய வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டு பல மாநிலங்களில் தமிழ் எழுத்தாளர் சங்கங்கள் அமைந்தன. 1960இல் வடமலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தோன்றியது. பின்னர் அது பினாங்கு எழுத்தாளர் சங்கமெனப் பெயர் மாற்றம் பெற்றது (1988). தொடர்ந்து கெடா மாநில எழுத்தாளர் வாசகர் இயக்கம் (1971), பேரா மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம் (1975), சிலாங்கூர் கூட்டரசு வளாகத் தமிழ் எழுத்தாளர் வாசகர் இயக்கம் (1977), இவ்வியக்கம் பின்னர் வாசகர் நீங்க எழுத்தாளர் இயக்கமானது.) நெகிரி செம்பிலான் தமிழ் எழுத்தாளர் சங்கம் (1979), ஜோகூர் மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம் (1979), பகாங் மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கம் (1985) ஆகியன தோன்றின (மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம், 1997 : 179) இவ்வியக்கங்கள் அந்த அந்த மாநிலங்களில் அவ்வப்போது இலக்கிய வளர்ச்சிக்குரிய நடவடிக்கைகளில் ஈடுபட்டு வருகின்றன.

## மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கங்களின் பேரவை

மாநிலங்கள் அளவில் அமைந்து செயல்பட்டுக் கொண்டிருந்த தமிழ் எழுத்தாளர் சங்கங்கள், ஒன்றிணைந்த பேரவையொன்றும் உருவானது. (1981) (மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் அதனில் சேரவில்லை.) 1982இல் பேரா மாநிலத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் பொறுப்பில் முதல் தேசிய மாநாடு கூடியது. தேசியப் பேரவை 1984இல் பதிவு பெற்றது, மேலும் இரண்டு மாநாடுகள் கோலாலம்பூரிலும் பினாங்கிலும் நடந்தன. இம்மாநாட்டில் எழுத்தாளர் சிலருக்குப் பணமுடிப்பு வழங்கப் பெற்றது. தற்போது பேரவை செயல்படுவதாகத் தெரியவில்லை.

## வாசகர் இயக்கங்கள்

எழுத்தாளர் சங்கங்களின் செயல்பாடுகளுக்கு வாசகர் இயக்கங்களின் துணை பெரிதும் தேவையாகும். எழுத்துகளைப் படிப்போர்தாமே இலக்கியத்தின் பயனை நுகர்வோர்? அவர்

களால் தாமே இலக்கியம் பரவுகிறது? எனவே, வாசகர் இயக்கங்கள் இலக்கிய வளர்ச்சிக்கும், பரவலுக்கும் இன்றியமையாதவையாய் விளங்குகின்றன. இந்நாட்டில் பல வாசகர் இயக்கங்கள் உள்ளன. அவை வட்டாரக் கருத்தரங்குகள் நடத்துகின்றன; நூல் வெளியீடு களுக்கு ஏற்பாடு செய்கின்றன. சொற்பொழிவு நிகழ்வுகள் நடத்து கின்றன; தேசிய அளவிலும் கூடுகின்றன. அவற்றின் செயல் பாடுகள் இலக்கிய உணர்வு மங்காமல் விளங்கத் துணை புரிந்து வருகின்றன.

## தமிழ் இலக்கியக் கழகம்

தமிழிலக்கிய மேம்பாட்டையும், தமிழ்க் கல்வி வளர்ச்சி யையும் முதன்மை நோக்கமாய்க் கொண்டு தொடங்கப் பெற்ற இயக்கம் தமிழ் இலக்கியக் கழகம். இர.நா. வீரப்பன், ந. தியாக ராசன் போன்றோர் முயற்சியால் தோன்றிய இவ்வியக்கம், சீரிய பல பணிகளைச் செய்த இயக்கமாகும். இது 1970இல் அமைக்கப் பெற்றது.

இவ்வியக்கம், உள்நாட்டு நூல்கள், படைப்பாளர்கள் பற்றிய கருத்தரங்கங்கள் நடத்துவதிலும், திறனாய்வுத் துறை வளர்ச்சி யிலும் பெருங்கருத்து செலுத்திற்று. 1970இல் சி.வீ. குப்புசாமி பற்றிய கருத்தரங்கை நடத்திற்று. 1973இல் மலாயாவில் தமிழ்க் கவிதைகள் என்ற நூல் பற்றித் தைப்பிங்கில் ஒரு கருத்தரங்கை கூட்டிற்று. ஐ. உலகநாதன், சி. வடிவேலு, மா.செ. மாயதேவன், மா. இராமையா ஆகியோர் படைப்பிலக்கியங்கள் பற்றித் திறனாய்வு களை நிகழ்த்திற்று. தேசிய மொழி வளர்ப்பு நிறுவனத்துடன் (Dewan Bahasa dan Pustaka) இணைந்து நான்கு மொழி இலக்கியப் பரிமாற்றம் ஏன்? எப்படி? என்று ஆய்வு நடத்தியது (1979) பயனுடைய தொலைநோக்குடைய நடவடிக்கையாகும். (5ஆம் தமிழ்க் கல்வி மலர், 1995 : 15)

இங்ஙனம் கருத்தரங்குகள் கூட்டியும், மலேசிய எழுத்தாளர் களின் எழுத்துகள் தமிழக இலங்கை இதழ்களில் வெளிவரவும், மலேசியப் பிரமுகர்கள் பற்றிய நூல்கள் தமிழகத்தில் வெளி வரவும் இது பின் பலமாக இருந்து செயல்பட்டுள்ளது. இங்கு பல நூல்களும் வெளியிட்டுள்ளது. இது வெளியிட்ட பல சிறப்பு மலர்கள் பயனுடைய பல சிறப்புகள் கொண்டவையாய் விளங்கு கின்றன. தஞ்சாவூர்த் தமிழ் பல்கலைக்கழக நூலகத்திற்கும் மலேசிய நூல்களைத் திரட்டி வழங்கியுள்ளது.

## தமிழ்க்கல்வி வளர்ச்சியில் நாட்டம்

இலக்கியம் ஓர் ஓவியம் என்றால், மொழி அதன்பின்புலச் சுவராகும். மொழி வளர்ச்சி இன்றேல் இலக்கிய வளர்ச்சி இல்லை. அதனால் ஓர் இனத்திற்கு, அதன் அடையாளமானதாய் மொழிக் கல்வி உயிர் போன்றதாகும். அக்கல்விக்கு ஊறு நேரும்போது தட்டிக் கேட்கவில்லையெனில் அழிந்துவிடும்; இலக்கியம் என்பது கேள்விக்குறியாகிவிடும். இதனை உணர்ந்த தமிழ் இலக்கியக் கழகம், தாய்மொழிக் கல்விக்குச் சொந்த இனத்தவரே ஊறு தேடிக் கொள்ளும் நிலை ஏற்பட்டபொழுது வெகுண்டெழுந்தது; தாய் மொழிக் கல்வியின் இன்றியமையாமையை வலியுறுத்தி விழிப் புணர்வை ஏற்படுத்த 1975ஆம் ஆண்டு முதலாம் தமிழ்க் கல்வி வளர்ச்சி மாநாட்டைக் கூட்டிற்று; இந்த ஆண்டுவரை ஆறு கல்வி வளர்ச்சி மாநாடுகளை நடத்தியுள்ளது. 'தமிழ் எங்கள் உயிர் — தமிழ்ப்பள்ளி எங்கள் உடல்' என்னும் உணர்வுடன் செயல்படும் இயக்கம் இது.

எதனையும் வலிந்து கூறும் போக்குக் கொண்ட இவ்வியக்கம், தமிழ்க்கல்வி குறித்தும், தமிழ் இலக்கிய மேம்பாடு குறித்தும் அழுத்தமான அறிக்கைகளை வெளியிட்டுள்ளது. புத்திலக்கிய வளர்ச்சியைப் பெருநோக்கமாகக் கொண்ட இவ்வியக்கம், பழந் தமிழ் இலக்கியப் பரவலிலும் நாட்டம் கொண்டதாகும். இதற்குச் சான்று, அது 1979இல் நடத்திய சிலப்பதிகார மாநாடாகும்.

## தமிழ்மணி பட்டயத் தேர்வு

சென்னை மாணவர் மன்றத்தால் நடத்தப்பெறும் தமிழ்மணி பட்டயத் தேர்வை இங்கு நடத்திப் பலர் பட்டயம் பெறத் த.இ. கழகம் ஏற்பாடு செய்தது. அத்தேர்வு இப்பொழுதும் இங்கு நடத்தப் பெறுகிறது. தொடக்கத்தில் ந. தியாகராசனும், பின்னர் இர.ந. வீரப்பனும் தலைவர்களாய் இருந்து வழிநடத்திய இவ்வியக் கத்தின் இப்போதைய தலைவர் மணிவெள்ளையன்.

## கவிதைக் களம்

பதிவு பெற்றுத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஈடுபடும் இயக்கங்களொடு பதிவு பெறா அமைப்புகள் சில இடையிடையே கூடி இலக்கிய மேம்பாட்டுக்கான நடவடிக்கைகளில் ஈடுபட்டுப் பயன் விளைவித்து வருவதனையும் இங்குக் குறிப்பிடுவது பொருத்த மாகும்; தேவையும் ஆகும். நிதி திரட்டுதல், ஆண்டுக்கூட்டம் கூட்டுதல், ஆண்டறிக்கை, கணக்கறிக்கைகளை வழங்குதல் போன்ற

பணிச்சுமை இல்லாமல் ஒரே நோக்கத்திற்காக மாதம் ஒருமுறை கூடி இலக்கிய மேம்பாட்டிற்குத் தூண்டுதலாய் விளங்குவதும் ஒரு பயன்மிக்க செயலே யாகும்.

மேலே குறிப்பிட்ட முறையில் 1977இல் அமைந்ததே கவிதைக் களம். சா. ஆ. அன்பானந்தன், பாதாசன், காரைக்கிழார், மைதீ. சுல்தான் போன்ற சிலரின் முயற்சியால் இக்களம் செயல்படத் தொடங்கிற்று. இன்றும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

இக்களம் முழுக்க முழுக்கக் கவிதை பற்றிய நடவடிக்கை களையே கொண்டதாகும். படித்தல், சுவைத்தல், படைத்தல், திடீர்க் கவிதைப் போட்டி என்பன போன்றவைதான் நடவடிக்கைகள் ஆகும். இந்த நடவடிக்கைகள் சுவைக்கும் திறனையும், படைக்கும் ஆர்வத்தையும், தேடல் உணர்வையும், திறனையும் மனப்பான்மை யையும் ஏற்படுத்தி வளர்க்கும் தன்மையானவாகும்.

கவிதைக்கள அமைப்பிலேயே பின்னர்த் தோன்றிய அமைப்புகள் கவிதைப் பண்ணையும் பொன் பாவலர் மன்றமும் ஆகும். அதே நடவடிக்கைகளைப் பின்பற்றி பல அமைப்புகள் உருவாயின. இவை மாதம் ஒருமுறைகூடி, இலக்கியம் உணர்த்த துணைபுரிபவை.

டி.வி.ஆர்.பி. இராகவன் முயற்சியால் உருவானது மலேசியத் தமிழ்ப் பாவலர் மன்றம் (1970). இது கவிஞர்க்குரிய அமைப்பு எனினும். அத்துறை சாராத ஆர்வலரும் உறுப்பியம் பெற்றுள்ளனர். இம்மன்றம், இலக்கண மரபுடன் கூடிய கவிதை வளர்ச்சியையே முதன்மை நோக்கமாகக் கொண்டது. “புதுக்கவிதை என்று வழங்கப் படுவது கவிதையன்று, அதனை உரைவீச்சு என்றோ, பண்ணுரை என்றோதான் குறிப்பிட வேண்டு”மென்று போராடி வருகிறது. இது சொந்தமான கட்டடத்தில் இயங்கிவருகிறது என்பது சிறப்பிற் குரியது. இவ்வியக்கம் தன் உறுப்பினர்களில் ஆண்டுதோறும் சிலரைத் தேர்ந்தெடுத்துத் தங்கப்பதக்கம் வழங்கிவருகிறது. இதனை முன்னின்றமைத்த டி.வி. இராகவன் பிள்ளை புகழுடம்பெய்திய பின் சீ. இராதா கிருஷ்ணன் தலைமையேற்று நடத்தி வருகிறார்.

## நவீன இலக்கியச் சிந்தனை

இவ்வியக்கத்தைப் புகழுடம் பெய்தி எம்.ஏ. இளஞ்செல்வன் முன்னின்று உருவாக்கினார். இது 1970களின் பிற்பகுதியில் தோற்றம் கண்டது. (முதலாவது மலேசியத் தமிழிலக்கிய மாநாடு, 2005 : 55) உரைநடை பெருவளர்ச்சி கண்டுவிட்ட காலத்தில், அதன் தாக்கமாக உருவான வடிவமான புதுக்கவிதை வளர்ச்சி யையே மூலமாகக்கொண்டது இவ்வியக்கம். அந்நோக்கிற்கிணங்க

25.8.1979இல் புதுக்கவிதைக் கருத்தரங்கைச் சுங்கைப்பட்டாணியில் நடத்திற்று. இரண்டாம் கருத்தரங்கை 1987ஆம் ஆண்டு கூலிம்மில் நடத்திற்று. இவ்வியக்கம் நடவடிக்கைகளுக்கு கோ. புண்ணிய வான், அருள்தாசன், துரை முனியாண்டி போன்றோர் துணை நின்ற முன்னோடிகளாவர்.

## அகம்

பொன்னாடை போர்த்துதல், பதக்கம் அணிவித்தல், விருது வழங்குதல் என்பன போன்ற சடங்கு நிகழ்வுகள் ஏதுமின்றி, வெளிவந்த படைப்புகள் குறித்தும் படைப்பாளர் குறித்தும் ஆழ்ந்து ஆராய்வது இவ்வியக்கத்தின் நோக்கமாகும். டாக்டர் சண்முக சிவா, அரு.சு. ஜீவானந்தன், சாமிமூர்த்தி, கந்தா ஆகியோர் முயற்சியால் இது இயங்கி வந்தது.

படைப்பாளர் தரமும், படைப்புத் தரமும் உயரவேண்டும், அதற்கான வழிகளை ஆராயவேண்டும் என்ற அடிப்படையிலேயே ஆய்வுகள் நடந்தன. சிறுகதை, புதினம், கட்டுரை, கவிதை ஆகிய எல்லா எழுத்து வடிவங்களும் ஆய்வுக்குட்பட்டன. மற்ற அமைப்பு களின் நடவடிக்கைகளும், இதற்கும் நிறைய வேறுபாடுகள் இருந்தன. எதனையும் சடங்காக அல்லாமல் இலக்கியத்தின் புறவளர்ச்சி யோடு அகவளர்ச்சி (உள்ளீடு) எந்த அளவு மேம்பட்டுள்ளது என்பதனை ஆழ்ந்து நோக்குவதே இதன் குறிக்கோள்.

இலக்கியத்தின் அகவளர்ச்சியை ஆயும் அதே நேரத்தில், இலக்கியம் படைப்போரின் அகநிலை (உட்கிடக்கை) தேடலிலும் இவ்வமைப்புக் கருத்துச் செலுத்திற்று. படைப்பாளரின் குடும்பப் பின்னணி, சுற்றுப்புறச் சூழல், நடந்து வந்த பாதை, எதிர்கொண்ட தடைமுடைகள் படைப்புத் திறன், உணர்த்தும் முறையின்பாங்கு போன்றவற்றைக் கண்டறிந்து, தம் படைப்புப் பற்றி ஆய்வாளர் கருதுவனவற்றை அறிந்து தம்மை மேம்படுத்திக் கொள்ளவும் இதன் செயற்பாடுகள் அமைந்தன. மயில் இதழ் இதன் நடவடிக்கை களுக்கு துணைபுரியும் வண்ணம் இடமளித்து வந்தது. இதன் செயற்பாடுகள் நின்றமை, இலக்கியத் தர வளர்ச்சிக்கு ஓர் இழப் பாகும்: மீண்டும் இது தொடர்வதற்கான அறிகுறிகள் தோன்றுவது மகிழ்ச்சிக்குரியதாகும்.

## மலேசியத் தமிழிலக்கியப் படைப்பாளர் சங்கம்

இவ்வியக்கம் நா.ஆ. செங்குட்டுவனால் 1993இல் பதிவு செய்யப்பெற்றது. பயன் எதிர்நோக்காது தொண்டு மனப்பான்மை

யுடன் தமிழிலக்கியம் படைத்து வரும் ஆர்வலர்களைப் பாராட்டி ஊக்கப்படுத்தும் நோக்கோடு உருவாக்கப் பெற்றது. மற்ற இயக்கங் களின் பார்வை படாமல் இலை மறை காயாக இருக்கும் படைப்பாளரையும் அடையாளங்கண்டு பாராட்டும் நடவடிக்கை களை மேற்கொண்டு வரும் இயக்கம் இது. டத்தோ பத்மநாபன் இலக்கிய விருது என்னும் பெயரில் கடந்த 13 ஆண்டுகளாக அறுபதுக்கும் மேற்பட்டோருக்குத் தங்கப் பதக்கமும் சான்றிதழும் வழங்கியுள்ளது. ஆண்டு தோறும் கதை, கட்டுரை, கவிதை எனத் தனித்தனியாகப் படைப்பாளரைத் தெரிவு செய்து விருது வழங்கி வருகிறது.

இலக்கிய விருதுகள் வழங்குவதோடு படைப்பாளர்களுக்கு இலக்கியப்பந்தல் என்ற பெயரில் தனி நிகழ்வை ஏற்படுத்தி அவர்தம் படைப்புகள் பற்றிய உரைகள், கலந்துரையாடல்கள் நடத்திப் படைப்பாளர்களுக்குப் பொற்பதக்கம் அணிவித்துச் சிறப்புச் செய்துள்ளது. இதுவரை சி. வேலுசுவாமி, சி: செல்வராஜ், மு. அப்துல் லத்தீப், அன்புச் செல்வன் ஆகியோர் இச்சிறப்பை பெற்றவராவர்.

அண்மைக் காலமாக இவ்வியக்கம் வாழ்நாள் சாதனை யாளர் என்ற விருதையும் வழங்கி வருகிறது. இலக்கியப் படைப் பாளர்க்கு மட்டுமின்றி கலைத்துறையில் நீண்ட நெடுங்காலம் தொண்டு புரிந்த நாகசாமி பாகவதர் முதலாரையும் இவ்வியக்கம் பாராட்டி விருது வழங்கிவருகிறது. தொடர்ந்து நா.ஆ. செங்குட்டு வனே இவ்வியக்கத்தைத் தலைமையேற்று நடத்தி வருகிறார்.

## மலேசியத் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் பிற இயக்கங்கள்

மலேசியத் தமிழிலக்கிய வளர்ச்சியே மூலநோக்கம் என்றில் லாமல் பிற இயக்க நடவடிக்கைகளும் தமிழிலக்கிய வளர்ச்சிக்கு வழிவகுத்து வருவதனை மறக்கஇயலாது. அச்சிறப்புக்குரிய இயக்கங்களுள் முதன்மையான சில ஈண்டுக் குறிப்பிடப் பெறு கின்றன.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

இந்நிறுவனம் தமிழ் ஆய்வை உலகளாவிப் பரவச் செய்த ஒரு பேரமைப்பாகும். 7.1.1964இல் புதுடெல்லியிலமைந்த இதற்கு முன்னோடியானவர்களுள் குறிப்பிடத்தக்கவர் சேவியர் எஸ். தனி நாயக அடிகள் (ஆறாம் உலகத் தமிழ் மாநாட்டு தமிழக மலர், 1987 : பக்கக் குறிப்பில்லை; கடைசிக்கட்டுரை). இவ்வமைப்பின் முதல் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப் பெற்றவர் ஜேன்பிலியோசாட்.

“இந்நவீன காலகட்டத்தில் புதிய ஐரோப்பிய மொழிகளுக்கு ஈடாகத் தமிழ் மொழியும் வளர வேண்டிய அவசியம் இருக்கிறது. ஆகவே ஒவ்வொரு வருடமும் அனைத்துலக நிலையில் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர்களை ஒன்று கூட்டி, பாடப் பிரச்சி னைகள், போதனை முறைகள், தமிழ்மொழி ஆய்வுத் திட்டங்கள் போன்றவற்றை விவாதிக்க வேண்டும்” இந்நோக்கத்தோடு மலேசி யாவின் முதல் மாநாட்டை நடந்த முடிவு செய்தது. அதற்கு வழி வகுத்தவர் மலாயாப் பல்கலைக் கழகத்தின் இந்திய ஆய்வியல் துறைத்தலைவராய் இருந்த சேவியர் தனிநாயக அடிகளார். நிறுவனம் அப்போது இங்குப் பதிவு பெறவில்லை. டான் ஸ்ரீ மாணிக்கவாசகம் தலைமையில் செயல்பட்ட தேசிய இந்தியக் கல்வி வளர்ப்பு நிறுவனத்தின் ஆதரவோடு, மூத்த அமைச்சரும், ம.இ.கா தேசியத் தலைவராய் விளங்கியவருமான துன் சம்பந்தன் தலைமையில் முதலாம் உலகத் தமிழ் ஆராய்ச்சி கருத்தரங்கு மாநாடு வெற்றிகரமாக நடந்தது. (1966 ஏப்ரல் 16—23) மலாயாப் பல்கலைக் கழகத்தில் நடந்த மாநாட்டை நாட்டின் விடுதலைத் தந்தையும் அப்போதைய தலைமை அமைச்சருமான துங்கு அப்துல் ரகுமான் தொடக்கிவைத்தார். “யாதும் ஊரே யாவரும் கேளிர்” என்று தமிழில் அவர் கூறிய கணியன் பூங்குன்றன் பொன் மொழி உலகெங்கும் எதிரொலித்து தமிழர் பண்பாட்டை உலகம் புரிந்துக் கொள்ளும் வாய்ப்பு அமைந்தது.

உலகமெங்குமிருந்து ஆராய்ச்சி அறிஞர்கள் கலந்துகொண்டு தமிழாய்ந்த அந்த மாநாட்டில் மலேசியத் தமிழ்க் கவிதை இலக்கியம் பற்றிய முருகு சுப்பிரமணியன் ஓர் ஆய்வுக் கட்டுரை படைத்தார். ஓர் உலக அரங்கில் மலேசியத் தமிழ் இலக்கிய (கவிதை) ஆய்வு இடம் பெற்றது இதுவே முதல்முறையாகும்.

இந்த மாநாடு புதியதோர் உந்துதலை ஏற்படுத்திற்று. உலகளவில் தமிழ் ஆய்வுக்கு ஒரு புதிய எழுச்சியை — புத்தார் வத்தை உண்டு பண்ணிற்று என்பதனைத் தமிழ் கூறு நல்லுலகம் இன்றும் மறக்கவில்லை, இனி என்றும் மறக்கவியலாது. இம் மாநாட்டையடுத்துத் தமிழகம் முதலிய நாடுகளின் மாநாடு நடந்தது.

6ஆம் உலக தமிழாராய்ச்சி மாநாடு மீண்டும் மலேசியாவில் அமைச்சரும், ம.இ.கா தலைவருமான டத்தோ ஸ்ரீ சா. சாமிவேலு தலைமையில் நடந்தது. (நவம்பர் 15—17, 1987) அப்போதைய தலைமை அமைச்சர் துன் மகாதீர் முகம்மது மாநாட்டைத் தொடக்கிவைத்தார். தமிழின் தொன்மைச் சிறப்புக் குறித்தும் பிற வளங்கள் குறித்தும் எடுத்துரைத்தார். மாநாட்டில் மலேசியப் படைப்புகள் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளும் இடம்பெற்றன.

கணினியில் தமிழையும் இடம் பெறச் செய்வதில் வெற்றிகண்ட முரசு நெ. முத்தெழிலன், ரவி, அங்கையா ஆகியோர் கட்டுரை களும் இடம்பெற்று உலக அறிஞர்களைக் கவர்ந்தன. முரசு செயலில் உருவான முதல் சிறுவர் கவிதை நூல் (முரசு நெடுமாறன், நன்னெறிப் பாட்டு) வெளியாகியிருந்தது.

உலக தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மலேசியக் கிளை, கீழ்க்காணும் நோக்கங்களைக் கொண்டதாகும்.

- தமிழ்மொழித் தொடர்பான ஆய்வுப் பணிகளுக்கு ஊக்கம் தந்து, அவ்வாய்வுகளின் முடிவுகளை நூல் வடிவில் கொண்டுவருதல். தொடர்ந்து இவ்வாய்வினை யொட்டித் தேசிய அனைத்துலக அளவிலான கருத்தரங்கு களையும் மாநாடுகளையும் ஏற்பாடு செய்தல்.
- தமிழில் ஆராய்ச்சியின் பல்வேறு துறைகளில் (தொல் பொருள்துறை, உளவியல், சமூகவியல், சமயம், தத்துவம், வரலாறு, பொருளாதாரம், மொழியியல், இலக்கியம், வாணிகம், நுண்கலைகள், கல்வி, அறிவியல், தொழில் நுட்பம், நாட்டுப் புறப்பண்பாடு ஆகியவற்றில் ஈடுபட் டுள்ளவர்களை ஒன்றிணைத்து ஓர் அனைத்துலக மாநாட்டை நடத்துதல்.

நிறுவனத்தின் மேற்கண்ட நோக்கங்களில் இரு உலக மாநாடுகள் நடந்துள்ளன; அந்நிறுவனத்தின் உயரிய நோக்கங்கள் பல இன்னும் செயலுருப்பெறவில்லை. அண்மைய நடவடிக்கையாக "முதலாவது மலேசியத் தமிழ் இலக்கிய மாநாடு, மலாயாப் பல்கலைக்கழகத்தில் நடந்தது. (19—20 பிப்ரவரி 2005)

தமிழ் ஆய்வை உலகத் தரத்திற்கு உயர்த்தி, மற்ற மொழி யினரும் தமிழின் மேன்மையை உணர்ந்து போற்றச் செய்யும் நோக்கொடு தொடங்கப்பெற்ற உலகத் தமிழாராய்ச்சிக் கருத்தரங்க மாநாடும் இப்பொழுது நடைபெறுவதில்லை. தஞ்சாவூரில் நடந்த 8ஆம் உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டோடு அது முடங்கிவிட்டது. தமிழகத்தில் நடந்த மாநாடுகள் ஆராய்ச்சிக்கு முதன்மை தராமல், ஆடல், பாடல்; கேளிக்கை, சுற்றுலா, ஊர்வலம், அரசியல் வாடை என்பன போன்றவற்றை முன்வைத்து, ஆராய்ச்சியைப் புறந்தள்ளியதால் கருத்தரங்க மாநாட்டுத் தலைமைச் செயலவை இப்பொழுது மாநாடு நடத்த இசைவதில்லை.

அண்ணா சென்னையில் நடத்திய இரண்டாம் மாநாடு (1986), அகம், புறம் என இரண்டாகப் பிரிக்கப் பெற்று, அகப் பிரிவில் ஆராய்ச்சி கருத்தரங்கு தனியாக நடத்தப்பெற்றது. ஆராய்ச்சி அறிஞர், ஆர்வலர் தமிழின் ஆழத்தை உணரும் வண்ணம்

அக நிகழ்வுகள் அமைந்தன. ஒன்றிலொன்று கலந்து உருக் குலைக்கவில்லை. பின்னர் அங்கு நடந்த மாநாடுகளில் கட்டுப் பாடின்றி யாரும் எதிலும் கலந்து கொள்ளலாமென்று வாயில் திறக்கப்பட்டதால், மாநாட்டு நோக்கம் குலைந்தது. அதுவும் கடையைக் கட்டிக் கொள்ள வேண்டியதாயிற்று.

## உலகத் தமிழ்ப் பண்பாட்டியக்கம்

பல நாடுகளில் வாழும் தமிழர்களைப் பண்பாட்டு அடிப் படையில் ஒன்றிணைப்பது இவ்வியக்கத்தின் முதன்மை நோக்க மாகும். இது 1974ஆம் ஆண்டு இலங்கையில் சாலை இளந்திரையன் தலைமையில் அமைந்தது. அடுத்த ஆண்டில் மலேசியாவைச் சேர்ந்த இர. ந. வீரப்பன் தலைமையில் மலேசியப் பண்பாட்டி யக்கம் எனப் பதிவு பெற்றது. இதன் நான்காம் உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாடு 1987ஆம் ஆண்டு மலேசியாவில் நடந்தது. இவ்வியக்கம் உலகளாவிய அமைப்பு எனினும் இது மலேசியத் தமிழிலக்கியம், பண்பாட்டு வளர்ச்சிக்குப் பங்களிப்பைச் செய்துள்ளது.

அயலகங்களில் மலேசியத் தமிழிலக்கியப் பரவலுக்கு இவ்வியக்கச் செயல்பாடுகள் உதவியுள்ளன. இங்கு நடந்த பல நிகழ்வுகளும் இந்நாட்டு இலக்கிய வளர்ச்சிக்கு உந்துதல் தந்துள்ளன. இது அண்மைக் காலமாக ஆண்டுதோறும் நடத்தி வரும் சான் றோர் நினைவுவிழாவில், தமிழுக்கும், தமிழ் இலக்கிய மேம்பாட் டிற்கும் சமுதாய உயர்வுக்கும் உழைத்த மேன்மக்கள் நினைவு கூரப் பெறுகின்றனர். இதன் இப்போதைய தலைவர் ப.கு. சண்முகம். உலக அமைப்பையும் இவரே தலைமையேற்று இயக்கி வருகிறார்.

## தேசிய நிலநிதிக் கூட்டுறவுச் சங்கம்

மலேசியத் தமிழர் பொருளாதார உயர்வை நோக்கமாகக் கொண்டு துன் சம்பந்தனால் துவக்கப்பட்ட இவ்வியக்கம் (1960) சமுதாயத்தின் பல்வேறு நடவடிக்கைகளுக்கு உதவி வருகிறது. இது தொடங்கப்பெற்ற காலத்தில் மலேசிய எழுத்தாளர்களும் கவிஞர்களும் இதன் வளர்ச்சியை ஊக்கமூட்டி எழுதினர். இலக்கிய உணர்வு மிக்க துன் சம்பந்தன் இயக்க மேம்பாடு குறித்தும், சமுதாய உணர்வு குறித்தும், தம் முயற்சி குறித்தும் பாவலர் படைத்த கவிதைகளில் திளைத்து எழுதியவர்களுக்கு ஊக்க மூட்டினார்.

கிருஷ்ணதாசன் தலைமையில் 15.9.1968 தொடங்கி ஓராண்டிற்குமேல் நாடெங்கும் கவியரங்குகள் நடத்திப் பேரெழுச்சியை ஏற்படுத்தினார். தேசிய அளவில் கவிதைக்குத் தங்கப் பதக்கம் தந்து பாராட்டினார். நாடெங்கும் நடந்த கவியரங்குகளில் இடம்பெற்ற கவிதைகள் கொண்ட ஒரு நூலும் வெளியிடப் பெற்றது (1971).

இவ்வியக்கம் ஆண்டு தோறும் இடை விடாது நடத்திவரும் இலக்கியப் போட்டிகளுக்கு (கதை, கட்டுரை, கவிதை) முதல் பரிசாக 2000 வெள்ளியும், இரண்டாம் பரிசாக 1500 வெள்ளியும், மூன்றாம் பரிசாக 1000 வெள்ளியும் வழங்கி வருகிறது. ஆறுதல் பரிசுகள் 200 வெள்ளி. பரிசு பெறும் படைப்புகளைத் தன் கூட்டுறவு இதழில் வெளியிட்டு வருகிறது. அவற்றை நூலாக்கியும் வழங்குகிறது. எழுத்தாளர் வெளியிடும் நூலில் 20 படிகளை வாங்கி ஆதரவு தந்து வருகிறது.

துன் சம்பந்தனுக்குப் பின் இதனைத் தலையேற்று நடத்தி வருபவர் டான் ஸ்ரீ டத்தோ கே.ஆர். சோமசுந்தரம்.

## மலேசியப் பாரதிதாசன் இயக்கம்

டத்தின்ஸ்ரீ இந்திராணி சாமிவேலு தலைமையில் இயங்கும் மலேசியப் பாரதிதாசன் இயக்கம் 1994 முதல் தமிழ் இலக்கிய முயற்சிகளுக்கு ஊக்கம் நல்கிவருகிறது. ஆண்டுதோறும் நடத்தும் கலை இலக்கிய விழாவையொட்டி நடத்தப் பெறும் கதை, கட்டுரை, கவிதைப் போட்டிகளில் முதல் பரிசு பெறும் படைப்புகளுக்கு 1000 வெள்ளி பரிசளித்து வருகிறது. ஆண்டுதோறும் சிறந்த நூல் ஒன்றினைத் தேர்ந்தெடுத்து டத்தோ ஸ்ரீ ச. சாமிவேலுவின் பெற்றோர் சங்கிலிமுத்து அங்கம்மா இலக்கியப் பரிசிலாக 5000 வெள்ளி வழங்கிவருகிறது. நூல் வெளியீட்டுத் துறைக்கு இப்பரிசில் ஊக்கமூட்டும் ஒன்றாக விளங்கி வருகிறது.

## தமிழ்ச்சங்கம்

முச்சங்கம் என்ற பெயரில் 1999இல் பதிவு பெற்று இயங்கிக் கொண்டிருந்த இது பின்னர் தமிழ்ச்சங்கமாகப் பெயர் மாற்றம் கண்டது. இது 2000ஆம் ஆண்டில் கவிதை எண்டர் பிரைஸ் என்ற பெயரில் தற்காலிகமாக ஓர் அமைப்பைப் பதிவுசெய்து அதன் மூலம் கவிதை மாநாடு ஒன்றினை நடத்தியது. கவியரங்கம் முதலான பல நிகழ்ச்சிகளுடன் மலேசியத் தமிழ்க்கவிதை குறித்து நேற்று இன்று நாளை என்ற தலைப்பில் ஆய்வுரையென்றும்

கணினிப் பின்னணியோடு நிகழ்த்தப் பெற்றது. மேலும் பத்துப் பாவலர்களைத் தெரிவு செய்து அவர்களின் தொண்டை மதித்துப் போற்றும் வண்ணம் தங்கப்பதக்கம் அணிவித்துச் சிறப்புச் செய்தது.

முன்பு கவிதைக் களத்தின் சார்பில் நடந்து வந்த மாதாந்தர நிகழ்வைத் தற்பொழுது இச்சங்கத்தின் நடவடிக்கைகளில் ஒன்றாக நடத்திப்பெறுகின்றது. தமிழுக்கும் தமிழினத்திற்கும் பேரெழுச்சியை ஏற்படுத்திய தமிழர் திருநாளை இச்சங்கம் சில ஆண்டுகளாகச் சிறப்புடன் நடத்தி வருகிறது.

## உயர்கல்வி நிலையங்களில் தமிழ்மொழிக் கழகங்கள்

இந்நாட்டில் இடைநிலைப்பள்ளிகளில் தமிழ் மாணவர் தமிழ்மொழிக்கழகம் அமைத்துச் செயல்பட வாய்ப்புள்ளது. சில பள்ளிகளில் அவை நல்லமுறையில் இயங்கிவருகின்றன. ஆசிரியர் பயிற்சிக் கல்லூரிகளில் தமிழைப் பயிற்று மொழியாகக் கொண்டு பயில்வோர் தமிழ் மொழிக்கழகம் அமைத்துச் செயல்படுகின்றனர். இலக்கிய நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றனர். இவற்றுக்கெல்லாம் மேலாக பயன் மிகுந்த ஓர் அமைப்பாக விளங்குவது மலாயாப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரவையாகும். இது நீண்ட வரலாறுடையது. பல நோக்கங்கள் கொண்ட ஓரமைப்பு எனினும் தமிழ்க் கலை இலக்கிய வளர்ச்சியில் கூடுதல் திட்டம் கொண்டது.

ஆண்டுதோறும் சிறுகதைப் போட்டி நடத்தித் தேர்வு பெறும் கதைகளுக்கு கணிசமான தொகை பரிசளிக்கிறது. பரிசு பெறும் கதைகளை நூலாக்கி வெளியிடுகிறது. இது எழுத்துத் துறைக்கு ஊக்கமூட்டும் ஒரு செயலாகும்.

## தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உதவும் பிற அமைப்புகள்

மலேசியாவில் தமிழ் இலக்கிய வளர்ச்சியை நோக்கமாய்க் கொண்ட இயக்கங்களோடு அப்படி ஒரு நோக்கமில்லாத சில அரசியல், பொது இயக்கங்களும் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உதவுவதை மறத்தல் இயலாது. அப்படி உதவும் இயக்கங்களுள் தலைமையானது மலேசிய இந்தியர் காங்கிரசாகும்.

இங்கு இந்தியர்க்குப் பொதுமொழியாக அரசு ஒப்புதல் பெற்றமொழி தமிழ். அதனால் அதன் வளர்ச்சியிலும் நிலைப் பாட்டிலும் ம.இ.கா.விற்குப் பெரும் பங்குண்டு. தமிழ்ப்பள்ளிகளின் மேம்பாட்டிற்கும், தமிழ்மொழி கற்றல் கற்பித்தல் சீரமைக்கும் ம.இ.கா. மேற்கொள்ளும் முயற்சிகள் அளப்பரியன.

நூல் வெளியீட்டு விழாக்களுக்கு அதன் தலைவர் டத்தோ ஸ்ரீ ச. சாமி வேலு காட்டி வரும் ஆதரவு குறிப்பிட்டுச் சொல்லத் தக்க முதன்மையுடையதாகும். அதுபோன்ற நிகழ்வுகளுக்காகவே அது நேதாஜி மண்டபத்தை அமைந்துள்ளது.

ம.இ.கா. தேசியத் தலைவர் நூல் வெளியீட்டு துறைக்கு முதன்மை தந்த பின்னரே அது வெற்றிகரமான ஒரு விழாவானது. பெருந்தொகை திரளும் நிகழ்வானது. ம.இ.கா.வின் மற்ற துணை, உதவித் தலைவர்களும், மாநிலத் தலைவர்களும் நூல் வெளியீட்டு நிகழ்வுகளுக்கு முதன்மை தந்து வருகின்றனர். அதனால் வெளியீட்டுத் துறைக்கு ஆதரவு கிட்டி வருகிறது.

## கலை மன்றங்கள்

தமிழ் என்பது இயலோடு அடங்கி விடுவதன்று. அஃது இசையாகவும் நாடகமாகவும் இலங்குவது. இசையும் நாடகமும் இலக்கியமே ஆகும். அரங்கில் பாடப்படும் இசைப்பாடல் எழுத்து வடிவம் பெறும்போதும், மேடையில் நடிக்கப் பெறும் நாடகம் நூலாகும் போதும் இயல் வடிவம் பெறுகின்றன.

இங்குச் சமுதாய உயர்வு, கலை மேம்பாடுகளை நோக்க மாகக் கொண்ட இயக்கங்களும் இலக்கிய வளர்ச்சிக்கு உதவுவது ஒரு கலை. கலை வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டிருந்த கோலாலம்பூர் தமிழ்க் கலை மன்றம் 1955இல் தமிழ் எழுத்தாளர் மாநாடு கூட்டியதானது, ஈண்டு நன்றியொடு நினைத்துப் பார்க்கத் தக்கதாகும். எனவே, நாடெங்கும் இயங்கும் கலை மன்றங்களும், நாடக அமைப்புகளும் இசைக்கழகங்களும் தமிழ், தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு ஒரு வகையில் உதவுபவை என்பதில் ஐயமில்லை.

## நிறைவுரை

இந்நாட்டில் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உதவும் இயக்கங் களின் நடவடிக்கைகளைப் பொதுவாக ஒரு கண்ணோட்டமிடும் போது, படைப்பாளர்களுக்கு ஊக்கம் தரும் திட்டங்கள் நிரம்பவே உள்ளன. பொன்னாடை, விருது, பொற்பதக்கம், பொற்கிழி பெறாத படைப்பாளர் குறைவாகவே இருப்பர். சிறந்த நூல்களுக்கு ஏழாயிரம், ஐயாயிரமென ஆண்டுதோறும் பரிசுகள் வழங்கப் பெறுகின்றன. நூல் வெளியீடுகளில் பெருந்தொகை திறள்கிறது. இலட்சத்தைத் தாண்டிய வரவுகள் குவிந்த வெளியீட்டு விழாக்களும் நடந்துள்ளன. வாழ்நாள் சாதனையாளர் விருதுகளும் இங்கு வழங்கப் பெறு கின்றன.

இலக்கிய வளர்ச்சியை நோக்கமாய்க் கொண்ட இச்செய்திகள் மகிழ்ச்சியளிக்கக் கூடியவையே! இயக்கங்களின் தொண்டுணர்வு பாராட்டத் தக்கதே! எனினும், இதனைப் படிக்கும் இலக்கிய வேட்கை மிக்க நடுநிலை ஆய்வாளர் ஒருவர் இங்ஙனம் வினா எழுப்பலாம்.

1. வாய்ப்புகளே இல்லாத அந்த முற்காலத்து மலேசிய இலக்கியப்படைப்புகளொடு, பரவலான வாய்ப்புகள் உள்ள தற்காலத்து இலக்கியப் படைப்புகளை ஒப்பிடும் போது தரநிலை (மொழிவளம், கருத்துவளம்) எங்ஙனம் உள்ளது? கூடியுள்ளதா? குறைந்துள்ளதா? ஒரே நிலையில் தான் உள்ளதா?
2. நூல் வெளியீடுகள் வெற்றி கண்டுள்ள அளவு நூல் பரவல் வெற்றிகண்டுள்ளதா?
3. எழுத்தாளர்களை மகிழ்விக்கும் பரிசுத் திட்டங்கள் ஏற்பட்டுள்ள அளவு, தங்கள் படையல் மக்களைச் சென்றடைந்துள்ளது என்று படைப்பாளர் பூரிக்கும் சூழல் உருவாகியுள்ளதா?
4. இயக்கங்களின் நடவடிக்கைகளால் படிப்போர் (வாசிப்போர்) தொகை பெருகியுள்ளதா?
5. படைப்பாளரை ஊக்குவிக்கப் பல்வேறு திட்டங்கள் தீட்டும் இயக்கங்கள், நூல்கள் விலைபோகும் சந்தை நிறுவும் திட்டம் பற்றி எண்ணங்கொண்டுள்ளனவா?

மேற்கொண்ட வினாக்களுக்கு விடை கண்டு சிறுமை போக்கிச் சீர்மைக்கு வழிகண்டால் இப்போது உள்ள வாய்ப் பென்னும் நாற்றங்காலில் படைப் பென்னும் நற்பயிர் தழைக்கும்.

இயக்கங்கள் அளிக்கும் வாய்ப்புகள் வரலாறாகா. வாய்ப்புகள் என்னும் வயலின் விளைச்சல்களே நிலைபேற்றுக்கு வழிவகுக்கும். இலக்கிய வளர்ச்சி என்பது தனிப்பட்ட சிலர் பெறும் பாராட்டோ பரிசோ அல்ல. பாராட்டும் பரிசும் சிலரைச் சமுதாயத்திற்கு அப்போதைக்கு அடையாளம் காட்டலாம். அதனால் அவர் படைப்புச் சமுதாயத்தில் நிலைத்துவிட்டதென்று பொருளாகாது. படைப்பாளரின் நூல்கள் சமுதாயத்தில் எந்த அளவு படிக்கப் படுகின்றன என்பதே உண்மையான நிலையான வரலாற்றுப் பதிவான பாராட்டாகும்.

மேற்கண்ட கருத்துகளை ஈண்டு எடுத்துரைப்பதன் நோக்கம், பரிசுத்திட்டங்களும் விருது வழங்கும் ஏற்பாடுகளும் தேவை யற்றவை என்ற பொருளிலன்று. படைப்பாளனைப் பாராட்டுதல் மட்டும் போதாது. அவன் படைப்புகள் பரவச் சந்தை வாய்ப்பு

களை ஏற்படுத்துவது முதன்மையாகும் என்பதே இதன் அடிக் கருத்தாகும். படைப்பாளர் தங்களை ஆழப்படுத்திக் கொள்ளும் வாய்ப்பையும் இயக்கங்கள் ஏற்படுத்துவது பயனுடையதாகும். படிக்கும் ஆர்வலர் இல்லாமலில்லை. ஆனால், வெளியிடும் நூல்கள் பரவலாய்க் கிடைக்கும் சந்தை வாய்ப்பமைந்தால் நூல் பரவலுக்கு வாய்ப்பமையும்.

படைப்பாளரைப் பாராட்டும் பரிசுத் திட்டங்கள் பாராட்டத் தக்கவை என்பதில் இரு கருத்தில்லை. மிகச் சிறந்த படையல்களுக்கு வழங்கப்படும் ஏழாயிரம், ஐயாயிரம் பரிசுத் திட்டங்களுக்குக் கொடைவழங்கும் நெஞ்சங்கள் நன்றிக்குரியன. மேற்படி திட்டங்கள் உரிய பயன் நல்க, படைப்பாளன் தீட்டும் கருத்தோவியங்களை சமுதாயத்தில் பரவி நிலைத்த வாழ்வு பெற நூல் பரவல் முதன்மையாகும்.

இவ்வகையில் ம.த.எ.ச. தற்போது அறிவித்துள்ள திட்டம் வரவேற்கத்தக்கது. சங்க உறுப்பினர்கள் வெளியிடும் நூல்களில் 300 பிரதிகளை விலை கொடுத்து வாங்கிக் கொள்வதே அத்திட்டமாகும். மலேசியப் பண்பாட்டியக்கம் அதன் உறுப்பினர் வெளியிடும் ஒரு நூலுக்கு 500 வெற்றி உதவித் தொகை வழங்க அவ்வியக்கம் முடிவுசெய்து, செயல்படுத்தியும் விட்டது. இம்முன்னோடித் திட்டங்கள் மற்ற இயக்கங்களுக்கு வழிகாட்டுதல்களாகும்.

ஒரு படைப்பாளன் 1000 நூல்கள் வெளியிட்டு, ஐம்பது அறுபது நூல்களில், போட்ட தொகையைவிட இரண்டு மூன்று மடங்கு அதிகம் பெற்றுவிட்டால் கைகடிக்காத ஒரு நிலையை அடையலாம். ஆனால், மக்களிடையே பரவாமல் குவிந்துகிடக்கும் தன் நூல்களைப் பார்க்கும் போதெல்லாம் அவன் மனம் அவனை கடித்துக் கொண்டே இருக்கும்.

உண்மையான ஒரு படைப்பாளனுக்குப் பொருள் வரவை விட, அவன் படைப்பின் பரவலே பொருள் பொதிந்த மகிழ்ச்சியாகும். படைப்பாளருக்கு அந்த மகிழ்ச்சி ஏற்பட இயக்கங்கள் வழிகண்டால் — நூல்கள் பரவச் சந்தை அமையத்திட்டமிட்டு வெற்றிகண்டால் படைப்புக்கலை ஓங்கும். படைப்பாளர் பயனடைவர்!! எதிர்காலத்திற்கு விலை மதிப்பற்ற வரலாற்றுப் பதிவுகள் கிட்டும்!!!

## துணைபுரிந்த ஏடுகள்


1. செந்தமிழ்க் கலாநிலையம், சுவாமி இராமதாசர் மணிவிழா மலர், 1977, பினாங்கு.

2. வேளாளர் நலனபிவிருத்திச் சங்கம், முதுதமிழ்ப் பெரும் புலவர் தவத்திரு சுவாமி இராமதாசர் அவர்களுக்குப் பொன்னாடை போத்தும் விழா மலர், 1974, கோலாலம்பூர்.

3. முரசு. நெடுமாறன், மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம், 1997, கிள்ளான்.

4. தமிழிலக்கியக் கழகம், 5ஆம் தமிழ்க் கல்வி மலர், 1995, கிள்ளான்.

5. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், முதலாவது மலேசியத் தமிழிலக்கிய மாநாடு, 2005 கோலாலம்பூர்

6. அனைத்துலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ஆறாம் உலகத் தமிழ் மாநாட்டு (தமிழக) மலர், 1987, கோலாலம்பூர்.

# மலேசியாவில் இலக்கியம் வளர்ப்பதில் தமிழ்ப் பத்திரிகைகளின் பங்கு

இணைப்பேராசிரியர் டாக்டர் முல்லை இராமையா
கல்விப்புலன், மலாயாப் பல்கலைக்கழகம்

*மக்கள் வாழ்க்கை ஓர் இலக்கோடும் கலைநயத்தோடும் பிரதிபலிக்கப்படும்போது அது இலக்கியமாகிறது. மக்களின் வாழ்வை உணர்ந்து, அவர்களிடம் பாதிப்பை ஏற்படுத்தவேண்டும் என்ற சீரிய நோக்கோடு எழுதப்பட்ட கட்டுரைகளும், கலைநயத்தோடு எழுதப்பட்ட கதை, கவிதைகளும் இங்கு தனிப்பட்டோர் பிரசுரித்து இலக்கியம் வளர்த்ததைக் காட்டிலும், பத்திரிகைகள் அவற்றைப் பிரசுரித்து இலக்கியம் வளர்த்ததுதான் பன்மடங்கு ஆகும்.*

## பத்திரிகைகளின் தோற்றம்

*மலேசியாவுடன் தமிழர்களின் தொடர்பு ஈராயிரம் ஆண்டு காலப் பழமை வாய்ந்தது என்றாலும் 17ஆம் நூற்றாண்டுவரை, வாணிபப் பண்பாட்டுத் தொடர்பாகவே இருந்தது. 1786இல், பினாங்குத்தீவு ஆங்கிலேயரின் ஆட்சிக்கு உட்பட்ட காலத்திலிருந்துதான், தமிழ்த் தொழிலாளிகளின் வருகை பெருகப் பெருக, தமிழ் மொழியும் தமிழ்க் கல்வியும் கால்கொள்ளலாயிற்று. நலிந்த ஒரு சமூகத்தினரிடையே, தமிழ்ப்பத்திரிகைகள் தோன்றுவதற்கும் இலக்கியம் பிறப்பதற்கும் ஒரு நூற்றாண்டு காலம் பிடித்திருக்கிறது.*

*ஆய்வுகளைப் புரட்டிப் பார்க்கும்போது, 1875இல் வெளிவந்த சி.கு. மகுதும் தோற்றுவித்த சிங்கை வர்த்தமானி முதல் பத்திரிகையாக இருந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. வித்யா விசாரிணி, வாதை நேசன், விஜய கேதனன் என்று அ.மு. மரக்காயர் நடத்திய பத்திரிகைகளும் அதன்பின் உலக நேசன், சிங்கை நேசன், இந்து நேசன் என்ற பத்திரிகைகளும் 1887இல் வெளிவந்தன.*

## பத்திரிகைகளின் பேசுபொருள்

*சிங்கை நேசனை* ஓர் உதாரணமாக எடுத்துக் கொண்டோமானால், செய்திகளைத்தவிர, அதன் பேசுபொருள் - இந்தியர்கள் நாட்டு வளர்ச்சியில் ஆற்றிய பங்கு, அவர்களின் பிரச்சனைகள், தமிழ்க் கல்வியின் தேவை, இந்தியர்களிடையே ஒற்றுமை இன்மை, சீனர்களின் விடாமுயற்சி, பொருளாதார முன்னேற்றம், ஒருவர் செய்யும் தொழிலையே மற்றவரும் செய்ய முற்படுவதால்தான் சமுதாயம் முன்னேறவில்லை என்ற குற்றச்சாட்டு ஆகிய சமூக நலப் பிரச்சனைகளைக் கட்டுரை வடிவில் ஆராய்ந்திருக்கிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பல பத்திரிகைகள் வெளிவந்திருந்தாலும் இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் குறைந்து, பின் 1920களில் மீண்டும் அதிகரிக்கத் தொடங்கியிருக்கின்றன (பின்னிணைப்பில் பட்டியலிடப்பட்டுள்ளது). இந்தப் பத்திரிகைகளும் சமூகநலன் கருதி பல கட்டுரைகளைப் படைத்திருக்கின்றன.

கி. நரசிம்ம ஐயங்கார், 1924இல் வார இதழாக ஆரம்பித்த **தமிழ்நேசன்** 1937இல் நாள் இதழாக மாறியது. "ஒரு உத்தம பத்திரிகையின் இலக்கணமாக ஒவ்வொரு காலகட்டத்திலும் இந்தியச் சமூகம் எதிர்நோக்கிய பிரச்சனைகளை அலசி ஆராய்ந்து, பொது மக்கள் எண்ணம் உருவாகத் **தமிழ்நேசன்** செய்த பணி அளவிடற்கரியது" என்று கூறுகிறார். இந்நாட்டின் பத்திரிகை வரலாற்றை ஆய்வு செய்துள்ள இரா. தண்டாயுதம் (1986 : 18)

*கலியுக நண்பன்* (1928) மலேசிய இந்தியர்களை இந்நாட்டுக் குடிமக்களாகவே கருதி அவர்களுடைய உரிமைகளுக்காக ஆணித்தரமான தலையங்கங்கள் எழுதிப் போராடியது. கோ. சாரங்கபாணியின் முதல் தமிழ் பத்திரிகையான *முன்னேற்றம்* (1929) சமூகச் சீர்திருத்தத்தை மையமாகக் கொண்டு வெளிவந்தது.

முப்பதுகள், மலேசியத் தமிழ்ப் பத்திரிகை வரலாற்றில் மிக முக்கியமான காலகட்டம். அதுவரையில் தமிழ்நாட்டில் உணர்வுகளையும், மலாயாவில் உயிரையும் உடலையும் காத்துவந்த மக்களை, மலாயா வளம் பெறுவதற்கு உழைத்து வந்த மக்களை, இந்நாட்டைத் தங்கள் சொந்த நாடாகக் கருதி குடியுரிமை கேட்க உந்திய காலம். இந்தியர்களுக்கென்று ஒரு தலைமைத்துவம் வேண்டும் என்று குரல் எழுப்பிய காலம். சுமார் இருபது பத்திரிகைகள் இந்தக் காலகட்டத்தில் தோன்றின. (பட்டியல் பின்னிணைப்பில்).

இந்தப் பத்திரிகைகள், மலாயாவில் அன்று நிலவிய பொருளாதார வீழ்ச்சி, இந்தியர்கள் அதனால் அனுபவித்த கொடுமைகள், தமிழ்ப்பள்ளிகளின் நிலை, கள்ளுக்கடைகளின் தீமைகள், தீபாவளியன்று குடிக்காமை போன்ற பல சமூகப் பிரச்சனைகளை அலசி ஆராய்ந்திருக்கின்றன. பினாங்கிலுள்ள இந்திய சங்கங்கள் ஒன்றுபட்டுப் பொது நன்மைக்காகக் குரல் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தின.

அன்றைய பத்திரிகைகள், எந்த அளவிற்குச் சமூகப் பிரக்ஞையோடும், தார்மீகப் பொறுப்போடும் மக்களை மனமாற்றம் அடையச் செய்வதற்குக் கட்டுரைகள் படைத்துப் பாடுபட்டிருக்கின்றன என்பதை மேற்குறிப்பிட்டுள்ளவை தெளிவாகக் காட்டுகின்றன.

## தமிழ் முரசின் இலக்கியப் பணி

1935இல், *தமிழ் முரசு* எனும் பத்திரிகையைச் சிங்கப்பூரில் தொடங்கிய கோ. சாரங்கபாணி (கோ.சா.), மலேசியத் தமிழ்ப் பத்திரிகை ஆசிரியர்களுள் தலைசிறந்து நிற்பவர். ஒரு பத்திரிகை, சமுதாயத்தின் ஒப்பற்ற சக்தியாக எப்படி விளங்கமுடியும் என்பதைத் தமிழ் முரசு காட்டியது. சமூகச் சீர்திருத்தத்தையே மையமாகக் கொண்டிருந்தாலும் மலாயாத் தமிழர்களின் பன்முக வளர்ச்சிக்கு உதவும் முறையிலேயே இதன் கட்டுரைகள் அமைந்திருந்தன.

சாதிமத வேறுபாடு இல்லாமல், அனைவரும் ஒன்று திரள வேண்டும் என்பதற்காக ஏற்படுத்தப்பட்ட தமிழர் திருநாள், மாணவர்களின் எழுத்தார்வத்தை ஊக்குவிக்க ஏற்படுத்தப்பட்ட மாணவர் மணிமன்றம், தமிழ் இளைஞர் மணிமன்றம், மலாயாப் பல்கலைக்கழக இந்தியப்பகுதியில் தமிழை நிலைநிறுத்தத் தொடங்கப்பட்ட *தமிழ் எங்கள் உயிர் நிதி* ஆகியவை தமிழ் முரசின் சாதனைகள்.

மலாயாப் பல்கலைக் கழகத்தை அமைப்பதற்கு நிறுவப்பட்ட கார்-சான்டர்ஸ் குழு இந்தியப் பகுதியை நிறுவ கொள்கை அளவில் ஒத்துக் கொண்டிருந்தாலும், எந்த மொழியை இந்திய மொழியாக ஏற்பது என்ற சிக்கல் ஏற்பட்டது. இதனைத் தீர்ப்பதற்காக அழைக்கப்பட்ட பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியார், சமஸ்கிருதமே இந்தியப் பகுதியின் மொழியாக இருக்கவேண்டும் என்று பரிந்துரைத்துவிட்டார். இதற்குத் தமிழ்ச் சமூகத்திலே பெரும் எதிர்ப்பு கிளம்பவே, நிதி இல்லை என்ற காரணம் காட்டிப் பல்கலைக்கழகம் இந்தியப் பகுதி அமைப்பதைத் தள்ளி வைத்துவிட்டது.

நிதி இல்லை என்ற நிலையை மாற்ற கோ.சா. விடுத்த அறைகூவல்தான் *தமிழ் எங்கள் உயிர் நிதி.* இந்நிதியை வளர்க்க அவர் எழுதிய தலையங்கம் ஒவ்வொன்றும் உணர்ச்சிப் பிழம்பாகத் திகழ்கின்றது. கோ.சா.வின் குரல், மலாயாவில் மட்டும் அல்லாது, தமிழர் வாழும் மற்ற இடங்களிலும் எதிரொலித்து, சைகோனி லிருந்து கணிசமான தொகை இந்நிதிக்கு வந்தது. தமிழக அரசாங்கம் 5500 நூல்களைத் தந்து உதவியது (மா. இராமையா, 1978). 1956இல் இந்திய ஆய்வியல் துறையும் தொடங்கப்பட்டது. ஒரு பத்திரிகையின் எழுத்து எந்த அளவிற்கு மக்களை ஈர்த்து இயங்கச் செய்தது என்பதற்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

இந்தியர்களின் பொருளாதார, சமூக, பண்பாட்டு வளர்ச் சிக்குப் பத்திரிகை கட்டுரைகள் அரிய பங்காற்றியுள்ளன. மலாயா முழுவதும், ஆங்காங்கே, பெரும்பான்மையோர் தோட்டங்களிலும், ஏனையோர் நகரங்களிலும் சிதறிக் கிடந்ததொரு காலகட்டத்தில், இந்தியர்களுக்கென்று ஒரு நிலையான தலைமைத்துவம் இல்லாத காலகட்டத்தில், மக்களை ஒன்றுசேர்ப்பதற்கும், ஒருமித்த கருத்துகள் ஏற்படுவதற்கும், ஒன்றாக இயங்கச் செய்வதற்கும் பத்திரிகைகள் அவற்றின் சமூகக் கட்டுப்பாட்டை நிறைவேற்றாமல் இருந்திருந்தால் இந்திய மக்களின் நிலை என்னவாயிருக்கும்?

பத்திரிகை நடத்துவது எளிதன்று என்று அறிந்தும் பற்பல பத்திரிகைகள் தோன்றிய வண்ணம் இருந்துள்ளன. எத்தனை பத்திரிகைகள் வென்றன என்பது இங்கு முக்கியமல்ல - ஒரு சிறுபான்மைச் சமுதாயத்தில், ஓர் ஏழைச் சமுதாயத்தில், எந்த அளவிற்குச் சமூக உணர்வு இருந்திருந்தால் இத்தனை பத்திரி கைகள் நடத்தப்பட்டிருக்கும் என்பதுதான் இங்கு வியப்புக்குரியது!

## தமிழ்நாட்டுப் படைப்பிலக்கியத்தின் தாக்கம்

கருத்துக் கட்டுரைகள், பத்திரிகைகள் ஆரம்பித்த காலத்தி லிருந்து இருந்தன என்றாலும், படைப்பிலக்கியத்தின் மற்ற வடிவங் களான சிறுகதைகள், கவிதைகள், நாவல்கள் மெதுவே தலை காட்ட ஆரம்பித்த காலத்தில் *தமிழ் முரசு* முதலிய வெற்றிநடை போட்டுக் கொண்டிருந்த பத்திரிகைகள் தமிழ்நாட்டு எழுத்துக் களையே மறுபதிப்பு செய்தன. அப்படியே உள்நாட்டுப் படைப்பி லக்கியத்தை வெளியிட்டாலும் அவை தமிழ்நாட்டைப் பின்புல மாகக் கொண்டு எழுதப்பட்டவையாக இருந்தன. இதற்குக் காரணம் தமிழகத்திலிருந்து இங்கு இறக்குமதியான இலக்கியங்களை மக்கள் படித்து வந்ததோடு, இங்கேயே பிறந்து, தமிழ்க்கல்வி பெற்று நன்கு எழுதக்கூடியவர்கள் மிகக் குறைவாக இருந்ததும்தான். "1946க்குப் பின்னர்தான், மண்மணம் கமழும் இலக்கியம் படைக்கப்

பட்டது. இந்நாட்டில் பிறந்து வளர்ந்தவர்களால்தான் இந்த மண்ணின் உருவையும் திருவையும் இலக்கியமாக்க முடிந்தது," என்கிறார் மா. இராமையா (1978).

## தமிழ் நேசனின் இலக்கியப் பணி - கதை வகுப்பு

மலாயாவில் நல்ல இலக்கியம் படைக்கப்படவேண்டும், நல்ல சிறுகதை எழுத்தாளர்களை உருவாக்கவேண்டும் என்ற நோக்கத்துடன், *தமிழ்நேசன்* பத்திரிகையில், 50இலிருந்து 51 வரை கந்தசாமி வாத்தியார் என்று பிரியமுடன் அழைக்கப்பட்ட சுப. நாராயணனும், பைரோஜி நாராயணனும், "கதை வகுப்பு" என்ற பகுதியை நடத்தினார்கள். பலரையும் எழுத ஊக்குவித்து, அவற்றைப் பத்திரிகையில் பிரசுரித்து, விமர்சனமும் செய்தார்கள். அந்த வகுப்பில் கலந்து கொண்டவர்களும் கலந்து கொள்ளாமல் பயன் பெற்றவர்களும் பலர். எல்லோருக்குமே கதை வகுப்பு ஒரு தூண்டுகோலாக, பாலபாடமாக இருந்து உதவியது. அநேகர் கதைகளை எழுதிக் குவிக்கலாயினர். அவர்களில் கடும் உழைப் பாலும், புத்திக்கூர்மையாலும் நாளுக்கு நாள் வளர்ச்சி பெற்று வந்தவர்கள் இருபது பேர்களாவது இருப்பர். சுமார் ஓர் ஆண்டே கதைவகுப்பு நடந்திருந்தாலும் அதன் பிரதிபலன் இரண்டு ஆண்டு களுக்கு மேலாகவே இருந்தது என்கிறார் தமிழக முன்னணி எழுத்தாளர்களுள் ஒருவராகத் திகழ்ந்தவரும், *தமிழ் நேசனின்* ஞாயிறு பதிப்பின் முழுப்பொறுப்பை 1952இல் ஏற்றுக் கொண்ட வருமான கு. அழகிரிசாமி (1983).

## மலாயத் தமிழ் எழுத்தாளர் பரீட்சை

மலாயாத் தமிழ் எழுத்தாளர் பரீட்சை ஒன்றையும் கதை வகுப்பு எழுத்தாளர்களுக்காக கந்தசாமிக் குழுவினர் *தமிழ் நேசனில்* நடத்தினர். மொழி, எழுத்து, ரசனை, சிந்தனை, சொந்தக் கருத்துத் தொடர்பான கேள்விகளைப் பொதுத்தலைப்பிலும், கதை வகுப்பு, மனத்தத்துவம், தத்துவம், அரசியல், பொருளியல், மொழிபெயர்ப்பு ஆகியன பற்றிய வினாக்களைச் சிறப்புத் தலைப்பின் கீழும் கொடுத்தனர்.

"கந்தசாமி வாத்தியார் அன்று தொடுத்த கேள்விகளை இன்று பார்க்கும்போது பிரமிப்பும் மலைப்பும் ஏற்படுகின்றது. ஆனால் அன்று முளைத்துவிட்டிருந்த தமிழ் உணர்ச்சியும் ஆர்வத் துடிப்பும் எழுச்சி மனப்போக்கும் பிரமிக்க வைத்தது. .... 75 பேர் மிக உற்சாகமுடன் அந்தத்தேர்வில் கலந்துகொண்டனர்." (மா. இராமையா 1978)

இரண்டு வாரங்களுக்குப்பின், தேர்வின் முடிவுகள் எழுத்தாளரின் தகுதிக்கேற்ப 3 மேதை எழுத்தாளர், 23 சிறந்த எழுத்தாளர், 17 தேர்ந்த எழுத்தாளர், 14 நல்ல எழுத்தாளர், 18 ஆர்வ எழுத்தாளர் என்று தரம் பிரிக்கப்பட்டுப் பத்திரிகையில் வெளிவந்தது.

## இலக்கிய வட்டம்

கு. அழகிரிசாமி, நேசனுக்கு வந்து குவிந்த கதைகளிலிருந்து தரமுடையவற்றைப் . பிரசுரித்து, உற்சாகமூட்டி வந்தார். சுமார் நான்கு வருடங்களுக்குப் பிறகு, இருபது பேர்களுக்காவது சிறந்த எழுத்தாளராகக்கூடிய திறமை உள்ளது என்று அடையாளம் கண்டு, அவர்களுக்காக மீண்டும் ஒரு கதை வகுப்பை கி. மூர்த்தியின் (ரயில்வேயில் உயரிய பொறுப்பில் இருந்தவர்) ஆதரவோடு "இலக்கிய வட்டம்" என்று ஆரம்பித்தார். 100 மைல்களுக்கு அப்பாலிருந்தும் ரப்பர் தோட்டங்களிலிருந்தும் வந்திருந்தார்கள் இலக்கிய ஆர்வலர்கள். ஒவ்வொரு மாதமும், கடைசி சனிக்கிழமையில் கூட்டம் நடந்தது.

சிறுகதையின் இலக்கணங்களைப் பற்றிய சொற்பொழிவுடன் ஆரம்பிக்கப்பட்டு, அடுத்தடுத்த வகுப்புகளில் ஓ' ஹென்றியின் கதை வாசிக்கப்பட்டு, விமர்சிக்கப்பட்டு, பின் உள்நாட்டு எழுத்தாளர்களின் கதைகள் வாசிக்கப்பட்டு, வந்திருந்தவர்கள் விவாதத்திலும், விமர்சனத்திலும் பங்கெடுத்து, ஒவ்வொரு வாக்கியமும் அலசி ஆராயப்பட்டு, பல சிறுகதை நுட்பங்கள் புரிந்து கொள்ளப்பட்டன. கி. மூர்த்தியின் வீட்டில் 10 மாதங்களே நடந்த அந்த இலக்கிய வட்டம் மிகப் பயன் அளித்திருக்க வேண்டும்.

"மலாயாவின் சிறுகதை எழுத்தாளர்களைப் பற்றி இன்று பேசினாலும், இன்னும் நூறு வருடங்கள் கழித்துப் பேசினாலும், தமிழ்நேசனில் நடந்த கதை வகுப்பையும், கு. அழகிரிசாமி நடத்திய இலக்கிய வட்டத்தையும் குறிப்பிடாமல் தீராது. கதை வகுப்பு, இளைஞர்களை எழுதத் தூண்டியது. இலக்கிய வட்டமோ அவர்களை எழுத்தாளர்களாக்கி விட்டது." (மா. இராமையா, 1978:59)

## எழுத்தாளர் பேரவை

*தமிழ் நேசன்* நடத்தியதைப் போன்று, எழுத்தாளர்களை ஊக்குவிக்க *தமிழ் முரசு* 1952இல் எழுத்தாளர் பேரவையை ஆரம்பித்தது. இருநூற்றுக்கும் அதிகமான எழுத்தாளர்கள் பேரவையில் பதிந்து கொண்டனர். தரக்கட்டுப்பாட்டிற்கு அதிக முக்கியத்துவம்

கொடுத்த பேரவையின் இரண்டு விதிகளில் ஒன்று - ஒருவர் எழுதும் கதை, கட்டுரை, கவிதை, நாடகம் எதுவாயினும் இரண்டு மூத்த எழுத்தாளர்களுக்கு அனுப்பித் திருத்தம் பெற்ற பின்னரே பேரவைக்கு அனுப்பி வைக்கப்பட வேண்டும். அடுத்த விதி, ஒவ்வொரு மாதமும், பதிந்துகொண்டவர்கள் அவர்களுடைய படைப்பை அனுப்பி வைக்கவேண்டும். "இந்த விதி பலருக்குக் கிலியை உண்டாக்கியது!" இதனாலேயே அதிக நாட்கள் நீடிக்க முடியாமல் பேரவை மறைந்தது.

## ரசனை வகுப்பு

*தமிழ் நேசனில்* கதை வகுப்பு நடத்திய கந்தசாமி வாத்தியார் *தமிழ் முரசில்* '53இல் ரசனை வகுப்பைத் தொடங்கினார். மக்களுக்கு எளிதாகவும் சொற்பத் தொகையிலும் கிடைக்கும் பொழுதுபோக்கு, வானொலி நிகழ்ச்சிகள். அப்போது சிங்கப்பூரும் மலேசியாவும் ஒன்றாக இருந்த காலகட்டத்தில், மக்களின் பொறுமையைச் சோதிக்கும் அளவுக்கு வானொலி நிகழ்ச்சிகள் ஒலிபரப்பப்பட்டு வந்ததால், ரசனை வகுப்பின் ஆய்வுக்கு வானொலி நிகழ்ச்சிகள் இலக்காயின. பத்திரிகையில் பல்முனைத் தாக்குதல்கள் மேற்கொள்ளப்பட்டன.

## இலக்கியச் சர்ச்சைகள்

வானொலி நிகழ்ச்சிகள் பற்றிய சர்ச்சை காரசாரமாக நடந்துகொண்டிருந்த வேளையில் தாளிகைகளில், அறிவு பூர்வமான வாதத்திறன்களை வளர்ப்பதற்கு, வேண்டுமென்றே சில சர்ச்சைகளை முடுக்கிவிட்டார் கந்தசாமி வாத்தியார். திருக்குறள் அபத்தக் களஞ்சியம் என்று ஒரு பிரளயத்தைக் கிளப்பிவிட்டார். பின், அண்ணா அறிஞரா? என்று 'குதர்க்கமாக'க் கேட்டு வைத்தார். அண்ணாவின் எழுத்தில் தணியாத ஆவல் கொண்டிருந்த பலரை இந்தக் கேள்வி ஆவேசம் கொள்ளச் செய்தது. அண்ணா அறிஞர் தான் என்று பல சான்றுகளுடன் பலர் எழுதிய மறுப்புக் கட்டுரைகளுக்குப் பதில் சொல்லி அலுத்துப் போனார் வாத்தியார்.

அதேபோல், புதுமைப்பித்தன் கதைகள் ஆபாசமானவை என்ற மக்கள் கருத்தினை ஏற்றுக்கொள்ளாத கந்தசாமி வாத்தியாரும் மா.செ. மாயதேவனும், அதற்கு எதிராக தீவிரமாக வாதிட்டு, அவை விரசமற்றவை எனும் ஆய்வுக் கட்டுரைகளைத் தக்க சான்றுகளுடன் எழுதினார்கள். புதுமைப்பித்தன் எழுத்தை முதல் முதலில் ஆய்வு செய்த பெருமை மலாயா எழுத்தாளர்களையே சாரும்.

## தமிழர் திருநாள்

1952இல், *தமிழ் முரசை* நடத்திய தமிழவேள் கோ. சா. தமிழர்களின் ஒருமைப்பாட்டை முன்னிறுத்தி சிங்கப்பூரில் ஆரம்பித்த தமிழர் திருநாள் விழா, மலாயாவின் பல ஊர்களிலும், பட்டிதொட்டிகளிலும் நடத்தப் பெற்று இலக்கிய வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியது. இளைய சமுதாயத்தின் இலக்கிய ஆர்வத் திற்கு "எருவாகவும் கருவாகவும், தமிழ் இலக்கியம் வேரூன்றித் தழைக்க" தமிழர் திருநாள் காரணமாக விளங்கியிருக்கிறது (மா. இராமையா, 1978 : 50). திருநாளின் சிந்தனையை வெளிப் படுத்தும் கவிதைகளே ஓர் ஆயிரத்துக்கும் மேல் இருக்கும்.

## ஒரு சிறுகதையின் எதிரொலி

எந்த அளவிற்கு மக்கள் உள்நாட்டில் படைக்கப்பட்ட இலக்கியங்களோடு ஈடுபட்டிருந்தனர் என்பதற்கு, நா. வரதராசன் எழுதிய *யார் குற்றம்* எனும் சிறுகதைக்கு எழுந்த பெரும் சர்ச்சை ஒரு எடுத்துக்காட்டு. மனைவியை விட்டுக் கணவன் நீண்டகாலம் பிரிந்திருக்கும்போது, மனைவி தவறிவிடுகிறாள் என்ற கருவைக் கொண்ட அந்தக் கதை, அன்று நாடுவிட்டு நாடு வந்து சம்பாத்தியம் செய்து கொண்டிருந்தவர்களைச் சீண்டிவிட்டது. அதை எதிர்த்து எழுதியவர்களுக்கு, மற்றொரு வாசகர் அஞ்சாமலும், விவேகத் துடனும் பின்வருமாறு பதில் எழுதியிருக்கிறார்:

> "சிறுகதைகள் வாழ்க்கையை ஒட்டியதாகவும் வழி காட்டியாகவும் இருக்கவேண்டும் என்பதை உணர்ந்த வர்கள்தாம் இங்கு தெரு மனிதனைக் கதைமனித னாக்கி வாழ்வில் நிகழும் சம்பவங்களை, சிக்கல் களை ஆபாசங்களைக் கருத்தாக அமைத்து கதை பின்னுகிறார்கள். இவை ஆபாசமானவை என்றால் வாழ்க்கை ஆபாசம் அற்றதா? முப்பாலுங் கொண்ட திருக்குறள் எப்பாலரும் விரும்பிப் படிக்க வேண்டு மென்று அறிவுரை கூறப்படுகின்றதே, அதில் இரு நூற்று அறுபது அருங்குறட்பாக்கள் காமத்துப்பாலில் ஏன் இடம் பெற்றுள்ளன? உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலும் கள்ளுக்கில் காமத்துக்குண்டு..."

என்று நீள்கிறது அந்த மறுப்புரை.

## குட்டிக் கதைகள்

*தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கத்தின் ஒருமித்த குரலான சங்கமணி எனும் வாரப்பத்திரிகை 1953இல் துவங்கப் பட்டு, நிறுத்தப்படாமல் இன்றுவரை வெளிவந்து கொண்டிருக்கும் ஒரே பத்திரிகை. ஆரம்பக் காலத்தில் இலக்கியச் சேவையை அதிகம் ஆற்றியது. ஒரு சிறுகதையைப் பலர் தொடர்ந்து எழுதும் புது வழியை அறிமுகப்படுத்தியது. வி.ச. காண்டேகரின் அரும்புக் கதைகளைப் போன்று குட்டிக்கதைகளை வெளியிட்ட பெருமையும் சங்கமணிக்கு உண்டு. இதற்குக் காரணம், செ. குணசேகர் அதன் ஆசிரியராக ஆனது. அவர் கு. அழகிரிசாமியின் மாணவர் என்பது குறிப்பிடத்தக்கது.*

## பத்திரிகைகளின் புறக்கணிப்பு

*ஒரு புறம், திறமையை வளர்த்துக்கொண்டு எழுதிய எழுத்தாளர் களின் எழுத்துக்களை பத்திரிகைகள் வெளியிட்டாலும் அவர் களுக்கு எந்தச் சன்மானமும் வழங்காதது, எழுத்தாளர்களிடையே விரக்தியை ஏற்படுத்தியது. அத்தோடு, எழுதப்பட்ட ஆயிரக் கணக்கான கதைகளையும் கட்டுரைகளையும் கவிதைகளையும் தேர்வு செய்து அவற்றைத் திரட்டுக்களாக வெளியிட அவை எடுத்துக்கொண்ட முயற்சியும் சொற்பமே.*

*"இப்படிப்பட்ட சாதகமற்ற நிலைகள் மாறவேண்டும். எழுத்தாளர்களுக்கு ஊதியமும் உற்சாகமும் கொடுக்கவேண்டும். அப்படிச் செய்தால், அருமையான நவீன இலக்கியம் இந்நாட்டில் தோன்றுவது நிச்சயம்... நல்ல கதைகளை எடுத்துத் தமிழ்நாட்டுப் பத்திரிகைகளும் வெளியிடத் தொடங்கினால், தமிழுக்குப் புதிய தொரு செல்வத்தை ஈட்டும் சீரிய பணியாக இருக்கும் என்பது என் திடமான கருத்து" என்று கு. அழகிரிசாமி, மலாயாவில் பணியாற்றியபோதே கூறியுள்ளார் (1983).*

## சக எழுத்தாளர்களின் சாடல்கள்

*பத்திரிகைகளின் புறக்கணிப்பு ஒருபுறம் இருக்க, சக எழுத்தாளர்களின் சாடல்கள் மறுபுறம். கே. முகமது யூசுப் எழுதிய சில வரிகள்:*

**முன்னை இலக்கியம் படிச்சதுண்டா**
**முறையான செந்தமிழ் பயிற்சியுண்டா - சென்னை**

**இதழ்களில் எடுப்பதன்றி - வேறு**
**சிந்தனைச் "சரக்குகள்" உண்டா?**

*இதற்குச் சாட்டையடி கொடுத்த பல எழுத்தாளர்களுள் சி. வேலுசுவாமி எழுதிய சில வரிகள்:*

**எழுத்துக்கிங்கே கூலியில்லை**
**என்பதெண்ணி அழுகின்றேன்**
**அழுத்தக்காரர் எழுத்தைமதியார்**
**அவரை எண்ணி அழுகின்றேன்**

**என்ன எழுதிக் கிழிக்கின்றார்கள்**
**என்பவர்க்காய் அழுகின்றேன்**
**முன்னை நிலைமை மறந்துவிட்ட**
**மூடருக்காய் அழுகின்றேன்.**

## புறக்கணிப்பின் எதிரொலி – இலக்கிய ஏடுகளின் மலர்ச்சி

*மேற்கூறிய புறக்கணிப்பும், தன்னம்பிக்கையைக் குறைக்கும் சாடல்களும் எழுத்தாளர்களிடையே சோர்வையும் அலட்சியத் தையும் ஏற்படுத்தின. இந்நிலைமை, வெறும் எழுத்தாளனாக இருப்பதைவிட பத்திரிகை ஆசிரியன் எனும் முத்திரையைக் கொள்வதில் தனி இன்பமும் பெருமையும் கொண்டனர் எழுத் தாளர்கள். இந்த ஆர்வம் '55திலிருந்து '66 வரை 52 இதழ்களைப் (மாதிகைகள், கிழமை, வார இதழ்கள்) பல மாநிலங்களில் தோற்றுவித்தது.*

*மா.செ. மாயதேவனின் திருமுகம் (1955), வி.ச. முத்தையாவின் மலைமகள் (1956), மு. அப்துல் லத்தீப்பின் மாணவர் பூங்கா (1956), பொன்னி (1959), மாதவி (1959), கலியபெருமாளின் தமிழ்க் குயில் (1967), டி.வி. இராகவனின் முத்தமிழ் (1969), வி.கு. சந்திரசேகரின் மலர் விழி (1972), மணிமன்ற வெளியீடான மணியோசை (1972), பருவம் (1976) ஆகியவை 20க்கும் மேல் வெளிவந்து கொண்டிருந்த பத்திரிகைகளுள் குறிப்பிடத்தக்கவை. இவை இலக்கியப் பரிசோதனை களை மேற்கொண்டு இந்நாட்டு இலக்கியத்தை வளர்க்கப் பாடு பட்டன என்றாலும் நீண்டநாள் தாக்குப் பிடிக்காமல் போனதற்குக் காரணம் தமிழ்நாட்டு மலிவான, கவர்ச்சியான ஜனரஞ்சக இதழ் களுடன் போட்டிபோட முடியாமையே.*

## எதார்த்த இலக்கியம்

தமிழ்நாட்டின் எழுத்துலகில் ஏற்பட்ட மாற்றங்கள் மலேசிய நாட்டவரையும் வெகுவாகப் பாதித்தன. உள்ளதை உள்ளபடி சொல்வது, பேச்சுவழக்குத் தமிழோடு பிறமொழிச் சொற்களையும் எதார்த்தமாகப் பயன்படுத்துவது (மணிப்பிரவாள நடை), ஐம்புலன் களும் நுகர்வதுபோல் எழுதுவது என்று இதுவே எதார்த்த இலக்கியத்தின் இலக்கணமாக இருந்தது.

கலப்பில்லாத தமிழ் நடையையே நல்ல தமிழ் நடை என்று சுமார் '76 வரை எழுதிவந்த எழுத்தாளர்கள் எதார்த்த இலக்கி யத்திற்கு மாறியது பலருக்குப் பிடித்திருக்காவிட்டாலும் பத்திரிகைகள் இதனை ஆதரித்துக் கதைகளைப் பிரசுரம் செய்தன. இன்று இந்த நடை நிலைத்தும் விட்டது.

## எழுத்தாளர்களின் போராட்டம்

தங்களுடைய எழுத்துக்குச் சன்மானம் தரப்படவேண்டும் என்ற போராட்டத்தின் பலனாக 1962இல், *தமிழ் நேசன்* சிறுகதை களுக்கு 10 வெள்ளியும், கவிதைக்கு 5 வெள்ளியும் தருவதாக ஒத்துக்கொண்டும், கதைக்கு மட்டும் 5 வெள்ளி சிறிதுகாலம் தந்து அதையும் நிறுத்திக் கொண்டது. *தமிழ் மலர்,* வாரந்தோறும் பிரசுரிக்கப்படும் முத்திரைக் கதைக்கு 10 வெள்ளி அன்பளிப்பு கொடுத்து பின் அதையும் நிறுத்திக் கொண்டது.

வானொலி நிலையம் சிறுகதைக்கு 25 வெள்ளியும், அரை மணி நேர நாடகத்திற்கு 50 வெள்ளியும் கொடுத்துக் கொண்டி ருக்கும்போது தாளிகைகளுக்கு ஏன் எழுதவேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி நின்றது.

## பவுன் பரிசுத்திட்டம்

மேற்கூறிய வருத்தம், தமிழ் நேசன் 1972இல் பவுன் பரிசுத் திட்டத்தை அறிமுகப்படுத்தியபோது மறைந்தது. பல பழைய, புதிய எழுத்தாளர்கள் இதனால் பயன் பெற்றனர். போட்டிக்கு உரிய தரக்கட்டுப்பாடும் இயற்கையாக அமைந்தது. இந்தத் திட்டம் அடைந்த வெற்றி கவிதைக்கும் பவுன் பரிசு கொடுக்கும் திட்டத்தை உருவாக்கியது.

## சிறுகதை கருத்தரங்கு

சிறுகதை எழுதுவதிலிருந்த ஆர்வத்தை உணர்ந்து, அதை மேலும் விருத்தி செய்ய, தமிழ் நேசனில் ஆசிரியராகப் பணி யாற்றிய முத்தமிழ் வித்தகர் முருகு சுப்பிரமணியம் தமிழ் எழுத் தாளர் சங்கத்தின் தலைவராகவும் இருந்ததால், சிறுகதைக் கருத் தரங்கைத் துவக்கி வைத்தார். மலேசியப் பத்திரிகைகளில் அச்சேறும் ஒரு மாதத்திற்கான கதைகள் அனைத்தையும் படித்துவிட்டு, மூன்று மூத்த எழுத்தாளர்கள், 50 வெள்ளி பரிசுக்குரிய கதை ஒன்றினை மாதாந்திரக் கருத்தரங்கில் தேர்ந்தெடுத்தார்கள். மலேசியாவுக்குச் சுற்றுலா வந்திருந்த நாவலாசிரியர் அகிலன் இதுபோல் "சுடச் சுட" ஆய்வு செய்யப்படுவது மலேசியாவில் மட்டும்தான் என்று வியந்தார். இந்தத் திட்டம் சிறிது காலமே நீடித்தாலும் பின் 90களில், தமிழ் எழுத்தாளர் சங்கத்தாலும் தமிழ் நேசனாலும் புதுப்பித்து நடத்தப்பட்டது.

## நாவல் இலக்கியம்

தமிழ் நேசன் குறுநாவல் போட்டியை 1979இல் தொடங்கி னாலும், அது அத்திபூத்தாற்போல் ஒருசில வருடங்களே நடந்தது. 1977இல், வானம்பாடி வார இதழைத் தொடங்கிய ஆதி. குமணன், 1980இல், திங்கள் ஒரு நாவல் என்ற திட்டத்தை ஆரம்பித்து, ஒரு நாவல் 1 வெள்ளி விகிதம் 'newsprint'இல் வெளியிட்டார். நடை முறைக்குச் சாத்தியமான முறையில் மிக மலிவான விலையில் வெளியிட்டும், கொள்வார் இல்லை. நட்டத்தை மட்டுமே ஈட்டித் தந்த அந்தத் திட்டம் 11 நாவல்கள் வெளியிட்டபின் 1981இல் முடிவுக்கு வந்தது. மற்றபடி, அன்றும் இன்றும், தாளிகைகளில் அத்திபூத்தாற்போல் நாவல்கள் தோன்றிக்கொண்டு இருக்கின்றன.

## மரபுக் கவிதை இலக்கியம்

தமிழ் முரசும், தமிழ் நேசனும் சிறுகதைகளுக்குக் கொடுத்த முக்கியத்துவத்தைக் கவிதைக்கும் கொடுத்தன. பாரதியாரின் புதுமைக்கவிதைகளும், பாரதிதாசனின் எழுச்சிக் கவிதைகளும் இங்கேயும் பலரின் ஆர்வத்தை வளர்த்தது. 50களில், கவிதைகளில் சொல் நயம், உணர்ச்சித் தெறிப்பு, கருத்தாழம், உவமை நயம் அனைத்தும் இருந்தும் 70க்குப் பின்பே யாப்பிலக்கணத்தைப் புரிந்துகொண்டு எழுதினார்கள் (மா. இராமையா, 1956). இதற்குக் காரணம் சிறுகதைகளுக்கு இருந்ததுபோல் சரியான வழிகாட்டல் மரபுக்கவிதைக்கு இல்லை எனலாம்.

*முருகு சுப்பிரமணியம் (மு.சு) முதலில் தமிழ் முரசிலும், பிறகு தமிழ் நேசனிலும் வெண்பாப் போட்டி ஆரம்பித்து வெண்பா தந்தை என்ற பெயரையும் பெற்றார். அந்நேரத்தில் 'விதண்டா வாத' வாத்தியார் கந்தசாமி மீண்டும் ஒரு பிரளயத்தைக் கிளப்பினார்:*

கம்பர் பிறந்தது கம்பாரில் தானென்று
அன்பர் ஒருவர் அறைகிறார் - தம்பதிலாய்
"கம்பர்லாந்" தில்என்றே காட்டுகின்றார் வேறொருவர்
உம்தீர்ப்பை சொல்வீர் உவந்து

*இதற்கு நகைசொட்டும் 'அக்கப்போர்' வெண்பாக்கள் பதிலாய் வந்தன:*

கம்பர் பிறந்தது கம்பாரில் தானென்றால்
நம்பியா யூரருடன் நாவரசர் - சம்பந்தர்
மூவர் பிறந்தது மூவாரில் தானென்று
நாவடக்கமின்றி நவில் - சேரமான்

*கம்பரூர் கம்பம்பாரு என்ற தலைப்பில்,*

கம்பர் பிறந்தஊர் கம்பாரா என்பதிலே
வம்பை வளர்ப்பாருக்கு வாய் மொழிவேன்
...
கம்பருக்குத் தம்புகழூர் கம்பம்பாராகுமென்றும்
எம்புலவீர் நம்பி இரும் - கரு. வேலுச்சாமி

*இதுபோன்று, ஒரே அறிவு கதியில் (wave-length) இயங்கக் கூடிய ஒரு தளத்தை பத்திரிகைகள் அமைத்துக் கொடுத்தன. தனி மனிதச் சாடல் இல்லாத நகைச்சுவைப் பரிமாற்றங்கள், இலக்கி யத்தை வளர்த்ததோடு ஒரு ஆரோக்கியமான வாசக - எழுத்தாளர் சூழலையும் ஏற்படுத்தியது.*

*80களில், மு.சு. நேசன் ஆசிரியராக இருந்தபோது, நாடறிந்த மூத்த கவிஞர் காரைக்கிழார் அதன் ஞாயிறு பதிப்பாசிரியராக இருந்து, புதுமையானதொரு கவிதைப் போட்டியைத் தொடர்ந்து நடத்தினார்: உதாரணத்திற்கு, இயல், இசை, நாடகம் எனும் மூன்று தலைப்புகளில் முவ்வெவ்வேறு கவிஞர்களை எழுதக்கேட்டு, இவை மூன்றையும் ஒரே ஞாயிறு ஏட்டில் பிரசுரித்திருக்கின்றார். இதுபோல், பல தொடர்புப் பொருளுடைய தலைப்புகளைத் தந்து பலரையும் கவிதையின்பால் ஈர்த்து வைத்திருக்கின்றார் காரைக் கிழார்.*

அவர் பயன்படுத்திய மற்றோர் உத்தி: ஓர் ஈற்றடியைக் கொடுத்துப் பலரும் அந்த ஈற்றடியைக் கொண்டு எழுதுமாறு செய்திருக்கின்றார். அதில் சில குறிப்பிடத்தக்க ஈற்றடிகள் - "வணங்கு தலையே வணங்கு", "கண்சிமிட்டிச் சொன்னால்..." இந்த உத்தி பலரையும் ஆர்வத்துடனும், ஆவலுடனும் கவிதையின்பால் ஈர்த்து வைத்திருக்கின்றது.

## புதுக்கவிதை இலக்கியம்

புதுக்கவிதை, முதன் முதலில் 1965இல், *தமிழ் மலர்* நாளிதழில், சி. கமலநாதன் எழுதிய *காலப்படகுகள்* மூலம் இடம் பிடித்தது. இருப்பினும் அது அவ்வளவு எளிதில் இந்நாட்டில் கால்பதிக்க முடியவில்லை. மரபுக்கவிஞர்கள் புதுக்கவிதையை ஏற்றுக்கொள்ள முடியாமை, கவிதை உலகத்தோரை இரண்டு அணிகளாகப் பிரித்தது. இந்தப் பிரிவு, புதுக்கவிதைக் காரர்களுக்கு வழிவிட்டாற் போல் அமைந்தது. அவர்கள் எழுதத் துடித்துக் கொண்டிருந்ததற்கு வடிகாலாக அமைந்தது ஆதி. குமணன் ஆரம்பித்த *வானம்பாடி* வார இதழ். இந்த இதழ் தந்த அங்கீகாரத்தால் புதுக்கவிதை கவிஞர்கள் பலர் உருவானதோடு மேலும் பலர் உருவாவதற்கு, பல கருத்தரங்குகள் நடத்தவும் இவ்விதழ் வழி கோலியது.

புதுக்கவிதையின் வேக வரவால் இலக்கணக் கட்டுப்பாட்டிற்குள் எழுதவேண்டிய மரபுக் கவிதைகளின் எண்ணிக்கை குறைந்தது காலத்தால் தவிர்க்க முடியாத ஒன்றாகிவிட்டது.

## காவியங்கள்

மு.சு. நேசன் ஆசிரியராக இருந்தபோது செய்த மற்றொரு இலக்கியப் பணி, காவியங்களை ஆதரித்தது. *அணையும் ஆணையும்* (ஐ. உலகநாதன்), *நந்தா விளக்கு* (சி. அன்பானந்தன்), *அலை ஓசை* (காரைக்கிழார்), *அருணோதயம்* (ஞானதாசன்), *தமிழ் வளர்த்த அறிஞர்கள்* (ப. நன்முல்லை) எனும் காவியத் தொடர்களைத் தமிழ் நேசனில் தொடராக வெளியிட்டார். கவிராஜன் *பிள்ளைத் தமிழ்* (1992), *தீயும் தீயும்* (1995) எனும் இரண்டு காவியத் தொடர் களை, அமுத இளம்பரிதி *நண்பனில்* எழுதிவந்தார்.

## மொழிபெயர்ப்பு இலக்கியம்

பிறநாட்டு நல்லறிஞர்
சாத்திரங்கள் தமிழ்மொழியிற்
பெயர்த்தல் வேண்டும்

என்று பாரதி ஆசைப்பட்டான். இருப்பினும் நம் நாட்டுப் பத்திரிகைகளும் எழுத்தாளர்களும் இந்தத் திசையில் செல்ல வில்லை. மற்ற நாட்டு இலக்கிய மொழிபெயர்ப்பை வாசிக்கும் போது நம்முடைய சிந்தனை அகலமடைகிறது, உலகப்பார்வையும் உருவாகிறது. இந்த நம்பிக்கை பலப்பல தமிழ்நாட்டுப் படைப்பு களில் தெளிவாகத் தெரிகின்றது. இவற்றையெல்லாம் படித்தும் கூட, தமிழ்நாட்டு இலக்கியம் டால்ஸ்டாய், கார்க்கி எழுதியது போன்ற தரத்தை எட்டமுடியவில்லை என்கிறார், சாகித்திய அக்காடெமி விருதை வென்ற, தமிழ்நாட்டின் தலைசிறந்த எழுத்தாளர்களுள் ஒருவரான பிரபஞ்சன். தமிழ்நாட்டிலேயே இவ்வாறென்றால் நமக்கான செய்தியை நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

## நேர்காணல் இலக்கியம்

நேர்காணல் ஒரு கலை. கேட்கப்படும் கேள்விகள் கட்ட மைக்கப்பட்டு கூர்மையாகவும் அதேநேரத்தில் கேட்கப்படுபவருக்கு அச்சத்தை ஏற்படுத்தாமல், ஒரு நல்ல உணர்வைக் கொடுக்குமே யானால் அவரிடமிருந்து பல ஆழ்ந்த செய்திகளை வெளிக்கொணர வாய்ப்பிருக்கிறது என்கிறார் முதலில் தகவல் அமைச்சுத் தாளிகையான உதயத்தையும் பின் இதயத்தையும் வெற்றிகரமாக நடத்திய மலேசிய தமிழ்ப் பத்திரிகை உலகின் மூத்த ஆசிரியரான எம் துரைராஜ்.

அவர் உதயம் ஆசிரியராக இருந்தபோது, 32,000 பிரதிகள் அச்சிடப்பட்டு அனைத்தும் விற்றுத்தீர்ந்ததற்குக் காரணம் இது போன்ற நேர்காணல்கள்தான் என்கிறார். எந்தச் சினிமாக் கலப் படமும் இல்லாமல் மலேசியாவிலும் ஒரு தமிழ்ப் பத்திரிகை வெற்றி நடை போட்டுள்ளது! உதயம் பத்திரிகை வெற்றி பெற்ற தற்கு மற்றொரு காரணம் தகவல் அமைச்சு எழுத்தாளர்களுக்குத் தந்த வெகுமதி ஆகும். கதை, கட்டுரை, கவிதை, துணுக்கு, கேலிச் சித்திரம், கேள்வி முதலியவற்றுக்கு ரிங்கிட் 5இலிருந்து ரிங்கிட் 60 வரை வெகுமதியாகத் தந்தது.

## இன்றைய நாளேடுகள்

இன்றைக்கு மக்களிடையே செல்வாக்குப் பெற்று வெளி வந்து கொண்டிருப்பது தமிழ்நேசனும் மலேசிய நண்பனும் ஆகும். இந்த இரண்டு பத்திரிகைகளுமே இலக்கியத்திற்கென்று தங்களின் ஞாயிறுப்பதிப்பின் சில பக்கங்களை ஒதுக்கிப் பெரும் பணி ஆற்றி

வருகின்றன. எழுத்தாளர்களுக்குச் சன்மானம் வழங்கவில்லை என்ற குறையையும் சிறிதளவு தீர்த்து வருகின்றன. நேசன் ஒரு சமயம், சிறந்த ஒரு கதைக்கு 3 தங்கப்பவுனை பரிசாகக் கொடுத்தது. 2004 ஆம் ஆண்டு ஒவ்வொரு மூன்று மாதத்திற்கும் ஒரு தடவை இலக்கியவாதிகளால் பரிசீலிக்கப்பட்ட சிறந்த மூன்று கதைகளுக்கு தலா ஒரு பவுனைப் பரிசாகக் கொடுத்தது. தற்போது மாதம் ஒரு முறை முத்திரைக் கதைக்கென்று 100 ரிங்கிட்டைப் பரிசாகக் கொடுத்துவருகிறது. இந்த ஆண்டு சுதந்திரதின நாளை ஒட்டிக் கதைப்போட்டி நடத்தி முதல் மூன்று பரிசாக ரிங்கிட் 3,000, 2,000, 1,000 என்று அளித்தது. நண்பன், கதைக்கு 50 ரிங்கிட் சன்மானம் கொடுத்துவருகிறது.

## இன்றைய வார, மாத சஞ்சிகைகள்

இன்றைய வார, மாத சஞ்சிகைகள் கதை, கவிதைகள், கட்டுரைகள் முதலியவற்றை வெளியிடுகின்றன. இருப்பினும், இவற்றுள் எதுவுமே தமிழ்நாட்டில் வெளியிடப்படும் சிற்றிதழ்கள் போல் தங்களைத் தரமான, தீவிர இலக்கியத்திற்கு உட்படுத்திக் கொள்ளவில்லை. ஏன் இந்த நிலைமை என்று இதயம் ஆசிரியர் எம். துரைராஜிடம் வினவியபோது, "இங்கு தீவிர இலக்கியம் உருவாகாமல் போனதற்குக் காரணம், நாம் முதலில் குடியேறி வாசிகள். சஞ்சிக்கூலிகளாக வந்து, முதலில் வெள்ளையர்களின் அடக்குமுறையிலும், பின் ஜப்பானியர்களின் கொடூர ஆட்சியிலும் பாதிக்கப்பட்டு, கூன் நிமிர்ந்தபோது, தொலைந்துபோன பழைய இலக்கிய பாரம்பரியத்தை எட்டிப்பிடிக்க முடியவில்லை. அடிப்படை இல்லாது போனதால் நமக்கென்று ஓர் இலக்கியம் அமைத்துக் கொள்ளவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது. சவலைப்பிள்ளை யானாலும் நம்பிள்ளை என்ற நோக்கில் நாங்கள் ஆதரிக்கின்றோம். இந்த இலக்கிய பாரம்பரியம், எழுதுபவர்களுக்கு மட்டுமல்லாது வாசகர்களுக்கும் காலத்தால் மறுக்கப்பட்டதால், அதிகம் சிந்தனையைக் கிளராத இலக்கியத்தையே மக்கள் விரும்புகின்றனர்."

பாவேந்தர் அவர் வாழ்ந்த காலத்திலேயே பாடுகிறார்,

"படக்கலைதான் வாராதா எனநினைத்த நெஞ்சம்
பாழ்படுத்தும் முதலாளி வர்க்கத்தின் செயலால்,
படக்கலையாம் சனியொழிந்தால் போதுமென எண்ணும்!" என்று.

இன்று இந்தச் சனி திரைகளிலிருந்து தாவி, பல சஞ்சிகை களையும் ஊடுருவி அதுவே இலக்கியமாகிக் கொண்டிருக்கிறது. சினிமா இல்லாவிட்டால் சஞ்சிகை விற்காது எனும் நிலை மறைந்து

சினிமாதான் சஞ்சிகை என்று நடத்தப்படும் சஞ்சிகைகளும் இங்குண்டு. இலாபங்களை அங்கீகரிப்பது நீதியாகிவிட்ட சமூகத்தில், நியாயங்களை நிராகரிப்பது அநீதி என்று யார் அவர்களிடம் எடுத்துச் சொல்வது?

சினிமாவுக்கு சமாதி கட்டி, இலக்கிய நோக்கோடு புனரமைக்கப்பட்ட *மயில்* (1986) மூத்த பதிப்பாசிரியர் ஆ. சோதிநாதனாலும் கிருஷ்ணமூர்த்தியாலும் நடத்தப்பட்ட காலத்தில் "இளம் இரத்தங்களின் எழுத்துலக இலட்சிய வேட்கைகளுக்கு ஈடுகொடுத்து புதிய கோணங்களில், புதிய எண்ண அலைகளில் முற்றும் மாறுபட்ட இதழாக அழகுக் கோலமிடுவாள்(மிட்டாள்)". சில வருடங்கள் சீரிய முறையில் கொள்கை உணர்வோடு அந்தப் பத்திரிகை வெளிவந்திருந்தாலும் சினிமாவைக் கொள்முதல் எடுத்த பத்திரிகைகளுடன் போட்டி போட முடியவில்லை.

மூத்த எழுத்தாளர் சீனி நைநா முகமது நடத்திவரும் *உங்கள் குரல்* தீவிர தமிழ் இலக்கணத்திற்கும் இலக்கியத்திற்கும் தன்னை அர்ப்பணித்துக்கொண்டு தள்ளாடி வருகிறது. கொள்வார்கள் என்ற நம்பிக்கையில் அதிகமாக அச்சிட்டு வினியோகித்து பணம் வந்து சேராததால் "கொள்ளார் முன் கடைவிரித்தே சொல்லொண்ணாத் துயரடைந்தவர்கள் நம் முன்னோர்கள். அவர்களின் பட்டறிவு நமக்குப் பாடமாக இருக்கட்டும். எனவே கொள்வார்க்கு மட்டுமே கடைவிரித்து இன்பத்தமிழை இணைந்து வளர்ப்போம்" என்று சூன் 2000த்தில் வெளிவந்த இதழில் கேட்டுக் கொண்டுள்ளார்.

## மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம்

இலக்கிய அமைப்பு என்று இந்நாட்டில் நீண்டகால முத்திரை பதிப்பித்திருப்பது மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம். தனி ஓர் இயக்கமாக 1962இல் அது புனரமைக்கப்பட்ட காலத்திலிருந்து இயங்கி வந்தாலும், பத்திரிகை ஆசிரியர்களின் அரவணைப்பிலேயே வளர்ந்து வந்துள்ளது குறிப்பிடத்தக்கது. முதல் தலைவர் முருகு சுப்பிரமணியம், இரண்டாவது எம் துரைராஜ், மூன்றாவது ஆதி குமணன் ஆவர். தற்போது மூத்த பத்திரிகையாளரான பெ. இராஜேந்திரன் தலைமையில் நடந்துவருவது பத்திரிகையாளர்களுக்கும் இலக்கியத்துக்கும் உள்ள ஈடுபாட்டை மட்டுமல்லாது, பத்திரிகைகளின் அணுக்கத்தில்தான் இலக்கியம் வளர்வதற்குச் சாத்தியக் கூறுகள் இருப்பதை அவர்கள் உணர்ந்திருந்ததையும் காட்டுகின்றது.

## பரிந்துரைகள்

இன்றுவரை, ஓர் ஐம்பது ஆண்டுகாலப் பத்திரிகை வாழ்வினை ஆராயும்போது, பத்திரிகைகளுக்கும் எழுத்தாளர்களுக்கும் ஒரு 'Symbiotic relationship', அதாவது பரஸ்பர அனுகூலங்கள் வேண்டி இசைந்து வாழ்கின்ற உறவுமுறை இருந்து வந்திருக்கிறது என்பது தெரிகிறது.

இருப்பினும், 50களில் பத்திரிகை - எழுத்தாளன் என்ற உறவு முறையில், பத்திரிகைகள் இலக்கை அறிந்த வழிகாட்டியாகவும், எழுத்தாளன் அவ்வழியைப் பயன்படுத்திக் கொள்பவனாகவும் இருந்ததுபோல் இன்று இல்லை என்று தோன்றுகிறது. பத்திரிகைகள் தலைமைத்துவப் பொறுப்புக்களை ஏற்றுக் கொள்ளத் தயங்குகின்றன.

பத்திரிகைகளின் ஆதரவு கதை, கட்டுரை, கவிதைகளை வெளியிடுவதோடு நின்றுவிடுகின்றது. பத்திரிகை வாசிக்கும் அளவிற்கு மக்கள் புத்தகங்கள் வாசிப்பதில்லை; இலக்கிய இயக்கங்களில் சேர்ந்து பயன்பெறுவதில்லை. இந்நிலையில், இலக்கியத்தைத் திட்டமிட்டு ஆக்கபூர்வமான வழிகளில் வளர்ப்பதும், அதன்மூலம் தமிழைத் தக்கவைத்துக் கொள்வதும் பத்திரிகைகளின் தார்மீகக் கடப்பாடாகின்றது.

முன்பொரு காலத்தில் எழுத்தாளர்களுக்குச் சன்மானங்கள் கொடுக்கப்படாவிட்டாலும் இன்று வளம்பெற்ற ஒரு நாட்டில், ஆதாயத்தோடு நடத்தப்படும் பத்திரிகைகள், எழுத்தாளர்களுக்கென்று சன்மானத் தொகையை நல்கி மரியாதை செய்வது, ஒரு நல்உணர்வை எழுத்தாளர்களுக்கு ஏற்படுத்தும். இந்தத் தொகையை நினைத்தபோது தருவதும் பின் நிறுத்துவதும் பத்திரிகைகளின் கொள்கைகளைக் கேள்விக் குறியாக்கும்.

இப்படிச் சன்மானம் கொடுக்கும் பத்திரிகைகள், தங்கள் அனுகூலத்திற்கு, தரக்கட்டுப்பாட்டை விதிக்கலாம். நல்ல இலக்கியத்தையே படைப்போம் என்று ஒரு நிலைப்பாட்டை எடுத்துக் கொள்ளும்போது அவர்களுடைய இலக்கியப் பகுதியின் தரம் உயர்வதோடு தரமான இலக்கியம் பரப்பப்பட்டு அடையாளங் காணப்படுகிறது.

அவ்வப்போது பிரமாண்டமான பரிசுகள் வழங்கப்படுவதைக் காட்டிலும் தொடர்ந்து அளிக்கப்படும் சன்மானத் தொகை எழுத்தாளர்களின் ஆர்வத்தைத் தக்கவைக்கும். பரிசென்று அறிவிக்கும்போது, அதைக் கொடுத்தே தீரவேண்டுமென்ற நிர்ப்பந்தத்தையும் எப்படியோ ஏற்படுத்திக் கொண்டுவிட்டோம். இந்தப்

போக்கு, போட்டிக்குப் பெறப்பட்ட எழுத்துகளில், படித்ததில் பிடித்ததற்கு பரிசைக் கொடுக்கின்ற நிலையை ஏற்படுத்துகிறதே தவிர, எட்டவேண்டிய இலக்கை அவ்வெழுத்துகள் அடைந்திருக் கின்றனவா என்பதைப் புறக்கணித்துவிடுகிறது. தரமில்லாத எழுத்துக்கு பெரிய பரிசுகளைக் கொடுத்து, எழுத்தாளர்களை ஊக்குவிப்பதாக நினைத்துத் திருப்தி அடைகிறோம். இது புகழ்ந்து கொல்வதற்கு ஒப்பானது. இந்நிலை எழுத்தாளர்களுக்குத் தவறான இலக்குகளையே காட்டும்.

ஒரு சில இலக்கிய வடிவங்கள் அதிகமாகவும் ஒரு சில குறைவாகவும் பத்திரிகைகளில் வெளிவருகின்றன. நாடகம், திறனாய்வு மற்றும் மொழிபெயர்ப்பு இலக்கியம் மிகமிகக் குறைவாக வெளிவருகின்றன. இதற்குக் காரணம் இவற்றைப் படைப்பவர்கள் மிகக்குறைவு என்று சொல்லவேண்டுமே தவிர பத்திரிகைகள் படைப்பிலக்கியத்தின் எந்த வடிவத்தையும் புறக்கணித்ததாக வரலாறு இல்லை. இருப்பினும், பத்திரிகைகள் இந்த வடிவங்களின் முக்கியத் துவத்தை உணர்த்தி எழுத்தாளர்களை ஊக்குவித்தால் இலக்கிய உலகம் விரிவடையும்.

இன்று பல இலக்கியப்போட்டிகள் நடத்தப்பெற்றாலும் அவை ஒரு கூடிக் கலையும் திருவிழா போன்று ஆகிவிடுகிறதே அன்றித் தேர்ந்த எழுத்தை விவாதிக்கும் ஒரு தளமாக அமைய வில்லை. இந்நிலையில், பத்திரிகைகள் போட்டிகளில் தேர்ந்தெடுத்த வடிவங்களையும் அதையொட்டிய திறனாய்வுகளையும் பிரசுரிக்கலாம். அத்தோடு உலக அரங்கில் போற்றப்படும் தமிழ் இலக்கிய வடிவங் களை அடையாளம் காட்டி உள்நாட்டுத் தரத்தை வளர்க்கலாம்.

தமிழில் மொழிபெயர்க்கப்பட்ட மற்ற நாட்டு இலக்கியங் களைப் பிரசுரிக்கலாம். அத்தோடு நம் நாட்டு மலாய், சீன இலக்கி யங்களை மொழிபெயர்ப்பதும் வாசிப்பதும் முக்கியமாகின்றது. இது நம் இலக்கியங்களில் அதிகம் காணும் இனத்தாருக்குள் உட்குழு உறவுமுறையைக் (inbreeding) குறைக்கும்; சிந்தனையில் ஒரு விசாலத்தையும் புதுமையையும் ஏற்படுத்தும்.

குற்றம் பார்க்கின் எழுத்தாளர்கள் இல்லை என்ற நம்பிக் கையை விட்டு விலகி, தகுதி உடையவர்கள் எழுதும் திறனாய்வுக் கட்டுரைகளை வரவேற்கவேண்டும். இவை பத்திரிகையின் நிரந்தரப் பகுதியாக ஆக்கப்படும்போது மக்கள் அதனின்றும் கற்றுக்கொள்ள வாய்ப்பிருக்கிறது. இந்தக் குறைநிறைகளைத் திறந்த மனதுடன் ஏற்றுக்கொள்ள இலக்கியப்பகுதி ஆசிரியர்கள் மக்களைப் பக்குவப் படுத்த வேண்டும்.

மேற்கூறியவற்றைப் போன்ற நடவடிக்கைகள் மக்களிடம் பத்திரிகையின்பால் ஓர் உரிமை உணர்வையும் (sense of belonging), ஒரு சொந்தத்தையும் ஏற்படுத்திக் கொள்ள உதவும்.

மேற்கூறிய பரிந்துரைகள் நடைமுறைக்குச் சாத்தியமான வைகளே என்று தோன்றுகிறது. ஆனால், இதற்கெல்லாம் ஒன்றி சைந்த முயற்சி (concerted effort) தேவை.

## நிறைவுரை

நம் பத்திரிகை உலகின் முன்னோடிகளைப் பார்க்குங்கால், பொருளாதார ரீதியில் மிகவும் கஷ்டப்பட்ட காலங்களில்கூட அவர்கள் இலக்கியத்தை ஒரு வேள்வியாகக் கொண்டு நடத்திய போராட்டங்களும், தியாகங்களும் மெய்சிலிர்க்க வைக்கின்றன. அன்று நமக்கென்று ஓர் அடையாளம் தேவைப்பட்டதாலும், வேர்களைத் தேடியதாலும் அந்த அர்ப்பணிப்புகள் தேவைப் பட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது. இன்று, பொருளாதார ரீதியில் தலைநிமிர்ந்திருப்பதாலும், நமக்கென்று ஓர் இடம் இருப்ப தாலும் அன்றிருந்த உத்வேகமும் தேவையும் குறைந்துவிட்டனவோ?

கண்ணதாசன் சொன்னதுபோல், சந்தோஷங்கள் காவியமாக முடியாதா? துன்பங்களிலும் துயரங்களிலும் இருந்துதான் புதிய புதிய நியாயங்கள், தத்துவங்கள், உவமைகள் முகிழ்த்தெழுமா?

## அடிக்குறிப்புகள்

கீழே தரப்பட்டுள்ள பத்திரிகைகளின் பெயர், வருடப் பட்டியல், கிடைத்துள்ள தரவுகளில் 3இல் ஒரு பங்கு மட்டுமே. இடக் கட்டுப்பாட்டால், எம்மாதிரியான தலைப்புகளுடன், எந்த அளவிற்கு இடைவிடாத தொடர்ச்சியுடன் பத்திரிகைகள் வெளி வந்துள்ளன என்பதைத் தெரிந்துகொள்ளவே இந்தப் பட்டியல் தரப்பட்டுள்ளது.

சிங்கை வர்த்தமானி, தங்கை நேசன், ஞான சூரியன், 1875 (சி.கு மசூதும் சாயுபு); தங்கை நேசன் 1976; விஜய கேதனன், 1883; வித்யா விசாரிணி, வாகை நேசன், 1887க்கு முன் - (அ.மு. மரைக்காயர்); சிங்கை நேசன், இந்து நேசன், உலக நேசன், 1887 - (அ.மு. மரைக்காயர்); தேஜோபிமானி, 1896; பினாங்கு வர்த்த மானி, 1897; யதார்த்த பாஸ்கரன், 1902; வர்த்தமானன், 1905; விஜயன், 1907; பினாங்கு ஞான சூரியன், 1912; ஜனோபகாரி, 1914; மகாயுத்த சமாச்சார பத்திரிகை, 1915; சத்தியவான், பாதுகாவலன்,

*1919; தமிழகம், 1921; பொதுஜன மித்திரன், 1923; சிந்தாமணி, 1924 - (பெண்கள் முன்னேற்றத்திற்காக நடத்தப்பட்ட பத்திரிகை - பாலம்மாள்); தமிழ் நேசன், 1924; கலியுக நண்பன், 1928; முன்னேற்றம், 1929; பொனிக்ஸ் கெஜட், 1931; தமிழன், 1931; மலாயா தூதன், 1932; மலாயா மித்திரன், 1932; ஜனவர்த்தமானி, 1932; நவநீதம், 1933; தேச நேசன், 1933; பாரத மித்திரன், 1934; மலாய் மணி, 1935; சமுதாய ஊழியன், 1936; சமரசன், 1936; நூருல் இஸ்லாம், 1936; தேசாபிமானி, 1936; தமிழ் முரசு, 1935; புதுயுகம், 1937; திராவிட கேசரி, 1937; பாரத நேசன், 1939; ஜன்மபூமி, 1939; செந்தமிழ்ச் செல்வி, 1941; சுதந்திர இந்தியா, 1942; சந்திரோதயம், 1942; யுவபாரதம், 1942; மலாயா நண்பன், 1942; ஜெயமணி, 1941; ஜனநாயகம், 1945; நவயுகம், 1946; முயற்சி, 1948; ஸேவிகா, 1944; ஜனோபகாரி, 1949; களஞ்சியம், 1950; நாகரீகம், 1951; சங்கமணி, 1952; சோலை, 1952; ஜோதி, 1954; திருமுகம், 1955; பொன்னி, 1955; மலைமகள், 1956; மாதவி, சக்தி, திருமகள் 1957; முத்தமிழ், 1963; உதயம், 1972; புதிய சமுதாயம், 1977; வானம்பாடி, 1977; தமிழ் ஓசை, 1981; தினமணி, 1981; மயில், 1986; சூரியன், 1987; நயனம், 1988; நாயகன், 1988; தமிழியம், 1990; இதயம், 1992; அரும்பு, 1993; உயர்வோம், 1994; மக்கள் ஓசை, 1994; உங்கள் குரல், 1994; துணைவன், 1994; செம்பருத்தி, 1998.*

## துணையன்கள்


1. மா. இராமையா, 1978. மலேசியத் தமிழ் இலக்கிய வரலாறு.
2. இரா. தண்டாயுதம், 1986. மலாயாப் பல்கலைக் கழக, பண்பாட்டு வார, இலக்கிய இரவில் படைக்கப்பட்ட கட்டுரை.
3. கு. அழகிரிசாமி, 1983. கு. அழகிரிசாமி கதைகள் (இந்த நூலின் முதற் பகுதி அவருடைய கட்டுரைகளுக்காக ஒதுக்கப் பட்டுள்ளது.) அழகிரி சாமி பதிப்பகம், சென்னை.
4. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் 1988ல் நடத்திய வெள்ளி விழா மலர்.
5. மா. இராமையா, 1996. மலேசியத் தமிழ் இலக்கியக் களஞ்சியம்.

# மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் பெயர் பதித்த ஐந்து இலக்கியவாதிகள்

(ந. பச்சைபாலன், மலேசியா)

## முன்னுரை

ஏறக்குறைய 130 ஆண்டுகள் வரலாற்றைக் கொண்ட மலேசியத் தமிழ் இலக்கியப் பரப்பில் எத்தனையோ இலக்கியவாதிகள் தங்கள் படைப்புகளாலும் பயனான பணிகளாலும் அழுத்தமான தடயங்களை ஏற்படுத்தியுள்ளார்கள். அவர்களில், குறிப்பாக நம் இலக்கிய முன்னோடிகளின் பங்களிப்பு காலவெள்ளத்தில் கரைந்து காணாமல் போகாமல் பாதுகாக்கப்பட வேண்டியது மிகவும் முக்கியமாகும். இன்று உள்ள அச்சு வசதியும் ஊடக வளர்ச்சியும் சமூக அங்கீகாரமும் இல்லாத தொடக்க காலக்கட்டத்தில் உண்மையான தமிழ் உணர்வோடு சமூகப் பொறுப்புணர்ச்சியோடு எழுதுகோல் ஏந்தி இலக்கியம் படைத்த நம் முன்னோடிகளை நன்றியோடு நினைத்துப் பார்க்கவேண்டும்.

இந்தக் கட்டுரையில் மலேசியத் தமிழ் இலக்கியத்தில் தடம் பதித்த ஐந்து முக்கிய இலக்கிய முன்னோடிகளின் பங்களிப்பு பற்றி ஆராயப்படும். செந்தமிழ்ச் செல்வர் சி. வீ. குப்புசாமி, கவிதைவேள் கா. பெருமாள், சமூகக் கலைமணி சா. ஆ. அன்பானந்தன், சிறுகதைச் சிற்பி சி. வடிவேல், எம். ஏ இளஞ்செல்வன் ஆகிய ஐவரே அவர்களாவர்.

## செந்தமிழ்ச் செல்வர் சி.வீ. குப்புசாமி

மலேசியத் தமிழ் இலக்கியத்தில் என்றும் நினைவுகூரத்தக்க முன்னோடிகளில் முக்கியமானவர் செந்தமிழ்ச்செல்வர் சி. வீ. குப்புசாமி அவர்கள். 10.04.1915 அன்று பிறந்த இவர் சிறந்த

மேடைப் பேச்சாளர், எழுத்தாளர், மொழிபெயர்ப்பாளர், பத்திரி கையாசிரியர் என பன்முகம் கொண்டவர். தமிழ்த் தொண்டுக்குத் தலைமகனாகத் திகழ்ந்த இவர் கோலாலம்பூரில் இயங்கிய பல இயக்கங்களில் ஈடுபட்டு அவற்றின் தலைவராகவும் ஆலோசக ராகவும் இருந்தார்.

இவர் 1922இல் கோலாலம்பூர் தம்புசாமிப்பிள்ளை தமிழ்ப் பள்ளியில் தம் கல்வியைத் தொடங்கினார். பின்னர், விக்டோரியா இன்ஸ்டிடியூசனில் சீனியர் கேம்பிரிஜ் கல்வியை முடித்தார். 1934இல் தமிழகம் சென்று தனக்கு விருப்பமான பத்திரிகைத் துறையில் ஈடுபட்டுத் தம் அறிவைக் கூர்மையாக்கிக் கொண்டார். சில காலம் தமிழக நாளிதழில் பணியாற்றினார். ஜப்பானியர் காலனித்துவத்தின்போது 1942 முதல் 1945 வரை சிங்கப்பூரில் தங்கியிருந்து இந்திய சுதந்திரக் கழகத்தில் பணிகளில் ஈடுபட்டார். அப்போது சிங்கப்பூரில் இயங்கிய இந்திய தற்காலிக அரசாங்க வெளியீடுகளில் இவரின் கவனம் திரும்பியது. சுதந்திர இந்தியா, யுகபாரதம், சுதந்திரோதயம் ஆகியவற்றுக்குத் தலைமை ஆசிரிய ராகப் பணியாற்றினார். 1951 முதல் 1954 வரை சிங்கப்பூர் தமிழ் முரசு நாளிதழில் துணையாசிரியராகப் பணியாற்றிய அனுபவமும் இவருக்குண்டு. தொடக்க காலத்தில் ஏற்பட்ட இந்தப் பத்திரிகை யுலக அனுபவங்களே வாழ்நாள் முழுமையும் இவரைத் தமிழோடும் தமிழ் இதழ்களோடும் பிணிக்க வைத்தது.

பத்திரிகைத்துறை ஈடுபாடு இவரை எழுத்துத் துறையில் தீவிரமாக ஈடுபட வைத்தது. கட்டுரை, சிறுகதை, நாடகம் என நிறைய எழுதிக் குவித்தார். கோலாலம்பூரில் வெளிவந்த பாரத மித்திரனில் நிறைய மொழிபெயர்ப்புக் கட்டுரைகளும் எழுதி யுள்ளார். உள்நாட்டுப் பத்திரிகைகள் மட்டுமின்றி தமிழக பத்திரிகை களிலும் இவர் படைப்புகள் வெளிவந்துள்ளன. தொழிலாளி, புது உலகம், ஜனநாயகம், குடியரசு (பெரியாரின் பத்திரிகை), பகுத்தறிவு, புரட்சி, பிரசண்டமாருதம், சமதர்மம், அறிவுக்கொடி, வெற்றி முரசு, நகரதூதன், பாரததேவி, அறிவுத்தமிழன், புதுவை முரசு, தமிழ்ச் செல்வன் ஆகிய தமிழ்நாட்டுப் பத்திரிகைகளில் எழுதிக் குவித்த இவரின் எழுத்துத் தாகம் நமக்கு வியப்பைத் தருகிறது.

சிங்கப்பூரிலிருந்து கோலாலம்பூர் திரும்பிய பிறகு தகவல் இலாகாவின் தமிழ் வெளியீட்டுப் பிரிவின் தலைமைப் பொறுப்பில் இருந்தார். மாத இதழ்களான ஜனோபகாரி, வளர்ச்சி, வெற்றி, மலேசியக்குரல், ஜெய மலேசியா, வர்த்தா மலேசியா, பெம்பேனா போன்றவை அவர் பொறுப்பில் வெளிவந்தவையாகும். இந்தக் காலகட்டத்தில்தான் தமிழ் எழுத்தாளர்களோடு இவருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. நாடெங்கிலும் இருந்து தலை

நகருக்கு வரும் எழுத்தாளர்கள் இவரை அடிக்கடி சந்தித்துவிட்டுப் போவார்கள். அவர்கள் அனைவருக்கும் இவர் மூத்த எழுத்தாள ராக விளங்கினார்.

செந்தமிழ்ச் செல்வர் சி.வீ. குப்புசாமி அவர்கள் கால கட்டத்தில் நிறைய நூல்கள் வெளியிடும் நிலை இல்லை. தாம் எழுதிய கட்டுரைகளைத் தொகுத்து நான்கு நூல்களை வெளி யிட்டுள்ளார். அவை 'வருங்கால நவயுகம்' (1937, மொழி பெயர்ப்பு), 'பெரியார் ஈ.வே.ரா.' (1939), 'ஜப்பானிய லாக்கப்பில் ஏழு நாட்கள்', 'ஆரியருக்கு ஒரு வெடிகுண்டு' ஆகியனவாகும்.

இந்த நூல்களைக் கொண்டே சி. வீ. கு., பெரியாரின் சுயமரியாதைக் கொள்கையில் ஈடுபாடு கொண்டவர் என்பது தெள்ளத் தெளிவாகிறது. தம் வாழ்நாள் முழுவதும் அப்படியே வாழ்ந்தார். பெரியாரின் 'குடியரசு' பத்திரிகையில் ஜி. எச். வெல் அவர்களின் உலக வரலாறு என்னும் நூலை மொழிபெயர்த்து எழுதினார். 1954இல் தந்தை பெரியார் மலாயா வந்தார். மலேசியத் திராவிடர் கழகத்தின் முன்னாள் தலைவர் திரு. கா. பா. சாமி அந்த வருகை குறித்து இப்படி எழுதியதாக சங்கநாதம் க. கிருஷ்ணசாமி குறிப்பிடுகிறார்: "தந்தை பெரியார் மலாயா வருகை தந்தபொழுது பெரியார் அவர்களைப் பார்ப்பதற்கு நண்பர் சி. வீ. குப்புசாமி வந்திருந்தார். அப்பொழுது நானும் அங்கி ருந்தேன். தந்தை பெரியாரிடம் கூறினேன், "ஐயா ஊர்ல ஒரு முறை சொன்னீங்க, நண்பர் சி. வீ. கு. சரித்திரத்தைப்பத்தி. அவர் தாங்க இவரு" என்றேன். அதற்கு, "அப்படியா, வாங்க வாங்க! ஏன் இப்ப அந்தச் சரித்திரத்தை விடுதலையில் எழுதுறதுதானே, ஏன் நிறுத்திப்புட்டீங்க ஐயா?" என்று மிகப் பரிவோடு பேசினார்கள்."

செந்தமிழ்ச் செல்வர் சி. வீ. குப்புசாமி அவர்களுக்கு மலேசியத் திராவிடர் கழகத்தோடு நெருங்கிய தொடர்பு இருந்தது. எல்லா ஊர்களிலும் இருந்த சுயமரியாதைத் தோழர்கள் பலர் அவரின் நண்பர்கள். சுயமரியாதைத் திருமணங்களைத் தலைமை யேற்று நடத்தி வைத்தார். தானும் சீர்திருத்தத் திருமணம் செய்து கொண்டார்.

"ஜப்பானிய லாக்கப்பில் ஏழு நாட்கள்" என்ற நூல் இவரின் சிறை அனுபவத்தைக் கூறும் நூலாகும். இவரைக் கம்யூனிஸ்டு களின் அனுதாபி என்று பிரிட்டிஷ் அரசாங்கம் குற்றம் சாட்டிச் சிறையில் தள்ளியது. இது 1948இல் நடந்தது. அன்றைய சிலாங்கூர் மாநில ம. இ. கா. தலைவர் சர்தார் பூத்சிங் அவரை வெளியே கொண்டு வர பலவித முயற்சி செய்தும் பலனளிக்கவில்லை.

ஆயினும், அந்நாளைய சிலாங்கூர் மாநில ம. இ. கா. செயலாளர் க. குருபாதம், திரு. என். டி. ஆர். சிங்கம் ஆகிய இருவரும் பெருமுயற்சி செய்து இவரை வெளியே கொண்டு வந்தனர்.

சி. வீ. குப்புசாமி தாம் வாழ்ந்த காலத்தில் பல இயக்கங் களில் ஈடுபட்டு தம் பங்களிப்பைச் சிறப்பாக வழங்கி வந்துள்ளார். ம. இ. கா., தொழிற்சங்கம், திராவிடர் கழகம், மலாயா தமிழர் சங்கம், மலாயா தமிழ் எழுத்தாளர் சங்கம், தமிழ் இளைஞர் மணிமன்றம் போன்ற அமைப்புகளே அவை. ம. இ. கா. வின் அமைப்பு உறுப்பினர்களில் சி. வீ. குப்புசாமியும் ஒருவர் என்பது வரலாற்றுச் செய்தியாகும். ம. இ. கா. அமைப்புத்தலைவராக இருந்த ஜான் திவிக்கு மிகவும் உறுதுணையாக இருந்தார். சிலாங்கூர் மாநிலக் கிளைக்கு பூத் சிங் தலைவராக இருந்தபோது சி. வீ. கு. செயலாளரானார். பிறகு பல கிளைகளை அமைத்து ம. இ. கா. வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டார்.

இவர் சிங்கப்பூரில் வாழ்ந்த காலத்தில் தமிழவேள் கோ. சாரங்கபாணியோடு தொடர்பு ஏற்பட்டு அவரின் நெருங்கிய நண்பரானார். மலாயாவில் அகில மலாயா தமிழர் சங்கம் பரவு வதற்கு இவர் பெரும் பணியாற்றினார். 1960களில் அதன் கோலா லம்பூர் கிளையின் தலைவராக இருந்தார். நாடெங்கும் அதன் கிளைகள் அமைப்பதிலும், வளர்ப்பதிலும் பெரும் அக்கறை காட்டினார்.

இவர் ஒரு தொழிற்சங்கவாதியாகவும் தம் பங்களிப்பை வழங்கியுள்ளார். 1946 முதல் பல தொழிற்சங்கங்கள் நாட்டில் தோன்றியவண்ணம் இருந்தன. தொழிற்சங்கங்கள் அமைக்க முனைவோருக்கு இவர் துணை நின்றார். சிங்கப்பூரில் பல தொழிற் சங்கங்கள் அமைவதற்கு இவர் வழிகாட்டியாக விளங்கினார்.

திருக்குறளை மலாய் மொழியில் மொழிபெயர்க்கும் பணிக்கும் இவர் துணை நின்றார். பெரியார் திரு. கா. இராமநாதன் செட்டியார் அவர்கள் கோலாலம்பூரில் குறள் இயக்கம் நடத்தி வந்தார். அவ்வியக்கத்தின் குறள் வகுப்பிற்கு சி.வீ. குப்புசாமி ஆதரவு நல்கி வந்தார். அப்போது 75 குறட்பாக்களை மலாய் மொழியில் வெளியிட எண்ணங்கொண்டபோது ரம்லி பின் ஹாஜி தாஹிர் என்பவரை ஏற்பாடு செய்து மொழிபெயர்ப்புக்கு உதவினார் சி.வீ. குப்புசாமி.

அமரர் சி.வீ. குப்புசாமி தொடர்பு கொண்டிருந்த மற்றொரு இயக்கம் மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஆகும். இச்சங்கம் தொடங்க முதல் முயற்சியை மேற்கொண்டவர் அமரர் ஆழி.

*அருள்தாசன். அந்த அமைப்பு சட்டபூர்வமாகப் பதிவு பெற உழைப்பை நல்கியவர்கள் அமரர் சி.வீ. குப்புசாமியும் கவிஞர் சி. வேலுசாமியும் ஆவர். 5.7.1958 இல் எழுத்தாளர் சங்க அமைப்புக் கூட்டம் சி. வீ. குப்புசாமி ஆதரவுடன் கூட்டப்பட்டது. சில ஆண்டுகள் அதன் தலைவராக இருந்தார். அவர் காலத்தில் 'ஏடு' என்ற மாத இதழும் வெளியிடப்பட்டது. அவர் பணியை நினைவு கூரும் வண்ணம் ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்படும் எழுத்தாள ருக்குச் சி. வீ. குப்புசாமி பெயரில் தங்கப்பதக்கம் வழங்கிச் சிறப் பித்து வருகிறது.*

*தமிழ் இளைஞர் மணிமன்றப் பேரவையின் சட்டதிட்டங் களை மொழிபெயர்த்துக் கொடுத்து அதன் காப்பாளராக இவர் ஆற்றிய சேவைக்கு நன்றி பாராட்டும் வகையில் 1968 ஆம் ஆண்டில் சங்கநாதம் க. கிருஷ்ணசாமி தலைமையில் நடைபெற்ற கோலாலம்பூர் மணிமன்ற ஆண்டு விழாவில் 'செந்தமிழ்ச் செல்வர்' எனும் பட்டமளிக்கப்பட்டுச் சிறப்பிக்கப்பட்டார்.*

*தமிழ்த் தொண்டுக்குத் தலைமகனாக, அனைவரிடமும் பழகும் இனிய பண்பினராக, சுயமரியாதையின் சின்னமாக, தனக்கென மட்டும் வாழாமல் பிறர்க்குரியவராக, ஆர்ப்பாட்டம் இல்லாமல் அமைதிப் பணியில் நாட்டமுடையவராக வாழ்ந்து மறைந்தவர் செந்தமிழ்ச்செல்வர் சி. வீ. குப்புசாமி. மலேசியத் தமிழ் இலக்கிய உலகில் இவர் பெயரும் பணிகளும் என்றும் மறையாது நிலைபெறும் என்பதில் கிஞ்சிற்றும் ஐயமில்லை.*

தமிழன் உயர்வே தமதுயர் வாகத்
தந்தவர் வெகு'சன உபகாரி' - பெரும்
இமிழ்கட லாக இயக்கங்கள் தோறும்
இருந்தவர் சி. வீ. குப்புசாமி!

- காரைக்கிழார்

காசினிக்குச் சுமையாகக் கணக்கற்ற உயிருண்டு
கடனுக்கே வாழ்கின்ற பிறவிகளும் பலவுண்டு
மாசினிக்கே உலவுகின்ற மானிடரை விட்டுவிட்டு
மலையகத்தின் திருவிளக்காம் மாத்தமிழர் குப்புசாமி
நேசனையே ஏன்பிரித்தாய்? நெஞ்சமெனும் மாளிகையில்
நீக்கமற நிறைந்தமகன்; நித்திலம்போல் வாழ்ந்தமகன்
பேச்சினிலே எழுத்தினிலே பொதுப்பணிகள் ஆற்றியவன்

- முரு. சொ. நாச்சியப்பன்

## கவிதைவேள் கா. பெருமாள்

'தமிழனுக்குத் தமிழே உயிராம் - அந்தத்
தமிழுக்குத் தமிழனே தூக்குக் கயிறாம்'

என்ற அற்புதமான சிந்தடிகளைப் பாடி, மலேசியத் தமிழர்களின் உள்ளங்களில் நீங்கா இடம்பிடித்தவர் கவிதைவேள் கா. பெருமாள் அவர்கள். மலேசியாவின் கவிதை இலக்கிய வளர்ச்சிக்கு அயராது உழைத்து பெருமை சேர்த்த கவிஞர்களில் குறிப்பிடத்தக்கவர். சிலர் சில துறைகளில் சிறந்து விளங்குவார்கள். ஆனால், கவிஞர் கா. பெருமாள் கலைஞர், கவிஞர், ஓவியர், கட்டுரையாளர், நாவலாசிரியர், நடிகர், நாடக இயக்குனர், மளிகைக்கடையின் பணியாளர், தச்சு வேலை செய்பவர் எனப் பன்முகங்கொண்ட வராக நம்மை வியப்பில் ஆழ்த்துகிறார்.

இவர் 1.10.1923 ஆம் நாளன்று சேலம் மாவட்டம், நாமக்கல் சந்தைப்பேட்டை புத்தூரில் காளியண்ணன் — பழனியம்மாள் தம்பதியரின் ஆறாவது மகனாகப் பிறந்தார். நாமக்கல் ஆரம்பப் பள்ளி படிப்போடு இவருடைய பள்ளி வாழ்க்கை முற்றுப் பெற்றது. இளமை முதலே கலைகளை இரசிப்பதில் ஈடுபாடு காட்டினார். எந்தக் கலையானாலும் அதனைத் தாமும் செய்து பார்க்கவேண்டும் என்னும் சுயமுயற்சி உள்ளவர். சிலம்பாட்டம், ஒயிலாட்டம், ஓவியம் போன்றவற்றையும் கற்றார். நாடகங்களில் நடித்தார். மற்றவர்களையும் பயிற்றுவித்தார். இவரின் கலை ஆர்வத்திற்குச் சிறந்த சான்று, இவர் சர்க்கஸ் கம்பெனி ஒன்றில் சேர்ந்து அங்கும் சில வித்தைகளையும் கற்றுக் கொண்டதாகும்.

கவிதைவேள் கா. பெருமாளும் அவரின் அண்ணன் திரு. சிட்டுக் கருப்பண்ணன் அவர்களும் பெரியார் ஈ.வே.ரா.வின் கொள்கையால் ஈர்க்கப்பட்டு நாமக்கல் திராவிடர் கழகத்தின் சமுதாயப் பணிகளில் தங்களைப் பிணைத்துக் கொண்டனர். அவ்வேளையில் கவிஞர்கள் பாரதிதாசன், சுரதா, முருகு சுப்ர மணியம் போன்றவர்களுடன் நெருங்கிப் பழகும் வாய்ப்பினைப் பெற்றனர். இந்தப் பழக்கமே கவிஞரின் எழுத்துலக ஈடுபாட்டுக்கு உந்து சக்தியாக அமைந்தது எனலாம்.

கவிஞரின் தமக்கை திருமணம் முடித்து மலாயா வந்து கேமரன் மலையில் குடிபுகுந்தபின் 1938ஆம் ஆண்டில் கவிஞரையும் தம்மோடு அழைத்துக்கொண்டார். போ தேயிலைத் தோட்டத்தில் தமக்கை குடும்பத்திற்குச் சொந்தமான மளிகைக்கடையில் வேலை செய்தார். பின்னர், தானாராத்தாவில் பச்சையப்பன் செட்டியார் மளிகைக்கடையில் வேலைக்குச் சேர்ந்தார். கேமரன் மலை

அடிப்படை வசதிகள் இல்லாத, வெளியுலகத் தொடர்பு குறைந்த காட்டுப் பகுதியாக இருந்த காலகட்டம் அது. அந்தச் சூழ்நிலையிலும் கவிஞர் பொது அறிவு நிறைந்தவராக, நுண்ணறிவும் நினைவாற்றலும் பெற்றவராக, நிறையப் படிப்பவராக விளங்கினார். அவரின் அறிவுப் பசிக்குத் தீனியாக தமிழகத்தில் இருந்து தருவிக்கப்பட்ட பத்திரிகைகள், நூல்கள், உள்நாட்டு இதழ்கள் பயன்பட்டன. ஓய்வு நேரத்தில் பத்திரிகைகளுக்குக் கதைகள், கவிதைகள் எழுதினார். இந்தப் படைப்புகளே இவரைச் சிறந்த கவிஞராக அடையாளம் காட்டின. இந்தக் காலகட்டத்தில் கவிஞரோடு பழகும் வாய்ப்பினைப் பெற்ற செவ்விசைச் சித்தர் ரெ. சண்முகம், நடிப்பு, ஓவியம், கவிதை, சிறுகதை என பல்துறை வல்லுனராக, சமுதாய ஈடுபாடு கொண்டவராக, தமிழ்மீது ஆழ்ந்த பற்று கொண்டவராக. கவிதைவேள் கா. பெருமாள் திகழ்ந்ததாகக் கூறுகிறார்.

1942ஆம் ஆண்டு இரண்டாம் உலகப்போரின்போது சுபாஷ் சந்திரபோஸ் ஜப்பானியர் துணைகொண்டு இந்திய தேசியப் படை (I.N.A.) அமைத்து இந்திய இளைஞர்களை அதில் இணைத்து இராணுவப் பயிற்சியளித்தார். கவிஞரும் இந்திய தேசிய இராணுவத்தில் சேர்ந்து போர்ப் பயிற்சியில் தேர்ச்சி பெற்று நாட்டுக்குத் தொண்டும் புரிந்தார்.

1950ஆம் ஆண்டுக்குப் பிறகு கவிஞரின் தேக்கிவைத்த கவிதை ஆறு அருவியாய்ப் பாய்ந்தது. நிறைய கவிதைகளை எழுதினார். விடுதலை, நாட்டுப்பற்று, சமுதாயம், சீர்திருத்தம், மொழி இவற்றைப் பற்றிய கவிதைகளாக அவை அமைந்தன. அவற்றுள் தோட்டப்புறப் பாட்டாளிகளை மையமிட்ட கவிதைகள் முக்கியம் வாய்ந்தவை. "எண்ணெய் தேய்ச்சி குளிக்க வேணும் எழுந்து வாடி வீராயி" என்று தொடங்கும் முதல் அடியிலேயே தோட்டப் புறத்திற்கு நம்மை அழைத்துச் சென்று விடுவார். இவர் எழுதிய கவிதைகளில் சில கண்ணிகள்:

## யாருக்கு ஓட்டு?

**ஆண் :** யாருக்குப் போடட்டும் பெண்ணே? - ஓட்டு
யாருக்குப் போடட்டும் கண்ணே?
தேர்தலில் நின்று ஊராளப் போகின்ற
தியாகிகள் யாரென்று பார்க்கணும்; - நம்ம
ஊரு செழிக்க உழைத்திடப் போகின்ற
உத்தமர் யாரென்று கேட்கணும் (யாருக்கு)

பெண் : தேங்காய்க்கு மூன்று கண்ணுண்டு - நம்ம
சிவனாருக்கும் மூன்று கண்ணுண்டாம் - ரொம்பப்
பாங்காக மக்களின் பண்பறி முக்கூட்டுப்
பலமுள்ள கட்சிக்குப் போடுங்க!

## ஒன்றுபட்டு நில்லடா!

குட்டுப்பட்டுத் தட்டுக்கெட்டுக் குறுணிரத்தம் சிந்தியே
கட்டுப்பட்டுக் கிடந்தகாலம் கப்பலேறிப் போச்சுடா!
தொட்டுத்தொட்டுப் பார்த்துஎம்மைச் சுரண்டிவந்த பேய்களே!
கொட்டுகின்றோம் உரிமைமுரசு கதிகலங்க ஓடுவீர்!

## முத்துமாரி

வெண்கல வட்டிலை வானத்தில் வீசியே
வேடிக்கை செய்தானாம் - பகலவன்
வேடிக்கை செய்தானாம்
கங்குல் அகன்றிட எங்கும் ஒளிபெறும்
காட்சி சமைத்தானாம் - கதிரவன்
காட்சி சமைத்தானாம்
மின்னும் கடலலைப் பெண்ணாளை மோகித்து
வேட்கை உரைத்தானாம் - வெயிலவன்
வேட்கை உரைத்தானாம்

*1950ஆம் ஆண்டு இறுதியில் தமிழ் நேசன் வழி சிறுகதை வகுப்புகள் நடத்தப்பட்டன. அந்த வகுப்புகளின் நோக்கம் புதிய எழுத்தாளர்களை உருவாக்குவதும் பழைய எழுத்தாளர்களை ஊக்குவிப்பதுமாகும். அந்த வகுப்புகள் மூத்த எழுத்தாளராகிய கவிஞருக்குப் பெரிதும் கைகொடுத்தன.*

*1953இல் கேமரன் மலையிலிருந்து கோலாலம்பூருக்குக் குடிபெயர்ந்தார். நாளேடுகளில் இவரின் எழுத்தோவியங்கள் அச்சேறின. தேசிய தோட்டத் தொழிற்சங்கத்தின் கொள்கை ஏடான 'சங்கமணி'யில் துணையாசிரியர் பொறுப்பை ஏற்றார். ஜப்பானியர் காலத்தில் இந்திய தேசிய இராணுவத்தில் தாமும் தோட்டப் பாட்டாளிகளும் அனுபவித்த இன்னல்களைப்பற்றி 'துயரப் பாதை' எனும் நாவலாக 30 வாரங்கள் 'சங்கமணி'யில் எழுதினார். அது மிகுந்த வரவேற்பைப் பெற்றது. 1978இல் அது நூல்*

வடிவம் பெற்றது. அந்தக் காலகட்டத்தில் தகவல் அமைச்சு நாடெங்கும் கம்யூனிஸ்டு எதிர்ப்புப் பிரச்சாரம் செய்ய நிகழ்ச்சி களை நடத்திக்கொண்டிருந்தது. அதற்குத் தேவையான நாடகங் களை எழுதிக் கொடுத்த கவிஞர் பிறகு தானும் அவற்றில் சேர்ந்து நடித்தார். அப்பொழுது அவர் எழுதிய ஏறக்குறைய 50 நாடகங்கள் இறுதிவரை அச்சேறாமல் போனது பெரிய இலக்கிய இழப்பாகும்.

கவிஞரின் தமிழ் ஆற்றலால் மலாயா வானொலியில் பணி யாற்ற வாய்ப்பு கிடைத்தது. அந்த வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொண்டு பல அரிய முயற்சிகளை மேற்கொண்டு வெற்றி பெற்றார். 'கட்டை விரல்', 'வாழ்வின் இறுதி', 'பரமேஸ்வரன்', 'உரைசால் பத்தினி' முதலியவை இவருடைய கவிதை நாடகங் களாகும். 'வீரத்தாய்', 'சுதந்திரத் தந்தை துங்கு', 'இராசேந்திர சோழன்' முதலிய வில்லுப்பாட்டுக்களையும் இவர் படைத்துள்ளார். சொல்திறம், கருத்து வலிமை, எளிய நடை ஆகியவை இவருடைய படைப்புகளின் சிறப்புகளாகும்.

1963ஆம் ஆண்டு முதல் 1979 வரை சிங்கப்பூர் வானொலியில் பணியாற்றும் வாய்ப்பினைப் பெற்றார். மலாயா வானொலியில் இவர் அறிமுகம் செய்து வைத்த வில்லுப்பாட்டு சிங்கப்பூர் வானொலியிலும் ஒலித்தது. தமிழர்களின் கலைகளை, குறிப்பாக கிராமக் கலைகளை மேலோங்கச் செய்யவேண்டும் என்பதில் தீவிரமாகச் செயல்பட்டார். இதுகுறித்து, ரெ. சண்முகம் இப்படிக் கருத்துரைக்கிறார்: "கிராமியக் கலைகளில் அவர் கொண்டிருந்த ஆர்வமும் ஈடுபாடும் கொஞ்சமல்ல. கிராமியக்கலைகள் வாழ்ந்தால் தான் பிற கலைகள் வாழமுடியும் என்று அவர் சொல்வார். வானொலியில் மற்ற கலைகளைவிட கிராமியக் கலைகளுக்கே அவர் சிறப்பிடம் கொடுத்ததைக் கண்டேன்."

சிங்கப்பூரில் வாழ்ந்த காலத்தில் கவிஞரின் எழுத்துத் தவம் தொடர்ந்தது. தம் கணவரின் எழுத்தார்வம் பற்றி அவர் மனைவி திருமதி பாக்கியம் இவ்வாறு கூறுகிறார்:

"திருமணத்திற்குப் பிறகும் புத்தகங்கள் வாங்கும் பழக்கம் அவரிடம் குறையவில்லை. நிறைய வானொலி நிகழ்ச்சிகள் தயாரிக்க இரவு பகல் பாராமல் படித்து எழுதுவார். ஓய்வு எடுப்பது குறைவு என்றே கூறுவேன். அவரின் தமிழ் ஈடுபாடு என்னைப் பிரமிக்க வைத்ததுண்டு."

17.8.1979 ஆம் நாளன்று கவிஞர் காலமானார். இவரின் மறைவுக்குப் பின் 'சிங்கப்பூர் பாடல்கள்', 'அன்பு எனும் தத்துவம்' ஆகிய இரண்டு நூல்கள் வெளியிடப்பட்டன. ஆயினும் இவர்

எழுதிக் குவித்த வில்லுப் பாட்டுகள், நாட்டுப் பற்றுப் பாடல்கள், இலக்கிய நாடகங்கள், இசைச் சித்திரங்கள், உருவகக் கதைகள் ஆகிய அனைத்தும் நூலுருவம் பெற்றால் மலேசிய சிங்கை இலக்கியத்தில் தனிச் சிறப்பாகத் திகழும் என்பது திண்ணம்.

## சமூகக் கலைமணி சா. ஆ. அன்பானந்தன்

'நாம் பொய்
நம் சேவையே மெய்'

என்பதைத் தம் வாழ்வின் தாரக மந்திரமாகக் கொண்டு சமூகச் சேவையில் சிறந்து விளங்கி மலேசியத் தமிழ் நெஞ்சங்களில் நீங்கா இடம் பிடித்தவர் சமூகக் கலைமணி சா. ஆ. அன்பா னந்தன். தமிழ் இளைஞர் மணிமன்றத்தின் தலைவராகப் பொறுப் பேற்ற இவர் இளைஞர்களை அன்பு எனும் கயிற்றால் இணைத்து ஒரு குடையின் கீழ் கொண்டு வந்து அரிய சாதனை செய்தார்.

இவர் சிலாங்கூர் மாநிலத்தின் கோலாகுபுபாருவில் சாமி நாதன் - ஆச்சியம்மாள் இணையருக்கு 5.2.1939 அன்று மகனாகப் பிறந்தார். இலட்சுமிகாந்தன், இலட்சுமி மணாளன், கோவலன், புரட்சிக்கனல், மலர், மணிப்புறா, நக்கீரன் ஆகிய புனைபெயர் களில் எழுதிய இவரின் இயற்பெயர் சுப்ரமணியம் என்பதாகும். செரண்டா சிற்றூரை அடுத்துள்ள சுங்கை காப்பித் தோட்டத்தில் தமிழ்க்கல்வியைப் பெற்றார். பின்னர் கோலாலம்பூருக்குக் குடியேறிய பின் இரவு நேர ஆங்கில வகுப்புகளில் சேர்ந்து ஆங்கில அறிவு பெறும் வாய்ப்பு கிட்டியது.

1952 முதல் 1962 வரை சில தனியார் நிறுவனங்களில் வேலை செய்தார். 1963 முதல் தொலைபேசி அலுவலகத்தில் பணியில் சேர்ந்தார். அதே ஆண்டில் மலேசிய வானொலியில் பகுதி நேரக் கலைஞராகவும் பணியாற்றத் தொடங்கினார். 1958இல் ரவாங் தென்னைமரம் தோட்டத்தில் செந்தமிழ்ச்செல்வர் சி. வீ. குப்புசாமி தலைமையில் இலட்சுமி என்ற பெண்மணியைச் சீர்திருத்தத் திருமணம் செய்துகொண்டார்.

“வீராசாமியின் வீம்பு” என்ற கதையை முரசு மணிமன்ற மலரில் 1958இல் எழுதியதன் மூலம் இவர் எழுத்துலகில் அடி யெடுத்து வைத்தார். 1959இல் தகவல்துறையின் 'ஜனோபகாரி' இதழில் இவரின் 'மனமும் மங்கையும்' என்ற கதை வெளிவந்தது. இலக்கிய உணர்வை ஊட்டி இவரை எழுத்துலகில் ஆற்றுப் படுத்தியவர்களாக பேரறிஞர் அண்ணா மற்றும் கலைஞர்

மு. கருணாநிதியைக் குறிப்பிடுகிறார். நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள், ஆயிரத்துக்கும் அதிகமான கவிதைகள், நூற்றுக் கணக்கான வானொலி நாடகங்கள், மேடை நாடகங்கள், நகைச் சுவைச் சித்திரங்கள், தொடர் கட்டுரைகள், ஆய்வுக்கட்டுரைகள் முதலானவற்றை அன்பானந்தன் படைத்துள்ளார்.

தமிழகத்தின் 'தீபம்' இலக்கிய இதழில் இவரின் 'ஏணிக் கோடு' சிறுகதை 1972 இல் பிரசுரமானது. அந்த ஆண்டில் 'தீபம்' இதழ்கள் அனைத்திலும் சிறந்த சிறுகதையாக 'ஏணிக்கோடு' மதுரை இலக்கிய வட்டத்தினரால் தேர்வு பெற்றது. அதே ஆண்டில் இவரின் 'ஓடும் பிள்ளை' சிறுகதை தமிழ் நேசன் நாளிதழின் பவுன் பரிசினைப் பெற்றது. தோட்டப்புற மக்களின் வாழ்க்கையை, அவர்களின் வட்டார வழக்கு மொழியை நன்கு உள்வாங்கிக் கொண்ட படைப்பாளனாய் இவரை அவை அடையாளம் காட்டின.

சிறுகதையிலிருந்து பரிணாம வளர்ச்சியாய் தொடர்கதை களும் எழுதினார். 'மரவள்ளிக்கிழங்கு' தொடர்கதை தமிழ் நேசனில் 10 வாரத் தொடராக வெளிவந்தது. ஜப்பானியர் ஆட்சியில் மரண ரயில்வேயை அமைப்பதில் தோட்டப்புறப் பாட்டாளிகள் எப்படிப் பலிகடாக்களாக ஆக்கப்பட்டார்கள் என்பதை இந்நாவலில் சிறப்பாகக் காட்டியிருந்தார். இதிலும் தோட்டப்புற மக்களின் பழக்கவழக்கங்கள், நடைமுறைகள், அவர்களின் பேச்சு வழக்கு யாவும் துல்லிதமாகக் காட்டப்பட்டி ருந்தன. 'உண்மைகள்' என்னும் தொடர்கதை 'புதிய சமுதாயம்' இதழில் வெளிவந்து நல்ல வரவேற்பைப் பெற்றது.

கவிதைத் துறையிலும் இவர் பங்களிப்பு போற்றுதலுக் குரியது எனலாம். 1958 இல் இவரின் முதல் கவிதை மாணவர் மணிமன்ற மலரில் வெளிவந்தது. சிறுகதைகள், கட்டுரைகள் போன்று கவிதைகளிலும் இவரின் சமுதாய உணர்வே மேலோங்கி நின்றது. எடுத்துக்காட்டு கவிதை ஒன்று:

## ரப்பரும் தமிழனும்

எங்கிருந்தோ தமிழனைப்போ லிங்கொழுந்து
    நிலம்பார்த்துத் தன்னை ஊன்றித்
தங்கமகன் ஒளியாலும் கங்கையவள்
    அருளாலும் செம்மை ஊறி
மங்கலமாய் இலைவிரித்து மலர்ந்தாளாம்
    ரப்பர்எனும் மங்கை; பேர்த்துத்

தங்கமுடி மணிவைத்தல் போல்நிரையில்
வைத்திட்டார் செல்வம் பெற்றார்!
சங்குநிறப் பால்பொழியும் தங்கமரச்
செல்வங்கள் சொட்ட ஈந்து
தங்கடமை முடித்துவிட்டு தனையழிக்க
கொடுத்துவிட்டு சாய்தல் போலச்
செங்குருதி நீராக்கிச் செம்புடலை
உரமாக்கிச் சாய்ந்து போக
அங்கிருந்து வந்தானோ? அவனுக்கும்
ரப்பருக்கும் மாற்றம் காணேன்!

*சா. ஆ. அன்பானந்தன் எழுதிய படைப்புகள் தமிழர்களின் விழிப்புணர்வுக்கும் இளைஞர்களின் முன்னேற்றத்திற்கும் தூண்டு கோலாக அமைந்தன. இவர் எழுதிய படைப்புக்கள் தொகுக்கப் பட்டு இதுவரை ஐந்து நூல்கள் வந்துள்ளன. அவை 'காலத்தின் விளக்கு' (சிறுகதைகள், 1979), 'நயனங்கள்' (கவிதைகள், 1979), 'மர வள்ளிக் கிழங்கு' (குறுநாவல், 1979), 'நான் யார்?' (கட்டுரைகள், 1979), 'திருப்பம்' (நாடகம், 1979) ஆகியனவாகும்.*

*1948 முதல் இவருக்குக் கலையுலக ஈடுபாடும் ஏற்பட்டது. சுங்கை காப்பித் தோட்டத்தில் தீபாவளியை முன்னிட்டு அரங் கேற்றம் கண்ட 'பவளக்கொடி', 'பாமா விஜயம்' ஆகிய நாடகங் களில் நடித்ததே இவருடைய முதல் கலையுலகப் பிரவேசமாகும். பின்னர், கலைஞரின் 'ஒரே முத்தம்' நாடகம் 'துரோகி' எனும் தலைப்பில் மேடையேற்றம் கண்டபோது இவர் அதில் நடிக்கும் வாய்ப்பினைப் பெற்றார். அதன் வாயிலாக கோலாலம்பூர் நாடக மேடைகளில் தொடர்ந்து நடிக்கத் தொடங்கினார். இத்தகைய வாய்ப்புகளே வானொலியிலும் சிறந்த நடிப்பை இவர் வழங்க வழியமைத்தது.*

*தானுண்டு தன் குடும்பமுண்டு என சுயநல வேலியிட்டுக் கொண்டு ஒரு வட்டத்தில் முடங்கிவிடாமல் சமுதாய இயக்கங் களில் ஈடுபட்டு இளைஞர்களுக்குச் சிறந்த வழிகாட்டியாக வாழ்ந்தவர் சா. ஆ. அன்பானந்தன். தொடக்கத்தில் செந்தூல் வாலிபர் சங்கத்தில் உறுப்பினராகிச் சேவையாற்றினார். அதன் பின்னர், அகில மலாயாத் தமிழர் சங்கம், மலாயாத் தமிழ் எழுத்தாளர் சங்கம், மலேசியக் கலைஞர் இயக்கம், கவிதைக் களம் போன்ற இயக்கங்களில் முக்கியப் பொறுப்பையேற்றார். நேசா கூட்டுறவுக் கழகத்தில் இயக்குநராகவும் மாஜு ஜெயா கூட்டுறவுக் கழக அமைப்பாளராகவும் அதன் துணைத் தலைவராகவும் பணி யாற்றினார். 1964 ஆம் ஆண்டு பினாங்கில் நடைபெற்ற மணிமன்*

...றங்களின் முதல் மாநாட்டில் மணி மன்ற பேரவை அமைக்கப் பட்டபோது அதன் முதல் தலைவராக நியமிக்கப்பட்டார். தமிழ் இளைஞர்களை ஒன்றிணைப்பதை முக்கிய நோக்கமாகக் கொண்டு 1972 வரை மணிமன்றப் பேரவையின் தேசியத் தலைவராகப் பணியாற்றினார். தலைமைப் பொறுப்பிலிருந்து விலகிய பின்னரும் இறுதிக் காலம்வரை சிறப்புத் தலைவராக விளங்கினார்.

அன்பு, அடக்கம், ஒழுக்கம், ஒப்புரவு முதலாய பண்பு நலன்களைக் கொண்டு இளைஞர் பலருக்கு வழிகாட்டியாக விளங்கிய இவருக்கு மாமன்னர் 'பி. பி. என்.', 'ஏ. எம். என்.' விருதுகளை வழங்கிச் சிறப்பித்தார். சமுதாயம் 'சமூகக் கலை மணி' என்னும் விருதை வழங்கிப் பெருமைப்படுத்தியது. அரிய தொண்டினால் ஆயிரமாயிரம் இளைஞர்களின் மனத்தில் நீங்கா இடம்பிடித்த சா. ஆ. அன்பானந்தன் 26.5.1980ஆம் நாளன்று பூத உடம்பு மறைந்து புகழ் உடம்பை அடைந்தார்.

அன்னை மலேசியத்தில் ஆற்றல் மிகும்விதத்தில்
கன்னற் றமிழ்வளர்த்த கோவலனே நீஎங்கே?

மன்றச் சிறப்புயர மாநிலம் நன்மைபெற
மண்ணில் புகழ்மிளிர மன்பதை சீர்பெருக

என்றும் விழித்திருந்து இன்னல் பொறுத்திருந்து
தன்னை மறந்திருந்து தன்னலம் விட்டிருந்து

தொண்டுப் பெருமகனாய் தோழமை கொண்டவனே
அன்பிற் கொருமணியாய் ஆனவா நீஎங்கே?

-டி. வி. இராகவன்பிள்ளை

## சிறுகதைச் சிற்பி சி. வடிவேல்

மலேசியத் தமிழ் இலக்கியத்தில் 43 ஆண்டுகள் சமுதாய உணர்வுமிக்க படைப்புகளால் அழுத்தமான தடயங்களை ஏற்படுத்தியவர் சிறுகதைச் சிற்பி சி. வடிவேல் அவர்கள். தமிழ்ப் பள்ளித் தலைமையாசிரியராக, எழுத்தாளர் சங்கத் தலைவராக, தமிழாசிரியர் கூட்டுறவுச் சங்க நிறுவனராக, நெகிரி மாநில இந்து தர்ம மாமன்றப் பொறுப்பாளராக பல இயக்கங்களில் துடிப் பாகச் செயல்பட்டு சிறந்த எடுத்துக்காட்டாக இவர் விளங்கினார்.

இவர் கெடா அலோர்ஸ்டாரில் 23.2.1929இல் பிறந்து நெகிரி செம்பிலானில் வளர்ந்தார். இளமையில் சிறந்த விளையாட்டாள ராகத் திகழ்ந்தார். ஆசிரியர் பணியில் ஈடுபட்டு தலைமை

யாசிரியராக ஓய்வுபெற்றார். மலாயாத் தமிழ்ப்பண்ணையில் மூன்றாண்டுகள் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தம் தமிழாற்றலை வளர்த்துக்கொண்டார். தமிழ்ப் பண்டிதர் வகுப்பிலும் ஒன்றரை ஆண்டுகள் பயின்றார். அதோடு, தமிழ் நேசன் கதை வகுப்பு, கு. அழகிரிசாமியோடு கொண்ட இலக்கிய உறவு இவரின் இலக்கியத் திறனை மேலும் வளர்த்தன.

1949இல் தமது இருபதாவது வயதில் எழுத்துத் துறையில் ஈடுபட்டார். முதலில் கட்டுரை எழுதத் தொடங்கி, கவிதையில் ஆர்வங்கொண்டு பின்னர் சிறுகதையில் நிலைகொண்டார். பழந் தமிழ் இலக்கியங்களை ஆழ்ந்து பயின்று அதனால் பெற்ற இன்பத்தைப் பிறரோடு பகிர்ந்துகொள்ளும் உணர்வே இவரை எழுதத் தூண்டியிருக்கிறது. இவர் வடித்த கட்டுரைகளில் விரவி வரும் பழந்தமிழ் இலக்கியச் செய்திகள் இந்த உண்மையை உறுதி செய்கின்றன. 1950களில் இவர் எழுதிய இலக்கியக் கட்டுரைகள் தமிழ் நேசனில் வெளிவந்தன. 'காதலோ காதல்', 'அழுமூஞ்சியும் கண்ணாடியும்', 'கலை வளருகிறது', 'அவையடக்கம்' போன்ற கட்டுரைகளில் இவரின் நகைச்சுவை உணர்வையும் இலக்கியத்தில் கொண்ட ஆழ்ந்த ஈடுபாட்டையும் காணமுடிகிறது. பின்னர், இலக்கியத் திறனாய்வு, தமிழ்க் கல்வி, இந்து சங்கம் பற்றிய கருத் தரங்குகளில் கட்டுரைகள் பலவும் படைத்த அனுபவம் இவருக் குண்டு. தேசிய நிலநிதி கூட்டுறவுச் சங்கம் 10ஆம் ஆண்டு விழாவில் நடத்திய கட்டுரைப் போட்டியில் முதல் பரிசாக தங்கப்பதக்கம் பெற்றார்.

கவிதைத் துறையிலும் ஆர்வங்கொண்டு அவ்வப்போது கவிதைகள் எழுதி வந்தார். ஆனாலும் சிறுகதை படைப்பதிலேயே ஆர்வம் மிகுந்ததால் கவிதையில் இவரின் தொடர் முயற்சியைக் காணமுடியவில்லை. தோட்டத் துண்டாடலில் தமிழர் பட்ட துயரையும் துன் சம்பந்தன் கண்ட கூட்டுறவுச் சங்கத்தையும் இப்படிப் பாடுகிறார்:

தூண்டிற் புழுப்போல் துடித்தே நின்ற
துண்டாடல் தோட்டத் துயருறு மாந்தர்க்குக்
கொண்டாட்ட மாகும் கூட்டுற வெனுஞ்சொல்!
நாட்டில் வாழும் நல்லார் போற்ற
எங்கும் வாழும் எத்திறத் தாரும்
துங்கும் தூய துன்டான் சியூசினும்
பொங்கியே புகழெனும் மாலை சூட்டினர்

கட்டுரை, கவிதை, சிறுகதை என மூன்று துறைகளிலும் ஈடுபட்டாலும் சிறுகதை இலக்கியம்தான் இவரை அடையாளப்

படுத்தியது. 13.9.1953இல் தமிழ் முரசில் இவரின் முதல் சிறுகதையான 'துன்பச் சங்கிலி' வெளிவந்தது. இவர் வெளியிட்டுள்ள 'வள்ளுவனின் காதலி', 'இருண்ட உலகம்', 'புதிய பாதை' ஆகிய மூன்று சிறுகதைத் தொகுப்புகளில் இருபத்திரண்டு கதைகள் இடம்பெற்றுள்ளன. இவையே இன்றைய ஆய்வாளர்களுக்குக் கிடைக்கும் இவரின் சிறுகதைகளாகும். ஆயினும் 1950 முதல் பல்வேறு நாள், வார, மாத ஏடுகளில் வெளிவந்த இவரின் கதைகள் ஐம்பதுக்கும் அதிகமாக இருக்கலாம்.

சிறுகதையை ஒரு வெறும் கலை இன்பமாகவோ பொழுது போக்காகவோ நினைக்காதவர் சி. வடிவேல். இக்கலையை எப்பொழுதும் அதன் பயன் கருதியே பயன்படுத்துவார். தாம் படைக்கும் சிறுகதைகள் படிப்பவர்களுக்குப் பயனுள்ள வகையில் அமையவேண்டும் எனத் திட்டமிட்டுக்கொண்டே இவர் கதைகள் படைத்துள்ளதை மூன்று சிறுகதைத் தொகுப்புகளும் மெய்ப்பிக்கின்றன. இதற்கு இவரிடம் மேலோங்கியிருந்த ஆழ்ந்த சமுதாயப் பொறுப்புணர்ச்சிதான் காரணம். அதனால் தனிமனித சிக்கல்களைவிட சமுதாயச் சிக்கல்களே இவரின் கதைகளில் முக்கியத்துவம் பெறுகின்றன. தனிமனிதச் சிக்கல்களாக இருந்தாலும் அவற்றைச் சமுதாயப் பின்னணியில் படைப்பதையே விரும்புகிறார்.

சி. வடிவேலின் சிறுகதைகளில் நடை, கதைப் பின்னணி, வர்ணனை போன்ற கூறுகள் மேலோங்கி நிற்பதைக் காண முடிகிறது. ஆற்றொழுக்கு போன்ற சரளமான தமிழ் நடையால் படிப்பவரை இவரின் கதைகள் எளிதில் கவர்ந்து விடுகின்றன. தமிழகப் பின்னணி, தோட்டப்புறம், ஜப்பானியர் ஆட்சி, பூர்வ குடிகள் வாழ்க்கை, மலாய்க்காரர் - சீனர் வாழ்க்கை எனப் பல்வேறு பின்னணிகளையும் வாழ்க்கை முறைகளையும் தம் கதைகளில் சிறப்பாகப் படைத்துக் காட்டியுள்ளார். பழந்தமிழ் இலக்கியத்தின் மீது கொண்ட கா்தலால் இனிய வர்ணனைகள் கதைகளில் ஆங்காங்கே தலை காட்டுகின்றன.

'வள்ளுவரின் காதலி' சிறுகதைத் தொகுப்பு பற்றி சி. வீ. குப்புசாமி இப்படிக் கருத்துரைக்கிறார்: "இந்தத் தொகுப்பின் ஏழு கதைகளிலும் மக்களின் பண்புநலமும் குணவிசித்திரமும் ஆராயப் படுகின்றன. தத்துவக் கதைகள் எழுதும் லா. ச. ராமாமிர்தம், ந. பிச்சமூர்த்தி போன்றோரின் உத்திகளை சி. வடிவேல் கையாண்டுள்ளதைச் சில இடங்களில் நாம் காணமுடிகிறது". தமிழ் நேசன் பவுன் பரிசுப் போட்டியில் பரிசு பெற்ற 'கண்ணன் ரிமூவ் வகுப்பில் படிக்கிறான்' என்ற சிறுகதை பலரின் கவனத்தை ஈர்த்த கதையாக அமைந்துவிட்டது. தமிழ்ப்பள்ளியில் படித்து இடைநிலைப்பள்ளியில் ரிமூவ் வகுப்பில் சேரும் மாணவர்களைச்

சமுதாய உணர்வில்லாத நம்மின் ஆசிரியர்களே வெறுத்து ஒதுக்கு வதைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

எழுத்துப்பணியோடு இயக்கப்பணிகளிலும் தம் பங்களிப்பை இவர் நிறைவாக வழங்கியுள்ளார். மலேசியாவில் முதன் முதலில் தமிழாசிரியர்களுக்கென கூட்டுறவுச்சங்கம் அமைத்து பல ஆண்டுகள் அதன் வளர்ச்சிக்காகப் பாடுபட்டார். அத்துடன் நெகிரி மாநிலத்தில் ஆசிரியர் தொழிற்சங்கத்தை அமைத்ததுடன், சிரம்பானில் முதன் முதலில் மணி மன்றம் அமைத்து அதன் தலைவராகி இளைஞர் களுக்கு வழிகாட்டியாக விளங்கினார். தமிழ்ப் பள்ளிகளின் வளர்ச்சிக்காக கல்வி இலாகா ஆதரவுடன் கல்வி வளர்ச்சிக் குழு ஒன்றை அமைத்து மாணவர்களுக்கும் வழிகாட்டியாக இருந்தார்.

நெகிரி செம்பிலான் மாநிலத் தமிழ்ப்பள்ளி மாணவர்களி டையே சமயச் சிந்தனையை ஏற்படுத்தும் நோக்கில் நெகிரி மாநில இந்து சமயக் கலாச்சார மன்றத்தை உருவாக்கினார். எட்டு ஆண்டுகள் தலைவராக இருந்து இம்மன்றத்தை வழிநடத்தினார். வட்டார மாநில அளவில் திருமுறை ஓதும் போட்டி, நாடகம், பேச்சுப்போட்டிகளை ஏற்பாடு செய்து தமிழும் சமயமும் பரவ வழி செய்தார். 5ஆம் 6ஆம் படிவ மாணவர்களுக்கு இலவச இலக்கிய வகுப்புகளை நடத்தி இலக்கியத்தின்பால் அவர்களை ஈர்க்கச் செய்த பெருமை இவரையே சேரும்.

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவராக (1974 1980) ஏழு ஆண்டுகள் பொறுப்பு வகித்தார். இவர் காலத்தில் சிறுகதை ஆய்வுக் கருத்தரங்குகள் பல நடந்தன. சங்கச் சார்பில் சிறுகதைப் போட்டிகள் நடத்தப்பட்டு தேர்வு பெற்ற கதைகள் 'பரிசு' எனும் தலைப்பில் தொகுத்து வெளியிடப்பட்டன. கவியரங்கு களில் தேர்வுபெற்ற கவிதைகளைத் தொகுத்து 'அரங்கேற்றக் கவிதைகள்' என்னும் கவிதைத் தொகுப்பையும் எழுத்தாளர் சங்கம் வெளியிட்டது. மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கப் பொறுப்பிலிருந்து விலகிய பின், நெகிரி செம்பிலான் தமிழ் எழுத்தாளர் சங்கத்தை உருவாக்கி நான்கு ஆண்டுகள் தலைவராகப் பொறுப்பேற்றார் (1983 - 1986). அப்போது இலக்கியக் கலந்துரை யாடல்கள், திறனாய்வுக் கருத்தரங்குகள் பல நடந்தன.

தம் எழுத்து மற்றும் இயக்கப் பணிகளுக்காக இவர் பல பரிசுகளும் விருதுகளும் வழங்கிச் சிறப்பிக்கப்பட்டுள்ளார். சிறுகதை களுக்காகப் பலமுறை பரிசுகளை வென்றிருக்கிறார். 1974ஆம் ஆண்டு சிரம்பானில் நடைபெற்ற தமிழ் இளைஞர் மணிமன்றங் களின் மாநாட்டில் 'சிறுகதைச் சிற்பி' எனும் விருது வழங்கப் பட்டது. அரசாங்க விருதான PPN (1978), தமிழகத்தின் வி.ஜி.பி.

*சகோதரர்களின் பாராட்டு (1984), மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் கோ. சா. விருது (1988) என சிறப்புக்களைப் பெற்றுள்ளார்.*

*தன்மானமும் தன்னம்பிக்கையும் உடைய நெறியாளராக, எந்தச் செயலையும் திட்டமிட்டு நடத்தும் திறன் படைத்தவராக, இலக்கியம் வழி சமூக மாற்றத்திற்கு வித்திட முடியும் என்பதில் நம்பிக்கை உடையவராக வாழ்ந்த சிறுகதைச் சிற்பி சி. வடிவேல் 5.4.1992 அன்று அமரரானார். இவர் பணியை நினைவுகூர்ந்து இவர் குடும்பத்தினர் 1993இல் ஒரு நினைவு மலரை வெளியிட்டுள்ளனர்.*

சிறுகதைச் சிற்பி யே!எம் சிவனடி வேலோய்! இன்று
சிறுகதை இலக்கி யம்தன் சேயதை இழந்தே கண்ணீர்
பெருக்கிடும் சோகத்தீயில் பெருந்துயர் கண்ட தைய்யோ!
இறப்பது மெய்யாம்! உன்றன் இலக்கியம் வாழும் மெய்யாய்!

- சீமா. இளங்கோ

## எம். ஏ. இளஞ்செல்வன்

*மலேசியாவின் தலைசிறந்த புத்திலக்கிய எழுத்தாளர்களில் ஒருவராக நம் மனங்களில் இடம் பிடித்தவர் எம். ஏ. இளஞ் செல்வன். இவர் 11. 2. 1948இல் கெடா மாநிலத்திலுள்ள ஆர்வாட் தோட்டத்தில் பிறந்து வளர்ந்தார். தோட்டத் தமிழ்ப பள்ளியில் ஆறு ஆண்டுகள் கல்விக்குப்பிறகு சுங்கைப்பட்டாணி இடை நிலைப்பள்ளியில் ஐந்தாம் படிவத்தை முடித்தா.*

*இவரின் எழுத்துலகப் பயணம் 1962இல் தொடங்கியது. முதலில் மரபுக் கவிதைகளை எழுதிப பார்த்தார். பினனர், சிறுகதை வடிவம் இவரை ஈாத்தது. 1966 முதல் 1968 வரை கோலாலம்பூர் ஸ்ரீகோத்தா ஆசிரியா பயிற்சிக் கல்லூரியில் பயினறபின்னர் தீவிரமாகப படைப்பிலக்கியத்தில் ஈடுபடத் தொடங்கினார்.*

*1972இல் இவரின் 'தெருப்புழுதி' சிறுகதை, தமிழ் நேசன் பவுன் பரிசுச் சிறுகதையாகத் தேர்வு பெற்றபோதுதான மலேசியத் தமிழ் இலக்கிய உலகத்தின பார்வை இவர் பககம் திரும்பியது. அச்சிறுகதை குறித்து டாக்டர் ரெ. கார்த்திகேசு இவவாறு கருத்துரைக்கிறார்: "இளஞ்செல்வனின் 'தெருப்புழுதி' சம்பவங்களை யதார்த்த ரீதியில் ஆனால நயமாகக் கோத்து அழகிய சிறுகதை யாக விளங்குகிறது. எந்தச் செயற்கை ஒப்பனையுபம இல்லாத தெளிவான நேரான கதை. சில உததிகளை இடம் தெரிந்து முக்கியத்துவம் தெரிந்து பயன்படுத்துகிற திறனும், கதாசிரியர் தான் பட்டும் பட்டுக்கொள்ளாமல் விலகி நினறும கதை சொலலிச்*

செல்லும் பாங்கு அனைத்தும் இக்கதையின் வெற்றிக்குத் துணை புரிகின்றன."

'தெருப்புழுதி' சிறுகதையின் வெற்றி அவரின் எழுத்து வாழ்வில் ஒரு திருப்புமுனையாக அமைந்தது. அதன் பின்னரே அவர் தீவிரமாக சிறுகதை படைக்கத் தொடங்கினார். மொத்தம் 65 சிறுகதைகள். அவை, 'தெருப்புழுதி', 'முச்சந்தி மலர்கள்', என இரண்டு தொகுப்புகளாகவும் பின்னர், தேர்தெடுக்கப்பட்ட 22 கதைகள் 'இளஞ்செல்வன் சிறுகதைகள்' (1999) எனவும் வந்துள்ளன.

சிறுகதைத் துறையிலிருந்து பரிணாம வளர்ச்சியாக நாவல் துறையிலும் இவர் ஈடுபட்டார். 'பசித்திருக்கும் இளம் கொசுக்கள்', 'மோகங்கள்', 'கனகாம்பரமும் கிளிஞ்சல் மலர்களும்', 'வானம் காணாத விமானங்கள்' ஆகிய நான்கு நாவல்களே அவை. ஜெயகாந்தன் அடிமட்ட மக்களின் வாழ்வியலைப் படம்பிடித்தது போல் இளஞ்செல்வனும் தோட்டப்புறச் சமுதாயத்தின் இடர்களையும் இன்னல்களையும் தம் சிறுகதைகளில் கொண்டுவந்தார். பிரஜா உரிமை பிரச்சனைகள், வேலையில்லாதவர்களின் சிக்கல்கள், குடும்ப, சமூக அமைதியைச் சிதைக்கும் போதைப் பழக்கம், ஆணாதிக்கத்தின் பாதிப்புக்கு ஆளாகும் பெண் போன்ற கருப்பொருள்களை மையமிட்டே அவரின் எழுதுகோல் உழுதிருக்கிறது. இவரின் பத்து சிறுகதைகள் தமிழ் நேசன், வானம்பாடி, மலேசிய தமிழ் எழுத்தாளர் சங்கம், சிங்கப்பூர் இலக்கியக் களம், ம. இ. கா. லாபிஸ் பாராட் கிளை போன்றவற்றின் சிறுகதைப் போட்டிகளில் வெற்றிவாகை சூடியுள்ளன.

வாசகர்களைத் தம் பக்கம் ஈர்த்துக்கொள்ளும் ஆற்றொழுக்கு போன்ற நடை, ஆங்கிலமும் மலாயும் பேசும் மலேசியச் சூழலின் யதார்த்த நிலை, எடுத்துக்கொண்ட கதைக்கரு மையக் கோட்டிலிருந்து விலகாமல் அதை நகர்த்திச் செல்லும் திறன் போன்றவை இவரின் சிறுகதைகளின் தனித்த அடையாளங்களாக விளங்குகின்றன. இவரின் சிறுகதைகள் குறித்து இலங்கை எழுத்தாளர் எஸ். பொன்னுத்துரை இவ்வாறு கருத்துரைக்கிறார்: "மலேசியக் கதை இலக்கியத்திற்குக் கௌரவமும் மரியாதையும் சம்பாதித்துத் தந்துள்ள எழுத்தாளர்களுள் எம். ஏ. இளஞ்செல்வன் குறிப்பிடத் தக்கவர். எழுபதுகளிலேயே அவர் இதனைச் சாதித்தார். மலேசிய மண்ணினதும் அதன் மக்களினதும் கோலங்களை அவர் தமது கதைகளிலே அழகுறப் பதித்துள்ளார். அவர் மண்ணின் மைந்தருடைய பேச்சு வழக்கினைப் பெய்து கையாளும் தமிழ் நடையும் குறியீட்டுப் படிமங்களும் தமிழ்க் கதை சொல்லும் மரபிலே புதிய சுருதியை இணைக்கின்றன."

எம். ஏ. இளஞ்செல்வனின் நான்கு நாவல்களும் அளவில் சிறியனவாக இருந்தாலும் மனநிறைவு தரும் சிறந்த படைப்பு களாக உள்ளன. 'பசித்திருக்கும் இளங்கொசுக்கள்' நாவலில் இளைஞர் சமூகத்தில் நிகழும் ஒழுக்கச் சீர்கேட்டைத் துணிவாகக் காட்டுகிறார் 'மோகங்கள்' நாவலில் பெண் பித்துப் பிடித்து அலைபவனின் மனைவியான நிர்மலா, கற்பு நெறியைப் போற்றுப வளாக தம் கொழுந்தனைத் திருத்துகிறாள் 'வானம் காணாத விமானங்கள்' நாவலில் ஒரு பெண் தம் இளவயதில் தன் தந்தை தன் தாயைக் கொடுமைப்படுத்துவதைக் கண்டு ஆண்கள் மேலும் உடல் உறவின் மேலும் வெறுப்புக்கொள்கிறாள். 'கனகாம்பரமும் கிளிஞ்சல் மலர்களும்' நாவலில் ஆண் ஆதிக்கம் நிறைந்த தன் அப்பாவின் போக்கிற்கு எதிர்ப்பாக சமுதாய நியதிகளை மீறும் விஜி, சீரழிந்து போவதைச் சுட்டிக்காட்டுகிறார்.

இவரின் நான்கு நாவல்களிலும் மேலோங்கி நிற்கும் பாலுணர்ச்சி இவரைக் கடுமையான கண்டனத்துக்குள்ளாக்கியது. மலேசியத் தமிழ் இலக்கியத்தில் இதுவரை யாரும் துணியாத அளவில் மிகத் துணிச்சலாக பாலுணர்ச்சியைக் கதையாக்கி யுள்ளார். நாவல்களில் பல இடங்களில் வரம்பு மீறுகிற உணர்வு நமக்கு ஏற்பட்டாலும் கதையின் முடிவில் சமுதாய நியதிகளைக் காப்பாற்றி விடுகிற நிலையைக் காண்கிறோம்.

எழுத்துப் பணியோடு எழுத்தாளர் இயக்கப்பணியிலும் ஈடுபாடு காட்டி வந்தார். கெடா மாநில எழுத்தாளர் இயக்கம் தோன்ற முன் நின்று உழைத்தவர்களில் குறிப்பிடத்தக்கவரான இவர் பல ஆண்டுகள் அதன் தலைவராக இருந்து இலக்கியம் வளரவும் பலரை எழுத்தாளர்களாய் வளர்க்கவும் பாடுபட்டார். கெடா மாநில எழுத்தாளர் இயக்கத்திலிருந்து ஒதுங்கியிருந்த போது நண்பர்களோடு இணைந்து 'நவீன இலக்கியச் சிந்தனை' என்ற அமைப்பை உருவாக்கி முதல் புதுக்கவிதை கருத்தரங்கை 25.8.1979 அன்று சுங்கைப்பட்டாணியில் நடத்தினார். தொடர்ந்து இரண்டு கருத்தரங்குகளைக் கூலிம், சித்தியவானில் நடத்தி மலேசிய புதுக்கவிதை வளர்ச்சிக்கு உந்துசக்தியாகச் செயல் பட்டார்.

மலேசியாவின் முதல் புதுக்கவிதை நூலான 'நெருப்புப் பூக்கள்' இவரின் படைப்பாக 1979இல் வெளியீடு கண்டது. பின்னர் வெளிவந்த 'புள்ளிகளைப் புறக்கணிக்கும் புதுக்கோலங்கள்', 'இமைக்காத சூரியன்கள்' ஆகிய இரண்டு புதுக்கவிதை நூல் களுக்கு இவரே தொகுப்பாசிரியர். 'நெருப்புப் பூக்கள்' இவரின் ஆழ்ந்த சமுதாய உணர்வையும் சமுதாய அவலம் கண்டு பொங்கும் கோபாவேசத்தையும் பதிவு செய்தது. தொலைக்

*காட்சியில் தமிழ் நிகழ்ச்சிக்காக 1970களில் ஏங்கித் தவித்த சமுதாய நிலையை இப்படிப் பாடுகிறார்:*

## எங்கள் டெலிவிஷன்

எங்கள் டெலிவிஷன்
நாளுக்குப் பதினைந்து நிமிடமே
தமிழ் பேசும்

வாரம் ஒரு நாளில்
'பூபால ராகத்'தில்
இருபது நிமிடங்கள்
தமிழ் தரிசனம் கொடுக்கும்

மாதம் மும்முறை
தமிழ் நாட்டுக் கூத்தடிப்பை
எங்கள் டெலிவிஷன்
பூனைக்குப் போடும்
ரொட்டியாய்ப்
பிச்சிப் பிச்சிப் போடும் (நெருப்புப் பூக்கள், 1979)

*1987 நவம்பர் 15 முதல் 19 வரை சிங்கையில் நடைபெற்ற தென் கிழக்காசிய மூன்றாவது இலக்கிய மாநாட்டில் கலந்துகொண்டு 'எழுத்தாளர்களும் அவர்தம் கைவண்ணமும்' எனும் தலைப்பில் ஆய்வுக் கட்டுரை சமர்ப்பித்தார். மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் தனது 20ஆம் ஆண்டு விழாவில் (1982) இவருக்குப் பண முடிப்பும், பாராட்டுக் கேடயமும் வழங்கிச் சிறப்பித்தது. மீண்டும் 1987இல் சங்கத்தின் வெள்ளிவிழா ஆண்டில் செந்தமிழ்ச் செல்வர் சி. வி. குப்புசாமி பெயரில் தங்கப்பதக்கம் வழங்கப்பட்டது.*

*புதுக்கவிதை, சிறுகதை, நாவல் ஆகிய இலக்கிய வடிவங் களில் தம் மாறுபட்ட துணிவான சிந்தனையில் மலேசிய தமிழ் இலக்கியச் சூழலில் சலசலப்பை ஏற்படுத்திக் கொண்டிருந்த எம். ஏ. இளஞ்செல்வன் 29.8.2000இல் காலமானார். மலேசியத் தமிழ் இலக்கியத்திற்கு இவரின் பங்களிப்பு மிக முக்கியமானது என்ப தனால் இவரின் எழுதுகோலின் விளைச்சல் காலக்கரையானுக்கு இரையாகாமல் நிச்சயம் நிலைத்திருக்கும்.*

## முடிவுரை

இங்கு ஆராயப்பட்ட ஐவரும் தங்களின் ஆளுமைக்கும் ஆற்றலுக்கும் ஏற்ப தங்களின் பங்களிப்பை இந்நாட்டு இலக்கிய வளர்ச்சிக்கு நிறைவாக வழங்கியுள்ளனர். இவர்கள் போன்ற இலக்கிய முன்னோடிகளின் இலக்கியப் பணிகளை விரிவான ஆழமான ஆய்வுகளுக்கு உட்படுத்துவதின்வழி நம் இலக்கிய வேர் களின் உண்மையான முகவரிகளைத் தெரிந்துகொள்ளும் வாய்ப்பு இன்றைய இளம் படைப்பாளர்களுக்கும் நாளைய புத்திலக்கியம் படைக்க விழைவோருக்கும் கிடைக்கும். இத்தகைய முயற்சியே நம் இலக்கியத்தின் தொடர்ச்சியான வளர்ச்சிக்கு வழியமைக்கும்.

## துணைநின்ற நூல்கள், இதழ்கள், ஆய்வுக் கட்டுரைகள்

### நூல்கள்


1. எம்.ஏ. இளஞ்செல்வன், இளஞ்செல்வன் சிறுகதைகள், மித்ர வெளியீடு, சென்னை, 1999.
2. எம்.ஏ. இளஞ்செல்வன், வானம் காணாத விமானங்கள், மித்ர வெளியீடு, சென்னை, 1999
3. கவிதைவேள் கா. பெருமாள், திருக்குறள் மன்றம், கேமரன்.மலை, 1993.
4. கா. பெருமாள், துயரப்பாதை, தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1978.
5. சா. ஆ. அன்பானந்தன், நயனங்கள், பத்துமலை தமிழ் இளைஞர் மணி மன்றம், பத்துகேவ்ஸ், 1979.
6. சா. ஆ. அன்பானந்தன், மரவள்ளிக் கிழங்கு, தமிழ் இளைஞர் மணி மன்றம், பத்துகேவ்ஸ், 1979.
7. நம் முன்னோடிகள், வரலாற்றுத்துறை, தேசியப் பல்கலைக்கழகம், பாங்கி, 2000.
8. மலேசியத் தமிழ் எழுத்தாளர்கள், மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம், செல்வம் பதிப்பகம், சென்னை, 2004.
9. முரசு நெடுமாறன் (தலைமைத் தொகுப்பாசிரியர்), மலேசியத் தமிழ்க் கவிதைக் களஞ்சியம், அருள்மதியம் பதிப்பகம், கிள்ளான், 1997.

## மலர்கள்

1. ஆறு. நாகப்பன் (தொகுப்பாசிரியர்), சி. வடிவேல் வாழ்வும் பணியும், சிவா பதிப்பகம், கோலாலம்பூர், 1993.
2. இளஞ்செல்வன் 25 எழுத்துலக ஆண்டுகள், கெடா மாநில தமிழ் எழுத்தாளர் இயக்க மலர், சுங்கைப்பட்டாணி, 1987.
3. சான்றோர் நினைவு மலர், மலேசியத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கம், கிள்ளான், 2003.
4. மலேசியத் தமிழ் இளைஞர் மணிமன்றப் பேரவையின் அமைப்புத் தலைவர் சமூகக் கலைமணி சா. ஆ. அன்பானந்தன் நினைவு நாள் மலர், ஈப்போ, 1995.

## ஆய்வுக் கட்டுரைகள்

1. ரெ. கார்த்திகேசு, இளஞ்செல்வன் என்னும் எழுத்துச் சகோதரன்
2. ரெ. கார்த்திகேசு, இளஞ்செல்வன் நாவல்கள்

மலேசியத் தமிழ் எழுத்துலகம் :
நூற்று முப்பது ஆண்டுகளின் வரலாறு
(முனைவர் ரெ. கார்த்திகேசு)

மலேசியத் தமிழ்க் கட்டுரைகள்
(முனைவர் ரெ. கார்த்திகேசு)

மலேசியத் தமிழ் மரபுக் கவிதைகள்
(முனைவர் முரசு நெடுமாறன்)

மலேசியத் தமிழ்ப் புதுக்கவிதைகள்
(திருமதி இராஜம் இராஜேந்திரன்)

மலேசியத் தமிழ் நாவல்கள்
(இணைப் பேராசிரியர் முனைவர் வே. சபாபதி)

மலேசியத் தமிழ்ச் சிறுகதைகள்
(திரு வ. முனியன்)

மலேசியாவில் பன்மொழி இலக்கியங்களினூடே
தமிழ் இலக்கியத்தின் நிலை
(இணைப் பேராசிரியர் வே. சபாபதி)

மலேசியாவில் தமிழ் இலக்கிய வளர்ச்சியில்
இயக்கங்களின் பங்களிப்பு
(முனைவர் முரசு நெடுமாறன்)

மலேசியாவில் இலக்கியம் வளர்ப்பதில் பத்திரிகைகளின் பங்கு
(இணைப் பேராசிரியர் முனைவர் முல்லை இராமையா)

மலேசியாவின் தமிழ் இலக்கிய வரலாற்றில் பெயர் பதித்த
முக்கிய ஐந்து இலக்கியவாதிகள்
(திரு ந. பச்சைபாலன்)